ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரயே நம:



ஸ்ரீஸூக்திமாலா மலர் 13. முதல்பாகம்.

பரமகாருணிகரான
பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# ஸ்ரீராமாயண
# தனிச்லோகம்

(இரண்டாம் பதிப்பு)

[ஸுந்தரகாண்ட தனிச்லோகம் முடிய தனிச்லோக தர்ப்பணம் என்னும் விவரணத்துடன் கூடியது.]

பதிப்பாசிரியர்:
[illegible]
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை ரூ. 3.50.
[illegible] 0.38.

ஸ்ரீநிவாஸம் அச்சுக்கூடம், புத்தூர், திருச்சி.

# ★ விஷயஸூசிகை ★







# முகவுரை

"அபயப்ரதராஜர்" என்றும், "வியாக்கியான சக்ரவர்த்தி" என்றும் பெயர்பெற்றிருக்கும் பெரியவாச்சான்பிள்ளைக்கு நாலுதிக்குகளிலும் நாலு ஸிம்ஹாஸனமுண்டு என்று பெரியோர் பணிப்பர். நாலாயிரதிவ்யப்ரபந்தங்களுக்கு இவ்வாசார்யோத்தமரருளிச்செய்த திவ்ய வ்யாக்யானங்களே முதலாவதும் முக்கியமானதுமான ஸிம்ஹாஸனமாகும்; ஸ்ரீராமாயணத்தில் மிகச்சிறந்த சுலோகங்கள் பலவற்றின் ரஸ்யரஹஸ்யார்த்தங்களை விவரித்து இப்பெருந்தகையருளிச்செய்திருக்கும் ஸ்ரீராமாயண தனிச்லோகமும், அவ்வண்ணமே பாரதாதிகளிலுள்ள சுலோகங்களை விவரித்தருளியிருக்கும் ஸ்ரீபாரதாதிதனிச்லோக க்ரந்தமும் இவருடைய இரண்டாவது ஸிம்ஹாஸனமாகும். ரஹஸ்யத்ரயங்களையும், ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிய வேண்டிய மற்ற ரஹஸ்யார்த்தங்களையும் விவரித்து இம்மஹாபுருஷருளிச் செய்திருக்கும் பரந்த ரஹஸ்யாதி ரஹஸ்ய க்ரந்தங்கள் இவருக்கு மூன்றுவது ஸிம்ஹாஸனமாகும். ஆசார்யச்ரேஷ்டர்களான ஆளவந்தாரும், எம்பெருமானாரும் அருளிச்செய்த ஸ்தோத்ரரத்ந சதுச்லோகீ கத்யங்களுக்கும். வேதகிலமான ஜிதந்தே ஸ்தோத்ரத்துக்கும் இவர் அருளிச்செய்த திவ்ய வ்யாக்யானங்கள் இவ்வியாக்கியான சக்ரவர்த்தியின் நாலாவது ஸிம்ஹாஸனமாகும். ஸ்ரீஸூக்திமாலையாகிற திருக்கோயிலை எழுப்பி, அதிலே இந்த நான்கு ஸிம்ஹாஸனங்களிலேயும் அபயப்ரதராஜரை எழுந்தருளுவிக்கவேண்டும் என்னும் பாரிப்புடன் எந்தையார் தொடங்கிய திருப்பணியிலே, ஸ்தோத்ரகத்யவ்யாக்யானமாகிற ஸிம்ஹாஸனத்தைத் தாம் இந்நிலவுலகிலே எழுந்தருளியிருந்தபோதே பூர்த்தி செய்வித்து. மற்ற ஸிம்ஹாஸனத் திருப்பணிகளைத் தொடங்கச் செய்துவிட்டுத் திருநாட்டுககு எழுந்தருளினர் கீர்த்தி மூர்த்தியான அஸ்மத்தாதபாதர்கள். தனிச்லோகமாகிற தனிப்பெருஞ்சீரிய சிங்காசனத் திருப்பணியின் முதற்பகுதியாகும் இந்த திவ்யக்ரந்தம்.

திவ்யப்ரபந்தங்களும், ஸ்ரீராமாயணமும் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்திற்கு இரண்டு மதில்களாகக் கீர்த்திபெற்றவை. அவையிரண்டின் பொருளையும் விவரித்துத் திருமதில் திருப்பணி செய்த பெரியவாச்சான்பிள்ளையின் பெருமையைப் பேசமுடியுமோ? 'எம்பெருமானர் திவ்யப்ரபந்தார்த்தங்களைத் திருமாலையாண்டானிடமும், ஸ்ரீராமாயணர்த்தங்களைப் பெரியதிருமலைநம்பியிடமும், ரஹஸ்யார்த்தங்களைத் திருக்கோட்டியூர் நம்பியிடமும், ஸ்தோத்ரங்களையும் நல்வார்த்தைகளையும் ஆளவந்தாராழ்வாரென்னும் திருவரங்கப்பெரு

மாளரையரிடமும் கேட்டதாகக் கேள்விப்படுகிறோம். ஆயினும் அவ்வர்த்தங்களை க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரான அப்பேராசிரியரும் நமபோல்வாருடைய உஜ்ஜீவனத்தின்பொருட்டு ஏடுபடுத்தி வைத்தாரில்லை. திவ்யப்ரபந்தார்த்தங்கள், ஸ்ரீராமாயணார்த்தங்கள், ரஹஸ்யார்த்தங்கள், ஸ்தோத்ரார்த்தங்கள், நல்வார்த்தைகள் ஆகிய எல்லாவற்றையுமே தம பெருங்கருணையாலே உலகெல்லாம் உய்வதற்காக முதன்முதலில் வியாக்கியானங்களாக வெளியிட்டருளிய பேராசிரியர் பெரியவாச்சான்பிள்ளையைத்தவிர எவரேனும் உண்டோ? இதனாலேயன்றோ பெரியவாச்சான்பிள்ளை 'பரமகாருணிகர்' என்றும், 'அபாரகருணாஸாகரர்' என்றும் பெரியோர்களால் புகழப்படுகிறார். க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யர்களின் கோஷ்டிக்குத் தலைமை வஹிப்பவராகவன்றோ விளங்குகிறார் பெரியவாச்சான் பிள்ளை. பேதைபாமரர்களும் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தப் பொருள்களை உணரும்படி பற்பல நூல்களையியற்றி இவர் உபகரித்திருப்பதுபோலே வேறு எந்த ஆசார்யருமே செய்ததில்லை என்பதை எவரேனும் மறுக்கமுடியுமோ?

இவரருளிச்செய்த திவ்யக்ரந்தங்களினுள் ஸ்ரீராமாயண தனிச்லோகம் என்பது தனிப்பெரும் பெருமைபெற்று விளங்குகின்றது. ச்ருதிகளிலிருந்தும், தர்மசாஸ்திரங்களிலிருந்தும், இதிஹாஸ புராணங்களிலிருந்தும், காவ்ய நாடக அலங்கார கிரந்தங்களிலிருந்தும், மீமாம்ஸா வ்யாகரண நியாயநீதி ஸாமுத்ரிக ஜயோதிஷாதி சாஸ்திரக்ரந்தங்களிலிருந்தும் பற்பல விஷயங்களை எடுத்தெழுதியும், பல்லாயிரக்கணக்கான ப்ரமாணங்களை மேற்கோளாகக் காட்டியும் ஸ்ரீராமாயணச்லோகங்களை இவர் விவரித்தருளியிருப்பதைக் காணுந்தோறும் இவருடைய ஸர்வதோமுகமான பாண்டித்யமும், ராஸிக்யமும் படிப்பவர்களின் உள்ளத்தை உருக்குகின்றன. அப்பய்யதீக்ஷிதரிடம் ஸ்ரீராமாயண ச்லோகார்த்தங்களை விவரித்து ஒரு நூலெழுதவேண்டுமென்று சிலர் கேட்க, 'சோழியன் சுவைத்த சக்கையான ஸ்ரீராமாயணக் கரும்பில் நான் பிழிந்து எழுதுவதற்கு என்ன இருக்கிறது?' என்று பதில் சொன்னதாக வழங்கிவரும் கர்ண பரம்பரைச் செய்தியொன்றே இக்கிரந்தத்தின் பெருமைக்குச் சான்றாகும். இப்படிப்பட்ட திவ்யகரந்தத்திலே பற்பல விடங்கள் அறிவாளிகளுக்கும் பொருள் விளங்காமலும், பற்பல ப்ரமாணங்கள் ஆகரமும் அர்த்தமும் அறியப்படாமலும் உள்ளன. ஆகையால் இதற்கு ஒரு விவரணமொன்று எழுதி வெளியிடவேணுமென்னும் எண்ணம் எந்தையாருக்குண்டாகி, அதைத்தாமே தொடங்கிவைத்து

அடியேனையும் தொடர்ந்து எழுதிமுடிக்குமாறு நியமித்தருளினர். தனிச்லோகதர்ப்பணம் "तनिश्लोक दर्पण" [தனிச்லோகக் கண்ணாடி] என்னும் பெயர்பெற்ற இந்தத் தனிச்லோக விவரணம் எந்தையாருடைய ஆசியாலும், பெரியவாச்சான்பிள்ளையின் பேரருளாலும் தனிச்லோக வியாக்கியானத்தைக் கண்ணாடிபோலே தெளிவுபடுத்துவதாய், மூலத்தைக் காணமுடியாதவர்களும் கண்ணாடியைக்கண்டு தெளிவுபெறும்படியாய் அமைந்துள்ளது. அடியேனுடைய அறியாமையாலே குற்றங்குறைகள் ஏற்பட்டிருப்பின் மஹான்கள் க்ஷமித்தருளவேணும். பல தனிச்லோகபங்க்திகளின் பாடசோதன விஷயத்திலும் அர்த்த நிர்ணய விஷயத்திலும் பேருதவிபுரிந்தவரும் ஜ்ஞாநசீல வயோவ்ருத்தருமான ஸ்ரீரங்கம் வித்வான் ஸ்ரீ. உ. வே. கோவிந்தாசார்ய ஸ்வாமியவர்களுக்கு அடியேன் தலையல்லால் கைம்மாறிலேனே. பல ப்ரமாணங்களின் ஆகரங்களைக் கண்டுபிடிக்க உதவிய திருச்சி ஸ்ரீ. உ. வே. A. V. கோபாலாசார்யஸ்வாமி அவர்களுக்கும், ஸ்ரீ. உ. வே கோழியாலம் ரங்கநாதாசார்ய ஸ்வாமிகளுக்கும் அடியேனுடைய பெரு நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். ஸுந்தரகாண்ட தனிச்லோகம் முடிய, விவரணத்துடன் ஸ்ரீக்ருஷ்ணஸூரியான பெரியவாச்சான்பிள்ளை திருவவதரித்த தினமான ஸ்ரீஜயந்தியன்று தனிச்லோகத்தின் முதல் பாகமாக இந்நூல் வெளியிடப்படுகிறது. அபயப்ரதானஸாரமும், யுத்தகாண்ட தனிச்லோகமுமடங்கிய இரண்டாவது பாகம் சில வருடங்களில் வெளிவரும்*. தனிச்லோக வ்யாக்யானத்தில் சில பாடசோதனங்களை இனிக்காட்டுவோம்.

முதன்முதலில் ஓரிடத்தில் ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமிகள் பழைய பிரதிகளைக்கொண்டு தெரிவித்த திருத்தங்களை வெளியிடுகின்றேன். "இயம்ஸீதா' என்னும் ச்லோகத்திலே "(மம ஸுதா) 'மிதி₂லாயாம் ப்ரதீ₃ப்தாயாம ந மே கிஞ்சித் ப்ரத₃ஹ்யதே' என்றவநபிமானிக்குப் பிறந்தவள். 'வள்ளி மருங்குல் என்றன் மடமான்' என்று தாயார் வைலக்ஷண்யம் சொல்லுமாப்போலே." என்று பாடம் காண்கிறது. "அழகோ நமக்குத் தேட்டம்? ஆபிஜாத்யம் வேண்டாவோ? என்று கருத்தாகப் பிறப்பில் ஏற்றம் சொல்லுகிறுன்,—" என்ற அவதாரிகைக்கு இப்பங்க்திகள பொருந்தியேயிருப்பதால் நம்மாலும் இப்படியே வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீகோவிந்தாசார்யஸ்வாமி காட்டும் திருத்தமாவது,—"என்றவநபிமானிக்குப் பிறந்தவள்" என்னுமிடத்தில் "என்றவன் அபிமானிக்கப்

* சார்வரி தை ஹஸ்தத்தில் இரண்டாம்பாகம் வெளியாகிவிட்டது.

பிறந்தவள்'' என்றிருக்கவேண்டும் என்பது. 'ன' 'ந' ஆகவும், 'க' 'கு' ஆகவும் பிறழ்ந்திருக்கிறது என்றபடி. திருந்திய பாடத்தில் அநபிமானிக்குப் பிறந்தவள் என்னும் அர்த்தம் ஸித்திப்பதோடு, அநபிமானியும் அபிமானிக்கும்படியாகப் பிறந்தவள் என்னும் ரஸ்யார்த்தமும் ஸித்திக்கிறதாகையாலும், ''வள்ளமருங்குல் என்றன் மடமான்'' என்ற ப்ரமாணத்திற்கு இது பொருந்தியிருக்குமாகையாலும் இப்பாடமே சுத்தபாடமாயிருக்கத்தகும்.

''தருணௌ'' என்று தொடங்கும் சுலோகத்தில் முதல்யோஜனையில், ''(ஸுகுமாரௌ) திவ்யஞன காமன் ஒருவனிறே. இவர்கள் இளமையைப்பாரீர். இரண்டு காமராய்க்காண் தோற்றுகிறது.'' என்று அச்சுப்பதிப்புப்பாடம் காண்கிறது. இங்கு மஹான்கள் ஓலைச்சுவடிகளைக்கொண்டு காட்டும் திருத்தமாவது:—''(ஸுகுமாரௌ) திவ்யஞன காமன் ஒருவனிறே. இவர்கள் பௌமராயிருப்பார் இரண்டு காமராய்க்காண் தோற்றுகிறது.'' என்பது. 'கு' சப்தம் பூமியையும், 'மார' சப்தம் மன்மதனையும் குறிக்குமாகையாலே 'ஸுகுமார' சப்தத்திற்கு 'பூமிமன்மதன்' என னு ம் பொருளைக்கொண்டுள்ளார் பெரியவாச்சான்பிள்ளை. திருந்திய பாடத்திலேயே இப்பொருள் தெளிவாக விளங்குகிறது. 'திவயஞன-ஒருவன்' என்பதற்கு ப்ரதிகோடியாக ''பௌமராயிருப்பார்–இருவா' என் றே பரமரஸிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளியிருப்பார் என்பது திண்ணம்.

''தருணௌ'' என் னு ம் சுலோகத்தின் வியாக்கியானத்தில் ''(ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ)...'ராமமந்மத$_2$சரேண...' என்று காமனுகவே பரிக்ரஹித்துச் சொன்னுளிறே'' என்று அச்சுப்பிரதிகளில் பாடம் காண்கிறது. ''ராமமந்மத'' என்று தொடங்கும் சுலோகம் ரகுவம்சத்தில் பதினேராவது ஸர்க்கத்தில் கவிக்கூற்றுக அமைந்திருக்கிறது. ஆகையால் 'சொன்னுனிறே' என்பது சுத்தபாடம்.

''சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ' என்னும் பதத்தின் வ்யாக்யானத்தில், ''பீதகவாடை உடைதாழ விருந்தாவனத்தே கண்டோமே' என்றும், 'செய்யவுடையும் திருமுகமும் செங்கனிவாயும் குழலுங் கண்டு' என்றும் பெண்பிறந்தார் வாய்புலற்றும்படியாய்க்காண் இடையழகு இருப்பது'' என்று அச்சுப்பிரதிகளில் பாடம். 'சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ'' என்னும ப்ரதீகத்துக்கும், ப்ரமாணமாக எடுக்கப்பட்ட ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளுக்கும் சேர்ந்திருப்பது......'...உடையழகு இருப்பது' என்னும் பாடமே. அங்கேயே '' 'கந்யா

காமயதே ரூபம்' என்றும், 'பெற்றக்கால் அவனுகம் பெண்பிறந்தோ முய்யோமே' என்றும், உடம்பை உகப்பிக்கக்கடவ ஸ்த்ரீகள் ஆழங்காற்படச் சொல்லவேணுமோ?'' என்னும் வாக்யத்தில் 'உகக்கக்கடவ' என்னும் பாடமே முன்வாக்கியத்திற்கும் எடுக்கப் பட்ட ப்ரமாணங்களுக்கும் சேர்ந்திருக்கும்.

''மஹாபலௌ'' என்னும் பதத்தின் விவரணத்தில் ''பலஹீந ரானவளவேயன்றுகாண்! க்ரமாகதமான ராஜ்யத்தைக் கொடுக்கச் செய்தேயும், அகப்பட ஆளமாட்டாதே ஓதுங்கிப் பெண்டாட்டிக்கு அஞ்சிப் பொகட்டுப்போரும்படி அத்யந்தப₃ாலராய்க்காண் இருப் பது'' என்று அச்சுப்பிரதிகளில் பாடம். ப்ரதீகத்துக்கு சேர்ந்திருக்கும் ''அத்யந்தாப₃லராய்க்காண்'' என்பது சுத்தபாடம்.

''புண்டரீகவிசாலாக்ஷௌ'' என்னும் பதத்தின் கீழ் இரண்டு யோஜனையிலும், ''தன்னிலமான நாட்டுக்கு அவர்கள் ஆளித்தனை போக்கி, வெற்று நிலமான காட்டுக்கு ஆளல்லர்...'' என்றும், ''வெற்று நிலமான இக்காட்டிலே திரியச்செய்தேயும், தன்னிலத் திலே நின்ற தாமரைபோலே அக்கண்ணில் செவ்விதானே சொல்லா நின்றதுகாண்!'' என்றும் பாடம் அச்சுப்பிரதிகளில் காண்கிறது. ''தன்னிலமான'' என்பதற்கு ப்ரதிகோடியாயிருக்கும் 'வேற்றுநில மான'' என்னும் பாடமே சிறந்தது.

''சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ'' என்றதின் இரண்டாவது யோஜனையின்முடிவில் ''உடைத்தோலும் மரச்சடையுமாய்க்காண் அவர்களிருப்பது'' என்றுள்ளது. 'மரச்சட்டை' என்று சுத்தபாடம்.

''தம் த்ருஷ்ட்வா'' என்னும் சுலோக வ்யாக்யானத்தில், ''(தம்) உகப்பாலே அடுத்துப்பார்க்கில் நயமான தேஜஸ்ஸுக்கும் ஸ்தான மான திருமேனியுடையவரை'' என்னும் பாடம் பொருளற்றதா யுள்ளது. ''நாயனமான தேஜஸ்ஸுக்கும் அஸ்தானமான திரு மேனியுடையவரை'' என்பது ரஸிகர்கள் பெருநிதி கிடைத்தாற் போலே பேணிப்பாதுகாக்க வேணடிய சுத்தபாடம்.

''த்வமப்ரமேய:'' என்னும் சுலோகத்தில், ''அப்ரமேய:'' என்னும் பதவ்யாக்யானத்தில், ''த்ருஷ்டாநுமாநத்தில்......ப்ரத்யக்ஷ யோக்யமல்லாமையாலும்......த்ருஷ்டாந்தமில்லாமையாலும், ஸாமந் யதோ த்ருஷ்டாநுமாநத்தில் வ்யாப்திக்ரஹணதசையில்லை; ஸர்வ கர்த்ரநுகதமாக......அந்யதைவ ஸித்திக்கையாலும் அநுமாநஜ்ஞாந

விஷயமல்லீர்'' என்று பாடம் காண்கிறது. முதன் முதலில், அதுஷ்டமான அநுமானம் எதிலும் வ்யாப்திக்ரஹணதசை அடியோடு இல்லாமலிராது. ந்யாயதர்சநவ்யாக்யானம். ந்யாயபரிசுத்தி ஆகியவற்றில் சொல்லியிருக்கும் ஸாமாந்யதோ த்ருஷ்டாநுமாந லக்ஷணத்திற்கும் இது பொருந்தாது. மேலும் அநுமாநஜ்ஞாந விஷயமல்லாமைக்குப் பல ஹேதுக்களைச் சொல்லிக்கொண்டு வரும் இவ்வாக்கியத்தில் 'வ்யாப்திக்ரஹண தசையில்லை' எனனும் பதம் அந்வயிக்கவும் மாட்டாது. இக்காரணங்களால் 'வ்யாப்திக்ரஹண தசையில்' எனபது சுத்தபாடமாயிருக்கத்தகும்.

''க்ஷிதிக்ஷமாவாந்'' என்றவிடத்து வியாக்கியானத்தில், ''முற்பட நெஞ்சிலே குற்றம் கிடந்தபின்பு பொறுத்ததாகையன்றிக்கே, இருந்தபடி முதலிலே குற்றத்தில் அறிவின்றிக்கே பொறுமையே நிரூபகையான பூமியின் பொறையாய்ருந்தது'' என்னும் அசுத்த பாடம் ''முற்பட நெஞ்சிலே குற்றம் கிடந்து பின்பு பொறுத்ததாகையன்றிக்கேயிருந்தபடி. முதலிலே...'' என்று திருத்தப்பட்டுள்ளது.

துஷ்கரச்லோகத்தில், ''இஸஸம்ஸாரத்தைச் செய்யக்கோலித் தவிர்ந்தாரோ? என்னில் (கருதவாந்)'' எ ை ற அசுத்தபாடம, ''இஸ்ஸாஹஸத்தைச்...'' என்றும், ''(த்வயா ஹீந:)...தமக்குமினுக்கமுண்டாயிருக்குகிற இவனையோ விடுவது'' என்னும் அசுத்த பாடம் ''...தமக்குமினுக்கமுண்டாக்குகிற'' என்றும் திருத்தப்பட்டுள்ளது. துஷ்கரச்லோகடிப்பணியிலும் இத்திருந்திய பாடங்களே ஆதரிக்கப்பட்டுள்ளன.

''ஹிமஹத'' சுலோகத்தில் ''பரிவு போராத ப்ரக்ருதியைக் கொண்டு'' என்பது அசுத்தபாடம்; ''பிரிவு பொருத...'' என்பது சுத்தபாடம்.

''த்ருணமந்தரத:'' அவதாரிகையில் ''நிலைபோக்கலாமோ'' என்னும் அசுத்தபாடம் ''நிலைபேர்க்கலாமோ'' என்று திருத்தப்பட்டுள்ளது. 'மித்ர மௌபயிகம்' அவதாரிகையில் திருந்திய பாடமே காணப்படுவது காண்க. ''த்ருணமந்தரத: க்ருத்வா ' என்னுமிடத்து வ்யாக்யானத்தில் ஒன்பதாவது பொருளில் ''என்ருயிற்ருவது ப்ரதிகூலாகரணம் பண்ணுதே இவ்வளவாலே'' என்னும் அசுததபாடம் ''என்ருயிற்ருவது; ப்ரதிகூலாசரணம் பண்ணுத இவ்வளவாலே'' என்று திருத்தப்பட்டுள்ளது. பதினைந்தாவது பொருளில் ''த்ருணோபல ந்யாயத்தாலே'' என்பது ''த்ருணோலபந்யாயத்தாலே'' என்று

திருத்தப்பட்டுள்ளது. ''சுசிஸ்மிதா'' என்றவிடத்தில் நாலாவது பொருளில் ''பெருமாளைத் தாமல்லரென்கிறுன்'' என்பது ''பெருமாளைத் தரமல்லரென்கிறுன்'' என்று திருத்தப்பட்டுள்ளது.

''மித்ரம் கர்த்துமௌபயிகம்'' என்ற விடத்தில். (ஔபயிகம்) உபாய: நிமித்தகாரணம். உன்னுடைய உஜ்ஜீவனத்துக்கு உபாயம்'' என்பது அசுத்தபாடம். ''(ஔபயிகம்) உபாய: இம்மித்ரகரணம் உன்னுடைய உஜ்ஜீவனத்துக்கு உபாயம்'' என்பது சுத்தபாடம். ''ராம:'' என்றவிடத்தில், ''உன்னுயிரும் உண்டாக்கலிலே பழையபடியே பொருந்தும்படி பண்ணவல்லர்காண்'' என்பது அசுத்தம். ''......உன் பக்கலிலே பழையபடியே...'' என்பது சுத்தபாடம். ''புருஷர்ஷப:'' என்றவிடத்தில் '' 'புருஷோத்தம:'' என்கிறபடியே அதமனுகிறுன்'' என்பது தவறு: '' 'புருஷோத்தம:' என்றபடி. அதமனுகிறுன்...'' என்பது சுத்தபாடம்

''இஹஸந்தோ'' வில் ''ததாஹி''யின் கடைசியில், ''உன்னுடைய அநுவர்த்தநத்துக்கு ஸாதநமாயிருப்பதொரு......'' என்பது தவறு; ''உன்னுடைய அநநுவர்த்தநத்துக்கு...'' என்பது சுத்தபாடம். ''ஆசாரவர்ஜிதா'' ஏழாவது பொருளில் 'ஸதாசாரம் பண்ணுற்றிலன்றே' என்பது பிழை. ''ஸதாசாரம் பண்ணிற்றிலனே'' என்பதுசுத்தம்.

''ஸா திர்யக்'' அவதாரிகையில், ''சிம்சுபாசாகி சிகாவலம்பிநியாய்'' என்பது பிழை; ''...சாகாவலம்பிநியாய்'' என்பது சுத்தம்.

இப்பாடத்திருத்தங்களில் பெரும்பான்மையானவை பெரியோர்களால் ஆதரிக்கப்படுமென்று நம்புகிறேன்.

இங்ஙனம்

மந்மத—௵ தாஸன்,
ஆவணியில் ரோஹிணி. ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

---

## இரண்டாவது பதிப்பின் முன்னுரை

இப்பதிப்பில் முன் பதிப்பிலுள்ள சில பிழைகள் திருத்தப்பட்டுள்ளன, ஸ்ரீராமாயண ச்லோகங்களுக்குப் பாதாநுக்ரமணிகையும், இதர ப்ரமாணங்களுக்கு அநுக்ரமணிகையும் தரப்பெற்றுள்ளன.

சுபகிருது ௵ தாஸன்,
புரட்டாசித்திருவோணம். ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

# மூலச்லோகங்களின் ஸூசிகை

## ஸ்ரீராமாயண தனிச்லோகம்—பூர்வபாகம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# ஸ்ரீராமாயண தனிச்லோகம்

## பெரியவாச்சான்பிள்ளை தனியன்

ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத் கடாக்ஷைக லக்ஷ்யாணாம ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ்ஸதா₃ ॥

பாலகாண்டம் 19-வது ஸர்க்கம, 14-வது ச்லோகம

**अहं वेद्मि महात्मानं रामं सत्यपराक्रमम् ।**
**वसिष्ठोऽपि महातेजा ये चेमे तपसि स्थिताः ॥**

**அஹம் வேத்₃மி மஹாத்மாநம் ராமம ஸத்யபராக்ரமம் ।**
**வஸிஷ்டே₂ாऽபி மஹாதேஜா யே சேமே தபஸி ஸ்தி₂தா: ॥**

**பதவுரை:**—**அஹம்**—*நானே,* **ராமம்**—*ஸ்ரீராமனே,* **மஹாத்மாநம்**-*மஹாத்மாவாகவும்,* **ஸத்யபராக்ரமம்**-*ஸத்யபராக்ரமனுகவும்,* **வேத்₃மி**—*அறிவேன்,* **மஹாதேஜா:**-*மிகுந்த தேஜஸ்ஸையுடைய,* **வஸிஷடே₂ாऽபி**—*வசிஷ்டமஹர்ஷியும்,* (**வேத்தி**-*அறிவார்*); **இமே**—*இங்கேயிருக்கிறவர்களாய்,* **தபஸி ஸ்தி₂தா: யே**—*தபஸ்ஸிலே நிலைநிற்கிறவர்களான யாவர் சில மஹர்ஷிகளுண்டோ,* (**தேऽபி விது₃ந்தி**—*அவர்களும் அறிவார்கள்*)

**அவதாரிகை:**—*சக்ரவர்த்தியானவன், பெருமாளுடைய பருவத்தில் சிறுமையையிட்டு இவருடைய ஆண்பிள்ளைதனத்திலே அதிஶங்கை பண்ணக்கூடுமென்று ஶங்கித்து,*

---

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
'தனிச்லோக த₃ர்ப்பணம்' என்னும்

## தனிச்லோக விவரணம்

அவதாரிகை:—தசரதசக்ரவர்த்தியானவன், ஸ்ரீராமபிரான் பருவத்திலே சிறுவனுயிருப்பதைக் கண்டு அவனுடைய வீரியத்தைக் குறைய நினைக்கக்கூடும் என்று ஸந்தேஹித்து, அதைப் போக்கு

*அவருடைய வைபவத்தையும் பராக்ரமத்தையும் ஸாக்ஷிக மாக உபபாதிக்கிறான் விச்வாமித்ரமஹர்ஷி* (அஹம வேத₃மி **வஸிஷ்டோ₂ऽபிவேத்தியே சேமேதபஸிஸ்தி₂தா:தேऽபிவி ந₃ந்தி)**
**''न युद्धयोग्यतामस्य पश्यामि'' (ந யுத்₃த₄யோக்₃யதாமஸ்ய பச் ாமி)**
*என்று இவர் அயோக்யதையைச் சொல்லுகைக்கு நீயொரு வனுமேயுள்ளாய்; இவர் யோக்யதையை அறிகைக்கு நாங்கள் இத்தனைபேருமுண்டு என்கிறான்.*

**வ்யாக்யானம:—(அஹம் வேத்மி) ''न चक्षुषा गृह्यते'' (ந சக்ஷுஷா க்₃ருஹ்யதே) ''मनसा तु विशुद्धेन'' (மநஸா து விசுத்₃தே₄ந)**''*என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணுமுணர்ந்து''* என்று யோக₃ பரிசுத்தமான உட்கண்ணாலே நானறியுமத்தனை போக்கி, பா₃ஹ்யசக்ஷுஸ்ஸாலே காண்கிற உனக்குத் தெரியாதுகாண்.
**(அஹம் வேத்மி) 'ज्ञानवृद्धा मया राजन् बहवः पर्युपासिताः' (ஜ்ஞாநவ்ருத்₃த₄ா மயா ராஜந் ப₃ஹவ: பர்யுபாஸிதா:)** *என்று பல ஆசார்யர்களை ஸேவித்த நான் அறியுமத்தனை போக்கி.*

---

வதற்காக, ராமனுடைய பெருமையையும பராக்ரமத்தையும, ஸாக்ஷி பனையுமகாட்டி விளககுகிறார் விச்வாமித்ரமஹர்ஷி. ''யுத்தம செய்யத் தந்த யோக்யதையை ராமனிடம நான் காணவில்லை'' [ரா-பா20-2] என்று ராமனுடைய அயோக்யதையைச் சொல்ல நீ ஒருவனேயுள்ளாய; இவன யோக்யதையை அறியப் பலருண்டு என்கிறார்.

**வ்யாக்யானம்:**— 1. (நான அறிவேன்) ''ஸர்வம் வாக்யம ஸாவதாரணம'' [எல்லா வாக்கியங்களும் (பொதுவாக) ஏகாரத்துடன கூடியவை] என்னும நியாயத்தாலே நானேயறிவேன என்றபடி. ''(பாமாந்தமா) கணணாலே காணப்படுகிறவனல்லன'' [முண்ட 3-1-8] ''விசுத்தமான மனத்தாலேயே காணத்தக்கவன்'' [விஷ்ணு தர்மம 275-2] ''என்றேனும கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும உட்கண்ணால் காணும உணர்ந்து'' [பெரியதிருவ-28] என்று யோகத்திலே அழுக்கற்ற உட்கண்ணாகிற நெஞ்சாலே நான அறிவேனேயொழிய வெளிக்கண்ணாகிற பட்சஸ்ஸாலே காணும உனக்குத் தெரியாதுகாண 2. (நான அறிவேன) ''ராஜனே! என்னால் அறிவில் முதிர்ந்த கிழவர்கள் பலர் நன்றாக உபாஸிக்கப்பட்டிருக்கிறா

நாட்டார்களாலே ஸேவிக்கப்படுகிற உனக்குத்தெரியுமோ? (அஹம் வேத்மி) "कुशदर्भधराः" (குசதர்ப்பதரா:) என்று புல்லும் கையுமான நானறிவேன்; வில்லும் கையுமான நீ அறியாய். (அஹம் வேதமி) தலையும் சடையுமான நானறியுமத்தனை போக்கி, தலையும் முடியுமான நீயறியாய். (அஹம் வேதமி) ஸாத்விகப்ரகருதியான நானறியுமத்தனை போக்கி ராஜஸ ப்ரக்ருதியான நீயறியாய். (அஹம வேத்மி) "नीचशय्यासनं चास्य नित्यं स्याद्गुरुसन्निधौ" (நீசஶய்யாஸநம் சாஸ்ய நித்யம ஸ்யாத குருஸந்நிதௌ) என்று ஆஸநத்தின் கீழே யிருந்த எனக்குத தெரியுமத்தனை போக்கி, "सिंहासने प्रभुः" (ஸிமஹாஸநே ப்ரபு) என்று ஆஸனத்தின் மேலேயிருக்கிற உனக்குத் தெரியுமோ? (அஹம வேதமி) யோகக்ரமம் அறியும் நான் அறியுமத்தை போகக்ரமமறியும் நீ அறிவுதியோ? (அஹமவேத்மி) மோக்ஷகாமேஷ்டி பண்ணின நானறியுமத்தை புத்ரகாமேஷ்டி பண்ணின நீ அறிவுதியோ? (அஹமவேத்மி) தர்மமோக்ஷபரனான நான் அறியுமத்தை, அர்த்தகாமபரனை உன்னால் அறியப்போமோ?

---

ளா" [பார-ஸபா 55-12] என்று பல ஆசாரியர்களை ஸேவித்த நான் அறிவேனேயொழிய, பாமரர்களாலே ஸேவிக்கப்படும உனக்குத் தெரியுமோ? 3. (நான் அறிவேன) "குசத்தையும, தர்ப்பத்தையும தரிப்பவர்கள்" [?] என்கிறபடியே கையிலே புல்லைப்பிடித்த நான் அறிவேன; கையிலே வில்லைப்பிடித்த நீ அறியாய். 4. (நான அறிவேன) தலையிலே சடையையுடைய நான அறிவேனேயொழிய, தலையிலே முடியையுடைய நீ அறியாய். 5. (நான் அறிவேன்) ஸாத்விகஸ்வபாவனான நானறிவேனேயொழிய ராஜஸஸ்வபாவனான நீ அறியாய். 6. (நான அறிவேன) "குருவின எதிரே இந்த சிஷ்யனுக்குத் தாழ்வான படுக்கையும ஆஸனமும இருக்கவேண்டும்" [மனு 2-198] என்று குருவினுடைய ஆஸநத்தின கீழேயிருந்த எனக்குத் தெரியுமேயொழிய "ஸிமஹாஸனத்திலுள்ள ப்ரபு" [?] என்று ஆஸநத்தின மேலேயிருக்கிற உனக்குத் தெரியுமோ? 7. (நான அறிவேன்) யோகவழியறியும் நான அறியும் விஷயத்தை போகவழி அறியும் நீ அறிவாயோ? 8. (நான அறிவேன) மோக்ஷத்தை விரும்பி யாகம செய்த நான் அறியும் விஷயத்தை

நானேயோ அறியாதேன்? "नेति नेति" (நேதி நேதி) என்றும், "क इत्था वेद" (க இத்தா₂ வேத₃) என்றும் ப்ர மாணங்களான வேதங்கள் தான் அறிந்ததோ? "ब्रह्मरुद्रेन्द्र-भूतानां मनसामप्यगोचरम्" (ப்₃ரஹ்மருத்₃ரேந்த்₃ரபூ₄தாநாம் மநா மப்யகோ₃சரம) என்றும், "நான்முகன் செஞ்சடையானென் றிவர்கள் எம்பெருமான் தன்மையை யாரறிகிற்பார்" என் றும் ப்ரமாதாக்களான ப்ரஹ்மருத்ராதிகளுக்குந்தான் நிலமோ? ப்ரமாதாக்களளவேயோ? "सो अङ्ग वेद यदि वा न वेद" (ஸோ அங்க₃ வேத₃ யதி₃ வா ந வேத₃) என்றும் "தனக்கும் தன தன்மையறிவரியானை" என்றும் ப்ரமேயபூதனானவன் தனக்கும் தெரியுமோ? இத்தனைபேர் அறியார்களேகாண் என்ன, (அஹமவேத்மி) "यस्सर्वज्ञस्सर्ववित्" (யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித) "स्वाभाविकी ज्ञानबलक्रिया च" (ஸ்வாப₄ாவிகீ

---

புத்ரனை விரும்பி யாகம் செய்த நீ அறிவாயோ? 9. (நான் அறிவேன்) தர்மமோக்ஷ புருஷார்த்தங்களிலே ஈடுபட்ட நான் அறிவதை, அர்த்த காமபுருஷார்த்தங்களிலே ஈடுபட்ட உன்னால் அறியமுடியுமோ?

நான் மட்டுமோ அறியாதவன்? "ப்ரஹ்மம் இவ்வளவுமட்டு மன்று; இப்படிப்பட்டது (வேறொன்றும்) இல்லை" [ப்ருஹ 4-3-6] "க இத்தா₂ வேத₃ யத்ர ஸ:" [கட 1-2-25] [அந்த ப்ரஹ்மம் எப்படிப் பட்டது என்பதை எவன் அறிவான்?] என்றும் ப்ரமாணங்களா யிருக்கும் வேதங்களும் அவனுடைய பெருமையை அறிந்தனவோ? "பிரமன உருத்திரன் இந்திரன் ஆகிய இவர்களுடைய மனத்திற்கும் எட்டாதவனை" [?] என்றும, "நான்முகன் செஞ்சடையானென்றிவர் கள் எம்பெருமான் தனமையை யாரறிகிற்பார்" [திருவாய் 8-3-9] என்றும் அறிவாளிகளான பிரமன் ருத்ரன் முதலானோர்க்குத்தான் விஷயமாகுமோ? அறிவாளிகள் மட்டுமேயோ? "அவன தானே தனபெருமையை அறிவனோ அறியமாட்டானோ?" [தை-ப்ரா 2-8-9] என்றும, "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" [திருவாய் 8-4-6] என்றும் அறியப்படுபவனான தனக்கும் தெரியுமோ தன் பெருமை? இப்படி இத்தனைபேரும் அறியாமலிருக்க நீர் அறிந்தபடியென்? என்ன,10.(நான் அறிவேன்)"எவனொருவன் எல்லாப்பொருள்களின் ஸ்வரூபத்தையும ஸ்வபாவந்தையும் அறிகிறானோ" [முண்ட1-1-10] "இயற்கையான அறிவு, பலம், செயல் முதலியவை (இப்பரமாத்

ஜ்ஞாநபலக்ரியா ச) என்கிற ப்ரமாணங்களை விச்வஸித்து ஸார்வஜ்ஞம் கொண்டாடி, ஓராசார்யன் பக்கல் குனிந்து கேளாமையாலே அவனுக்கும் தெரியாதே. "ददामि बुद्धियोगं तं" (ததாமி புத்தியோகம் தம்) என்றும், "மயர்வற மதிநல மருளினன்" என்றும், "श्रुतमासीन्मरीचितः" (ச்ருதமாஸீந் மரீசித:) என்றும் ஸம்ப்ரதாயஸித்த ஜ்ஞாநமுடையவனுக்குத் தெரியுமிறே. அவ்விழவு தீருகைக்கிறே "ब्राह्मणानामुपासिता" (ப்ராஹ்மணாநாமுபாஸிதா) என்று அறிவுடையார் காற் கடையிலே துவண்டு திரிந்தது. (அஹம வேத்மி) "तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन" (தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாऽநாசகேந) என்றும் "श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः" (ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:) என்றும் அவனை அறிகைக்கு நான் பட்ட வருத்தம் சொல்லப் போமோ? என்கிறான்.

---

மாவுக்குள்ளதாகச் சொல்லப்படுகிறது)" [ச்வே 6-8] என்கிற ப்ரமாணங்களை நம்பித் தனனை ஸர்வஜ்ஞனாக நினைத்து ஓராசார்யனிடத்திலே குனிந்து கேளாமையாலே அவனுக்கும் தெரியாதே. "நான் பக்தர்களுக்கு(எனனை அறியவுதவும்) அந்த புத்திச்சேர்க்கையைக் கொடுக்கிறேன்" [கீதை 10-10] என்றும் "மயர்வற மதிநல மருளினன்" [திருவாய் 1-1-1] என்றும, "மரீசிமஹர்ஷியிடமிருந்து இவ்விஷயம கேட்கப்பட்டது" [?] என்றும் ஸத்ஸம்ப்ரதாயத்தாலே அடைந்த அறிவையுடையவனுக்குத் தெரியுமன்றோ. ஆசார்யனிடத்திலே கேளாத அக்குறை தீருகைக்கன்றோ "பஹுச்ருதாநாம் வ்ருத்தாநாம் ப்ராஹ்மணாநாமுபாஸிதா" [ரா-அ2-33] [கேள்விஞானமுடைய ப்ராஹ்மண வ்ருத்தர்களை உபாஸிப்பவன் ராமன்] என்று அவனும் அறிவுடையார் அடியினக்கீழே துவண்டு திரிந்தது. 11. (நான் அறிவேன்) "இந்தப் பரமாத்மாவை வேதசப்தத்தாலும், யஜ்ஞத்தாலும், தானத்தாலும, அழிவற்ற தவத்தாலும ப்ராஹ்மணர்கள் அறிய விரும்புகிறார்கள்" [ப்ரு 6-4-22] என்றும் "கேட்கத்தக்கதும் நினைக்கத் தக்கதுமான பரமாத்மா தியானிக்கத்தக்கது" [ப்ரு 6-5-6] என்றும் அவனை அறிய நான்பட்ட சிரமம் சொல்லவும் முடியுமோ? என்கிறார்.

நீ அறிந்த ப்ரகாரம் என்னைக் காட்டில (மஹாத்மாநம) அறப்பெரியன் என்று அறிவன் "तेजसां हि न वयः समीक्ष्यते" (தேஜஸாம ஹி ந வய: ஸமீக்ஷ்யதே) என்கிறபடியே வடிவு சிறுத்திருந்ததேயாகிலும பரத்வம் உறைத்திருக்குமகாண். (மஹாத்மாநம) "आत्मा जीवे धृतौ देहे स्वभावे परमात्मनि यत्ने ऽर्के ऽग्नौ मतौ वाते" (ஆத்மா ஜீவே த்₄ருதௌ தே₃ஹே ஸ்வபா₄வே பரமாத்மநி। யத்நேऽர்கேऽக்₃நௌ மதௌ வாதே) என்று அநேகார்த்தவாசியிறே ஆத்மசப்தம். அதில் புறப்பட ஜீவவாசியானபோது (மஹாத்மாநம்) என்று "यस्यात्मा शरीरं" (யஸ்யாத்மா ஶரீரம) என்றும் "य आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरः" (ய ஆத்மநி திஷ்ட₂ந்நாத்மநோऽந்தர:) என்றும் ஸர்வஜீவாத்மாக்களும் ஶரீரமாம்படி ஸர்வாத்மஶரீரியாயிருப்பான் என்னுமிடமறிவன். அன்றியிலே (மஹாத்மாநம்) என்று த்₄ருதியிலேயாய், "आपद्यपि स्वकार्येषु कर्तव्यत्व स्थितिर्धृतिः" (ஆபத்₃யபி ஸ்வகார்யேஷு கர்த்தவ்யத்வஸ்தி₂திர் த்₄ருதி:) என்று தாடகா

---

நீ அவனை எவ்விதம் அறிந்தாய்" என்னில்: (மஹாத்மாவை) மிகவும் பெரியவனென்று அறிவேன் "தேஜஸ்ஸை உடையவர்களை விஷயத்தில (அவர்களுடைய இராம) பருவமானது கவனிக்கப்படுவதில்லை" [ரகுவமசம (11-1)] என்கிறபடியே வடிவு சிறுத்திருந்தாகிலும, மேன்மை பொருந்திருக்குமவன்! (மஹாத்மாவை) "ஆத்மா என்னும் பதம், ஜீவனிடமும், தைர்யத்திலும, தேஹத்திலும, ஸ்வபாவத்திலும் பரமாத்மாவினிடத்திலும், யத்னத்திலும், ஸூர்யனிடத்திலும், அக்நியினிடத்திலும், புத்தியிலும், காற்றினிடத்திலும் பயோகமுள்ளது." [வைஜயந்தி-நானார்த்த காண்டம 1-6] என்று பல பொருள்களைச் சொல்லும் ஆத்மபதம். அவற்றில் பொருளும இங்கு பொருந்தும. 1. ஆத்மா ஜீவன அல்லது சேதனன். (மஹாத்மாவை அறிவேன்) "எவனுக்கு ஆத்மா சரீரமோ" [ப்ரு 5-7-26] என்றும, "எவன் ஆத்மாவில் நின்று கொண்டு ஆத்மாவினுள் நுழைந்திருக்கிறானோ" [ப்ரு 5-7-26] என்றும எல்லா ஜீவாத்மாக்களும் தன்னுடைய சரீரமாம்படி ஸர்வாத்மாக்களுக்கும் ஆத்மாவாயிருக்கும் மஹாசேதனன் என்று அறிவேன். 2. ஆத்மா த்ருதி அல்லது தைர்யம (மஹாத்மாவை) "ஆபத்துக் காலத்திலும் தன் காரியங்களில் ஊன்றியிருக்கும் நிலை தைர்யமாகும்" [?] என்கிற

தாடகேய பரமுகரான ப்ரபல விரோதிபரம்பரைகள் உண்டேயாகிலும் "**यज्ञविघ्नकरं हन्यां**" (யஜ்ஞவிக்₄நகரம் ஹந்யாம்) என்று தாம் ஏறிட்டுக்கொண்ட கார்யம் தலைக்கட்டலாம்படியான நிலையையுடையராய்க்காண் இருப்பது என்றுமாம். அன்றியிலே, (மஹாத்மாநம்) என்று தேஹவாசியாய் "**नित्यं नित्याकृतिधरं**" (நித்யம நித்யாக்ருதித₄ரம்) என்றும், "**न तस्य प्राकृता मूर्तिर्मेदोमांसास्थिसंभवा**" (ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாமஸமேதோ₃ஸ்தி₂ ஸமப₄வா) என்றும், "மாசூணாச் சுடருடம்பாய்" என்றும சொல்லுகிறபடியே ஶத்ருக்களால அழிக்கவொண்ணாதபடி நித்யநிரவத்ய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய விக்ரஹராய்க் காணிருப்பது என்றுமாம். அன்றியிலே, (மஹாத்மாநம) என்று ஸ்வபாவவாசியாய், "**अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम**" (அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத் வ்ரதம மம) என்றும், "**पारुपाल्यं हि वृत्तः**" (பாஶுபால்யம் ஹி வ்ருத்தி:) என்றும் ஆபந்நஜநரக்ஷணத்தை ஸ்வபாவமாக உடையராய்க்காண் இருப்பது என்றுமாம். அன்றி

---

படியே, தாடகை ஸுபாஹுமாரீசர்கள் முதலான வலிமிக்க விரோதிவர்க்கங்கள் உண்டேயாகிலும "யஜ்ஞத்திற்கு இடையூறு செய்பவனை ஒழிப்பேன்" [ யுத்-உத் 74-27 ]என்று தாமெடுத்துக்கொண்ட காரியத்தை முடிக்குமபடியான மனவுறுதியை உடையவராய்க் காணிருப்பது. 3. ஆதமா தேஹம். (மஹாத்மாவை) "நித்யமானவனுய், நித்யமான தேஹத்தையுடையவனுயிருப்பவனை' [ஸாத்வதம்] என்றும், "அவனுக்கு மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு இவைகளாலுண்டான பரக்ருதிஸமபந்தமுள்ள உடம்பு கிடையாது"[ வராஹ 14-41) வாயு (34-40)] என்றும் "மாசூணாச்சுடருடம்பாய்" [திருவாய் 3-1-8] என்றும் சொல்லுகிறபடியே சத்ருக்களால அழிக்கமுடியாதபடி நித்யமாய், தோஷமற்றதாய், ஒப்பற்ற ஒளியையுடையதான தேஹத்தையுடையவராயக்காண் இருப்பது என்கை. 4. ஆத்ம ஸவபாவம (மஹாத்மாவை) "எல்லா பூதங்களிடமிருந்தும (என்னைச் சரணமடைந்தவனுக்கு) நான் அபயமளிக்கிறேன். இது என் விரதம்' [ரா யு 18-34] என்றும, "ப்ராணிகளை ரக்ஷிப்பதேயன்றோ உங்களுடைய தர்மம" [அநர்க ராகவம் (1-31)] என்றும ஆபத்தடைந்தவர்களை ரக்ஷிப்பதையே ஸ்வபாவமாக உடையராய்க்காண் இருபபது

யிலே (மஹாத்மாநம்) என்று பரமாத்மவாசியாய், "பரோ மாऽஸ்மாதி₃தி பரம:" என்றும், "यस्मात्परं नापरमस्ति किञ्चित्" (யஸ்மாத்பரம நாபரமஸ்தி கிஞ்சித்) என்றும், "न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते" (ந தத்ஸமச்சாப்₄யதி₄கச்ச த்₃ருச்யதே) என்றும "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா" என்றும் சொல்லு கிறபடியே தம்மையொழிந்த ஸகலதேவதைகளுக்கும் மேலாய், அவைதனக்கும் அந்தர்யாமியாயிருக்கும்படியறிவன் என்றுமாம். அன்றியிலே, (மஹாத்மாநம்) என்று யத்நவாசியாய், அதாவது ப்ரயத்நமாய், "प्रयत्नः स्वात्मधर्मः स्यादुत्साहो भावना च सः" (ப்ரயத்ந: ஸ்வாத்மத₄ர்ம: ஸ்யாது₃த்ஸாஹோ பா₄வநா ச ஸ:) என்றும், "विनाशाय च दुष्कृतां-संभवामि" (விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் ஸம்ப₄வாமி) என்றும் சொல்லுகிறபடியே துஷ்க்ருதவிநாஶத்துக்காக அவர் உத்ஸாஹித்துப்போந்தபடி அறிவேன் என்றுமாம். அன்றியிலே, (மஹாத்மாநம) என்று அர்க்கவாசியாய், "रामदिवाकरः। शत्रुरक्षोमयं तोयमुपशोषं नयिष्यति" (ராம தி₃வாகர:। ஶத்ருரக்ஷோமயம் தோயமுபஶோஷம் நயிஷ்

---

என்றுமாம். 5 ஆத்மா-பரமாத்மா(மஹாத்மாவை) "பரோ மாஸ்மாதி₃தி பரம:" [இவனைக் காட்டிலும் மேலானவனொருவனுமில்லை] என்று பரமசப்தார்த்தம். "எவனைக் காட்டிலும் மேலானது வேறொன்று மில்லையோ' [தை-நா 10-23] என்றும் "அவனுக்கு ஒப்பாரும மிக்காரும் காணப்படுவதில்லை" [ச்வே 6-8] என்றும் "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா" [திருவாய் 2-3-2] என்றும் சொல்லு கிறபடியே தன்னையொழிந்த எல்லா தேவதைகளுக்கும் மேலான வனும், அவர்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறபடியை அறிவேன என்றுமாம். 6. ஆத்மா யத்நம் (மஹாத்மாவை) மஹாப்ரயத்ந முடையவனை என்கை. "ப்ரயத்நமாவது உத்ஸாஹம எனப்படும் ஆத்மதர்மமாகும். பாவநை எனபதும் அதுவே" [?] "பாபிகளின விநாசத்திற்காக உண்டாகிறேன்" [கீதை 4-8] என்று சொல்லுகிற படியே துஷ்டவிநாசத்திற்காக அவருடைய மஹோத்ஸாஹத்தை நானே அறிவேன் என்கை. 7. ஆத்மா அர்க்கன் அல்லது ஸூர்யன (மஹாத்மாவை) "சரஸமூஹங்களாகிற கிரணங்களைக்கொண்ட) ராமபிரானாகிற ஸூர்யன் சத்ருராக்ஷஸர்களாகிற நீரை நன்றாக வற்றச் செய்துவிடுவான்"[ரா-ஸு 17-18] என்கிறபடியே, ஆயுதங்

யதி) என்கிறபடியே ஆயுதநிரபேக்ஷமாகத் தம்முடைய ப்ர தாபத்தாலே ஶத்ருரக்ஷஸ்ஸுக்களாகிற நீரை ஊற்றகப் படச் சுவரும்படி பண்ணவல்லர் என்னுமிடம் அறிவன் என்றாகவுமாம். அன்றியிலே (மஹாத்மாநம்) என்று அக்நி யாய் "अभितः पावकोपमं" (அபி₄த: பாவகோபமம) என்றும், "निर्दहेदपि काकुत्स्थः क्रुद्धस्तीव्रेण चक्षुषा" (நிர்த₃ஹேத₃பி காகுத்ஸ்த₂: க்ருத்₃த₄ஸ்தீவ்ரேண சக்ஷுஷா) என்றும், "அனலுருவில் திகழும் சோதி தன்னுருவாய்" என்றும் சொல்லுகிறபடியே ஶத்ருசரீரங்களையடையச் சுட்டுக் கூறாய் நீறாய்ப் போம்படி பண்ணவல்லர் என்னுமிடமறிவன் என்றாகவுமாம். அன்றி யிலே (மஹாத்மாநம்) என்று மதிவாசியாய் "सर्वशास्त्रार्थतत्वज्ञः" (ஸர்வஶாஸ்த்ரார்த்த₂ தத்வஜ்ஞ:) என்றும், "बुद्ध्या ह्यष्टाङ्गया युक्तः" (புத்₃த்₄யா ஹ்யஷ்டாங்க₃யா யுக்த:) என்றும் சொல்லு கிறபடியே, இருந்தவிடத்திலே இருந்து ஶத்ருச்கள் முடியும் படியான விரகுகள் வகுக்கவல்லர் என்னுமிடமறிவன் என்றுமாம், அன்றியிலே (மஹாத்மாநம்) என்று வாதவாசி

---

களையும் எதிர்பாராமல் தம்முடைய ப்ரதாபத்தாலே எதிரி அரக்கர் களாகிற நீரை ஊற்றுக்களுடன் வற்றச்செய்ய வல்லவர் என்பதை அறிவேன் என்றுமாம். 8. ஆத்மா அக்நி (மஹாத்மாவை) "சுற்றிலும நெருப்பை ஒத்திருக்கும் ராமனை (பரதன் கண்டான்)"[ரா-அ99-26] எனறும், "ராமபிரான் கோபமடைந்தவராய், தன் கடுமையான கண்களாலே (என்னை) எரித்தும் விடுவார்" [ரா.ஸு 30-14] என்றும் "அனலுருவில் திகழும் சோதி தன்னுருவாய்"[திருநெடு-1] என்றும் சொல்லுகிறபடியே சத்துருசரீரங்களையெல்லாம் சுட்டுக் கண்டமாய்ச் சாம்பலாக்கவல்ல மஹாக்னியவர் எனபதை அறிவேன் என்றுமாம். 9. ஆத்மா-புத்தி (மஹாத்மாவை) "எல்லா சாஸ்த்ரார்த்த தத்துவஙகளையும் அறிநதவர் ராமபிரான்" [ரா-பா 1-15] என்றும் "எட்டு அங்கஙகளுடன் கூடிய புத்தியை உடைய" [ரா-ஸு 116-27] என்றும் சொல்லுகிறபடியே இருந்தவிடத்திலிருந்துகொண்டே எதிரிகள் அழியும் உபாயங்களை நிச்சயிக்கவல்ல மஹாபுத்தி அவர் என்பதை அறிவேன் என்றுமாம். 10. ஆத்மா வாயு (மஹாத்மாவை) "வாயு ரூபியாயிருக்கும் அவனுக்கு நமஸ்காரம்" [வி-பு 1-14-31]

யாய், "तस्मै वातात्मने नमः" (தஸ்மை வாதாத்மநே நம:) என்றும் "காலாய்த் தீயாய்" என்றும் சொல்லுகிறபடியே மஹா வாதஹதமான தூலராசிபோலே ஶத்ருக்களைப் புக்கவிடமறியாமல் ஓட்டுவர் என்றறிவன் என்றாகவுமாம். அன்றியிலே "मृतसञ्जीवनं हि रामवृत्तान्तं" (ம்ருதஸஞ்ஜீவநம் ஹி ராமவ்ருத்தாந்தம்) என்று ஸர்வப்ராணிப்ராணந ஹேதுவான காற்றுப் போலே அநுகூலரானவர்களுக்கு உஜ்ஜீவனகரராகவல்லர் என்னுமிடம் அறிவன் என்றாகவுமாம்.

"வேத்தி வேத₃யதி" என்று தானுமறிந்து பிறரையுமறிவிக்கக்கடவதான வேதமகப்பட "वेदाहमेतं पुरुषं" (வேத₃ாஹமேதம் புருஷம்) என்று நானறிவனென்று சொல்லி, அறிந்தபடியென்னென்ன "அறிந்தன வேதவரும்பொருள் நூல்கள் அறிந்தன கொள்க அரும்பொருளாதல்" என்கிறபடியே "महान्तं" (மஹாந்தம்) என்று அபரிசிந்நனென்று சொல்லி விட்டதித்தனையிறே. "यस्यामतं तस्य मतं मतं यस्य न वेद सः" (யஸ்மாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத₃ ஸ:) என்று

என்றும் "காலாய்த்தீயாய்" [திருவாய் 6-9-1] என்றும் சொல்லுகிறபடியே பெருங்காற்றாலேயடிக்கப்பட்ட பஞ்சுக் குவியலைப்போலே எதிரிகளைப் போனவிடமறியாதபடி விரட்டிவிடும் மஹாவாயு இவர் என்பதை அறிவேன் என்றுமாம். அன்றிக்கே "ராமவ்ருத்தாந்தம் செததவர்களையும் பிழைக்கவைப்பது" [பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யம்] என்று எல்லா ப்ராணிகளையும் உயிர்ப்பிக்கும் காற்றுப்போலே அநுகூலர்களை உய்விக்கவல்ல மஹாவாயு இவரே என்பதை அறிவேன் என்றுமாம்.

"வேத்தி வேத₃யதீதி வேத₃:" [தானும் அறிந்து பிறரையும் அறிவிக்கையால் வேதம்]என்கிறபடியே வேதமென்று பெயர்பெற்ற ச்ருதியும் "நான் இந்தப்புருஷனை அறிவேன்" [புருஷஸூக்தம்] என்று சொல்லி, 'அறிந்ததெப்படி?' என்னும் கேள்வி எழ "அறிந்தனவேத வரும்பொருள் நூல்கள் அறிந்தனகொள்க அரும்பொருளாதல்"[திருவாய் 9-3-3]என்கிறபடியே 'மஹாந்தம்' [பு-ஸூ] என்று அளவற்றவனென்று அறிவேன் என்று சொல்லிமுடித்ததன்றோ. "எவனுக்கு அப்பரவஸ்து (அளவிட்டு) அறியப்படாததாகிறதோ, அவனுக்கு அது அறியப்பட்டதாகிறது; எவனுக்கு (அளவிட்டு)

அவ்வஸ்துவை அறிகையாவது அது அபரிசிந்நமென்று உள்ள படி அறிகையிறே. "வேத₃ாஹமேதம்" என்கிற வேதவாக் யந்தன்னையிறே "அஹம் வேத்₃மி" என்று உபப்ரும்ஹிக் கிறது. அங்குற்றை 'வேத₃' என்கிறத்தை இங்கு 'வேத்₃மி' என்கிறது. அங்குற்றை 'அஹம' என்கிறத்தையிறே இங்கு 'அஹம' என்கிறது. 'ஏதம்' என்று ஸௌலப்யஸூசகமான ஏதச்சப்தார்த்தத்தையிறே, இங்கு 'ராமம' என்று அவதார நிர்த்தேசம் பண்ணுகிறது.ங் அகுற்றை 'புருஷ'ஶப்தத்தாலே நிர்த்திஷ்டமான ஶௌர்யவீர்யாதிகளையிறே இங்கு 'ஸத்ய பராக்ரமம்' என்கிறது. அங்கு 'மஹாந்தம்' என்கிறத்தையிறே இங்கு மஹாத்மாநம் என்கிறது. ஆக வேதபுருஷனோடு வைதிகபுருஷர்களோடு வாசியற இவ்விஷயத்தில் பாசுர மொன்றுயிறேயிருப்பது.

இப்படி "மஹாத்மாநம்" என்று பேசுகிற வஸ்துதான் தேஶாந்தரத்திலேயாய் எட்டவொண்ணாதோவென்னில்;

---

அறியப்பட்டதாகிறதோ அவன் அதை அறியவில்லை' [கேந 2-3] என்று அப்பரவஸ்துவை அறிகையாவது, அது அளவிடவொண் ணாதது என்று உள்ளபடி அறிவதேயாகும். "வேதாஹமேதம்" என்னும் வேதவாக்யத்தையேயன்றோ "அஹம் வேத்மி" என்னும் இவ்வாக்கியம் உபப்ரும்ஹணம் செய்கிறது. அங்குள்ள 'வேத' என்னும் பதத்தை இங்கு 'வேத்மி' என்கிறது. அங்குள்ள 'அஹம்' என்னும் பதத்தை இங்கு 'அஹம்' என்கிறது. 'ஏதம்' (இவனை) என்னும் ஸௌலப்யத்தைக் காட்டும் பதத்தின் பொருளையே இங்கு 'ராமம்' என்று அவதாரநிர்த்தேசம் பண்ணுகிறது. அங்குள்ள புருஷசப்தத்தாலே காட்டப்பட்ட சௌர்யவீர்யாதிகுணங்களையே இங்கு "ஸத்யபராக்ரமம்" என்கிறது. [புருஷன்-(குணங்களாலே) பூர்ணன் என்றபடி] அங்கு "மஹாந்தம்" என்கிறதையே இங்கு "மஹாத்மாநம்" என்கிறது. ஆக வேதபுருஷனோடு வைதிகபுருஷர் களோடு வாசியற இவ்விஷயத்தில் பேசும் பாசுரம் ஒன்றாகவே யிருக்கிறது.

இப்படி 'மஹாத்மா' எனப்படும் வஸ்துவானது பரமபதமாகிற தேசாந்தரத்திலே ஒருவருக்கும் எட்டாததாயிருக்கிறதோ எனில்,-

(ராமம) "पितरं रोचयामास" (பிதரம ரோசயாமாஸ) என்று உன்னை யிசைவித்து, ராமரூபேண வந்து பிறந்த இவர் அப்பரவஸது தான்காண் என்கிறுன். (ராமம்) பரவஸ்துவென்று நீயும் நானும் உட்கூசுதல், நம்மை அருவருத்து அவர்தாம் அகல நிற்றல் செய்யாதே, எனகருக் கையாளாக அழைக்கலாம் படியாய்த் தம்மை அமைந்துத் தாழநிற்கையாலே தெரிகிற தில்லைகாண். (ராமம் மஹாத்மாநம்) "स उ श्रेयान् भवति जायमानः" (ஸ உ ச்ரேயாந் ப₄வதி ஜாயமாந:) என்று அவர் தம்மைத் தாழவிட்டுப் பிறந்தபின்புகாண் மஹத்வம் ஒப்பமிட்டது.

"நீதானே 'ராமம்' என்று சொன்னுய்; இன்னம் வடிவில் சுணை அழிந்ததில்லை. ச்ரமத்தால் உடல் இறுகிற்றில்லை. இவர் பராக்ரமத்துக்கு ௸க்தரோ?" என்ன, (ஸத்யபராக்ரமம்) இவர் வடிவுபோலே வேண்டினபோது கொள்ளவும் தவிரவு மாம்படியல்லகாண் இவர் குணங்கள் இருப்பது. அவை நித்யமாய்க்காண் இருப்பது. (ஸத்யபராக்ரமம்) ஸதை₃கரூப

---

(ராமனை) "(பகவான் விஷ்ணு)தந்தையான தசரதனை இசைவித்தார்" [ரா-பா 16-8] என்று உனனையும் இசையச்செய்து ராம ரூபியாய் வந்து பிறந்த இவரன்றோ அப்பரவஸ்து என்கிருர். (ராமனை) பரவஸ்து என்று நினைத்து நாம் அணுகக்கூசுவதோ, அல்லது நம்மை அருவருத்து அவர்தாம் தூரநிற்பதோ செய்யாதபடி எனக்குக் கையாளாக நான் அழைக்கும்படி தம்மை அமைத்துத் தாழநிற்கை யாலே அவருடைய பெருமை உனக்குத் தெரியவில்லை காண்! (ராமனுய் மஹாத்மாவானவனை)"அவன் பிறந்தபின்பே மேன்மையை அடைகிருன்" [யஜுர்-அஷ் 3-6-3] என்று அவர் தம்மைத் தாழ விட்டுப் பிறந்தபின்பேயனறோ பெருமை பெற்றது.

"மஹர்ஷே! அழகைக் கணிசியாத நீரே 'ராமன்' [ரமிககச் செய்பவன்] என்று சொல்லும்படி இவனுக்கு வடிவில் மெருகழிய வில்லை. கடினகாரியங்களைச் செய்து இன்னம் உடல் இறுகவில்லை. இவன் பெருஞ்செயல் செய்யவலலவனே?" என்று தசரதன் மனத்தி லோடுவதாக நினைத்துச் சொல்லுகிருர்,—1. (ஸத்யபராக்ரமனை) என்றும் மாருத பராக்ரமத்தையுடையவனை. இவர் வடிவுபோலே இஷ்டப்பட்டபோது கொள்ளவும் விடவுமாமபடியிருபபவையல்ல

பராக்ரமம். "सदैकरूपरूपाय" (ஸதை₃கரூபரூபாய) என்றும் "त इमे सत्याः कामाः" (த இமே ஸத்யா: காமா:) என்றும், "एतांश्च सत्यान् कामान्" (ஏதாமச்ச ஸத்யாங் காமாந்)என்றும் சொல்லு கிறபடியே விக்ரஹம் ஐச்ச₂மாய், குணங்கள் நித்யமாய்க்காண் இருப்பது. இது தன்னைப் பராசரப்ரஹ்மர்ஷியும் "इच्छा-गृहीताभिमतोरुदेहः" (இச்ச₂ாக்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹ:) என்று விக்ரஹபரிக்ரஹம் ஐச்ச₂ம் என்னுமிடத்தைச் சொல்லி, "तेजोबलैश्वर्यमहावबोधसुवीर्यशक्त्यादिगुणैकराशिः" (தேஜோப₃லைச்வர்யமஹாவபோ₃த₄ ஸுவீர்யசக்த்யாதி₃கு₃ணைகராசி:) என்று குணங்கள் ஸ்வாபாவிகங்கள் என்னுமிடத்தைச் சொன்னு ணிறே. (ஸத்யபராக்ரமம்) "अव्यवस्थौ हि दृश्येते युद्धे जयपराजयौ" (அவ்யவஸ்தௌ₂ ஹி த்₃ருச்யேதே யுத்₃தே₄ ஜயபராஜயௌ) என்று நாட்டாரைப்போலே இவருடைய ஆண்பிள்ளைத் தனம் அவ்யவஸ்தமல்லகாண்! "नाविजित्य निवर्तते" (நாவிஜித்ய

---

இவருடைய குணங்கள். அவை நித்யமாயுள்ளன. 2. (ஸத்யபராக் ரமனை)எப்போதும் ஒருபடிப் பட்டிருக்கும் பராக்ரமத்தையுடையவனை. "எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கும் பரூபத்தையுடையவனை" [வி-பு 1-2-1] "பகவானுடைய இந்த குணங்கள் ஸத்யமான காமங் கள் எனப்படுகின்றன." [சாந் 8-3-1] "எவர்கள் மாறுபடாமலும், காமவிஷயமாகவுமிருக்கையால் 'ஸத்யமான காமங்கள்' எனப்படும் கல்யாண குணங்களை உபாஸிக்கிறார்களோ" [சாந் 8-1-6] "இயற்கையான அறிவு, பலம், செயல் ஆகிய குணங்கள் (இப்பர மாத்மாவுக்குள்ளதாகச் சொல்லப்படுகிறது)" [ச்வே 6-8] என்று சொல்லுகையாலே அவதாரவிக்ரஹம் இச்சையினாலே எடுக்கப்படுவ தாய், குணங்கள் நித்யமாய்க்காண் இருப்பது. பராசரப்ரஹ்ம ரிஷியும் "இச்சையினால் எடுக்கப்பட்டவையாய், இஷ்டமானவையாய் பெரியவையான தேஹங்களை யுடையவன்(பரமாத்மா") [வி-பு6-5-84] என்று விக்ரஹத்தை எடுத்துக்கொள்வது இச்சையினாலேயே என் பதைச்சொல்லிப்பிறகு "தேஜஸ், பலம், ஐச்வர்யம், பெரியதான ஞானம், வீர்யம், சக்தி முதலான குணங்களின் குவியலாயிருப்பவன (பரமாத்மா)" [வி-பு 6-5-85] என்று குணங்கள் இயற்கையானவை என்பதைச் சொன்னாரன்றோ. 3. (ஸத்யபாரக்ரமனை) "யுத்தத்தில் வெற்றிதோல்விகள் நிலையற்றவையாகக் காணப்படுகின்றன" [ரா-ஸு 37-55] என்று லௌகிகர்களுடைய பராக்கிரமத்தைப்

நிவர்த்ததே) என்றும், "अभियाता प्रहर्ता च" (அபி$_4$யாதா ப்ர ஹர்த்தா ச)என்றும், "சென்று கொன்று வென்றிகொண்ட" என்றும் சொல்லுகிறபடியே, இவர் எழுந்திருந்தால் ஶத்ருக்களை ஆக்ரமித்துத் தலையழித்தல்லது மீளார்காண்! "तस्मिन् दृष्टे परावरे" (தஸ்மிந் த்$_3$ருஷ்டே பராவரே) என்றும், "சிவனயனிந்திரனிவர் முதலனைத்தோர் தெய்வக்குழாங்கள் கைதொழக்கிடந்த" என்றும் தந்தாமைப் பரராக நினைத்திருக்கிற ப்ரஹ்மருத்ராதிகளை அகப்படக் கீழ்ப்படுத்தி அவ்வருகாயிருக்கிறவஸ்து க்ஷுத்ரரான ஶத்ருக்களை விடுமோ? **(ஸத்யபராக்ரமம்)** ஸத்யரான பரரை ஆக்ரமிப்பர் என்றுமாகவுமாம். அதாவது ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தனமாக ப்ராதிகூல்யம் பண்ணிலும் அவர்கள் மீண்டும் அநுகூலிப்பார்களோவென்று "यदि वा रावणः स्वयं" (யதி$_3$ வா ராவண: ஸ்வயம்) என்றும், 'गच्छानुजानामि" (க$_3$ச்ச$_2$ாநுஜாநாமி) என்றும்

போலே இவருடைய பராக்கிரமம் நிலையற்றதல்ல காண். "ஜயிக்காமல் திரும்பமாட்டான் ராமன்." [ரா-அ 2-37] "தானே படையெடுத்துச் சென்று எதிரிகளுடன் யுத்தம் செய்பவன் ராமன்" [ரா-அ 1-29] "சென்று கொனறு வென்றிகொண்ட வீரனே" [திருச்சந்த-56] என்று சொல்லுகிறபடியே இவர் போர் புரியப் புறப்பட்டால் எதிரிகளை வென்று தலையழித்தாலல்லது திரும்பமாட்டார் காண். "(தம்மைப்) பரராக (உயர்ந்தவராக) எண்ணியிருக்கிற ப்ரஹமருத்ராதிகளும் எவனைக் காட்டிலும் தாழ்ந்தவராகிறார்களோ அந்தப் பரமாத்மா காணப்பட்டவளவில் (ஹ்ருதயக்ரந்திகளான ராகத்வேஷாதிகள் சிதைகின்றன)" [முண்ட 2-2-9]என்றும் "சிவனயனிந்திரனிவர் முதலனைத்தோர் தெய்வக் குழாங்கள் கைதொழக்கிடந்த"[திருவாசிரியம்-1]எனறும் தம்மைப்பரராக (உயர்ந்தவராக) எண்ணியிருக்கும் ப்ரஹ்மருத்ராதிகளையும் தன் திருவடிகளின் கீழ்ப்படுத்தி அவர்களுக்கும் எட்டாமலிருக்கும வஸ்து மிகவும் தாழ்ந்தவரான ராக்ஷஸாதி சத்ருககளை விடுமோ? (ஸத்யபராக்ரமனை) ஸத்யரான (மாறுபடாத) பரரை(எதிரிகளை)ஆக்ரமிப்பர் (வெல்லுவர்)என்றும் கொள்ளலாம். அதாவது–ப்ரக்ருதிஸம்பந்தம் காரணமாக எதிரிட்டாலும் அவர்கள் அனுகூலராவார்களோவென்று "ராவணனேயாயிருந்தாலும் (என்னிடம் சரணமென்று வந்தவனை அழைத்து வாருங்கள்)" [ரா-யு 18-34] "ராவண! நீ திரும்பிப்போ; நான்

"உளந்தொட்டு" என்றும் ஒருநிலே நின்று முட்ட ப்ராதிகூல்யத்திலே நிலேநின்ருர்களாகில் அவர்களே முடிப்பர் என்கிறது.

(ராமம **ஸத்யபராக்ரமம்**) ஆக்ரமிக்குமிடத்தில் த்ரிவிக்ரமனேப்போலே சொல்லுவதொன்று செய்வதொன்றன்றியிலே ஏகரூபமாய்க்காண் இருப்பது. (**ராமம் ஸத்யபராக்ரமம்**) பிறரை அழிக்குமிடத்தில் ஆயுதமெடுத்தல் பராக்ரமித்தல் செய்வேணுமோ? **"हतान्येकेन रामेण"** (ஹதாந்யேகேந ராமேண) என்றும், **"रामबाणाभिहतो भृशार्तश्चचाल चापञ्च मुमोच वीरः"** (ராமபா$_3$ணுபி$_4$ஹதோ ப்$_4$ருஶார்த்தச்சசால சாபஞ்ச முமோச வீர:) என்றும், **"श्रीमान् सुखसुप्तः परन्तपः"** (ஸ்ரீமாந் ஸுக$_2$ஸுப்த: பரந்தப:) என்றும் சொல்லுகிறபடியே அழகும் எழிலுமே பரிகரமாக இழியாரோ?

---

அனுமதிக்கிறேன்" [ரா-யு 59-143] "வாளுகிர்ச் சிங்கவுருவாய் உளந்தொட்டு இரணியன் ஒண்மார்வகலம் பிளந்திட்ட" [பெரியாழ் திரு 1-6-9] என்று முடிந்தவரையில் பார்த்து, கடைசிவரையில் எதிரியாகவே நிலேநின்ருர்களாகில் அவர்களே அழிப்பர் என்கை.

(ராமனுய் ஸத்யபராக்ரமனுனவனே) ஆக்ரமிக்கும்போது, திரிவிக்கிரமனேப்போலே, சிறிய அடியாலே மூவடிவேண்டிப் பெரிய அடியாலே அளப்பதாய், இப்படிச் சொல்லுவதொன்று செயவதொன்ருயிராமல் ஓருபடிப்பட்ட ஆக்ரமணத்தை உடையவனுயிருப்பவன் ராமனே என்கை. (ராமனுய் ஸத்யபராக்ரமனுனவனே) ரமிக்கச் செய்பவனுய் ஸத்யபராக்ரமனுனவனே என்றபடி. பிறரை அழிக்கும்போது ஆயுதமெடுத்தல், பெருஞ்செயல்களேச் செய்தல் முதலியவையும் வேணுமோ? "(அழகையே ஆயுதமாகக்கொண்ட) ராமன் ஒருவனுல் (ராக்ஷஸஸேனைகளெல்லாம்) அழிக்கப்பட்டன" [ரா-ஆ 26-36] "வீரனுனராவணன் (ரமிக்கச்செய்யும்) ராமனுடைய பாணத்தாலே அடிககப்பட்டவனுய், மிகவும் துன்புற்றவனுய் ஆடினன்; வில்லேயும் கைவிட்டான்" [ரா-யு 59-139] "அழகியவனுய், ஸுகமாகத் தூங்குமவனுய் (அந்நிலேயாலே) எதிரிகளே அழியச்செய்யுமவனுன ராமபிரான்" [ரா-ஸு 38-25] என்கிறபடி அழகும் எழிலுமே படையாக எதிரிகளே அழிப்பார் என்கை. [அழகு–அவயவ சோபை; எழில்–ஸமுதாயசோபை].

*ஏதேனுமாகக்கொடுபோகத்தேடுகிறபடியாலேபோரப் பொலியச் சொல்லுகிற இந்த வாக்யம் விச்வஸநீயமோ? என்ன,–* **(வஸிஷ்டோபி)** *ஸர்வஜ்ஞனாய், பரமர்ஷியான ஸ்ரீவஸிஷ்டபகவானும் அறியும்.* **(வஸிஷ்ட:)** *என் கார்யத்துக்கு வந்த நானொழிய* **"स तेऽहं पितुराचार्य:"** **(ஸ தேऽஹம் பிதுராசார்ய:)***என்று உன் கார்யந்துக்குக கடவனாய், உனக்கு ஆப்தனான வஸிஷ்டபகவானைக் கேட்கமாட்டாயோ? * 'வஸ் நஸ்ஸிலே ஸப்தமி'யாய்* **"कुलगुरुर्भगवान् वसिष्ठ:"** **(குலகு₃ருர் ப₄க₃வாந் வஸிஷ்ட₂:)** *என்கிறபடியே எங்கள் பக்கலன்றியிலே உங்கள் பக்கலிலே ஸ்நிக்த₄னாய் உங்கள் ஹிதந்திலே நிலை நின்றவனன்றோ.* **"इदं वो याज्यानां"** **(இத₃ம் வோ யாஜ்யாநாம்)** *என்று முராரியும் சொன்னானிறே.*

---

ஏதாவது சொலலி ராமனைக் கொண்டுபோக வேண்டுமெனறு ராமனுடைய பெருமையை மிகவும் புகழ்ந்து கூறும் இந்த வாக்கியம் நம்பத்தகுந்ததோ? எனன,—(வஸிஷடரும அறிவாா)ஸர்வஜ்ஞராய், ஒபபற்ற ரிஷியான வஸிஷ்டரும் அறிவார். (*வஸிஷ்டர்) என் கார்யத்திற்கு வநத நானிருக்க, "ராம! நான் உன்பிதாவுக்கும் (உனககும்) ஆசார்யன்" [ரா-அ 111-4] என்று உனக்குப் புரோ ஹிதனாய், குருவான வஸிஷ்டபகவானைக் கேட்கமாட்டாயோ? "குலகுருவான பகவான் வஸிஷ்டா" [அநர்க்கராகவம் 2-60] என கிறபடியே என்னிடத்திலன்றியிலே உங்களிடத்தில அனபுள்ள வனாய், உங்கள் நலத்திலே நிலைநினறவனனறோ.

**"இத₃ம் வோ யாஜ்யாநாமுதி₃தமுதி₃ம் யத் குலமபூ₄த்**
**யதி₃ஷ்டம் வா குர்வந்நக்ருத ஸக₃ர: பூர்த்தமுத₃தி₄ம்।**
**அஸௌ தே பூர்வேஷாம் ஸுசரிதபதாகா யத₃மர-**
**ஸ்ரவந்தீ க்ருத்ஸ்நோऽயம த்ரிபு₄வநகு₃ரோஸ் தஸ்ய விப₄வ:॥"**

---

* யுஷ்மசசப்ததத்தின ஆறுவது வேற்றுமைப்பன்மையில் "ப₃ஹு வசநஸ்ய வஸ்நஸௌ" [அஷ்டா 8-1-21] என்கிற ஸூத்ரத்தின்படி ஏற்படும் வ: (வஸ்) என்பதை முதல் வேற்றுமையாக வைத்து அதன் மேல் ஏழாவது வேற்றுமையைக்கொண்டு "வஸிதிஷ்ட₂தீதி வஸிஷ்ட₂:" [உங்களிடத்திலே நிலைநிற்பவனையாலே வஸிஷ்டனாகிறான்] எனகிற வ்யுத்பத்தியின்படி இங்கு பொருள் அருளிச் செய்கிறார்.

*நீதானும் இக்ஷ்வாகுகுலஜாதனுகையாலே உனக்கும் ஒவ்வாதோ அவற்றில் அந்தர்ப்பாவம் என்ன.—* **(வஸிஷ்டோபி வேத்தி)** *அம்மர்யாதை குலைந்து இவன் புத்ராதிகளைக் கொல்லுவது, இவன் ஸுரபி₄யைப் பறிப்பது, இவனோடே யுத்தம் பண்ணுவது. இவனாலே பரிபூ₄தனுவதாய் இப்படிக்கு விரோதம் பிறந்தபடியாலே எனக்காகப் பொய் சொல்லான். அப்படிக்கொத்த இவனையும் கேட்டுக்கொள். 'அபி' ஶப்தம் நானேயல்ல. இவனுமறியும் என்று ஸமுச்சயமாகவுமாம். அன்றியிலே, அபிஶப்₃த₃: விரோத₄ம் த்₃யோதயதி; எனக்கு விருத்தனுன இவனும் அறியும் என்றாகவுமாம். அல்லாத ரிஷிகளிற் காட்டில் இவனுக்கு ஏற்றமேதென்னில்:* **(மஹாதேஜா:)***ஸரஸ்வதீவல்லப₄னுன ப்ரஹ்மபுத்ரனுமாய் ஸ்வயோக*

[(பல) யாகங்களைச் செய்த உங்களுடைய இக்ஷ்வாகுகுலம் உயர்ந்ததாகவும், ஆநந்தமுடையதாகவும் ஆனதும், இஷ்டத்தைச் செய்ய ஸகரன் கடலை வெட்டியதும், உன்னுடைய முன்னவனுன பகீரதனுடைய நற்செயலுக்கு த்வஜம்போல் விளங்கும் கங்கையும் ஆகிய இவையெல்லாம் மூவுலகிற்கும் குருவான அந்த வஸிஷ்டருடைய பெருமையேயாகும்] என்று அநர்க்கராகவத்திலே [1-20] முராரி கவியும் சொன்னுனன்றோ.

விச்வாமித்திரரான நீரும் இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்தவராகையாலே வஸிஷ்டர் உமக்கும் நன்மையையே தேடுவாரன்றோ என்ன (வஸிஷ்டரும் அறிவார்) அந்த குருசிஷ்ய வரம்பு மாறி நான் இந்த வஸிஷ்டருடைய பிள்ளை முதலானுரைக் கொல்லுவது, இவருடைய பசுவைப் பறிப்பது, இவருடன் யுத்தம் செய்வது, இவராலே தோல்வியடைவது, ஆக இப்படி எங்களுககுள் விரோதம் உண்டானபடியால இவர் எனக்காகப் பொய் சொல்லமாட்டார். அப்படிப்பட்ட இவரையும் கேட்டுக்கொள். 'அபி' [உம்] என்னும் சொல் 'நான மட்டுமல்ல; இவருமறிவார்' என்று கூட்டுவதற்காகவென்றும் கொள்ளலாம். அன்றிககே, 'அபி' [உம்] என்னும் சொல் விரோதத்தைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். என்னுடைய விரோதியான இவரும் அறிவர் என்றபடி. மற்ற ரிஷிகளைக்காட்டிலும் இவ்வஸிஷ்டருக்கு ஏற்றமென்ன வெனில்: (மஹாதேஜஸ்வியான வஸிஷ்டர்) ஸரஸ்வதீ ப்ரியனுன ப்ரஹ்மாவுக்குப் பிள்ளையுமாய், தன்னுடைய யோக

ஸித்தஜ்ஞாநனுமாகையால் வந்த மதிப்பையுடையவன். (மஹாதேஜா:) லோகநாதனை புருஷோத்தமனகப்படத் தன் காலிலே குனியும்படியான ஏற்றமுடையவன். (மஹாதேஜா.) **"कौशिको यशसां निधिः"** (கௌஶிகோ யஶஸாம நிதி$_4$:) என்று நாட்டில் புகழுக்கு எல்லையான நானகப்பட **"वसिष्ठो मामेवं वदतु"** (வஸிஷ்டோ$_2$ மாமேவம வத$_3$து) என்றும். **"सत्यं चकार ब्रह्मर्षिरेवमस्त्विति चाब्रवीत्"** (ஸத்யம் சகார ப்$_3$ரஹ்மர்ஷிரேவமஸ்த்விதி சாப்$_3$ரவீத்) என்றும் அவன் வாயாலே ப்ரஹ்மர்ஷி பட்டமும் பரியட்டமும் பெறவேண்டும்படி பெருமதிப்பனவன். இப்படி உமக்கேறப் பெரியராகில் **"तेषां तेजोविशेषेण प्रत्यवायो न विद्यते"** (தேஷாம தேஜோவிஶேஷேண ப்ரத்யவாயோ ந வித்$_3$யதே) என்று உமக்குப் பொய் சொன்னலும் பொறுகக்கும்படியாயிருந்ததீயென்ன,— (மஹாதேஜா:) **"सत्यधर्मपरायणः"** (ஸத்யத$_4$ர்மபராயண:) என்றும், **"सत्यं वद। धर्मं चर।"** (ஸத்யம் வத$_3$। த$_4$ர்மம்சர।) என்றும் தானும் ஸத்யத்தை ஹிதமாக அநுஷ்டித்துப் பிறரையுமகப்பட அனுஷ்டிப்பித்து இப்படி

---

மஹிமையாலே பெற்ற அறிவையுடையவருமாகையாலே வந்த பெருமையை உடையவர். (மஹாதேஜஸ்வி) லோகநாதனை புருஷோத்தமனும் கூடத் தன் காலிலே வணங்கும்படியான ஏற்றமுடையவர். (மஹாதேஜஸ்வி) "கீர்த்திக்குறைவிடமான கௌசிகர்" [?] என்று உலகத்தில் ஒப்பற்ற புகழையுடைய நானும் கூட "(ப்ரஹ்மபுத்ரரான) வஸிஷ்டர்என்னை ப்ரஹமரிஷியென்று சொல்லட்டும்" [ரா-பா 65-23] என்றும், "ப்ரஹ்மரிஷியான வஸிஷ்டர் (அவ்வார்த்தையை) ஸத்யமாக்கினர். இப்படியே (இவர் ப்ரஹ்மரிஷியாக) ஆகட்டும் என்று சொன்னர்" [ரா-பா 65-25] என்றும் அவர் வாயாலே ப்ரஹ்மரிஷிப் பட்டமும் பெறவேண்டும்படியான பெருமையையுடையவர். இப்படி உம்மைவிடப் பெரியவராகில் "அவர்களுடைய தேஜஸ்ஸின் பெருமையினல் (பாபம் செய்தாலும்) அவர்களுக்கு தோஷமில்லை" [ஆபஸ்தம்ப$_3$த$_4$ர் 2-13-8] என்கிறபடியே உமக்காகப் பொய் சொன்னலும் தோஷமில்லாமல் இருக்கிறதே என்ன,–(மஹாதேஜஸ்வி) "ஸத்யதர்மங்களையே மேலான ப்ராப்யமாகக் கொண்டவர்" [ரா-அ 2-29] என்றும "ஸத்யத்தைச்சொல்; தருமவழிப்படி நட" [தை-சீக்ஷா-11] என்றும் தானும் ஸத்யத்தைக் கடைப்பிடித்துப்

*மஹாதேஜஸ்வியாய்ப் பெருந்தவத்தனுயிருக்கிறவன் தேஜோஹானி பிறக்கும்படி அஸத்யம் சொல்லுமோ?* (மஹா தேஜா:) **"धिग्बलं क्षत्रियबलं ब्रह्मतेज बलं बलं"** (தி$_4$க்$_3$ப$_3$லம் க்ஷத்ரிய ப$_3$லம் ப்$_3$ரஹ்மதேஜோப$_3$லம் ப$_3$லம்) *என்னும்படி நிரவதி$_4$க ப்ரஹ்மதேஜஸ்வியாயிருக்கிறவன்.*

*அப்படிப் பெரியராயிருந்தாலும்* **"यद्ब्राह्मणश्चाब्राह्मणश्च प्रश्न-मेयातां ब्राह्मणायाधि ब्रूयात्"** (யத்$_3$ ப்$_3$ராஹ்மணச்சாப்$_3$ராஹ்மணச்ச ப்ரச்நமேயாதாம் ப்$_3$ராஹ்மணுயாதி$_4$ ப்$_3$ரூயாத்) *என்றும்,* **"ब्राह्मणार्थे गवार्थे वा सद्यः प्राणान् परित्यजेत्"** (ப்$_3$ராஹ்மணுர்த்தே$_2$ க$_3$வார்த்தே$_2$ வா ஸத்$_3$ய: ப்ராணுந் பரித்யஜேத்) *என்றும், நானும் நீயுமானுல் தன்னை அழியமாறியும் ப்ரஹ்மர்ஷியான உனக்காக வார்த்தை சொல்லுமத்தனை போக்கி க்ஷத்ரியனை எனக்காகச் சொல்லுமோவென்ன;* (யே சேமே தபஸி ஸ்திதா:) *படைவீட்டார் தம் பலம் மதித்து முகத்துக்குத் தக்க வார்த்தை சொல்லுகிற எங்களைவிட்டுச் சருகிலை தின்னிக*

---

பிறரையும் அதை அநுஷ்டிக்கச்செய்து, இப்படி மஹாதேஜஸ்வியாய்ப் பெருந்தவத்தராயிருப்பவர் தேஜோஹாநி பிறக்கும்படி அஸத்யம் சொல்லுவரோ? (மஹாதேஜஸ்வி) "க்ஷத்ரியபலமும் ஒரு பலமாகுமா? ப்ரஹ்மதேஜோபலமே பலமாகும்" *[ரா-பா 56-23]* என்று நானே சொல்லும்படி எல்லையற்ற ப்ரஹ்மதேஜஸ்ஸை உடையவராயிருப்பவர்.

அப்படிப் பெரியவராயிருந்தாலும் "ப்ராஹமணன் ஒருவனுக்கும் ப்ராஹ்மணனல்லாதான் ஒருவனுக்கும் விவாதம் நேர்ந்ததாகில் (இருவா பக்கமும் நியாயம் ஸமமாக இருக்கும்போது) ப்ராஹ்மணனுக்கு ஸாதகமாகவே தீர்ப்பளிக்கவேண்டும்" [?]என்றும், "ப்ராஹமணனுக்காகவாவது பசுவுக்காகவாவது ப்ராணனையும் உடனேவிடலாம்" [மநு 11-79] என்றும் சொல்லுகிறபடியே நம்மிருவருக்கும் விவாதம் நேர்ந்தால் வஸிஷ்டர் தன்ஸ்வரூபத்தை அழிததும் ப்ரஹ்மரிஷியான உமக்கு ஸாதகமாக வார்த்தை சொல்லுவாரேயொழிய க்ஷத்ரியனை எனக்கு ஸாதகமாகச் சொல்லுவாரோ? என்ன,—(தவத்தில் நிலைநிற்கும் இவர்களும் அறிவார்கள்) ராஜாக்கள் தரும் பொருளைப் பெரிதாக நினைத்து முகத்துக்குத் தக்கவார்த்தை சொல்லும் வஸிஷ்டாதிகளை விட்டுச் சருகிலை தின்று ஜீவிக்கும் தபஸ்வி

ளான இவர்களைக் கேட்கமாட்டாயோ என்றுமாம். (இமே தபஸி ஸ்திதா:) "ऊनषोडशवर्षः" (ஊநஷோட₃ஶவர்ஷ:) என்று அவர் பருவம் நிரம்பாமையையிட்டு அவர் யோக்யதைக்கு நீ தட்டுளுப்படவேண்டா. "**तस्य धीराः परिजानन्ति योनिं**" (தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம) என்று அவனுடைய ஜந்மரஹஸ்ய ஜ்ஞாநமுடைய இவர்களைக் கேளாய் என்றுமாம்.

(இமே) புலஸ்த்யன், அகஸ்த்யன், பராஶரன், பாராசர்யன் என்றாப்போலே ப்ரஸித்தராய், ஆசார்யபதம் நிர்வஹித்துத் திரிகிறவர்களன்றியிலே இன்னாரென்று பேருங் கூடச் சொல்லில்லாதபடி ஒதுங்குலகளாய், ப₄ணிதியற்றிருக்கிறவர்கள். நானேயல்ல, ஸ்ரீவஸிஷ்டபகவானுமல்ல, இவர்களும் அறிவார்கள்; (இமே) நான் இவர்களுக்குச் சில வைலக்ஷண்யம் ஆபாதிக்கவிருந்து கேட்கவேணுமோ? நரை தலையும், முசியும் மோவாயும், ஒட்டின கதுப்பும், திரங்கின தோலும், உலர்ந்த வடிவும், எண்ணுகிற விரலும், ஜபிக்கிற வாயும், வடிகிற கண்ணீரும், ஆரூத பகவதநுஸந்தாநமும்,

---

களான இவர்களைக் கேட்கமாட்டாயோ என்கிறார். (தபஸ்ஸில் நிலைநின்ற இவர்கள்) "பதினாறு வயதும் நிரம்பாத ராமன்" [ரா-பா 20-2] என்று ராமன் பருவம் நிரம்பாதவனென்று அவன் யோக்யதையை சங்கிக்கவேண்டா. "புத்திமான்களிற் சிறந்தவர்களே அவனுடைய அவதார ரஹஸ்யத்தை அறிகிறார்கள்" [புருஷ ஸூக்தம்] என்கிற அவனுடைய அவதாரரஹஸ்ய ஜ்ஞானமாகிற தபஸ்ஸிலே நிலைநிற்கும் இவர்களைக்கேளாய் என்றுமாம்.

(இவர்கள்) புலஸ்த்யன், அகஸ்த்யன், பராசரன், பராசரபுத்ரனைவ்யாஸன் என்றாப்போலே ப்ரஸித்தராய், ஆசார்யபதம் நிர்வஹித்துத்திரிகிறவர்களான அவர்களைக் கேட்கவேண்டாம். அவர்களாகில் ப்ரஸித்திக்கும் பெயருக்கும் ஆசைப்பட்டுப் பக்ஷபாதமாகப் பேசக்கூடும். இன்னாரென்று பேருமில்லாதவர்களாய் ஒதுங்கித்திரியும் இவர்களைக் கேளாய். (இவர்கள்) நான் இவர்களுக்குச் சில பெருமைகளைச்சொல்லித்தான் இவர்களுடைய ப்ரபாவமறியலாமோ? நரைதலையும், வதங்கின மோவாயும், ஒட்டின கன்னமும், திரைநத தோலும், உலர்ந்த வடிவும், எண்ணுகிற விரலும், ஜபிக்கிற வாயும்,

*மயிரெறிந்த உடம்புமாயிருக்கிற இருப்பிலே தெரியாதோ?* **"आह्लादशीतनेत्राम्बुः पुलकीकृतगात्रवान्। सदा परगुणाविष्टो द्रष्टव्यस्सर्वदेहिभिः" (ஆஹ்லாத₃ஶீதநேத்ராம்பு₃: புலகீக்ருத கா₃த்ரவாந் ஸதா₃ பரகு₃ணாவிஷ்டோ த்₃ரஷ்டவ்யஸ் ஸர்வதே₃ஹிபி₄:)** *என்னும்படியிருக்கிறவர்களன்றோ.* **(இமே)** *இவர்களிப்படி 'இதம்' ஶப்தத்தாலே சொல்லிவிரலிட்டுக் காட்டுமத்தனை யொழிய வேறு பாசுரமிடும்படி வாங்மநஸ்ஸுக்களுக்கு விஷயமோ?* **(இமே)** *"சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தை இகழேல்கண்டாய் சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" என்று தூரஸ்தனாயிருப்பானொருவன் பக்கலிலே கேட்கவேண்டாதபடி இங்கே ஸந்நிஹிதராகப் பெற்றோமிறே.* **(இமே)** *மஹாபலியைப்போலே ஆஸுரப்ரக்ருதியாகையன்றிக்கே பரமஸத்வநிஷ்டரான ரிஷிகளாகப் பெற்றோமிறே.* **(இமே)** *என்னைப்போலே, ஶ்ரீவஸிஷ்டபகவானைப்போலே ஒருவராகையன்றிக்கே* **"भूयसां स्याद्बलीयस्त्वं"**

---

*வடிகிற கண்ணீரும், மாருத பகவத்தியானமும், மயிர்க்கூச்செறியும் உடம்புமாய் இவர்களிருக்கும் இருப்பிலே தெரியாதோ இவர்களுடைய பெருமை? "பகவதநுபவத்தாலுண்டான ஆநந்தத்தாலே ஏற்படும் குளிர்ந்த கண்ணீரையுடையவனும், மயிர்க்கூச்செறியும் தேஹத்தையுடையவனும், எப்போதும் பரமாத்மாவின் குணங்களை தியானிப்பவனும் எல்லா ஜனங்களாலும காணத்தக்கவன் ஞானி" [விஷ்ணுதத்துவம்] என்னும்படியிருக்கிறவர்களன்றோ இவர்கள். (இவர்கள்) 'இவர்கள்' என்று விரலிட்டுக் காட்டுமளவன்றி, வேறு வார்த்தை சொல்லி வாக்காலும், மனஸ்ஸாலும் அளவிடமுடியுமோ இவர்கள் பெருமையை? (இவர்கள்) "சிறியனென்றென்னிளஞ் சிங்கத்தையிகழேல் கண்டாய் சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" [பெரியாழ்-திரு 1-4-8] என்கிறபடியே வெகு தூரத்திலே பாதாளத்திலுள்ள மாவலியினிடத்திலே போய்க்கேட்க வேண்டிய வாமனன்பெருமை போன்றதோ இவனுடைய பெருமை? இவன் பெருமையை அறிந்த இவர்கள் அருகிலேயே உள்ளனரே என்கிறார். (இவர்கள்) அதிலும் மஹாபலியைப்போலே அஸுரனயிராமல், பரமஸாத்விகர்களான ரிஷிகளாகப் பெற்றோமன்றோ என்கிறார். (இவர்கள்) என்னையும் வஸிஷ்டரையும்போலே ஒருவரிருவராயிராமல் பலராயிருக்கையால் "அதிக எண்ணிக்கை அதிக*

(பூ$_4$யஸாம் ஸ்யாத்$_3$ ப$_3$லீயஸ்த்வம்)என்று இவர்கள் பலரானது வும் உனக்கு விச்வாஸ ஹேதுவிறே.

இவர்கள் பலராஞல் ப்ரயோஜனமென்? பொய் சொல் லாதபடியான த$_4$ார்மிகராகவேணுமேயென்னில்: (தபஸி ஸ்திதா:) "तपो दानं तपस्सत्यं तपो धर्मः प्रतिष्ठितः" (தபோ த$_3$ாநம் தபஸ் ஸத்யம் தபோ த$_4$ர்ம: ப்ரதிஷ்டி$_2$த:) என்கிறபடியே ஸர்வ காலமும் தப: பரராகையாலே பரமத$_4$ார்மிகரென்கிறது. (தபஸி ஸ்திதா:) பகவதீயமாய், நித்யமான ஆத்மவஸ்துவுக்கு ஹிதம்தேடி அல்பாஸ்திரமான ஶரீரத்தை ஒருகதுபபோரு மவர்கள். (தபஸி ஸ்திதா:) "हुतमिष्टञ्च तप्तञ्च धर्मश्चायं कुलस्य ते। गृहात्प्रतिनिवर्तन्ते पूर्णकामा यदर्थिनः" (ஹுதமிஷ்டஞ்ச தப்தஞ்ச த$_4$ர்மச்சாயம் குலஸ்ய தே। க்$_3$ருஹாத் ப்ரதிநிவர்த்தந்தே பூர்ண காமா யத$_3$ர்த்தி$_2$ந:॥) என்று அதிதிகளாயும், அப்$_4$யாக$_3$தராயு முள்ளவர்களை உகப்பிக்கையே பரமதர்மமென்றிருக்குமவர் கள். (தபஸி ஸ்திதா:) தப:ஶப்தவாச்யமான அர்ததந்ரயத்தி

பலத்தையுடையது" என்னும் நியாயத்தாலும உனக்கு நம்பிகனை யுண்டாகலாமே.

இவர்கள் பலராயிருந்து பலனென்ன? பொய் சொல்லாதபடி யான தார்மிகர்களாகவேணுமேயென்னில்: (தபஸ்ஸிலே நிலைநிற்ப வர்கள்) "தானம தபஸ்ஸாகும்; ஸதயமும் தபஸ்ஸாகும்; நிலைநிற் கும் (வர்ணுச்ரம) தர்மமும் தபஸஸாகும்" [?]என்கிறபடியே எல்லாக் காலத்திலும் ஸத்யம் முதலான தபஸ்ஸுக்களிலே ஈடுபட்டுநிற்கும் பரமதார்மிகர்களன்ருே இவர்கள் என்கிருர். (தபஸ்ஸிலே நிலை நிற்பவர்கள்) பகவானுடைய உடைமையாய் நித்யமான ஆத்மாவுக்கு நன்மை செய்வதற்காக, நிஹீனமும் நிலையற்றதுமான தேஹத்தை ஒடுக்கும்படியான தவத்திலே நிலைநிற்பவர்கள், (தபஸ்ஸிலே நிலை நிற்குமவர்கள்) "உன்னுடைய வீட்டிலிருந்து யாசகர்கள் விருப்பம் நிறைவேறப்பெற்றவர்களாய் விடைபெற்ருர்களாகில், உன்ஞல் ஹோமங்கள் செய்யப்பட்டதாகிறது; யாகங்கள் அனுஷ்டிக்கப் பட்டதாகிறது; தவங்கள் செய்யப்பட்டதாகிறது; உன் குலத்திற்கு தர்மமாகவும் ஆகிறது." [அநர்க்கராகவம் 1-17] என்கிறபடியே விருந்தாளிகளாக விட்டை அடைந்தவர்களை த்ருப்திசெய்விப்பதாகிற பெருந்தவத்திலே நிலைநிற்பவர்கள். (தவத்திலே நிலைநிற்பவர்கள்)

லும் நிலையுடையவர்கள். அதாவது "தப ஸந்தாபே" என்கிற தாதுவிலேயாய், "**यज्ञेन दानेन तपसा**" (யஜ்ஞேந தா₃நேந தபஸா) என்றும் "**कर्मयोगस्तपस्तीर्थदानयज्ञादिसेवनम्**" (கர்மயோக₃ஸ் தபஸ் தீர்த்த₂தா₃நயஜ்ஞாதி₃ஸேவநம்) என்றும் சொல்லுகிறபடியே ஜ்ஞானபக்திகளுக்கு அங்கமான கர்மயோகத்திலே நிஷ்டரானவர்கள். அன்றியிலே, "தப ஆலோசநே" என்கிற தாதுவிலேயாய், "**आत्मानं तत्त्वतो ज्ञात्वा**' (ஆத்மாநம் தத்வதோ ஜ்ஞாதவா) என்றும், "**आत्मयाथात्म्यज्ञानपूर्वकं**" (ஆத்மயாதா₂த்ம்ய ஜ்ஞாநபூர்வகம) என்றும் சொல்லுகிறபடியே ஆத்மஜ்ஞாந ரூபமான ஜ்ஞானயோகத்திலே நிஷ்டரானவர்கள் என்றுமாகவுமாம். அன்றியிலே "தப ஐச்வர்யே" என்கிற தாதுவிலேயாய் "**प्रशासितारं सर्वेषां**" (ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம்) என்றும், "**ये चेमेऽरण्ये श्रद्धा तप इत्युपासते**" (யே சேமேऽரண்யே ச்ரத்₃தா₄ தப இத்யுபாஸதே) என்றும், "**परमं यो महत्तपः**" (பரமம யோ மஹத்தப:) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வப்ரஶாஸிதாவாய், தபச்சப்தவாச்யனை பரமாத்ம விஷயத்திலே

---

தபச்சப்தத்தாலே சொல்லப்படும் மூன்று பொருள்களிலும் நிலை நிற்பவர்கள். அதாவது:–1. "தப–ஸந்தாபே" என்கிற தாது. "யஜ்ஞத்தாலும், தானத்தாலும், அழிவற்ற தவத்தாலும் (ப்ராஹ்மணர்கள் பரமாத்மாவை அறியவிரும்புகிறார்கள்)" [ப்ரு 6-4-22] "கர்மயோகமாவது தவத்தை அநுஷ்டிக்கையும், தீர்த்தமாடுதலும், தானயஜ்ஞாதிகளைச் செய்தலுமாகும்" [கீதார்த்த ஸங்க்ரஹம்-23] என்று சொல்லுகிறபடியே ஜ்ஞாநபக்தியோகங்களுக்கு அங்கமான கர்மயோகத்திலே நிலைநின்றவர்கள். 2. "தப ஆலோசநே" என்கிற தாது. "ஆத்மாவை உள்ளபடி அறிந்து" [ ] என்றும், "ஆத்மாவைப்பற்றிய உண்மையறிவை முன்னிட்டுக்கொண்டு" [ ] என்றும் சொல்லுகிறபடியே ஆத்மஜ்ஞாநரூபமான ஜ்ஞாநயோகத்திலே நிலைநிற்பவர்கள் என்றும் கொள்ளலாம். 3. "தப ஐச்வர்யே' என்கிறதாது. "எல்லாரையும் நியமிக்கும் ஈச்வரனாயிருப்பவனை" [மநு 12-122] என்றும், "எவர்கள் காடுகளில் ச்ரத்தையுடன் தபச்சப்தத்தால் சொல்லப்படும் பரமாத்மாவை உபாஸிக்கிறார்களோ" [சாந் 5-10-1] என்றும், "எவன் மேலானதவமாகவுமாகிறானோ" [ஸஹஸ்ரநாமாத்யாயம்] என்றும் சொல்லுகிறபடி ஸர்

ஜ்ஞாநபக்தியோகநிஷ்டர் என்றாகவுமாம். அன்றியிலே (**தபஸி ஸ்திதா:**) என்று வாசிகதபஸ்ஸான ஸ்வாத்யாயத்திலே உளரென்றாகவுமாம். அன்றியிலே (**தபஸி ஸ்திதா:**) என்று பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை உடையரென்றாகவுமாம். அன்றியிலே (**தபஸி ஸ்திதா:**) என்று "**तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः**" (**தஸ்மாந் ந்யாஸமேஷாம தபஸாமதிரிக்தமாஹு:**) என்றும், "**तेषां तु तपसां न्यासमतिरिक्तं तपः श्रुतं**" (**தேஷாம் து தபஸாம் ந்யாஸமதிரிக்தம் தப: ச்ருதம**) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வாதிசாயி தபஸ்ஸான ப்ரபத்தியிலே நிஷ்டரானவர்கள் என்றுமாம்.

இச்லோகந்தன்னால் "**ஊநஷோட₃ஶவர்ஷ:**" என்கிற ச்லோகத்துக்கு உத்தரம் சொல்லுகிறது. "**பச்யாமி**" என்று மேலெழுந்த கண்ணாலே நீ காண்கிறது காட்சியன்றுகாண். யோகபரிசுத்தமான உட்கண்ணாலே நான் காண்கிறது காட்சி

---

வேச்வரனாய், அதனாலேயே தபச்சப்தத்தாலே சொல்லப்படுமவனான பரமாத்மாவினிடத்தில் ஜ்ஞாந பக்தியோகங்களிலே நிலைநிற்பவா கள் என்றும் கொள்ளலாம். (தபஸ்ஸிலே நிலைநிற்பவர்கள்) "தத்₃தி₄ தபஸ் தத்₃தி₄ தப:" [தை-சீக்ஷா 9] [வேதாத்யயனமே தவமாகும்] என்கிறபடியே வாசிகதபஸ்ஸான வேதாத்யயனத்திலே ஊன்றியவர்கள் என்றுமாம். (தபஸ்ஸிலே நிலைநிற்பவர்கள்) பரமாத்மாவை இடைவிடாமல் தியானிப்பதாகிற பரபக்தி, பரனை ஸாக்ஷாத்கரிப்பதாகிற பரஜ்ஞானம, அவனைக் கணநேரமும் விட்டுப்பிரிய மாட்டாத நிலையாகிற பரமபக்தி என்னும் மூனறு விதமான தவத்தை உடையவர்கள் என்றுமாம. (தபஸ்ஸிலே நிலைநிற்பவர்கள்) "ஆகையால் சரணாகதியை இந்தத் தபஸ்ஸுக்களுள் சிறந்ததாகச் சொல்லுகிறார்கள்" [தை-நா-50] "அந்தத் தவங்களுள் சரணாகதி சிறந்த தவம் என்று சொல்லப்படுகிறது" [அஹிர் 37-36] என்று எல்லாவற்றையும் விட மேலான தவமான ப்ரபத்தியிலே நிலைநிற்பவர்கள என்றுமாம.

இந்த ச்லோகமானது "ஊநஷோட₃சவாஷ:" [ரா-பா 20-2] என்னும் தசரதவாக்யமான ச்லோகத்திற்கு பதில்போல் அமைந்திருக்கிறது. "நபச்யாமி"[(ராமனுக்கு யுத்தயோக்யதையைக்)காணவில்லை] என்று ஊனக்கண்ணாலே நீ காண்பது காட்சியன்றுகாண்; யோக பரிசுத்தமான ஞானக்கண்ணாலே நான் காண்கிறதே காட்சி என்

யென்கிறது "அஹம் வேத்மி" என்கையாலே. "ஊநஷோட₃ஶவர்ஷ:" என்று பருவத்தையிட்டு எளியனென்றிருக்க வேண்டாகாண், விரோதிநிரஸநக்ஷமராம்படி பெரியர் காண் என்கிறது "மஹாத்மாநம்" என்கிறத்தாலே. "மே ராம:" என்று நீ உன்னுடைய மமகாரத்திலே ஒதுக்கவொண்ணாது காண். "लोकाभिरामोयं" (லோகாபி₄ராமோயம்) என்று ஸர்வ லோகஶரண்யராய்க்காணிருப்பரென்கிறது வெறும் "ராமம்" என்கிறத்தாலே. "ராஜீவலோசந:" என்று பொழுது புகுவதற்கு முன்னே உறங்குவர், நிஶாசரரோடு பொருகைக்கு ஆளல்லரென்று நினைத்திருக்கவேண்டா. "सुखसुप्तःपरन्तपः" (ஸுக₂ஸுப்த:பரந்தப:) என்று அவ்வுறக்கம்தான் எதிரிகளை அழிக்கும்படி நித்யபராக்ரமர்காண் என்கிறது "ஸத்யபராக்ரமம்" என்கிறத்தாலே. "அஸ்ய-ராக்ஷஸை:" என்று இவரோ

---

கிறார் "அஹம் வேத்மி" [நான் அறிகிறேன்] என்னும் பதத்தாலே. "ஊநஷோட₃சவர்ஷ:" [பதினாறுவயதும் நிரம்பாத ராமன்] என்று பருவத்தைக்கண்டு பலமற்றவனென்றெண்ணாதே; விரோதிகளை நிரஸிக்கவல்ல பெரியோனன்றோ இவன் என்கிறார் "மஹாத்மாநம" [பெரியோனை]என்னும் பதத்தாலே. "மே ராம:" [என்னுடைய ராமன] என்று நீ இவனை உன்னுடையவனாகவே எண்ணலாகாது காண்; "உலகிற்கெல்லாம் இனியவனிவன்" [ரா-அ 2-44] என்கிறபடியே ஸர்வலோக சரண்யனன்றோ இவன் என்கிறார் வெறும் "ராமம" என்னும் பதத்தாலே. "ராஜீவலோசந:" [தாமரைபோன்ற கண்ணையுடையவன்] என்கிறபடியே இருட்டுவதற்கு முன்பே உறங்கும் சிறுவனென்பது இவனுடைய சிவந்தகண்களிலே தோற்றியிருக்கிறது; ஆகையால் இவன இரவில் ஸஞ்சரிக்கும் அஸுரருடன் சண்டை செய்ய மாட்டாதவன் என்று நினைக்கவேண்டாகாண். "ஸுகமாகத் தூங்குமவராய் (அந்நிலையாலேயே) எதிரிகளைத் தபிக்கச் செய்பவரான பெருமாள்" [ரா-ஸு 38-25] என்று அவ்வுறக்கத்தாலே எதிரிகளை அழிக்கும் படியான நித்யபராக்ரமரன்றோ இவர் என்கிறார் "ஸத்ய பராக்ரமம்" என்னும் பதத்தாலே. "அஸ்ய-ராக்ஷஸை:" [ஒருவனை இவனுக்குப் பலரான ராக்ஷஸர்களுடன் (யுத்தயோக்யதையைக் காணவில்லை)]

ஒருவர், அவர்கள் பலர், இவர் மநுஷ்யர், அவர்கள் ராக்ஷஸர், என்று நினைத்திருக்கவேண்டா; "உட்குடையசுரருயிரெலலா முண்டவொருவன்" என்றும் "திண்கொளசுரரை தேய வளர்கின்றான்" என்றும் ஒரு கோடிபேருக்கு ஒருவனே அமைந்துகாணிருப்பதென்கிறது இவற்றில் ஏகவசநத் தாலும், த₄ர்மிநிர்த்தே₃ஶந்தாலும். "பச்யாமி" என்கிற ஏகவசநஸித்தனை நீயொருவனுமேயிறே இவர் அயோக் யதையைச் சொலலுகைக்குள்ளது. அவருடைய யோக் யதையைச் சொல்லுகைக்குக் கிடக்கிறபேர் ஒரு வெள்ளம் காண் என்கிறது, "வஸிஷ்டோऽபியேசேமே தபஸி ஸ்திதா:" என்கிறத்தால். ஆக, இப்படி இந்த ச்லோகத்துக்கு உத்தர மாயிருக்கிறது இந்த ச்லோகம்.

**பாலகாண்டம் 20-வது ஸர்க்கம் 2-வது ச்லோகம்**

**ऊनषोडशवर्षो मे रामो राजीवलोचनः।**
**न युद्धयोग्यतामस्य पश्यामि सह राक्षसैः॥**

**ஊநஷோட₃ஶவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:।**
**ந யுத்₃த₄யோக்₃யதாமஸ்ய பச்யாமி ஸஹ ராக்ஷஸை:॥**

---

என்று இவர் ஒருவரென்றும் அவர்கள் பலரென்றும், இவர் மநுஷ்ய ரென்றும், அவர்கள் ராக்ஷஸரென்றும் நினைத்திருக்கவேண்டா; "உட்குடையசுரர் உயிரெல்லாமுண்டவொருவன்" [திருவாய் 7-2-3] "திண்கொளசுரரைத்தேய வளர்கின்றான்" [பெரியாழ் திரு 1-2-16] எனறு ஒரு கோடிபேருக்கு ஒருவனே போரும்படியன்றோவிருப்பது என்கிறார் இந்த ச்லோகத்திலுள்ள "மஹாத்மாநம்" முதலான ஏக வசனத்தாலும் (ஒருமையாலும்) "ராமம" என்னும் த₄ர்மி நிர்த்தேசத் தாலும். "பச்யாமி" [நான் (யுத்தயோக்யதையைக்) காண்கிறேன் (அல்லேன்)] என்கிறபடியே நீ யொருவனே இவருடைய அயோக் யதையைச் சொலல இருக்கிறாய். அவருடைய யோக்யதையைச் சொல்லக்கிடக்கிறவர்கள் ஒரு வெள்ளமுண்டு என்கிறார் "**வஸிஷ் டோபி யே சேமே தபஸி ஸ்திதா:**" [வஸிஷ்டரும், இங்கு தவத்திலே நிலைநிற்கும் மற்றுள்ளாரும அறிவர்]என்னுமத்தாலே. ஆக இப்படி "ஊநஷோடசவர்ஷ:" என்னும் ச்லோகத்துக்கு "அஹம் வேத்மி" என்னும் இந்த ச்லோகம் பதிலாயிருக்கிறது.

பதவுரை:—ராஜீவலோசந; — செந்தாமரை போன்ற கண்களையுடையவனாய், மே—என்னுடையவனான, ராம:—ராமன், ஊநஷோட₃ஶவர்ஷ:—பதினாறு பிராயமும் நிரம்பப் பெறாதவன்; அஸ்ய—இவனுக்கு, ராக்ஷஸைஸ் ஸஹ—ராக்ஷஸர்களோடுகூட, யுத்₃த₄யோக்₃யதாம — சண்டைசெய்யத் தகுதியை, ந பச்யாமி—(நான்) காணவில்லை.

அவதாரிகை:—விச்வாமித்ரபகவானானவன் "यज्ञविघ्नकरं हन्यां" (யஜ்ஞவிக்₄நகரம் ஹந்யாம்) என்கிற பெருமாளுடைய ஸங்கல்பத்தை அடியொற்றினவனாகையாலே, தன்னுடைய யஜ்ஞவிக்நத்தையும் அவரைக்கொண்டு போக்குவோமென்று பார்த்து, பெருமாளைப் போரவிடவேணுமென்று சக்ரவர்த்தியை இரக்க, அவனும் பெருமாள் பக்கல் வாத்ஸல்யத்தாலே "மதியெல்லாமுள் கலங்கி மயங்குமால்" என்று ப்ரேமாந்த₄னாய்க் கலங்கி, "அஹம் வேத்₃மி மஹாத்மாநம்" என்று ரிஷி ஈடேற்றிச் சொன்ன பாசுரம் நெஞ்சில் படாதே, பருவத்தில் இளமையைப் பார்த்து, விடாமைக்கு மன்றாடுகிறான் இந்த ச்லோகத்தாலே.

வ்யா.–(ஊநஷோட௱வர்ஷ:) இன்னமும் பதினாறுபிராயம் நிரம்பிற்றில்லை. "क्षीरकण्ठश्च रामभद्रः" (க்ஷீரகண்ட₂ச்சராமப₄த்₃ர:)

---

அவதாரிகை:— விச்வாமித்ரமஹர்ஷியானவர் "யாகத்திற்கு இடையூறு செய்பவனைக் கொல்லுவேன்" [பார-உத் 74-27] என்கிற பகவத் ஸங்கல்பத்தை அறிந்தவராகையாலே, தம்முடைய யஜ்ஞவிக்நத்தையும் அவரைக்கொண்டு போக்குவோமென்று நினைத்து, ஸ்ரீராமபிரானைத் தன்னுடன் போகவிடவேணுமென்று தசரதனை யாசிக்க, அந்த தசரதனும், பிள்ளையிடம் வாத்ஸல்யத்தாலே "மதியெல்லாமுள் கலங்கி மயங்குமால்" [திருவாய் 1-4-5] என்றாப் போலே அன்பினாலே அறியாமல் கலங்கி, "அஹம் வேத்மி மஹாத்மாநம்" என்று விச்வாமித்ரர் ராமனுடைய பெருமையைக் காட்டிச் சொன்ன பாசுரம் நெஞ்சில் பதியப்பெறாமல், பருவத்தில் சிறியவனாயிருப்பதைப் பார்த்து ரிஷியுடன் பிள்ளையை விடாமைக்கு மன்றாடுகிறான் இந்த ச்லோகத்தாலே.

வ்யா:–(பதினாறு பிராயமும் நிரம்பாதவன்) இன்னமும் பதினாறு வயது நிரம்பவில்லை. "கழுத்திலே பால் தங்கிநிற்கும் ராமபத்திரன்"

என்கிறபடியே பால் மாருத பருவத்திலேயே ஒரு பூசலும் பொருமோ என்கிருன். (ஊநஷோடஶவர்ஷ.) "बाल आषोड-शाद्वर्षात्पौगण्डश्चेति कीर्त्यते" (ப$_3$ால ஆஷோட$_3$ஶாத்$_3$ வர்ஷாத் பௌக$_3$ண்ட$_3$ச்சேதி கீர்தயதே) என்கிற மந்வாதிவசனப்படியே பதினறு பிராயத்துக்குக் கீழ் பாலனுய், அப்ராப்தவ்யவஹாரனுகையாலே ஒருவன் முதுகண் படவேணும். "चतुरङ्गसमायुक्तं मया च सहितं नय" (சதுரங்க$_3$ஸமாயுக்தம் மயா ச ஸஹிதம நய) என்று என்னேயும் சதுரங்கபலத்தையும் கூட்டிக் கொண்டு போமத்தனேபோக்கி இவரைத் தனியே கொண்டு போனல் ப்ரயோஜனமுண்டோ? (ஊநஷோடஶவர்ஷ:) "बालो ह्यकृतविद्यश्च न च वेत्ति बलाबलं। न चास्त्रबलसंपन्नो न च युद्धविशारदः" (ப$_3$ாலோ ஹ்யக்ருதவித்$_3$யச்ச ந ச வேத்தி ப$_3$லாப$_3$லம்। ந சாஸ்த்ரப$_3$லஸம்பந்நோ ந ச யுத்$_3$த$_4$விஶாரத$_3$:) என்று பருவமிதுவாயிருந்தது; இன்னமும் தநுர்வேதம் அதிகரித்திலர்; படையில் மிகுதி குறை அறியார்; இவர் தாமானபடியாகத் தன்னடையே கார்யகரமாம்படியான அஸ்த்ரங்களிலும் உபதேஶமில்லே; பூசலாடியும் படைபொருந்தியும் பழக்க

---

[அநர்க்கராகவம்-1]என்கிறபடியே பால் மணம் மாருத பருவத்திலே ஒரு சண்டை செய்யமுடியுமோ என்கிருர். (பதினறு வருஷமும் நிரம்பாதவன்) "பதினருவது வயதுவரையில் பாலனென்றும் பௌகண்டனென்றும் சொல்லப்படுகிருன்" என்கிற மந்வாதி வசனத்தின்படியே பதினறு பிராயத்துக்குக் கீழ் பாலனுய், லௌகிக வ்யவஹாரங்களிலே கலந்துகொள்ளத் தகுதியற்றவனுகையாலே பெரியவன் ஒருவனுடைய கண்காணிப்பின் கீழே வளரவேணும். "சதுரங்க ஸேனேயுடனும் என்னுடனும் கூடியிருககப்பெற்ற ராமனே வேண்டுமாகில் அழைத்துச் செல்" [ரா-பா 20-10] என்று என்னேயும் ரதகஜதுரகபதாதிகளாகிற நான்கு அங்கங்கள் கொண்ட ஸேனேயையும் கூட்டிக்கொண்டு போவதொழிய, இவனேத் தனியே கொண்டு போனல் பலனுண்டோ? (பதினறு பிராயமும் நிரம்பாதவன்) "வயதில் சிறியவன்; இன்னமுமதநுர்வித்யை கற்கவில்லே; ஸேனேயின் பலாபலங்களே அறியமாட்டான்; இவனெப்படியிருந்நாலும் தானகவே காரியம் செய்யக்கூடிய அஸ்த்ரங்களிலும் உபதேசம் பெறவில்லே; சண்டை செய்தும், ஸேனேயில் நின்றும் கூட

மில்லே; இவரையாம் பூசலுக்குக் கொடுபோகத் தேடுகிறது? இதென்ன சேராச்சேர்த்திதான்! (**ஊநஷோடஷவர்ஷ:**) பதினாறு பிராயம் நிரம்புகைக்குச் சிறுநாளாயிற்று வேண்டுவது. இன்னுளித்தனையும் கழிய வந்தானாகில் கண்ணழிக்கவொண்ணாது. அவரையும் அஶக்தரென்னவுமொண்ணாது. கொண்டு போவானிறே. இவ்வளவிலே வந்து பிழைத்தோமிறே.

(**ஊநஷோடஶவர்ஷ:**) ஊநஶப்தம் அந்த ஸங்க்யையிலே சிறிது குறையாயிற்று காட்டுவது. ஆகையால் பதினைந்தரையாதல், பதினைந்தேமுக்காலாதலாய் பதினாறும் பிராயம். இதொரு பதினாறும் "**समा द्वादश तत्राहं राघवस्य निवेशने**" (**ஸமா த்₃வாத₃ஶ தத்ராஹம் ராக₄வஸ்ய நிவேஶநே**) என்று விவாஹம் பண்ணினபின்பு பன்னிரண்டுமாய் இருபத்தெட்டாம் பிராயமாய்த் தோற்றுநின்றது காட்டுக்குப் போகிறபோது. "**भर्ता मम महातेजा वयसा पञ्चविंशकः**" (ப₄ர்த்தா மம மஹாதேஜா வயஸா பஞ்சவிம்ஶக:) "**अष्टादश हि वर्षाणि मम जन्मनि गण्यते**"

---

அறியாதவன்" [ரா-பா 20-7] என்கிற இவனையோ சண்டை செய்யக் கொண்டுபோகப் பார்ப்பது? இதென்ன சேராச்சேர்த்தி! (பதினாறு பிராயம் நிரம்பாதவன்) பதினாறு வயது நிரம்புவதற்குச் சில நாட்களேயுள்ளன. அந்நாட்கள் கழிந்து வந்தாராகில் மறுக்க முடியாது. ராமனையும் சண்டை செய்ய சக்தியற்றவனென்ன முடியாது. ரிஷியும் அழைத்துப் போகவே செய்வர்; நல்ல வேளையாக இப்போது வந்ததால் பிழைத்தோம் என்று நெஞ்சினுள் தேறுதலடைகிறான்.

இவ்விடத்தில் பதினாறு பிராயம் நிரம்பப்பெறாதவனாகச் சொல்லப்பட்ட ராமனுடைய உண்மை வயதென்ன என்பதைப்பற்றி ஒரு விசாரம் செய்யப்படுகிறது. இங்கு 'ஊன' சப்தம் சிறிது குறைவாயிருப்பதைக் காட்டுமாகையால் ராமனுக்கு இப்போது பதினைந்தரை அல்லது பதினைந்தே முக்கால் வயதாவதாக நினைக்கலாம். "ராமனுடைய வீட்டில் நான் பன்னிரண்டு வருஷம் வஸித்தேன்" [ரா-ஸு 33-17] என்கிற பிராட்டி வாக்கியத்திலிருந்து ஸ்ரீராமனுக்குக் காட்டுக்குப் புறப்படும்போது பதினாறும் பன்னிரண்டும் இருபத்தெட்டு வயதானதாகத் தோன்றுகிறது. "மஹாதேஜஸ்வியான என

(அஷ்டாத₃ஶ ஹி வர்ஷாணி மம ஜந்மநி க₃ண்யதே) என்று பிராட்டி பாசுரமாயிருந்தது. "दश सप्त च वर्षाणि तव जातस्य पुत्रक। आसितानि प्रकाङ्क्षन्त्या मया दुःखपरिक्षयम्॥" (த₃ஶ ஸப்த ச வர்ஷாணி தவ ஜாதஸ்ய புத்ரக। ஆஸிதாநி ப்ரகாங்க்ஷந்த்யா மயா து₃:க்க₂பரிக்ஷயம்॥) என்று நீ பிறந்தவன்று துடங்கிப் பதினேழாண்டு நீ முடிசூடினநாள்வரை க்லேசம தீரப்பார்த்திருக்கிறது என்று ஸ்ரீகோஸலையார் பாசுரமாயிருந்தது. இருபத்தெட்டுக்கும், இருபத்தைந்துக்கும், பதினேழுக்கும் சேர்த்தியென்னென்னில்: பதினேழுக்குச் சிலர் இங்ஙனே பரிஹரித்தார்கள்:—"एकादशेषु राजन्यं" (ஏகாத₃ஶேஷு ராஜந்யம்) என்று பதினொன்றிலே உபநயநமாகையாலே, ராஜாக்களுக்கு த்விஜத்வமாய், அதுவுமொரு ஜந்மமாகையாலே, கீழ்ப் பத்தைக் கழித்துப் பதினேழென்று நிர்வஹிப்பர்கள். இது புத்ரப்ரவாஸ ஜநித து₃:க்கத்தாலே நிர்விண்ணையான ஸத்ரீ வார்த்தையாகையாலே, படுபாடாகப் பிறந்தவன்று துடங்கி யென்று ப்ரதமஜந்மமேயாமத்தனை போக்கி. மோகதலை

---

கணவர் இருபத்தைந்து வயதானவர்; எனக்கு பதினெட்டு பிராயம் ஆயிருந்தது" [ரா-ஆ 47-10] என்று பிராட்டி ராவண ஸந்யாஸியிடம் சொல்லும்போது ராமன் காட்டுக்குப் புறப்படும்போது இருபத்தைந்து வயதானவர் என்று உரைத்திருக்கிறாள். "பிள்ளாய்! நீ பிறந்தபின்பு பத்தும் ஏழுமான வருடங்கள் என்னுடைய துக்கத்திற்கு விடிவு காலத்தை நோக்கிக்கொண்டிருந்தேன" [ரா-அ 20-45] என்று காட்டுக்குப் புறப்பட்டபோது ஸ்ரீகௌஸலையாரின் பாசுரம உள்ளது. இருபத்தெட்டும், இருபத்தைந்தும் பதினேழும் பொருந்தும்படியென்னென்னில்; சிலா பதினேழைப் பின்வருமாறு பொருந்த விட்டார்கள். "ராஜகுமாரனுக்குப பதினோராவது வயதில் உபநயனம் செய்யவேண்டியது' [ஆபஸ் 1-1 1-19] என்று பதினொன்றிலே ராஜாக்களுக்கு உபநயனமாகையாலே, அது இரண்டாவது பிறப்பாய், கீழே சென்ற பத்து வருஷங்களைக் கழித்துக் கௌஸல்யை ராமனுக்குப் பதினேழு வயதாகச் சொல்லுகிறாள் என்றார்கள். புத்திரன் வனத்திற்குப் போகிறானே என்னும் துக்கத்தாலே வருந்தியிருக்கும் பெண்பிள்ளையொருத்தி "நீ பிறந்த தினம்தொடங்கி நான் பட்டபாடு" என்று சொல்லும் வார்த்தையாகையால் முதற்

யிலே ஒரு பெண்டாட்டி அவஹிதையாய், தர்மஶாஸ்த்ரமநு ஸந்தி ந்து பத்துக் கழித்து த்விதீயஜந்மத்தை விவக்ஷிக்கை அநுசிதமாகையாலும், இதோராறும் பன்னிரண்டும் பதினெட்டாய், பதினேழுக்கு விஞ்சியிருக்கையாலும் சேராது. பதினாறும் பன்னிரண்டும் இருபத்தெட்டாய், பதினொன்று துடங்கி ஆறும் பன்னிரண்டும் கீழ் பத்தும் ஆக இருபத்தெட்டுக்கு இரண்டும் சேர்ந்ததாகில், இருபத்தைந்தைக் கண்ணழித்தாலோவென்னில்: ஊநஶப்தம் ஸாமாந்யமாய், விஶேஷவசனததாலே பதினாறுகக அபவாதமுண்டாகையாலே அந்யதாஸித்தியுண்டாகையாலும், ஸந்யாஸிப்ரதிபத்தியாலே கௌரவ்யனாக நினைத்து அவஹிதையான பிராட்டி வாக்யமாகையால் "**பஞ்சவிம்ஶ:**" என்கிற ச்ருதிக்கு தௌர்ப்பல்யமில்லாமையாலும், "தஶ ஸப்த ச" என்கிற வாக்யந்தன்னோடு விரோதிக்கையாலும், இருபத்தெட்டை த்ருடமாக்கி இருபத்தைந்தைக் கண்ணழிக்கவொண்ணாது.

---

பிறப்பேயாகுமேயொழிய, வருந்தும் சமயத்திலே ஒரு பெணபிள்ளை தர்மசாஸ்திரத்தை அநுஸந்தித்துக் கீழேசென்ற பத்து வருஷத்தைக் கழித்து இரண்டாவது பிறப்பைக்குறிக்கொண்டு சொல்லுகை உசிதமன்றாகையாலும், பதினாறும் பன்னிரண்டுமான இருபத்தெட்டு பதினேழும் பத்துமான இருபத்தேழைக்காட்டிலும் அதிகமாயிருக்கையாலும் இதுபொருந்தாது. பதினொன்றாவது வயதின் கடைசிப் பகுதியில் உபநயனம் செய்யப்பட்டதாகக் கொண்டு இருபத்தெட்டு வயதாகிறபடியால் பொருந்தவிடலாம், இருபத்தைந்து என்று பிராட்டி சொன்னதை இருபத்தைந்து வயதுள்ளவர்போன்ற யுவா என்னும் அர்த்தத்திலே கொண்டு அதைத் தள்ளிவிடலாமே எனில்: முடியாது. 'ஊன' சப்தம் இவ்வளவுதான் குறைவு என்பதைக் காட்டமாட்டாத ஸாமாந்யசப்தம். ஆகையால் பிராட்டி இருபத்தைந்து எனறு சொன்ன விசேஷசப்தத்திற்கு அநுகுணமாகவே அதற்குப் பொருள் கொள்ளவேண்டும். மேலும், ஸந்யாஸியை நோக்கி வார்த்தை சொல்லுகிறோம் என்னும் நினைவால் பிராட்டி மிகவும் ஜாக்கிரதையுடன் சொன்ன வார்த்தையாகையால் 'இருபத்தைந்து' என்று பிராட்டி சொன்னதுக்கு தௌர்ப்பல்யம் இல்லாமையாலும், பதினேழு என்று கோசலை சொன்னதோடு விரோதிககையாலும் இருபத்தெட்டை நிச்சிதமாக்கி இருபத்தைந்தைத் தள்ளமுடியாது.

பின்பு எங்ஙனேயாகக்கடவதென்னில்: இருபத்தைந்தை ப்ராமாணிகமாய், ஊநஷோடஶத்தையும் 'தஶ ஸப்தச' வையும் இதுக்கேர்க்க யோஜிக்கக் கடவோம். எங்ஙனே யென்னில்: ஊநஶப்தம் ஷோடஶஸங்க்யாவைகல்யத்தைக் காட்டுமத்தனைபோக்கி, விகலஸங்க்யை இன்னதென்று விசேஷிக்க மாட்டாத ஸாமாந்யஶப்தமாகையாலே, விஶேஷாகாங்க்ஷையுண்டாக, ராவணனுக்கு ஹிதம் சொல்லுகிற மாரீசன் பெருமாள் பலஞ்சொல்லுகிற ப்ரகரணத்திலே "விச்வாமித்ராத்வரபங்கம்பண்ணினவன்று, தத்ரக்ஷணார்த்தமாக தஶரதன் பக்கலிலே ராமலக்ஷ்மணனை வேண்டிச்செல்ல, பிள்ளைகள் பருவம் நிரம்பாமை சொல்லுகிற சக்ரவர்த்தி **"बालो द्वादशवर्षोऽयमकृतास्त्रश्च राघवः" (பாலோ த்வாதஶவர்ஷோ'ய மக்ருதாஸ்த்ரச்ச ராகவ:)** என்று சொன்னான்; அப்பருவத்திலே என் தம்பியைக் கொன்று என்னையும் கடலிலே அழுத்தினான்" என்று சொல்லுகையாலே, ஊனமான வர்ஷம் நாலாய், பன்னிரண்டு பிராயமாய், அப்போது விவாஹமாய்,

---

பிறகு என்னதான் செய்வது எனில்: இருபத்தைந்தை உண்மையென்றுகொண்டு 'ஊநஷோடச' என்று தசரதன் சொன்னதையும், 'பத்தும் ஏழும்' என்று கோசலை சொன்னதையும் இதுக்குத் தகுந்தபடி பொருள் கொளவோம். எப்படியெனில்: 'ஊந' சப்தம் பதினாறைக் காட்டிலும் குறைவு என்பதைக் காட்டுமேயொழிய, எவ்வளவு குறைவென்பதைக் காட்டமாட்டாத ஸாமாந்யசப்தமாகையாலே, எவ்வளவு குறைவு என்னும் விசேஷாபேக்ஷை ஏற்படுகிறது. அவ்வளவிலே, ராவணனுக்கு நன்மை சொல்லுகிற விடத்திலே, மாரீசன் விச்வாமித்ரயாகபங்கம் பண்ணினவன்று, அதிலிருந்து யாகத்தை ரக்ஷிப்பதற்காக ராமலக்ஷ்மணர்களை விச்வாமித்ரர் வேண்ட, பிள்ளைகள் பருவம் நிரம்பாமையைச் சொல்லும் தசரதன் "இப்பிள்ளை ராகவன் பன்னிரண்டு வயதானவனும், அஸ்த்ரங்கள் பயிலாதவனுமான பாலன்" [ரா-ஆ 38-6] என்று சொன்னதாகவும், அப்பருவத்திலே தன் தம்பி ஸுபாஹுவைக் கொன்று தன்னையும் கடலிலே அழுத்தியதாகவும் மாரீசன் சொல்லுகையாலே ஊனமான வருடம் நாலாய் அப்போது பன்னிரண்டு பிராயமாய், அப்போதே விவாஹமாய், பிராட்டி 'பன்னிரண்டு வருடம் கழித்தேன்' என்று சொன்னதை

"ஸமா த்₃வாத₃ஶ" என்று பன்னிரண்டு நடந்து, ஆக இரு பத்திஞலாய், இபபோது இருபத்தைந்தாகிறது. "தஶ ஸப்தச" வும் 'தஶ' என்று பத்தும் 'ஸப்த' என்றேழும் 'ச' என்று இன்னமொரு ஏழாய், ஈரேழு பதிஞலாய், பத்தும் பதிஞலும் இருபத்திஞலும் கழிந்து இருபத்தைந்தாகிற தென்று ஶப்தார்த்தமாயிருந்தது. ஆகையாலே வ்யாஹதம் போலே தோற்றின மூன்று ப்ரதேசமும், இவ்வோ ப்ரமாண யுக்திகளாலே அவ்யாஹதமாய்ச் சேரக்கிடக்கிறது. ஆஞல் நெடுமேடு நெடும் பள்ளமுமாக "ஊநஷோடஶவர்ஷ:" என்று ஷோடஶவர்ஷ ப்ரஸங்கமென்? "பா₃லோ த்₃வாத₃ஶவர்ஷோ-ऽயம்" என்றும், "பா₃லோ ஹ்யக்ருதவித்₃யச்ச" என்றும், **"काक-पक्षधरं बालं" (காகபக்ஷத₄ரம் பா₃லம்)** என்றும் பலவிடங்களில் சொன்னனேயென்னில்: "**ந யுத்₃த₄யோக்₃யதாமஸ்ய பச்யாமி**" என்று பூசலுக்கு யோக்யரன்றென்கைக்காக "**பா₃ல ஆஷோட₃ ஶாத்₃ வர்ஷாத் பௌக₃ண்டச்சேதி கீர்த்யதே**" என்கிற மநு வசநத்தை ரிஷி ஸ்மரித்து, பதிஞரும் பிராயம் நிரம்பிஞ

---

யொட்டிக காடுபோம்போது இருபத்துநாலு கழிந்து இருபத்தைந் தாவது வயது நடந்து கொண்டிருந்திருக்கிறது. "தச ஸப்த ச" என்று கோசலை சொன்னதும் 'தச' என்று பத்தும் 'ஸப்த' என்று ஏழும் 'ச' எனறு மற்ரெரு ஏழுமாய், இருபத்து நாலுமுடிந்து இருபத்தைந்தாவது வயது நடக்கிறதென்று சொற்பொருளாகிறது. ஆகையாலே ஒன்றுக்கொன்று விருத்தமபோலே தோற்றின இவை மூன்றும் இந்தப்ரமாணயுக்திகளாலே விரோதமில்லாமல் பொருந்தி யிருககின்றன. ஆஞல் ஓரேஒரு ஸந்தேஹம்: "பன்னிரண்டு வய தான பாலன்" [ரா-ஆ 38-6] என்றும், "அஸ்த்ரவித்யை பயிலாத பாலன்" [ரா-பா 20-10] என்றும், "காகபக்ஷத்தை (ஜில்பாக் குடு மியை) தரிக்கும் பாலன்" [ரா-பா 19-9] என்றும் பலவிடங்களிலும, பாலனென்றும், பன்னிரண்டு வயதெனறும் சொல்லியிருக்க இங்கு மட்டும் 'ஊநஷோடச' என்று பதிஞருவது பிராயத்தைச் சொல்லுவா னென்னென்னில்; "ராமனுக்கு யுத்தயோக்யதையைக் காணவில்லை" என்று சொன்னதை நிரூபிப்பதற்காக, "பதிஞருவது வயது வரை யில் பாலனென்றும், பௌகண்டனெனறும் சொலலப்படுகிருன்"

லாயிற்று ப்ராப்தவ்யவஹாரனாய், இன்னானுக்கின்னான் என்று ப்ரமாணம் பண்ணினபடியே அறிவதும், இன்னானை கீழின்னான் என்று அறிவதும், தனித்தொரு ஊருககுப் போகவும், தனித்துப்பூசல் பொரவுமாவது. பதினாறும் நிரம்பாதொழிந்தால் இன்னாரை முதுகண்ணாக உடைய இன்னாரென்றும் இன்னார் மகன் இன்னாரென்றும் முதுகண் படப் பேசவேணும். ஆனபின்பு, "சதுரங்க₃ஸமாயுக்தம் மயா ச" என்று என்னை முதுகண்ணாகக் கூடக்கொண்டுபோ என்கைக்காக, ஸ்வதந்த்ரவ்யாபார க்ஷமமான காலம் நிறைந்ததில்லை என்கிறான். ஆகையாலே உசிதம்.

(ஊநஷோட₃ஶவர்ஷ:) இக்குறட்டிலே தெறித்தால் அக்குறட்டிலே பால்தெறிக்கும் பருவம் என்கிறான். இதுதன்னை "कृतं तत्क्षीरकण्ठेन" (க்ருதம் தத் க்ஷீரகண்டே₂ந) என்று பால ராமாயணத்திலும் சொல்லிற்றிறே. "क्षीरकण्ठश्च रामभद्रः"

---

என்கிற மநுவசனத்தை நினைத்து, பதினாரும் பிராயம் நிரம்பினால் தான லௌகிகவ்யவஹாரங்களுக்குத் தகுந்தவனாய், இன்னானுக்கு இன்னான் எழுதிக்கொடுத்தது என்று உறுதி கூறினதை அறிவதும், இனனான் கீழ் இன்னான் என்று ஸம்பந்தத்தை அறிவதும், தனித்து ஒருருக்குப் போவதும், தனித்துச் சண்டைசெய்யவும் முடியும்; பதினாறு பிராயம் நிரம்பாதபோது இன்னாரைக் கண்காணிப்பவனாக (கார்டியனாக) உடைய இன்னாரென்றும், இன்னார மகன் இன்னாரென்றும கண்காணிப்பவனையிட்டுப் பேசவேணும்; ஆகையால் "சதுரங்கஸேனையுடனும் என்னுடனும் கூடிய ராமனைக் கூட்டிப்போ" [ரா·பா 20-10]என்று என்னையும் கண்காணிப்பவனாகக் கூட்டிப்போ என்கைக்காக, தானே காரியம் செய்யத்தக்க பதினாருவது வயது நிறைந்ததிலலை என்கிறான். ஆகையால் "ஊநஷோடசவர்ஷ:" என்று பதினாறைச் சொன்னது உசிதம்.

(பதினாறு பிராயம் நிரம்பாதவன்) ஒருகுறட்டிலே (மூச்சிலே) தாய் பாலைப்பீச்சினால் மறுகுறட்டிலே (மூச்சிலே) மூக்காலும் வாயாலும் பால்பெருகும்படியான பருவம் என்கிறான். இத்தால் பால் மணம் மாறாப் பருவம் என்கிறான். இவ்வர்த்தம் "பாலைக் கழுத்திலே உடைய ராமனாலே அக்காரியம் செய்யப்பட்டது' என்று பாலராமா

(க்ஷீரகண்ட₂ச்ச ராமப₄த்₃ர:) என்றுனிறே முராரிகாரனும். ஆண்களுக்கு யௌவநாரம்பஸூசகமான ச்மச்ருரேகைகள் இன்னமும் குறித்ததில்லை. மயிர் முடித்திலர்.

"काकपक्षधरं वीरं" (காகபக்ஷத₄ரம் வீரம்) என்று நீதான் சொன்னுப்போலே, அலேந்த குடுமியும் சுற்றின பூவுமாயிருக்கிற இவரையோ பூசலுக்குக் கொடுபோகத் தேடுகிறது? என்றவிடத்திலும் "तेजसां हि न वयस्समीक्ष्यते" (தேஜஸாம ஹி ந வயஸ்ஸமீக்ஷ்யதே)என்றும், 'சிறியனென்றென்னிளஞ் சிங்கத்தை இகழேல் கண்டாய்'' என்றும் சொல்லுகிற படியே பருவத்தைக்கொண்டு அவர் அசக்தரென்றெண்ண வேண்டாகாண். சிறு நெருப்பு சுடாதோ? "शक्तो ह्येष मया गुप्तो दिव्येन स्वेन तेजसा" (ஶக்தோ ஹ்யேஷ மயா கு₃ப்தோ தி₃வ்யேந ஸ்வேந தேஜஸா) அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே

---

யணத்திலும், ''பாலைக் கழுத்திலேயுடைய ராமபத்திரன்'' [அநர்க்க ராகவம்-1] என்று முராரியாலும் சொல்லப்பட்டது. (குறட்டு என்றால் கன்னம் என்று பொருள் கொண்டு, ஒருகன்னத்தில் தெறித்தால், மறு கன்னத்தில் பால்பெருகும்படியான பருவம் என்று பொருள் கொள்வாருமுண்டு) (பதினாறு பிராயமும் நிரம்பாதவன்) ஆண்களுக்கு யௌவனத் தொடக்கத்தைக் காட்டும மீசைக் குறிகள் இன்னம தோன்றவில்லை. மயிர்முடிக்கவும் தெரியாது என்கிறான். "மொய்பூங் குழல் குறிய கலையோ அரையில்லை நாவோகுழறும்... இவள் பரமோ'' [திருவிருத்தம்-60] என்றாப்போலே.

''காகபக்ஷத்தைத்தரித்த வீரனை'' [ரா-பா 19-9] என்று நீரே சொன்னபடி அலைந்தகுடுமியும், சுற்றின பூவுமாயிருக்கிற இவனையோ சணடைக்குக் கொண்டுசெல்லப் பார்க்கிறது என்று தசரதன சொன்னபோதும், "தேஜஸ்விகள் விஷயத்தில் பருவத்தில் இளமை கவனிக்கப்படுவதில்லை'' [ரகுவம்சம் 11-1] என்றும், "சிறியனென றென்னிளஞ் சிங்கத்தை இகழேல் கண்டாய்'' [பெரியாழ்-திரு 1-4-8] என்றும் சொல்லுகிறபடியே, சிறு வயதைக் கண்டு ராமன் சக்தியற்றவனென்று எண்ணவேண்டாகாண்! சிறுநெருப்பு சுடாதோ? ''என்னால் (மங்களாசாஸனம் செய்து) ரக்ஷிக்கப்பட்டானாகில், ராமன் தன்னுடைய திவ்யதேஜஸ்ஸினாலே ராக்ஷஸர்களைக்கொல்ல வல்லவனாயிருப்பன்'' [ரா-பா 19-9] எனறு அவதாரத்தில் மெய்ப்பாட்

ஸ்வாபாவிகமான தேஜஸ்ஸைத் தாழவிட்டாரேயாகிலும், அத்தலையிலே நான் ஸ்நேஹமாக மங்களாஶாஸநம் பண்ணிக்காட்டிக்கொடுக்கில், தேஜ:ப்ரபாவத்தாலே தாமஸ நிரஸனத்தில் ஶக்தராய்க்காண் இருப்பது என்ன; (மே ராம.) கையும் கோடாலியுமாய் மூவேழிருபத்தொருபடிகால் க்ஷத்ரியநிரச்சேதம் பண்ணித் திரிந்த முரட்டுப்பரசுராமனை நினைத்தானிறே. (மே ராம:) என்னுடைய மமகாரவிஷய மிருக்கும்படி. (மே ராம:) பெரிய பசியோடே உண்ணப் புக்கவனைக் கையைப் பிடிப்பாரைப்போலே **"दुःखेनोत्पादित-श्चायं"** (**து₃:க்கே₂நோத்பாதி₃தச்சாயம்**)என்றும் "நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்றும் சொல்லுகிறபடியே அறுபதினாயிரமாண்டு கூடி ஒரு பிள்ளை பெற்று ஸுதமுக₂ கமலாவலோகநம் பண்ணிவருகிற என் பக்கல் நின்றும் இவரைப் பிரித்துக்கொண்டுபோகை தர்மமோ? (மே ராம:) **"अनुपहतां वृत्तिं चरेत्"** (அநுபஹதாம **வ்ருத்திம் சரேத்**) என்றன்றோ ரிஷிகளுக்குச் சொல்லுகிறது. ஆனபின்பு என் மமகாரத்தாலே தூஷிதமான வஸ்து உனக்

---

டாலே இயற்கையான தேஜஸ்ஸை அடக்கியிருந்தபோதிலும், நான் அன்புடன் மங்களாசாஸனம் செய்து உணர்த்தினல், தன் தேஜஸ் ஸாலே தாமஸரான ராக்ஷஸர்களை அழிப்பதில் வல்லவராகவே யிருப்பர் என்று விச்வாமித்ரர் சொல்ல,–(என்னுடைய ராமன்) கையிலே கோடாலியையுடையவனுய், மூவெழுகால் க்ஷத்ரியர்களைக் கொன்று திரிந்த முறட்டுப் பரசுராமனுக நினைத்தீரோ? (என்னுடைய ராமன்) 'என்னுடையது' எனறு எனனுல் அபிமானிக்கப்படுபவன் இவன் ஒருவனேயன்றோ. (என்னுடைய ராமன்) பெரும் பசியோடே சாப்பிடப் புகுந்தவனைக் கையைப் பிடித்துத் தடுப்பாரைப்போலே "இந்த ராமன் மிகவருந்திப் பெற்றவன்" [ரா-பா 20-11] என்றும் "நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" [திருவிருத்தம-37] எனறும் சொல்லுகிறபடியே, அறுபதினுயிர மாண்டுகழிந்து ஒருபிள்ளையைப்பெற்று மைந்தன் முகத்தாமரையைக் கண்டுகளிக்கும் என்னிடமிருந்து இவனைப் பிரித்துப்போவது தருமமோ? (என்னுடைய ராமன்) "தோஷமற்ற பொருளைக்கொண்டு வயிறுவளர்க்கவேண்டியது" [?] என்றன்றோ ரிஷிகளுக்கு தர்ம

காமோ? (ராம:) சூடக்கண்ட கருமுகைமாலையைப் பிசக்கி வெய்யிலிலே வைப்பாரைப்போலே **"एतदेवामृतं दृष्ट्वा तृप्यन्ति"** **(ஏததே₃வாம்ருதம் த₃ருஷ்ட்வா த்ருப்யந்தி)** என்றும், **"नन्दामि पश्यन्नपि दर्शनेन"** **(நந்த₃ாமி பச்யந்நபி த₃ர்சநேந)** என்றும் கண்ணுக்கினிதாகக் கண்டுகொண்டிருக்குமத்தனைபோக்கி, இவ்வஸ்துவைப் பூசலுக்கிலக்காககுவாருண்டோ?

குறையில்லைகாண்! **"रञ्जनीयस्य विक्रमैः"** **(ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:)** என்றும், **"राममक्लिष्टकर्माणं"** **(ராமமக்லிஷ்டகர்மாணம்)** என்றும் அவர் பூசல் செய்யும்போது தான் மயிரில் வைத்த பூ வாடாதபடியாகவும், முகத்தில் குருவேர் பரம்பாதபடியாகவும், எதிரிகள் கைவாங்கும்படியாகவும் வடிவழகு தன்னாலே ஓரடியெறிந்து காண் அவர் பொருவது என்ன,– **(ராஜீவலோசந:)** வெய்யில் காணவே வெடித்து, முகிழ்விரிந்து அலர்ந்துகிடக்கிற கண்களைக்கொண்டு, வெய்யிலிலே நிற்கவும்

---

சாஸ்த்ரங்களிலே சொல்லுகிறது. ஆகையால், என்னுடைய மமகாரத்தாலே தோஷமடைந்த வஸ்துவை நீ உபயோகிக்கலாமோ? (ராமன்) ரமிக்கச் செய்பவன். சூடுவதற்காக ஏற்பட்ட மாலையைக் கசக்கி வெய்யிலிலே வைப்பாரைப்போலே "பரமாத்மாவாகிற இந்த அமுதினைக் கண்டுகளிக்கிறார்கள்" [சாந் 3-10] என்றும், "அகக்கண்ணால் காண்பதனாலேயே ஆநந்திக்கிறேன்; புறக்கண்ணால் கண்டால் வாலிபனாகவே ஆகிவிடுகிறேன்" [ரா-அ 13-104] என்றும் கண்ணுக்கு இனிதாகப் பார்த்துக் கொண்டிருக்கத்தக்க இவனை சண்டைக்கு இலக்காக்கலாமோ?

இவன் ரமிக்கச்செய்யும் ராமனாயிருப்பதால் குறையில்லை. "தம் பராக்ரமததாலே எதிரிகளால் ரமிப்பிக்கத்தக்க ராமன்" [ரா-யு 106-6] என்றும், "வருத்தமில்லாமல் பெருஞ்செயல்களைச் செய்யும் ராமனை" [ரா-ஸு 30-41] என்றும் ராமன் சண்டைசெய்யும்போது தலையில் வைத்த பூ வாடாதபடியாகவும், முகத்தில் சிறு வியர்வைத்துளிகளும் பரவாதபடியாகவும், எதிரிகள் யுத்தத்தைக் கைவிடும்படியாகவும் வடிவழகைக்கொண்டே எதிரிகளை அடிகொடுத்தன்றோ அவர் சண்டை செய்வது என்று ரிஷி சொல்ல,— (தாமரைக் கண்ணன்) இளவெய்யிலைக்கணடவுடன் வெடித்து, இதழ் விரிந்து மலர்ந்து போகும் தாமரைபோன்ற கண்களையுடைய இவன்

பொரவும் வல்லரோ என்கிருன். (ராஜீவலோசந:) என்று நீதானே சொன்னுயே. வெய்யில் காணத் தாமரை விகஸிக்கு மாப்போலே படைகண்டால் பெருமாளும் உல்லஸிதராய்க் காணுமிருப்பது என்ருன் ரிஷி; (ராஜீவலோசந:) "**राजीवं रक्तपद्मं स्यात्**" (**ராஜீவம ரக்தபத்₃மம ஸ்யாத்**) என்று செந்தாமரை தான் கன்றிச் சிவக்குங்காண் என்கிருன ராஜா. அச் சிவப்போ? "**रामो रक्तान्तलोचनः**" (**ராமோ ரக்தாந்தலோசந:**) என்றும், "**किञ्चिद्भ्रूभङ्गलीलानियमितजलधिं**" (**கிஞ்சித ப்₄ரூப₄ங்க₃ லீலாநியமிதஜலதி₄ம்**) என்றும் கடல் திடர்படக் கடைக்கண் சிவந்து, எதிரிகள் முடியும்படியான சிவப்புகாண் என்கிருன் ரிஷி. அதற்கு ராஜா (**ஊநஷோடஶவர்ஷோ மே ராமோ ராஜீவ லோசந:**) என்று அவையெலலாம் பருவம் நிரம்பிணுலாயிற்று; இப்போது போராது என்ருன்; போராதாகில், வெய்யி லாறினவாறே இராப்பூசலாக்குகிரும் என்ருன் ரிஷி. (**ராஜீவலோசந:**) பொழுதுபுகப்பெருதுகாண்; செம்புளிக்கும். இவர் பிள்ளைத்தனத்தாலே உறங்கவும் அவர்கள் நிஶாசர

---

கடும் வெய்யிலிலே நிற்கவும் சண்டை செய்யவும வல்லனே? என் கிருன் தசரதன். "(தாமரைக் கண்ணன்) என்று நீயே சொன்ஞய்; வெய்யிலைக் கண்டவுடன் தாமரை மலருவதைப்போலே படைகண் டால் இவரும் மலர்ந்திடுவரன்ருே" என்ருர் ரிஷி. (செந்தாமரைக் கண்ணன்) "ராஜீவம் செந்தாமரையாகும்" [?] என்று வெய்யில் பட்டால் கன்றிச் சிவக்கும் கண்ணன்ருே இவனுடையது என்ருன் அரசன். கன்றிச் சிவக்கும் சிவப்போ இது?"கடைக்கண்கள் சிவந்த ராமன்" [ரா-யு 21-13] என்றும் "சிறிது புருவநெறிப்பினுலே கடலை நியமித்தவனை" [ஹநுமந்நாடகம்-11] என்றும் ஸமுத்ரமும் வற்றித்திடராகப் போகும்படியும், எதிரிகள் அழியும்படியுமான சிவப்புக்காண அது என்ருர் ரிஷி. அதற்கு அரசன (பதினறு வயதும் நிரம்பப் பெருதவனுய், தாமரைக்கண்ணனுன என்னுடைய ராமன்) என்கிருன். பராக்ரமத்தாலே கண்கள் சிவப்பது வயதான பின்பே. இப்போது சிவந்திருப்பது அதனுலன்று என்கிருன். "வெய்யிலிலே கண்சிவக்குமாகில் இரவிலே சண்டைசெய்யச் சொலலுகிறேன்" என்ருா ரிஷி. (தாமரைக்கண்ணன்) இருட்டு வதற்கு முனபே மூடிக்கொள்ளும தாமரை போன்றதன்ருே இவன்

ராகையாலே தன்னில் மாயை மேலிடவும் தேடினுயிறே. "கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ" என்று நித்ராகஷாய ரூஷிதமான இக்கண்களுக்குத் தந்தாமை இலக்காகத் தேடு மத்தனைபோககி. கண்ணுடைய இவரைப் பூசலுக்கு இலக காக்குவாருண்டோ? (ராஜீவலோசந:) நீரைப் பிரிந்த தாமரை உலருமாப்போலே என்னருகுவிட்டுப் புறப்பட்டால் அவர் முகம் செவ்வியழியும்படியாய்க்காண் இருப்பது.

**"जितन्ते पुण्डरीकाक्ष"** (**ஜிதந்தே புண்டரீகாக்ஷ**) என்றும், "தாமரைக் கண்கள் கொண்டீர்தியாலோ" என்றும் சொல்லு கிறபடியே எதிரிகளைத் தோற்பிக்கைக்கும் பரிகரம் அங்கே உண்டாயிருந்ததீ என்ன,-(**ந யுத்தயோக்யதாமஸ்ய பச்யாமி**) அக்கண்ணழகில் அநுகூலவர்க்கம் ஆழங்கால் படுமத்தனை போக்கி, ஆஸுரவர்க்கமுமீடுபடுமோ? ஆஸுரப்ரக்ருதியான சூர்பணகை **"पुण्डरीकविशालाक्षौ"** (**புண்டரீகவிஶாலாக்ஷள**)

---

கண். இவன் சிறுபிள்ளைத்தனத்தாலே உறங்கவும், அவர்கள் ராத்ரியில (வலிகொண்டு) திரியும் மாயாவிகளாகையாலே இவனை வென்றிடுவார்கள். "கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப்போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ" [திருப்பாவை-22] என்று தூக்கமாகிற சாயத்தாலே சிவப்பேறியிருக்கும் இவன் கண் களுக்குத் தங்களை இலக்காக்குவதொழிய,இக்கண்ணுடைய இவனைச் சண்டைக்கு இலக்காக்கலாமோ?(தாமரைக்கண்ணன்)நீரைபபிரிந்த தாமரை உலருவதுபோல், என்னை விட்டுப் பிரிந்தால் அவன் முகத்தாமரை அழகிழந்து விடுமேயென்கை.

"தாமரைக்கண்ணனே! உன்னால் ஜயிக்கப்பட்டது"[ஜிதந்தே1-1] என்றும்,'தாமரைக் கண்கள்கொண்டீர்தியாலோ''[திருவாய்10-3-1] என்றும் சொலலுகிறபடியே தாமரைக்கணகள் எதிரிகளைத் தோற் பிக்க உபகரணமாகவும் உதவுகின்றதன்றே என்ன, (இவனுக்கு யுத்தயோக்யதையைக் காணவில்லை)அக்கண்ணழகில் அநுகூலர்கள் ஈடுபடுவார்களேயொழிய ஆஸுரப்ரக்ருதிகள் ஈடுபடுவரோ? "தாமரைபோன்று பரந்தகண்களையுடைய ராமலக்ஷ்மணர்கள்" [ரா-ஆ 19-14] என்ற சூர்ப்பணகையைப்போலே ஆஸுரப்ரக்ருதி

என்று ஈடுபட்டிலவேளா? அது தவிரக் கூடவேறே பரிகரம் கொண்டு உதவத் தட்டென்னென்னில்: **(அஸ்ய யுததயோக்ய தாம ந பச்யாமி)** ஆச்ரயந்தானுண்டாய்ப் பரிகரம் தேட வேண்டாவோ? **(அஸ்ய)** பருவகதில் இளமை இது; வடிவில் ஸௌகுமார்யமிது; இப்படியிருக்கிற இவ நககும் பூசலுக்கும் என்ன சேர்த்திகண்டாய்? **(அஸ்ய)** ஸந்நிஹித தே^ஶ வர்த்த மாநகாலஸம்பந்தியையிறே இதம்^ஶப்தம் காட்டுகிறது. அவர் தேஶாந்தரத்திலேயிருக்க நானிங்கே பொய்யே கண்ணழிக் கிறேன் என்று நினைத்திராதே; உள்ளே ஸந்நிஹிதர்; அழைத்துக் காணமாட்டாயோ? **(அஸ்ய யுத்தயோக்யதாம் ந பச்யாமி)** **"स्वपुत्रं मूर्ध्न्युपाघ्राय"** (ஸ்வபுத்ரம் மூர்த்$_4$ந்யுபாக்$_4$ராய) என்கிறபடியே மடியிலே வைத்து உச்சிமோந்து உகக்கு மத்தனைபோக்கி. பூசலுக்கு யோக்யரோ? **(ந யுததயோக்ய தாம் பச்யாமி)** **"बालः क्रीडनकाय(निव?)"** (பாலः க்ரீட$_3$நகாய(நிவ?)) என்றும். **"बालः क्रीडनकैरिव"** (ப$_3$ால. க்ரீட$_3$நகைரிவ) என்றும்

---

களும் ஈடுபடலாமே. அத்துடன் வேறு ஆயுதம் முதலானவற்றைக் கொண்டு போகக கூடாதோ என்னில்: (இவனுக்கு யுத்தயோக்யதை யைக் காணவில்லை) ஆயுதம் தாங்கும் ஆச்ரயமிருந்தாலல்லவோ ஆயுதம் தாங்குவது. குழந்தையாகிற இவனும் ஆயுதம் தாங்கும் வீரனுவனே? (இவனுக்கு) இவனுடைய இளம் பருவம் வடிவில் மென்மை ஆகிய இவைகளுக்கும் சண்டைக்கும் என்ன சேர்த்தி யுண்டு? (இவனுக்கு) அருகிலுள்ள தேசத்திலும் நிகழ்காலத்திலும் உள்ள வஸ்துவையன்றே 'இவன்' என்னும் சப்தம் காட்டுவது. ராமன்தேசாந்தரத்திலேயிருக்க இங்குள்ளதாக நான் பொய்சொல்லு கிறேனென்று நினைக்கவேண்டா; உள்ளே அருகிலேயே உள்ளான்; அழைத்துக் காணலாமே என்கிறுன். (இவனுக்கு யுத்தயோக்யதை யைக் காணவில்லை) "தன் புத்திரனை உச்சிமோந்து" [ரா-பா 22-3] என்று மடியிலே வைத்து உச்சிமோந்து பார்க்கத்தக்க பிள்ளையைச் சண்டைக்கு அனுப்பலாமோ? (யுத்தயோக்யதையைக் காணவில்லை) "பாலன் விளையாட்டுக் கருவிகளைப்போலே" [பாகவத 3-2-30] என்றும் "விளையாட்டுக் கருவிகளைக்கொண்டு பாலன் விளையாடு வது போல் (பகவான் பூதங்களைக் கொண்டு விளையாடுகிறுன்)" [பார-ஸபா 40-78] என்றும் விளையாட்டுக் கருவிகளைக் கொண்டு

லீலாபரிகரம்கொண்டு விளையாடப் பருவமத்தனைபோக்கி, பூசலுக்குப் பருவமோ? (ந பச்யாமி) **"अभिनिवेशवशीकृतचेतसां बहुविदामपि संभवति भ्रमः"** (அபி$_4$நிவேஶவஶீக்ருதசேதஸாம் ப$_3$ஹு விதா$_3$மபி ஸம்ப$_4$வதி ப்$_4$ரம:) என்று ஸ்வகார்யபரனாகையாலே உனக்குத் தோற்றுது. என் கண்ணாலே பார்க்கமாட்டாயோ?

"யுத்தயோக்யதாம் ந பச்யாமி" என்று யுத்த யோக்யதையே பிடித்து இல்லையென்று அஸத்யம் சொல்லாநின்றாய். **"रामो व्रजति सङ्ग्रामं ग्रामार्थे नगरस्य वा। गत्वा सौमित्रिसहितो नाविजित्य निवर्तते"** (ராமோ வ்ரஜதி ஸங்க்$_3$ராமம் க்$_3$ராமார்த்தே$_2$ நக$_3$ரஸ்ய வா। க$_3$த்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்ய நிவர்த தே) என்றும், **"सङ्ग्रामात्पुनरागम्य"** (ஸங்க்$_3$ராமாத் புநராக$_3$ம்ய) என்றும் அவர் பொராத பூசலுண்டோ? என்ன,—(ஸஹ ராக்ஷஸை:) விஶேஷநிஷேத$_4$ம் பண்ணினேனத்தனைபோக்கி ஸாமாந்யநிஷேதம் பண்ணினேனோ? (ராக்ஷஸை:) **"कूटयुद्धा हि राक्षसाः"** (கூடயுத்$_3$த$_4$ா ஹி ராக்ஷஸா:) என்கிறபடியே அவர்கள் களவு பூசலல்லது பொரார்காண். இவர்

---

விளையாடும் வயதேயொழிய சண்டைசெய்யும் வயதோ? (நான் காண்கிறேனல்லேன்) "சிறந்த ஞானிகளாயிருந்தாலும், அதிகமான அபிமானத்தின் வசப்பட்ட நெஞ்சையுடையவர்களுக்கு மயக்கமுண்டாகிறது" [ஆளவந்தார் அருளிய ஆகமப்ராமாண்யம தொடக்கம்-3] என்று உம்காரியத்திலே அபிமானமுடையவராகையாலே உமக்குத்தோற்றுது. என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்.

(யுத்தயோக்யதையைக் காணவில்லை) என்று பொய் சொல்லுகிறாய். "ஒரு கிராமத்தின் பொருட்டாவது நகரத்தின பொருட்டாவது சண்டைக்குச் சென்றாலும் லக்ஷ்மணனுடன் கூடிய ராமன் ஜயிக்காமல் திரும்பமாட்டான்" [ரா-அ 2-36] "சண்டையிலிருந்து மறுபடி திரும்பியவுடன்" [ரா-அ 2-37] என்று அவன் செய்யாத சண்டையுண்டோ? என்ன,—(ராக்ஷஸர்களுடன்) ராக்ஷஸர்களோடு சண்டை செய்யமாட்டான் என்று விசேஷத்தை மறுத்தேனேயொழிய அவன் சண்டைக்கே செல்லவில்லையென்று ஸாமாந்யமாகச் சொல்லவில்லையே; (ராக்ஷஸர்களுடன்) "ராக்ஷஸர்கள் கபட

தர்மப்பூசலல்லது பொரவறியார். ஆகையாலே கடைப்படாது என்றேனித்தனே. (அஸ்ய ராக்ஷஸை:) இவர் மநுஷ்யர்; அவர்கள் ராக்ஷஸர்கள். இவர் ஒருவர்; அவர்கள் அநேகர் கள். ஆகையாலும் யோக்யதையில்லை.

* பாலகாண்டம் 6-வது ஸர்க்கம் 8-வது ச்லோகம்

**द्रष्टुं शक्यमयोध्यायां नाविद्वान्न च नास्तिकः।**
**सर्वे नराश्च नार्यश्च धर्मशीलाः सुसंयताः॥**

**த்$_3$ரஷ்டும் ஶக்யமயோத்$_4$யாயாம் நாவித்$_3$வாந் ந ச நாஸ்திக:|**
**ஸர்வே நராச்ச நார்யச்ச த$_4$ர்மஶீலாஸ் ஸுஸம்யதா: ||**

**பதவுரை:**–**அயோத்$_4$யாயாம்**-அயோத்தியில், **அவித்$_3$வாந்**–பண்டிதனல்லாதவன், **ந த்$_3$ரஷ்டும் ஶக்யம்**—காணத்தக்கவனல்லன்; **நாஸ்திக:** **ச**–நாஸ்திகனும், **ந**—காணத்தக்கவனல்லன்; **ஸர்வே நராச்ச**–எல்லாப் புருஷர்களும், **நார்யச்ச**–ஸ்த்ரீகளும், **த$_4$ர்மஶீலா:**–தர்மஸ்வபாவர்கள்; **ஸுஸம்யதா:**–(மனத்தை) அடக்கியவர்கள்.

**வ்யா:**—அறுபதினாயிரமாண்டு வன்னியமறுத்து நன்மைகளையுமுண்டாக்கிப்போந்த சக்ரவர்த்திக்கும் இரண்டு பொருள் உண்டாக்கப்போச்சுதில்லை. ஓர் அவித்வானையாதல்,

---

யுத்தம செய்பவர்கள்'' [?] என்கிறபடியே அவர்கள் கபடயுத்தமல்லது செய்யமாட்டார்கள்: இவன் தர்மயுத்தமல்லது வேறு அறியான்; அதனால் இவன் தகாதவனென்றேனித்தனே. (இவனுக்கு—ராக்ஷஸர்களுடன்) இவன் மனிதன்; அவர்கள் அரக்கர்கள். இவன் ஒருவன்; அவர்கள் பலர். இதனாலும் தகுதியில்லை.

**வ்யா:**—(அயோத்தியில் அவித்வானும் நாஸ்திகனும காணப்படுவதில்லை) அறுபதினாயிரமாண்டு எதிரிகளை அழித்து, நன்மைகளையும் உண்டாக்கிப்போந்த தசரதசக்ரவர்த்திக்கும் இரண்டு பொருள்களை உண்டாக்க முடியவில்லை. அவையாவன:- அவித்

---

* இதுவும், மற்றும் சில ச்லோக வ்யாக்யானங்களும் கடைசியில் காண்கின்றன. ஸௌகர்யத்திற்காக, அந்தந்தக் காண்டத்திலேயே அச்சிடுகிறோம்.

*வைதிகமான அர்த்தங்களை இல்லையென்பாரொருநாஸ்திகனை யாதல் உண்டாக்கப்போச்சுதில்லை. அப்படைவீட்டிலுள்ளார் ராஜபுத்ரர்கள் ஆரேனுமொருவர்முடிசூடவமையாதோ என்றிருககுமவர்களலலர். பெருமாளே முடிசூடாவிடில்* **"इहैव निधनं यामो महाप्रस्थानमेव वा। रामेण रहितानाञ्च किमर्थं जीवितं हि नः॥" (இஹைவ நித$_4$நம் யாமோ மஹாப்ரஸ்த$_2$ாநமேவ வா। ராமேண ரஹிதாநாஞ்ச கிமர்த்த$_2$ம் ஜீவிதம் ஹிந:)** *என்று பெருமாள் அபிஷேகம்பண்ணாத படைவீட்டிலிருப்பதில்லை; விழுந்தவிடமே சுடுகாடாகப் போகவமையும் என்றிருப்பர் புருஷர்கள். ஸ்த்ரீகளும்* **"राममेवानुगच्छध्वमश्रुतिं वापि गच्छत" (ராமமேவாநுக$_3$ச்ச$_2$த்$_4$வமச்ருதிம்வாபிக$_3$ச்ச$_2$த)** *என்றுபெருமாள்வழிமாறிப் போனாரென்று திறக்கவழைத்த பர்த்தாக்கள்முகம் பிளக்கத் தள்ளிக் கதவடைத்துக் கொள்ளுவர்கள். (தர்மஶீலா:) ராமாநுவ்ருத்தியே பரமதர்மமென்றிருக்குமவர்களிறே. ஸ்வப்ரயோஜநத்திலே நெஞ்சு செல்லாதவர்களாயிற்று.*

---

வானும், வேதார்த்தங்களை இல்லையென்னும் நாஸ்திகனும். (எல்லாப் புருஷர்களும் ஸ்த்ரீகளும் தர்மஸ்வபாவர்கள்) அந்த நகரத்தில் உள்ளார் அரசிளங்குமரர்களில் மூத்தவனோ அல்லது இளையவனோ யாராவது முடிசூடட்டுமே என்றிருக்கமாட்டாத தார்மிகர்கள், (எல்லாப் புருஷர்களும் தார்மிகர்கள்) ராமன் முடிசூடாவிடில் "இங்கேயே மரணமடைவோம்; மஹாப்ரஸ்தானமாவது புறப்படுவோம்; ராமனைப் பிரிந்த நமக்கு வாழ்வு எதற்கு" [ரா-அ 47-7] என்று உடனே இருந்தவிடத்திலேயே மரணமடைவோமென்னும் தர்மவான்கள். (ஸ்த்ரீகளும் தர்மசீலைகள்) "ராமனையே பின்தொடர்ந்து செல்லுங்கள்: இல்லையாகில் (உங்களுடைய) பெயரும் (எங்கள் காதில்) விழாதபடி எங்கேயாவது தொலையுங்கள்" [ரா-அ 48-27] என்கிறபடியே, "ராமன் எங்களை ஏமாற்றிவிட்டு வேறு வழியாலே போனான்" என்று சொல்லிக்கொண்டு வாசற்கதவைத் தட்டிய கணவர்களுடைய முகம் பிளக்கத் தள்ளிக் கதவைச் சாத்திக் கொள்ளும்படியான தர்மசீலைகள் அயோத்தியிலுள்ள ஸ்த்ரீகள். (தர்மசீலர்கள்) ராமகைங்கர்யமே மேலான தர்மமென்றிருக்குமவர்களன்றோ. (நெஞ்சை நன்கு அடக்கியவர்கள்) ராமப்ரயோஜனத்தையொழிய, தங்களுக்கான பலனிலே நெஞ்சை செலுத்தாதவர்கள்.

பாலகாண்டம் 23-வது ஸர்க்கம் 2-வது ச்லோகம

**कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते।**
**उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम्॥**

**கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்$_4$யா ப்ரவர்த்ததே।**
**உத்திஷ்ட$_2$ நரஶார்த்தூ$_3$ல கர்த்தவ்யம் தை$_3$வமாஹ்நிகம்॥**

பதவுரை:—**நரஶார்த்தூ$_3$ல**—*ஆண்புலியே!* **கௌஸல்யா ஸுப்ரஜா ராம**—*கௌஸல்யாதேவிக்கு நல்லபிள்ளையான ராமனே!* **பூர்வா ஸந்த்$_4$யா**-*முதல் ஸந்த்யாகாலம்.* **ப்ரவர்த்ததே**-*நடக்கிறது;* **தை$_3$வம் ஆஹ்நிகம்**-*எம்பெருமானாலே விதிக்கப் பட்ட நித்யநைமித்திக கர்மங்கள்.* **கர்த்தவ்யம்**—*அநுஷ்டிக்கப்படவேண்டும்.*

வ்யாக்யானம்:-*சக்ரவர்த்தியினுடையவும், ஸ்ரீகௌஸலையாருடையவும் தப:பலமாயிருக்க, "கௌஸல்யாஸுப்ரஜா ராம" என்று ரிஷி சொன்னதற்கு ஹேது* **"माता पुत्रस्य भूयांसि कर्माण्यारभते"** (**மாதா புத்ரஸ்ய பூ$_4$யாம்ஸி கர்மாண்யாரப$_4$தே**) *என்று கர்மமானது புத்ரன் விஷயமாக மாதாவுக்கே அதிகமென்று சொல்லுகையாலும்.* **"मातृदेवो भव"** (**மாத்ருதே$_3$வோ ப$_4$வ**) *என்கிற ச்ருதியானது, மாதாவை ப்ரதானமாகச் சொல்லுகையாலும்,* **"कैकेय्याः प्रियकारणात्"** (**கைகேய்யா: ப்ரியகாரணாத்**) *என்று மாத்ருஸபத்நியான*

---

*வ்யா.-(கௌஸல்யையின் நல்ல பிள்ளையாகிய ராமனே!) தசரத சக்ரவர்த்தி ஸ்ரீகௌஸல்யாதேவி ஆகிய இருவரும் தவம் செய்து பெற்ற பிள்ளையாயிருக்க, "கௌஸல்யையின் நலல பிள்ளையான ராமனே!" என்று ரிஷி சொனனதற்குக் காரணமென்னென்னில: "தாய் பிள்ளை விஷயமாகத் (தந்தையைவிட) அதிகமான செயலகளைச் செய்கிறுன்" [?] என்று ஸ்ம்ருதிகளில் சொல்லுகையாலும், "தாயை தெய்வமாகக்கொள்; தந்தையை தெய்வமாகக் கொள்" [தை-சீக்ஷா 11-2] எனனும் வேதவாக்கியம் தந்தைக்கு முன் தாயை எடுப்பதன் மூலம் தாயை முக்கியமாகச் சொலலுகையாலும், 'கைகேயிக்குப் பிரியமானது என்னும் காரணத்திஞல் ராமன் வனம்*

மாதாவுக்கு ப்ரியமாக துஷ்கரக்ருத்யத்தைப் பண்ணுகையால், இவருக்கு மாத்ருவ்ருத்தி அதிகமென்னும் நினைவினாலும், அறுபதினாயிரமாண்டு மலடுநின்று அருமையாகப் பெற்றபிள்ளையைச் சக்ரவர்த்தி 'விச்வாமித்ராத்₄வரத்ராணம் பண்ண அனுப்புவேனோ?' என்று ஸம்ஶயிக்க, மாத்ருத்வ ப்ரயுக்த ஸம்பந்தத்தையிட்டு நிஷேதிக்கையன்றிக்கே தம் முடைய பின்னே அனுப்பினாள் என்ற உபகாரத்தாலும், 'கௌஸல்யையினுடைய நல்ல குமாரனே!' என்கிறார். (ஸுப்ரஜா·)மாத்ருபித்ரு வாக்யபரிபாலனம் பண்ணுகையும், அவர்களுக்கு ப்ரியஹிதங்களைப் பண்ணுகையும் ஸத்புத்ர லக்ஷணமென்று லோகத்தார் அறியும்படி, **"मद्विधा वा पितुः पुत्राः"** (மத்₃வித₄ா வா பிது: புத்ரா:) என்று தம்முடைய பிள்ளைத்தனத்தைத் தாமே கொண்டாடும்படியான பிள்ளைத் தனத்தை அனுஷ்டித்துக் காட்டுகையாலும், **"कौसल्या शुशुभे तेन"** (கௌஸல்யா ஶுஶுபே₄ தேந) என்றும், "தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை" என்றும், "இவனைப்

---

சென்றான்" [ரா-பா 1-21] என்று தாய்க்குச் சக்களத்தியான மாற்றாந் தாய்க்குப் பிரியமாகச் செய்யவரிய செயலைச் செய்கையால் ராமனுக்கு மாத்ருகைங்கர்யம் அதிகம் என்னும் நினைவினாலும், "அறுபதினாயிரம் வருஷம் பிள்ளையற்றிருந்து, பிறகு அருமையாகப் பெற்றெடுத்த பிள்ளையை விச்வாமித்ர யாகஸம்ரக்ஷணத்திற்காக அனுப்புவேனோ" என்று தசரதன் ஸந்தேஹித்தபோதிலும், தாயாயிருக்கையாலுண்டான ஸம்பந்தத்தைக்கொண்டு ராமனை வனம் போகாதேயென்று தடுக்காமல் தம் பின்னே அனுப்பினாள் என்கிற நன்றியறிவாலும "கௌஸல்யையுடைய நல்ல குமாரனே!" என்கிறார். (நல்ல பிள்ளை) தாய்தந்தையரின் வாக்யத்தின்படி நடப்பதும், அவர்களுக்கு இனியதும், நல்லதுமான செயல்களைச் செய்வதும் நல்லபிள்ளையின் லக்ஷணம் என்று உலகிலுள்ளார் அறியும்படியும், "தந்தைக்கு நல்ல பிள்ளையாயிருப்பவர் என்னைப்போல் ஒருவருமில்லை" [ரா-யு 18-16] என்று தமமுடைய நல்லபிள்ளைத் தனத்தைத் தாமே கொண்டாடும் படியுமான ஸத்புத்ரலக்ஷணத்தை அநுஷ்டித்துக் காட்டுகையாலும், "கௌஸல்யையானவள் அந்தப் பிள்ளையால் மிகவும் சோபையுடன் விளங்கினாள்' [ரா-பா 18-11] என்றும், "தாயைக் குடல்விளக்கம்

*பெற்ற வயிறுடையாள்'' என்றும் முடியப் புகழும்படியான பிள்ளைத்தனத்தாலே பெற்ற தாயாரை விளங்கப் பண்ணுகையாலும் 'நல்ல குமாரனே!' என்கிறார்.*

*(ராம) ரூபௌதார்ய குணசேஷ்டிதங்களாலும் மனத்துக்கினியனாய், ஸர்வப்ராணிகளையும் வசீகரிக்கிற வடிவழகை உடையவனே! என்கிறார்.* **"देवो नामसहस्रवान्" (தே$_{3}$வோ நாமஸஹஸ்ரவாந்)** *என்று ஆயிரம் திருநாமத்துக்கு ஸத்ருஶமாய், சதுர்வித$_{4}$புருஷர்களுக்கும் ஜப்யமாய், ஸர்வாபீ$_{4}$ஷ்டப்ரத$_{3}$மான திருநாமத்தைச் சொல்லுகிறார். (கௌஸல்யா ஸுப்ரஜா ராம) என்று அநுபாஸ்யமான பரசுராமாதிகளை வ்யாவர்த்திக்கிறார். (நரஶார்த்தூல) தன்னுடைய வேள்வி காக்கவல்ல ஆண்புலி என்கிறார்.*

---

செய்த தாமோதரனை'' [திருப்பாவை-5] என்றும், "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்'' [பெரியாழ் திரு 2-2-6] என்றும் கடைசிவரையில் புகழும்படியான நல்லபிள்ளைத் தன்மையாலே பெற்ற தாயாரை விளங்கப்பண்ணுகையாலும், 'நல்ல குமாரனே!' என்கிறார்.

(ராமனே) வடிவு, வண்மை, குணங்கள், செயலகள் ஆகிய இவைகளெல்லாவற்றாலும் மனத்துக்கு இனியவனாய் எல்லாஜந்துக்களையும் வசீகரிக்கிற வடிவழகை உடையவனே என்கிறார். "பேராயிரம் கொண்ட தேவன்'' [பார-பீஷ்ம] எனற ஆயிரம் திரு நாமத்துக்கு ஒப்பானதாய், செலவத்தையிழந்தவன் (ஆர்த்தன்), செல்வததைப்பெற விரும்புமவன் (அர்த்தார்த்தி), ஆத்மாவை அடைய நினைப்பவன் (ஜிஜ்ஞாஸு), பகவத்பக்தன் (ஞானி) என்று கீதாதிகளில் சொல்லப்பட்ட நாலுவகைப்பட்ட மனிதர்களுக்கும ஜபிக்கத் தகுந்ததாய், தர்மார்த்தகாம மோக்ஷங்களாகிற நாலு புருஷார்த்தங்களையும் தருவதான திருநாமத்தைச் சொல்லுகிறார். (கௌஸல்யையின நல்ல பிள்ளையான ராமனே) என்று, உபாஸிக்கத்தகாதவரான பரசுராமாதிகளைக் காட்டிலும் வேறு படுத்துகிறார். (ஆண்புலியே) தன்னுடைய யாகம் காக்கவல்ல ஆண்புலி என்கிறார்.

(பூர்வாஸந்த்₄யா) அவன் ப்ரத₂மகடாக்ஷத்துக்கு யோக்யமாய், அவனாலே தன் விரோதியைப் போக்கிக்கொள்ளவும் யோக்யமாய், ஜ்ஞானோத்₃போ₃த₄கமானகாலத்தைச்சொல்லு கிறார். இவர் ஆசாரப்ரத₄ானரானவர். ஸாமாந்யமான ஸகல தர்மங்களையும் அநுஷ்டித்தருளுவர். ப்ராதஸ் ஸந்த்₄யையை உபாஸியாமல் கண்வளர்ந்தருளலாமோ என்று கருத்து. (ப்ரவர்த்ததே) மிகவும வர்த்தியாநின்றது. இங்கு வர்த்தமான மாகச் சொல்லுகிறது, இந்த நல்விடிவே நித்யமாகவேணும் என்கிறார். (கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்) எம்பெருமானாலே விதிக்கப்பட்ட நித்யநைமித்திகமாயிருக்கிற ஆஹ்நிமான ஸகலதர்மங்களையும் அநுஷ்டித்தருளவேணுமாகையாலே (உத்திஷ்ட) என்று திருப்பள்ளியுணர்த்தினான்ரிஷி. "கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே। உத்திஷ்ட நரசார்த்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்॥"

**பாலகாண்டம் 17-வது ஸர்க்கம் 26-வது ச்லோகம்**

**इयं सीता मम सुता सहधर्मचरी तव।**
**प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना॥**

---

(காலை ஸந்த்யை) அவன் முதல் நோக்குக்குத் தகுந்ததாய், அவனாலே தன் விரோதியைப்போக்கிக்கொள்ளவும் தகுந்ததாய், அறிவை உணர்த்துவதான காலத்தைச் சொல்லுகிறார். ராமபிரான் ஆசாரத்தை முக்கியமாகக்கொண்டவராகையாலும், ஸகல ஸாமாந்யதர்மங்களையும் அநுஷ்டிப்பதற்காகவே அவதரித்தவராகையாலும், "காலை ஸந்த்யையை உபாஸியாமல் தூங்கலாமோ?" என்னும் கருத்துத் தோன்றச் சொல்லுகிறார் ரிஷி. (மிகவும் கடந்து வருகிறது) 'கடந்து வருகிறது' என்று நிகழ்காலமாகச் சொல்லுகிறதனால், 'இந்த நல விடிவே என்றும் நடக்கவேணும்' என்னும் கருத்து தோன்றுகிறது. (தேவனுடைய பகற்கடன்கள் செய்யப்படவேணடும்) வாஸுதேவனாலே விதிக்கப்பட்டவையாய், தினந்தோறும் செய்யவேண்டிய நித்யகர்மரூபமாகவும், சிற்சில நிமித்தங்களிலே செய்யவேண்டிய நைமித்திககர்மரூபமாகவுமுள்ள எல்லாப் பகற்கடன்களையும் அநுஷ்டித்தருளவேணுமாகையாலே 'எழுந்திரும்' என்று திருப்பள்ளியெழுச்சி பாடுகிறார் ரிஷி.

**இயம் ஸீதா மம ஸுதா ஸஹத₄ர்மசரீ தவ|**
**ப்ரதீச்ச₂ சைநாம ப₄த்₃ரம தே பாணிம க்₃ருஹ்ணீஷ்வ பாணிநா ||**

**பதவுரை:**—மம—*என்னுடைய,* **ஸுதா**—*பெண்ணான,* **இயம் ஸீதா**—*இந்த சீதையானவள்,* **தவ**—*உமக்கும்,* **ஸஹ த₄ர்மசரீ**-*தர்மங்களைக கூட இருந்து செய்யககூடியவள்,* **ஏநாம**-*இவளை,* **ப்ரதீச்ச₂**—*அங்கீகரிப்பீராக;* **தே ப₄த்₃ரம (அஸ்து)**—*உமக்கு மங்களமுண்டாகட்டும்;* **பாணிநா**—*(உம்முடைய) கையினல்,* **பாணிம்**-*(இவளுடைய) கையை,* **க்₃ருஹ்ணீஷ்வ**-*பிடித்துக் கொள்ளும்.*

**அவ:**-*பெருமாள் வில்லை முறிந்துப பாரதந்த்ர்யத்தோடே விநீதராய் நிப்₄ருதராய் நிற்க, ஸ்ரீ ஜநகசக்கரவர்த்தி சிந்தார்ண வத்தில்நின்றும் கரையேறின ஹர்ஷாதிசயத்தாலும், மிதுநச் சேர்த்தி கண்டல்லது நிற்கவொண்ணாமையாலும், சேர்க்கை தனக்குப் பரமோத்தேச்யமாகையாலும், க₄டகக்ருத்யம் முன் னுகச் செய்யவேண்டுகையாலும், பெருமாள் திருக்கையிலே பிராட்டியைக் கொடுதது க்ருதக்ருத்யனுகிறுன். இவன் புருஷ காரத்துககும் புருஷகாரமாகிறுனிறே.*

---

*அவதாரிகை:—ராமபிரான் சிவதனுஸ்ஸை முறித்து, பித்ருபார தந்த்ர்யம் தோற்ற அடக்கவொடுக்கத்துடன் நிற்க,ஜநகசக்ரவர்த்தி யானவன் "***பதிஸம்யோக₃ ஸுலப₄ம் வயோ த்₃ருஷ்ட்வா து மே பிதா சிந்தார்ணவக₃த: பாரம் நாஸஸாத₃ப்லவோ யத₂ா***" [ரா-அ 118-34] [கணவனுடன் சேர்க்கவேண்டிய பருவம் என்னை அடைந்திருப் பதைக்கண்டு, கவலைக்கடலுள கிடந்த என் தந்தை, (கடலில தத் தளிககும்) ஓடம்போலே கரைகாணவில்லை.] என்கிறபடியே கவலைக் கடலிலிருந்து கரையேறினதாலுண்டான மிகுந்த உகப்பினுலும், பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தி கண்டல்லது நிற்கமாட்டாமை யாலும், அச்சேர்த்தியே தனக்கு மேலான ப்ரயோஜநமாகையாலும், சேர்ப்பிப்பார் தங்கள் காரியத்தை முதலில் செய்யவேண்டுமாகை யாலும், அதிலும் ஸ்வாமியான பெருமாளுடைய விருப்பத்தை முன்னிட்டுச் செய்வது தன் ஸ்வரூபத்திற்குத் தகுந்ததாகையாலும், பெருமாள் கையிலே பிராட்டியைக் கொடுப்பதன்மூலம் தன் காரி யத்தை முடிக்கிறுன். சேதனரைப் பெருமாளிடம் சேர்ப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டியையும் பெருமாளிடம் சேர்ப்பிப்பதன் மூலம் அவளுக்கும் புருஷகாரமாகிறவனன்றே இவன.*

வ்யாக்யானம்:-(இயம் ஸீதா) "चन्द्रकान्ताननं राममतीवप्रियदर्शनम्। रूपौदार्यगुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम्॥" (சந்த்₃ரகாந்தாநநம் ராமமதீவப்ரியத₃ர்ஶநம் ரூபௌதா₃ர்யகு₃ணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்) என்னும்படியான வடிவு படைத்த நம் பக்கலில் எல்லாரும் வந்து விழுகிறார்களென்று உம்மைப் பார்த்து இறுமாந்திராதே இவளையும் பாரீர் என்கிறான். "तुल्यशीलवयोवृत्तां" (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்று வேறு விஷயமில்லாமையாலே உமக்குத் தருகிறேனைத்தனைகாணும். இவளுக்கு ஏற்றமேதென்று திருவுள்ளமாகக்கொண்டு பிறப்பிலேற்றம் சொல்லுகிறான்,-(ஸீதா) ஆபிஜாத்யத்தை யும். கர்ப்பவாஸம் பண்ணாத ஏற்றத்தையும் காட்டுகிறான். (ஸீதா) பொற்கொடிபோலே. பொன் முளைப்பது பூமியிலே யிறே. இவள்தான் ஹிரண்யவர்ணையிறே.

---

வ்யா:—(இந்த ஸீதை) "சந்திரனைப்போன்று அழகிய முகத்தை யுடையவனாய், (அச்சந்திரனிலும்) மிகவும் இனியனாகக் காட்சியளிப்ப வனாய், வடிவழகு வண்மை குணங்கள் ஆகியவற்றால் ஆண்களின கண்களையும நெஞ்சையும் கவருமவனான ராமனை (தசரதன் கண் டான்)" [ரா-அ 3-29] என்னும்படியான வடிவு படைத்த நம்மேல் எல்லாரும் வந்து விழுகிறார்கள் என்று உம்மைப்பார்த்து கர்வம கொண்டிராதே இவளையும் பாரீர் என்கிறான. "(ராமனுக்கு) தகுந்த குணம், வயஸ், நடத்தை ஆகியவற்றையுடைய ஸீதையை" [ரா-ஸு 16-5] என்று இவளுக்குத் தகுந்தவர் வேறொருவரும் இல்லாமையாலே உமக்குத்தருகிறேனத்தனை காணும். 'என்னைக் காட்டிலும் இவளுக்கு ஏற்றமேது' என்று ராமன் நினைப்பதாகக் கருதிப் பிறப்பில் ஏற்றத்தைச் சொல்லுகிறான்,-(ஸீதா) நற்குடியில வந்ததையும்,கர்ப்பவாஸம் பண்ணாத பெருமையையும் காட்டுகிறான். "ஸீதா லாங்க₃லபத்₃த₄தி:" [கலப்பை உழுத வழி ஸீதையெனப்படும்] என்று அமரகோச வைஜயந்த்யாதிகளில் சொல்லியபடியே 'ஸீதா' என்னும் சப்தம் கலப்பையுழுத வழியைச்சொல்லும். அவ்வழியிலே தோன்றியவளாகையால் 'ஸீதை' என்று பெயரிடப்பட்டாள பிராட்டி. ஆகையால் இச்சொல் இவளுடைய அயோநிஜத்வத்தைக் காட்டுகிறது. (ஸீதா) பூமியிலே பிறந்தவள்; பூமியிலே தோன்றிய பொற்கொடி போன்றவள். பொன்முளைப்பதும் பூமியிலேயன்றோ.

அழகோ நமக்குத் தேட்டம்? ஆபிஜாத்யம் வேண்டாவோ என்று கருத்தாகப் பிறப்பில் ஏற்றம் சொல்லுகிறன்.–(மமஸுதா) **"मिथिलायां प्रदीप्तायां न मे किञ्चित् प्रदह्यते"** **(மிதி₂லாயம் ப்ரதீ₃ப்தாயாம ந மே கிஞ்சித் ப்ரத₃ஹ்யதே)** என்றவன் அபிமானிக்கப் பிறந்தவள். "வள்ளி மருங்குல் என்றன் மடமான்" என்று தாயார் வைலக்ஷண்யம் சொல்லுமாப்போலே. பிறவாமையிலும் ஏற்றமுண்டு, பிறப்பிலும் ஏற்றமுண்டு. "ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன்" என்கிறன்.

**"जनकानां कुले कीर्तिमाहरिष्यति मे सुता" (ஜநகாநாம் குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே ஸுதா)** என்றவாறே. பெருமாள் "இப்படி வைலக்ஷண்யத்தில் குறையில்லையாறலும், அதுவன்றே நமக்கு தேட்டம்; நாம் அதிகரித்த கார்யத்துக்கு ஸஹகாரியாகவேணுமே" என்ன,–**(ஸஹதர்மசரீ தவ)** அதி

---

இவளும் 'ஹிரண்யவாணு' [ஸ்ரீஸூக்தம்-1] [பொன்போனற நிறத்தையுடையவள்] என்று சொல்லப்பட்டவளன்றே,

'அழகோ நாம் தேடுவது? நற்குடிப்பிறப்பு வேண்டாவோ?' என்று பெருமாள் நினைப்பதாக எண்ணிச் சொல்லுகிறன்,–(என் பெண்) "பற்றி எரியும் மிதிலையில் என்னுடையதொன்றும் எரியவில்லை" [?] என்று சொல்லுமபடி அபிமானமற்றிருக்கும் எனககுப் பிறந்தவள். அபிமானமற்றவனை நானும் 'என்னுடைய பெண்' என்று அபிமானம் வைக்கும்படியான ஏற்றத்தையுடையவள். "வள்ளிமருங்குலென்றன் மடமான்" [பெரியதிரு 3-7-1] என்று தாயார் பெண்ணின் பெருமையைச் சொல்லுமாபோலே சொல்லுகிறன். பிறவாமையிலும் ஏற்றமுணடு; பிறப்பிலும் ஏற்றமுண்டு. இரண்டு ஏற்றமும் இவளுக்குண்டு. "ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்" [பெரியாழ்திரு 3-8-4] என்கிறன்.

"ஜநகவமிசத்தாருடைய குலத்தில் என் பெண் கீர்த்தியை விளங்கச் செய்யப்போகிறள்" [ரா-பா 67-22] என்றுப்போலே ஜனகன் "என் பெண்" என்று சொன்னவுடன், ராமன "இப்படி ஏற்றத்தில் குறைவில்லையாறலும், நாம் தேடுவது அதுவன்று; நாம் ஆரமபித்த காரியத்திற்குத் துணையாகவேண்டுமே" என்ன,–(உனக்குக்

லும அநுஷ்டானத்திலும் முற்பாடை என்கிறான். "न त्यजेयं" (ந த்யஜேயம்) "एतद्व्रतं मम" (ஏதத்₃வ்ரதம மம)என் றிறே தேவர் வ்ரதம். அதிலும் "भवेयं शरणं हि वः" (ப₄வேயம் ஶரணம் ஹி வ:) "अलमेषा" (அலமேஷா) "न कश्चिन्नापराध्यति" (ந கச்சிந் நாப₄ராத்யதி) "क्षान्तिस्तवाकस्मिकी" (க்ஷாந்திஸ்தவாகஸ்மிகீ) என்று உம்மிலும் முற்பாடை என்கிறான்.

---

கூட விருந்து காரியம் செய்பவள்) அதிலும் உமக்கு முன்னால் அனுஷ்டித்துக்காட்டுமவள் "மிதரப₄ாவேந ஸம்ப்ராபதம ந தயஜேயம கத₂ஞ்சந" [ரா-யு 18-3] [நண்பனுடைய வேஷத்துடன் வந்தடைந்தவனையும நான் ஒருபோதும் விடமாட்டேன்] "அப₄'ய ஸர்வபூ₄தேப₄யோ த₃த₃ாம் யேதத்₃ வரதம் மம" [ரா-யு 18-34] [(என்னை சரணமடைந்தவனுக்கு) எல்லா பூதங்களிடமிருந்தும் நான் அபயமளிக்கிறேன். இது என விரதம்.] என்றலலவோ தேவரீருடைய விரதம். இப்படி தேவரீர் அருளிச்செய்த அர்த்தத்தை "ராக்ஷஸிகளான உங்களுக்கு நான அடைக்கலமாகிறேன்" [ரா-ஸு 27-53] "அலமேஷா பரித்ராதும ராக்ஷஸீர் மஹதோ ப₄யாத்" [ரா-ஸு 27-46] [ராக்ஷஸிகளை (ராமனிடமிருந்துண்டான) பெரும் பயத்திலிருந்து காப்பாற்ற இப்பிராட்டியே தகுந்தவள்] "பாபாநாம் வா சுப₄ாநாம வா வத₄ாாஹாணும் ப்லவங்க₃ம கார்யம கருணமார்யேண ந கச்சிந் நாபராத்₄யதி" [ரா-யு 116-44] [வானர! பாபிகளாயினும், நல்லோராயினும், கொல்லத்தக்கவராயினும், பெரியோரால் அவர்கள் விஷயத்தில் கருணை காட்டப்பட வேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே]

"மாதர் மைதி₂லி ராக்ஷஸீஸ் த்வயி ததை₃வாத்₃ராபராத₁ாஸ்த்வயா
ரக்ஷந்த்யா பவநாத்மஜால் லகு₄தரா ராமஸய கோ₃ஷ்டீ₂ க்ருதா
காகம் தம் ச விபீ₄ஷணம் சரணமித்யுக்திக்ஷமௌ ரக்ஷத:
ஸா நஸ் ஸாந்த₃ரமஹாக₃ஸஸ ஸுக₂யது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ"

[தாயே மைதிலி! அபராதம் செய்த கை உலராமலிருந்த அப்போதே ராக்ஷஸிகளை வாயுபுத்திரனை மாருதியிடமிருந்து ரக்ஷித்த உன்னால் காகத்தையும விபீஷணனையும் 'சரணம்' எனனும் வார்த்தையைச் சொன்ன பின்பு ரக்ஷித்த ராமனுடைய கோஷ்டியானது சிறிதாக்கப் பட்டது. அப்படிப்பட்ட உன்னுடைய நிர்ஹேதுகக்ருபை மிகவதிகமான மஹாபாபங்களைச்செய்த எங்களை இன்புறச்செய்யட்டும்] [ஸ்ரீகுண ரத்நகோசம-50]என்கிறபடியே தேவரீர்க்கும் முனனால அனுஷ்டித்துக் காட்டவல்ல ஸஹதர்மசாரியிவள் என்கிறான்.

இவர் ஸ்ரீநந்தகோபர் திருமகனைப்போலன்றே. "நாம் இதுக்குக் கடவோமோ? ஐயரும் ஆச்சியரும், வஸிஷ்டாதிகளுமன்றோ" என்ன, (ப்ரதீச்ச) என்கிறான். "நின் தாள் நயந்திருந்த இவளையுன் மனத்தால் என் நினைந்திருந்தாய்" என்கிறான். புருஷார்த்தமாகவேணுமே. துல்யசீலவயோவ்ருத்தையாளுலும் ப்ரயோஜனமில்லையே. (ப்ரதீச்ச) என்று "வரில் பொகடேன், கெடில் தேடேன்" என்று இராதே கொள்ளீர். இவள் 'இறையுமகலகில்லேன்' என்று இருக்குமா போலே நீரும் **"न जीवेयं क्षणमपि"** (ந ஜீவேயம் க்ஷணமபி) என்று இருக்கவேணும்காணும்" என்கிறான். (ஏ ந ா ம) வரும் திருவைக் காலாலே தள்ளாதேகொள்ளீர்.

பெருமாள் ஐயராகையோபாதி இசைந்து நின்றார். இவனுக்கு அவ்வளவு போராதே. நாடுநகரமறிய நல்ல பெருப்

---

"கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்" [நாச்-திரு 11-9] என்று சொல்லப்பட்ட நந்தகோபன் குமரனைப் போன்றவனன்றே ஸ்ரீராமபிரான். ஆகையால் ஜநகன் இவ்வளவு சொல்லியும், "இதை நான் ஸ்வதந்த்ரனாகச் செய்யவல்லேனோ? என் தாய்தந்தையரும், வஸிஷ்டாதி புரோஹிதர்களுமன்றோசெய்து வைக்கவேண்டும்" என்ன,—(அங்கீகரியும்) என்கிறான். "நின் தாள் நயந்திருந்த இவளை உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்" [பெரியதிரு 2-7-1] என்கிறான். ஒரு புருஷனால் அர்த்திக்கப்பட்டாலன்றோ பெண் பயன் பெறுவது. ஒத்தகுணம், வயது நடத்தை ஆகியவற்றை உடையவளாயிருப்பதால் மட்டும் பயனில்லையே. (அங்கீகரிப்பீராக) "வந்தால் கைவிடமாட்டேன்; போனால் தேடமாட்டேன்" என்று இருக்கலாகாது. இவள் "இறையும் அகலகில்லேன்" [திருவாய் 6-10-10] என்று இருப்பதுபோல், நீரும் "ஸீதையை விட்டு ஒரு கணமும் ஜீவியேன்" [ரா-ஸு 66-10]என்று இருக்கவேணுங்காணும் என்கிறான். (இவளை) தானேவருகிற ஸ்ரீதேவியைக் காலாலே தள்ளாதே கொள்ளவேணும்.

ஸ்ரீராமபிரான் தன் தந்தை இசைந்திருந்ததைப்போலே தானும் இசைந்து நின்றான். இவனுக்கு அவ்வளவுமட்டும் போராதன்றோ. ஆகையாலே "பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்து" [பெரியாழ்

பெருத்த கண்ணுலம் செய்து தக்கவா கைப்பற்ற ஆசைப் படுகிருன். (பாணிம க்ருஹ்ணீஷ்வ) வெள்ளி வளேக் கை பற்றச்சொல்லுகிருன். பாதுகாவல் வைக்கவும் பரிசற வாழ வும் தேடுகிருன். (க்ருஹ்ணீஷ்வ) யார் ப்ரயோஜனத்துக்கு யார் காத்திருக்கிருர்? (ஏநாம் பாணிம க்ருஹ்ணீஷ்வ) இவ் வேப்பங்குடி நீரையிறே நான் உம்மைக் குடிக்கச் சொல்லு கிறது. பால்குடிக்கக் கால்பிடிக்க வேண்டுவதே! பால் மொழியாளிறே இவள்தான். "मधुरा" (மது₄ரா) (பத்ரம் தே) சேர்த்திதான் கண்டவாறே மங்களாஶாஸனம் பண்ணு கிருன். இவ்விஷயத்துக்குப் பெண் பெற்றுக் கொடுத்தா ரெல்லாருக்கும் திருப்பல்லாண்டு பாடவேண்டும்போலே காணும். 'நன்று நன்று நறையூரர்க்கே'.

---

திரு 3-7-10] "நாடு நகருமறிய நல்லதோர் கண்ணுலம் செய்து தக்கவாகைப்பற்றுங்கொலோ" [பெரியாழ் திரு 3-8-6] என்று ஆசைப்படுகிருன். (கையைப் பிடிப்பீர்) "வெள்ளிவளேக் கை" [பெரியதிரு 3-7-1] எனப்படும் கையைப் பற்றச் சொல்லுகிருன். "ஆழியான் என்றன் மகளேப் பண்டைப் பழிப்புக்கள சொல்லிப் பரிசற ஆணடிடுங்கொலோ, கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து கோவலப் பட்டங் கவித்துப் பண்டை மணுட்டிமார் முன்னே பாதுகாவல் வைக்கும்கொலோ" [பெரியாழ்-திரு 3-8-7]என்று ஆசைப்படுகிருன். (பிடிப்பீர்) ப்ரயோஜனத்தை அடையக் காத்திருக்கும் நீரே முயல வேண்டுமேயொழிய நான் உணர்த்தவும் வேண்டுமோ? (இவளேக் கையைப் பிடியீர்) இவ்வேப்பங்குடி நீரையன்ரே நான் உம்மைக் குடிக்கச்சொல்லுவது. பால்குடிக்கக் கால்பிடிக்கவேண்டியிருப்பதே! "பால்மொழியாள்" [பெரியாழ்திரு 3-10-5] ஆயிற்றே இவள். "மது₄ரா மது₄ராலாப₁" [ரா-ஸு 66-15] [இனியவள்; இனிய பேச்சையுடையவள்] என்று சொல்லப்பட்டவளன்ரே. (உனக்கு மங்கள முண்டாகட்டும்) பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியைக் கண்டவுடன் மங்களாசாஸனம் பண்ணுகிருன். பரமபுருஷனுக்குப் பெண்பெற்றுக் கொடுத்தாரெல்லாரும் பெரியாழ்வாரைப்போலே திருப்பல்லாண்டு பாடவேண்டும போலே காணும். "நன்று நன்று நறையூரர்க்கே" [பெரியதிரு 8-2-2] என்று திருமங்கையாழ்வாரும் பெண்பெற்றுக் கொடுத்த தாயான தசையிலே பல்லாண்டு பாடினரன்ரே.

இப்போது செய்யவேண்டுவதென்னென்ன; (பாணிம க்ருஹ்ணீஷ்வ பாணிநா) கையாலே கையைப்பிடியீர். ப்ரணயாபராதத்திலே தலையாலே காலே நெருககுகிறீர். இப் போது கையாலே கையைப்பிடியீர் என்கிறுன. அச் மாரோபண ஸமயத்திலே கையாலே காலைபபிடிக்கிறீர். இப் போது கையாலே கையைப்பிடியீர் என்கிறுன். கைத் தலம் பற்றினவனந்தரம் கைப்பற்றித் தீ வ ல ம் செய்யும் போதிறே திருக்கையால் தாள் பற்றி அம்மிமிதிப்பது. "பாணிநா பாணிம்" என்றுதொழிந்தது செம்மையுடைய திருக்கைக்கு மேலே என் கை வைத்து என்னும்படி போக் யதை கை விஞ்சியிருக்கையாலே. உடயவிபூதியும் ஒரு மூலே யிலே அடங்கும்படி பெருந்த பாஹுச்சாயயயுடைய தய ரதன் பெற்ற மரதகமணித்தடமும் "மெல்லியல் தோள் தோய்ந்தாய்" என்கிறபடியே ச்ரமஹரமாக அவகாஹிக்கும்

---

இப்போது செய்யவேண்டியது என்னென்ன (கையைக் கையாலே பிடியீர்) ப்ரணயகலஹத்தின்போது தலையாலே காலே நெருக்குவீர். இப்போது கையாலே கையைப் பிடியீர் என்கிருன். அம்மிமிதிக்கும்போது கையாலே காலைப்பிடிப்பீர். இப்போது கையாலே கையைப் பிடியீர். "மதுசூதன் வந்தென்னைக் கைத்தலம பற்றக்கனுக் கண்டேன்" [நாச்-திரு 6-6] "என் கைப்பற்றித் தீவலம் செய்யக் கனுக் கண்டேன்" [நாச்-திரு 6-7] "செம்மையுடைய திருக் கையால் தாள்பற்றி அமமிமிதிக்கக் கனுக் கணடேன" [நாச்-திரு 6-8] என்று ஆண்டாளும் கைத்தலம் பற்றின பினபனறோ தீவலம செய்து அம்மிமிதிப்பதாக அருளிச்செய்தாள். "கையால் கையைப் பிடியீர்" என்னுமல், "கையைக் கையாலே பிடியீர்" என்றது, "செம்மையுடைய திருக்கை" [நாச்-திரு 6-8] என்ற பகவானுடைய கையைக் காட்டிலும் "கைமேல என்கை" [நாச்-திரு 6-9] என்கிற பிராட்டியின கை இனிமையில் கை விஞ்சியிருக்கையாலே."பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸய லோகோ மஹாத்மந:" [ரா-ஸு 34-31] [எந்த மஹாத்மாவான ராமபிரானுடைய தோள் நிழலைப்பற்றி நிற்பதாய் உபயவிபூதியும் விளங்குகின்றதோ] என்ற பெருமையைப் பெற்ற 'தயரதன் பெற்ற மரதக மணித்தடம்' [திருவாய் 10-1-8] ஆகிய ராமபிரானும் 'வில்ல விறுத்து மெலலியல் தோள தோய்ந்தாய்" [திருநெடு-13] என்கிற படியே தடாகம் கடலிலே தோய்ந்தாப்போலே சிரமம் தீர அணைக்கும்

படி நீர்மையும் போக்யதையும் விஞ்சியிறேயிருப்பது. **"शत्रुहन्तारं परिषस्वजे"** (ஶத்ருஹந்தாரம் பரிஷஸ்வஜே) என்று கரஶாராக்னியால் உண்டான வெம்மையும் தணிந்து பகவத் ஸ்வாதந்த்ர்யரூபமான வெம்மையும் தணிந்து இப்படி சேதநேச்வரர் இருவருக்கும் ஒதுங்க நிழலாயிறே வேய் போலுமெழில் தோளியுடைய தோளழகு விஞ்சியிருப்பது. **(பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா)** திருக்கையால் கைத்தலம் பற்றக் கனுக் கண்டிருக்குமே இவளும்.

பாலகாண்ட தனிச்லோகம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அயோத்யா காண்டம் 1-வது ஸர்க்கம் 1-வது ச்லோகம்

**गच्छता मातुलकुलं भरतेन तदाऽनघः।**
**शत्रुघ्नो नित्यशत्रुघ्नो नीतः प्रीतिपुरस्कृतः॥**

**க$_3$ச்ச$_2$தா மாதுலகுலம் ப$_4$ரதேந தத$_3$ாऽநக$_4$:।**
**ஶத்ருக்$_4$நோ நித்யஶத்ருக்$_4$நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:॥**

**பதவுரை:**—**அநக$_4$:**—தோஷமற்றவரும், **நித்யஶத்ருக்$_4$ந:**— எப்போதும் எதிரிகளான இந்திரியங்களையும் ஜயித்திருப் பவரும், **ஶத்ருக்$_4$ந**—எதிரிகளை மண் ணுண்ணப் பண்ணவல்லவ ராகையாலே சத்ருக்னன் என்று பெயரிடப்பட்டவருமான

---

படி நீர்மையும், இனிமையும் பிராட்டிக்கு அதிகமாகவன்றோ இருப் பது. "எதிரிகளைக் கொன்ற பெருமாளைப் பிராட்டி நன்றாகத் தழுவினுள்" [ரா-ஆ 30-39] என்கிறபடியே கரனுடைய-த்ருடமான- அம்புத்தியினுல் உண்டான வெம்மை தணிய ஈச்வரனும், பகவா னுடைய ஸ்வாதந்த்ர்ய ரூபமான வெமமை தணியச் சேதனனும், ஆக இப்படிச் சேதநேச்வரர் இருவரும் ஒதுங்கநிழலாம்படியன்றோ ''வேய்போலும் எழில் தோளி'' [வேய்-மூங்கில] [பெருமாள்திரு 9·4] ஆகிய பிராட்டியின் தோளழகு விஞ்சியிருப்பது. (கையைக் கையாலே பிடியீர்) இவளும் ஆண்டாளைப்போலே திருக்கையால் ·கைத்தலம் பற்றத் கனுக்கண்டிருப்பளன்றோ.

பால காண்ட தனிச்லோக விவரணம் முற்றிற்று.

அவர், ப்ரீதிபுரஸ்க்ருத.—அன்பினுலே முன் உந்தபபட்டவ ராய், தத₃ா—(பரதன் சென்று) அப்போதே, மாதுலகுலம்– மாமாவின் வீட்டிற்கு, க₃ச்ச₂தா–போகாநிற்கிற. ப₄ரதேந– பரதனுல், நீத:—அழைத்துச் செல்லப்பட்டார்.

வ்யா:–(கச்சதா) என்கிற வர்த்தமாந நிர்த்தேசத்தாலே போகிறவிடத்தில் தனக்கொரு ப்ரயோஜநம் உண்டாதல், இங்கே மாதா பிதாக்களைக் கேள்விகொள்ளுதல் பூர் வஜரான பெருமாளைக் கேள்விகொள்ளுதல் இவ்வளவு மின்றிக்கே அவனையொழிய ஜீவிக்கமாட்டாதபடியாலே போனுன் என்கை.

(மாதுலகுலம்) யுதாஜித் அழைத்தது அவனையாகை யாலே போக்கில் உத்தேச்யதையும் அவனுக்கு; இவனும் அவனுத்தேச்யனுய்ப் போனுன் என்கை. (பரதேந) சக்ர வர்த்தியும் துஞ்சி, பெருமாளும் ராஜ்யத்தைப் பொகட்டுப் போய். இளையபெருமாள் தொடர்ந்து அடிமைசெய்யவேணு மென்று போய், ஶத்ருக்நாழ்வானும் 'நின்னையல்லதறியேன்'

---

அவ:–பாகவதபாரதந்திரியத்தையே அனுஷ்டித்துக் காட்ட அவ தரித்த சத்ருக்நாழ்வான் நிலை இச்லோகத்தில் வெளியிடப்படுகிறது.

வ்யா:—(போகாநிற்கிற) என்கிற நிகழ்காலத்தாலே, பரதன் போகிறதைக்கண்டு சத்ருக்னனும் உடனே கூடச்சென்ருன் என்று தோற்றுகிறது. ஆகையால், தனக்கொரு பலனுக்காக இவன் போக வில்லையென்பதும், தாய்தந்தையர் அண்ணனுன ராமன் முதலா னுரிடம் விடைபெற்றுக் கொள்ளாமல், பரதனைவிட்டு உயிர்வாழ மாட்டாமையாலே போனுன் என்பதும் தோற்றுகிறது.

(மாமன் வீட்டிற்கு) பரதனுடைய தாய்மாமனுன யுதாஜித் அழைத்தது பரதனையாகையாலேபோவது அவனுக்கே உத்தேச்யம். இந்த சத்ருக்னனேவெனில் பரதனையே உத்தேச்யமாகக் கொண்டு பின்தொடர்ந்தான் என்றபடி. (பரதனுல்) தசரத சக்ரவர்த்தியும் இறந்து, ராமனும் ராஜ்யத்தை விட்டுப்போய், லக்ஷ்மணன் பின் தொடர்ந்து அடிமைசெய்யவேணுமென்று போய், சத்ருக்னுழ்வானும்

என்றிருக்கும் தசையிலும் ராஜ்யத்தை ப₄ரி(भरि)க்கக்கடவன் என்றுயிற்று ஸ்ரீ வஸிஷ்டபகவான் திருநாமம் சாத்திற்று. **"भरत इति राज्यस्य भरणात्"** (ப₄ரத இதி ராஜ்யஸ்ய ப₄ரணாத்) என்றுனிறே ஸ்ரீஶதாநீகன். (ததா) இருவரும் ராஜபுத்ரர்களாய் நக்ஷத்ரபேதமுண்டானால் பிரித்து முஹூர்த்தமிட்டுப் போக ப்ராப்தமாயிருக்க, அவன் போனதுவே முஹூர்த்தமாகப்போனான் என்கை. "கச்சதா" என்கிறதிலே அர்த்தஸித்தமன்றே. "ததா" என்றதென்னென்னில்: அங்கு மமதா நிவ்ருத்தியைச்சொல்லிற்று; இங்கு அதுக்கு ஆச்ரயமான அஹங்கார நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஆகையாலே புநருக்தி தோஷமில்லை. ஶேஷத்வ விரோதியிறே இரண்டும்.

---

பரதனையல்லது வேறொன்றை அறியேன் என்றிருக்கும் சமயத்திலும் ராஜ்யத்தை ப₁ரிக்க (தாங்க) வேண்டியவன் என்றல்லவோ ஸ்ரீவஸிஷ்டபகவான் பரதனென்று திருநாமம் சாத்தியருளினான். "ராஜ்யத்தைத் தாங்குவதால் பரதன் எனறு பெயர்" என்றானன்றோ ஸ்ரீசதாநீகன். (அப்போது) இருவரும் ராஜபுத்ரர்களாய், வேறு வேறு நக்ஷத்திரங்களில் பிறந்தவர்களாயிருக்கையாலே வேறு வேறு முஹூர்த்தங்களில் போகவேண்டியதே தகுதியாயிருகக, பரதன் போன முஹூர்த்தத்திலேயே தானும் போனான், அவனைப் பிரிந்து ஒரு முஹூர்த்தமும் ஜீவிக்கவல்லனல்லனாகையாலே. "போகாநிற்கிற பரதனுடன் போனான்" என்று சொன்னாலே போதாதோ? "போகாநிற்கிற பரதனுடன் அப்போதே போனான்" என்று சொல்ல வேண்டுமோ? எனில்: "போகாநிற்கிற' என்றவிடத்திலே 'தனக்கொரு ப்ரயோஜனம் இல்லாமையாலே பரதன் போகிறபோதே போனான்' என்று சொல்லுவதன்மூலம் சத்ருகனனுக்கு மமகாரம் (என்னுடையது என்னும் நினைவு) இல்லாமையைச் சொல்லிற்று. 'அப்போதே' என்னுமிடத்தில் வேறொரு நக்ஷத்திரத்திலே பிறந்தவனாய் வேறொரு முஹூர்த்தத்திலே போகவேண்டியவனை தான ஒருவன் உளன் என்னும் நினைவில்லையென்று உணர்த்துவதன் மூலம் சத்ருக்னனுக்கு அஹங்காரமிலலாமையை (தான் என்னும் நினைவில்லாமையை) சொல்லுகிறது. ஆக, இப்படி மமகாரம், அதுக்கு உறைவிடமான அஹங்காரம் ஆகிய இரண்டும் இல்லாமையை இரண்டு பதங்களும் சொல்லுகையாலே கூறியது

*(அநக:) அக₄(க)மில்லாதது இவனுக்கேயிறே. அக₄மாவது உத்தேச்யவிரோதியிறே. இவ்விடத்தில் அக₄மாவது ராமபக்தி. இதனைப் பாபமென்னப்போமோவென்னில்: பாபத்தில் புண்யம் நன்றாயிருக்க, மோக்ஷவிரோதியாகையாலே புண்யமும்,* **"अश्व इव रोमाणि विधूय पापं"** *(அச்வ இவ ரோமாணி வி***தூ₄ய பாபம்***) என்று பாபசப்தவாச்யமாயிற்றிறே. ஆகையால் பரதாநுவ்ருத்தியாகிற உத்தேச்யத்துக்கு விரோதியாகில் ராமஸௌந்தர்யத்தில் கால் தாழுமதுவும் பாபமாமித்தனையிறே.* **"रामे प्रमादं मा कार्षीः" (ராமே ப்ரமாத₃ம மா கார்ஷீ:)** *என்று ராமாநுவ்ருத்திக்கு இடைச்சுவராகச் சொல்லிற்றிறே ராமஸௌந்தர்யத்தை. பரதாநுவ்ருத்திக்கு இடைச்சுவரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே.*

---

கூறல் எனனும் தோஷமில்லை. இரண்டும் சேஷத்வத்திற்கு விரோதியாகையாலே இரண்டுமில்லாமையைச் சொல்லவேண்டுமன்றோ. (பாபமற்றவன்) அயோத்தியில் பாபமிலலாதவன் இவன் ஒருவனே யாவான். தான் விரும்பியதுக்கு விரோதியாயிருப்பது பாபமாகிறது. இவ்விடத்தில் இவன ஒருவனுக்கே இல்லாததாகச் சொல்லப்படுகிற பாபம் ராமபக்தியேயாகும். "ஸர்வே ராமமநுவ்ரதா:" என்கிறபடியே அயோத்தியிலுளள மற்றெல்லாருக்கும் ராமபக்தியாகிற இப்பாபம் உண்டனறோ. மிகச்சிறந்ததான ராமபக்தியைப் பாபமென்னலாமோ எனில்: தான் விரும்பிய பரதகைங்கர்யத்துக்கு இது விரோதியாகையாலே சத்ருகனனுக்கு இது பாபமாகிறது. பாபத்தைக்காட்டிலும் புண்யம் மிக மேலானதாயிருந்தும், பாபத்தைப் போலே மோக்ஷவிரோதியாயிருககையால, "குதிரை மயிர்களை விடுவதுபோல் பாபங்களை விட்டு முக்தியடைகிறுன" [சாந் 8-13-1] என்று வேதத்திலே புண்யபாபங்களிரண்டும் பாபசப்தத்தாலே சொல்லப்பட்டனவன்றோ. ஆகையாலே பரதனைப் பின்தொடர்வதாகிற பலனுக்கு இடையூறாயிருக்கும் ராமஸௌந்தர்யத்தில் ஈடுபாடும் பாபமென்று சொல்லத்தக்கதேயன்றோ. "ராமே ப்ரமாத₃ம் மா கார்ஷீ: புத்ர ப்₄ராதரி க₃ச்சதி" [பிள்ளாய்! (நடையழகனுன) ராமன் நடந்தருளும்போது (அவ்வழகிலே மயங்கி) (அவனைப் பாதுகாப்பதில்) தவறுசெய்துவிடாதே] என்று ஸுமித்ராதேவியானவள் ராமகைங்கரியத்திற்கே ராமனுடைய அழகைத் தடையாகச் சொன்

(ஶத்ருக்ந:) பிள்ளைகளுடைய ஸந்நிவேஶங்களைப் பார்த்துத் திருநாமஞ்சாத்துகிற ஸ்ரீவஸிஷ்டபகவான், பெருமாள் கண்டாரை அழகாலே துவக்கவல்லராகத் தோற்றுகையாலே "ராமன்" என்றும், இளையபெருமாளுக்குக் கைங்கர்யமே நிரூபகமாகத் தோற்றுகையாலே "லக்ஷ்மணன்" என்றும் திருநாமம் சாத்தினாற்போலே, இவனுடைய ஸந்நிவேஶத்தைக் காணவே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படியிருக்கையாலே "ஶத்ருக்நன்" என்று திருநாமம் சாத்தினான். (நித்யஶத்ருக்ந:) பாஹ்யஶத்ருக்களையேயன்றிக்கே ஆந்தரஶத்ருக்களான இந்த்ரியங்களை ஜயித்திருக்குமென்கை. அவ்விந்த்ரியஜயத்தின் எல்லை எவ்வளவென்னில்: "पुंसां दृष्टिचित्तापहारिणं" (பும்ஸாம் த்₃ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிற ராமஸௌந்தர்யத்திலும் துவக்குண்ணாதொழிகை. அதாகிறது: பெருமாளைப் பற்றும்போதும் தன்னுகப்பாலேயாதல், அவருடைய வைலக்ஷண்யத்தாலேயாதலன்றிக்கே, தனக்கு உத்தேச்யனான இவனுகந்த விஷயம் என்று பற்றுகை.

---

னாளே. பரத கைங்கரியத்திற்கு அது தடையென்னும விஷயத்தைச் சொல்லவும் வேண்டாமன்றோ.

(சத்ருக்னன்) பிள்ளைகளுடைய உருவ அமைப்புக்களைக்கண்டு திருநாமம் சாத்தியருளிய ஸ்ரீவஸிஷ்டபகவான் ஸ்ரீராமபிரான் கண்டவர்களை அழகாலே ரமிக்கச்செய்பவனாயிருந்ததால அவருக்கு'ராமன்' என்னும் பெயரையும், இளையபெருமாள் கைஙகாயத்தையே ஸ்வரூபநிரூபகமான அடையாளமாகக் (லக்ஷ்ம-அடையாளம) கொண்டிருந்தவராகக் காட்சியளித்தபடியாலே அவருக்கு 'லக்ஷ்மணன்' என்னும் நாமத்தையும் வைத்தாற்போலே, இவரும், கண்டவுடன் எதிரிகள் மண்ணுண்ணும்படியாயிருக்கையாலே 'சத்ருக்னன்' என்னும் திருநாமத்தை இட்டருளினான். (நித்யசத்ருக்களை ஜயித்திருப்பவன்) வெளி எதிரிகளைமட்டுமன்றிக்கே உள்ளிருக்கும் எதிரிகளான இந்திரியங்களையும் ஜயித்திருப்பவன். அந்த இந்திரியஜயத்தின் எல்லை எவ்வளவு எனில்: "ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் கவருமவனான ராமனை" [ரா-அ 3-29] என்கிற ராமஸௌந்தர்யத்திலும் ஈடுபடாமலிருக்கை. அதாவது,– ராமனைப் பற்றுமபோதும்

(நீத:)ராஜாக்கள் போம்போது உடைவாள் மற்றென்று கொண்டுபோமோபாதி அவன் கொடுபோகப் போனுன். த்ரவ்யத்துக்கு த்ரவ்யாந்தரங்களோட்டை ஸம்யோகம் உபயநிஷ்டமாயிருக்குமிறே. அதுபோலன்றிக்கே ஜாதி குணங்களோபாதி போனுன். (ப்ரீதிபுரஸ்க்ருத:) ஜ்யேஷ்டா நுவ்ருத்தி கர்த்தவ்யம் என்று போனுனல்லன். "अहं सर्वं करिष्यामि" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று போன இளைய பெருமாளைப்போலே போனவிடத்திலே ஸர்வசேஷவ்ருத்தி யும் பண்ணலாம் என்று பாரித்துக்கொண்டு ப்ரீதி ப்ரேரிக்கப்போனுன். படைவீட்டிலிருந்தால் பலருண்டாகை

---

தன் ப்ரீதியாலேயாவது, அவருடைய மேன்மையாலேயாவது பற்று மல, தானவிருமபிய பரதன் விரும்பும் வஸ்து என்று பற்றுகை.

(அழைத்துச் செல்லப்பட்டான்) அரசர்கள் செலலும்போது உடை வாள் முதலானவற்றை எடுத்துப்போவதுபோல் பரதன் கொண்டுபோகப் பினதொடர்ந்தான. ஒரு த்ரவ்யமும, மற்றொரு த்ரவ்யமும் ஸம்பந்தப்பட்டிருந்தபோதிலும், அநத ஸம்பந்தம் இரண்டிலும் நிற்குமாகையாலே ஒன்று சென்றல் மற்றொன்றும் கூடச்செல்லும் என்னும் நிர்ப்பந்தமிலலை. ஆனுல் 'கடம்' (குடம்) போன்ற ஒரு த்ரவ்யத்திற்கும், கடதவம் முதலான அதினுடைய ஜாதிக்கும், கருமை முதலான அதினுடைய குணங்களுக்கும் உள்ள ஸம்பநதம கடமாகிற அந்த த்ரவ்யததிலேயே நிற்குமாகையால், அந்த த்ரவ்யம செல்லும்போது இநத ஜாதிகுணங்களும் கூடச் செல்லும். இங்கு பரதன், சதருக்னன் ஆகிய இருவரும இரண்டு த்ரவ்யங்களேயானுலும், சத்ருகனன பரதனுகிற த்ரவ்யத்திலேயுள்ள ஜாதிகுணங்கள்போலே கூட அழைத்துச் செல்லப்பட்டான் என் கிறது. (அன்பினுலே முன் தள்ளப்பட்டவன்) "மூத்தவனுக்கு அடிமைசெய்வது நம்கடமை" எனறு போகவில்லை அவன. "நான் (நீர் விழித்துக்கொணடிருக்கும் போதும், தூங்கும்போதும்) எல்லா அடிமையையும் செய்வேன்" [ரா-அ 31-27] என்று ராமனைப் பின் தொடர்ந்த லக்ஷ்மணனைப்போலே போனவிடத்திலே எல்லாக் கைங்கரியமும் செய்யலாம் என்று மநோரதித்துக்கொண்டு பிரீதி பிடரி பிடித்துத்தள்ளச்சென்றன். அரண்மனையில் இருந்தால் பரத னுக்குப் பணிசெய்யப் பலருண்டாகையாலே பரதகைங்கரியத்தில்

யாலே விழுக்காட்டோபாதியிறே ஸித்திப்பது. "நீத:" என்கையாலே ஶேஷத்வத்தில் அசித் கல்பனாயிருக்கக்கடவன். "ப்ரீதிபுரஸக்ருத:" என்கையாலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே சைதந்யப்ரயுக்தமான தர்மங்கள் உண்டாயிருக்கை. "படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்றிறே அபியுக்தர் வார்த்தை. "அநக:" "நித்யஶத்ருக்ந:" என்று பாவநத்வத்தாலும் போக்யதையாலும் அவனையே பற்றினான் என்னவுமாம். "அநக: நிதயஶத்ருக்ந:" என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்னில்: "ஶ்ரீஶத்ருக்நாழ்வான்

---

ஒரு பகுதியேயன்றோ இவனுக்குக் கிடைக்கும். வெளிச் சென்றால் எல்லாவடிமையும் ஒருவனே செய்யலாமே. "அழைத்துச் செலலப் பட்டான்" என்கையால் ஸ்வாமியானவனுக்கு உடைமையாயிருக்கும போது ஒரு அறிவற்ற உடைமைப்பொருளைப்போலே இருக்க வேண்டும என்று தோற்றுகிறது. "அன்பால் முன்தள்ளப்பட்டவன்" என்றதால் ஸ்வரூபத்துக்குத் தகுந்த கைங்கர்யம் செய்யும்போது அறிவினால் ஏற்படும் அன்பு, ஆநந்தம முதலானவை உண்டாயிருக்குமென்று தோற்றுகிறது. "படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே" [பெரு-திரு 4-9] எனற குலசேகராழ்வாரும் "படியாய்க்கிடந்து" என்று சேஷபூதனாயிருப்பவன் அடிமைத்தனத்திலே அசித்ஸமனாயிருக்கவேணும் என்னும் அர்த்தத்தையும், "பவளவாய் காண்பேனே' என்று கைங்கரியம் செய்யும்போது அறிவினாலுண்டாகும் காண்கை முதலான தர்மங்கள் உண்டு என்னும் அர்த்தத்தையும் உணர்த்தினாரன்றோ. "அநக:" [ராமபக்தியாகிற பாபமற்றவன] என்றதுககும், "நித்யசத்ருக்ந:" [நித்யசத்ருக்களாகிற இந்திரியங்களையும்(ராமஸௌந்தர்யத்திலே ஈடுபடாமலிருக்கும்படி) அடக்க வல்லவன]என றதுக்கும் பொருளில் வித்தியாசமில்லையே, ஆகையால 'புநருக்தி' [கூறியது கூறல்] என்னும் தோஷம் வருமே எனில்: 'நித்யசத்ருக்ந;' என்றவிடத்திலே இந்திரியங்களை ஜயித்திருப்பவன் என்பதே பொருள். அந்த இந்திரியஜயத்தின் எல்லை ராமஸௌந்தர்யத்திலும் ஈடுபடாமலிருக்கை என்று சொன்னதால் புநருகதி வாராது. அன்றிக்கே, வேறுவிதமாகவும் புநருக்திதோஷத்தைப் பரிஹரிக்கலாம். "அநக:" [பாபம் நீங்கப்பெற்றவன்] என்று ராமபக்தியாகிற பாபமும் இல்லாதபடி செய்யவல்லவனாகையாலே பரதனை பாவநத்வத்தில் [பரிசுத்தப்படுத்தும் தன்மையில்] ராமனை

பெருமாளுக்கு நல்லனானபடி, அவனையல்லதறியாத ஸ்ரீபர தாழ்வானையல்லது வேறொன்றறியாதபடியாம்'' என்று எம்பெருமானார் அருளிச்செய்தார். இதுவே ப்ரயோஜந மாநல் சொன்ன மிகையெல்லாம் பொறுக்குமிறே.

**அயோத்யாகாண்டம 2-வது ஸர்க்கம 22-வது ச்லோகம்**

**इच्छामो हि महाबाहुं रघुवीरं महाबलम्।**
**गजेन महतायान्तं रामं छत्रावृतताननम्॥**

**இச்ச$_2$ாமோ ஹி மஹாப$_3$ாஹும் ரகு$_4$வீரம் மஹாப$_3$லம் ।**
**க$_3$ஜேந மஹதாயாந்தம ராமம் ச$_2$த்ராவ்ருதாநநம ॥**

**பதவுரை:**—**மஹாப$_3$ாஹும்**—நீண்ட திருக்கைகளை உடைய ராய், **ரகு$_4$வீரம்**-ரகுகுலச்ரேஷ்டராய், **மஹாப$_3$லம்**-பெரும் பல த்தையுடையரான, **ராமம்**—ராமனை, **மஹதா க$_3$ஜேந**—பெரிய யானையின்மேல், **(ஆ)யாந்தம்**-எழுந்தருளுமவராயும், **ச$_2$த்ராவ் ருதாநநம**—குடையால்(வெயில் படாதபடி) மறைக்கப்பட்ட முகத்தை உடையவராயும் (காண) **இச்ச$_2$ாமோ ஹி**—ஆசைப் படுகிறோமன்றோ.

---

விடச்சிறந்தவன் என்னும் நினைவாலே பரதனைப்பற்றினன் என கிறது. ''நித்யசத்ருக்ந:'' என்று இனிமையிலே ராமனைக் காட்டிலும பரதனேமிக்கிருக்கையாலே இந்திரியங்களை ராமஸௌந்தர்யத்தில செல்லவிடாமல் பரதனைப் பற்றினன் என்கிறது. ஆக, இப்படி இரண்டு பதத்தாலும் இரண்டு அர்த்தங்கள் சொல்லப்படுகிற தாகையாலே புனருக்தியில்லை என்றும் கொள்ளலாம். ''ராமபகதி யாகிற பாபமற்றவன்'' என்றும், ''நித்யசத்ருக்களான இந்திரியங் களை (ராமஸௌந்தர்யத்திலும் ஈடுபடாதபடி) ஜயிக்கவல்லவன்'' என்றும இருப்பதற்கு ப்ரயோஜனமென்னென்னில்: இதற்கு ப்ர யோஜனம் ராமனுடைய உகப்பே என்பதை ''ஸ்ரீசத்ருக்நாழ்வான் ராமனையல்லதறியாத ஸ்ரீபரதாழ்வானையல்லது வேறொன்றை அறி யாமலிருப்பதன் மூலம் ராமனுடைய உகப்புக்குப் பாத்திரனானன்'' என்று உடையவர் அருளிச்செய்தார். ராமனுடைய முகமலர்த்தியே இதுக்கும் ப்ரயோஜனமானபின்பு மேலே (ராமனைக்காட்டிலும்) பரதனுக்குச் சொன்ன ஏற்றங்களாலே ஒரு குறையுமில்லையன்றே.

அவ:—சக்ரவர்த்தி, தான் பரிணதவயஸ்கனாகையாலும், எதிரிகளைநோக்கி எடுத்துவிடுகைக்கு அசக்தனாகையாலும், தானிருக்கிறபோதே பெருமாளைத் திருமுடிசூட்டி ராஜ்யத்தோடே பொருந்தும்படி பண்ணவேணுமென்னும் நினைவுடையனாகையாலும், **"गलितवयसामिक्ष्वाकूणामिदं हि कुलव्रतम्"** (**க₃ளிதவயஸாமிக்ஷ்வாகூணாமித₃ம் ஹி குலவ்ரதம்**) என்று சொல்லுகிறபடியே, இந்தக் குலத்தில் பிறந்தார்க்குப் பிள்ளைகள் பருவம் நிரம்பினால் அவர்களை முடிசூட்டித் தாங்கள் உபசாந்தராய்ப் போருவதொரு முறைமையுண்டாகையாலும், பெருமாளைத் திருமுடிசூட்டி ராஜ்யதுரந்தரராகப் பண்ணவேணுமென்று கருதி, அது செய்யுமிடத்தில் **"पाण्डरस्यातपत्रस्य छायायां जरितं मया"** (**பாண்ட₃ரஸ்யாதபத்ரஸ்ய சா₂யாயாம் ஜரிதம் மயா**) என்று நாம் "பயணத்தின்மேலே பயணமாய்த் திரிகையாலே, நாமும் ரக்ஷித்தோமாய், நாட்டாரும் ரக்ஷிதரானார்கள்; ரக்ஷணத்தில் அல்பம் குறையுண்டாமாகில், இப்போது ஒரு பாலன் கையிலே காட்டிக் கொடுத்து எங்களை உபேக்ஷித்தான்; இவன் என்ன ராஜ்யம் பண்ணிற்று என்று நாட்டார் குறைசொல்லுவார்கள்;

---

அவதாரிகை:—தசரதன், தான் வயது முதிர்ந்தவனாகையாலும், எதிரிகளைகுறித்துப் படையெடுக்க சக்தியற்றவனாகையாலும், தான் இருக்கும்போதே ராமனை முடிசூட்டி ராஜ்யத்தில் பொருந்தவைக்க வேணுமெனறெண்ணுகையாலும், "வயது முதிர்ந்த இக்ஷ்வாகு வமிசத்தவர்க்கு வனம் செல்வதுவே குலாசாரம்" [ரகுவம்சம் 3-70] என்கிற குலாசாரம் உண்டாகையாலும், ராமனை முடிசூட்டி ராஜ்ய பாரத்தை ஏற்கச்செய்யவேண்டுமென்றெண்ணி, அது செய்யும் போது "வெண்குடையின் நிழலிலேயே நான்கிழததனமடைந்தேன்" [ரா-அ 2-7] என்கிறபடியே நாம் குடைபிடித்துக்கொண்டு படையெடுப்பதிலேயே ஆயுளைக் கழித்தோமாகையாலே ஜனங்களை இது வரையில் காப்பாற்றினோமென்றுபெயரெடுத்தோம்; இனி ராமனும் போது காவலில் சிறிது குறையுண்டானாலும், 'ஒரு பிள்ளை கையிலே நம்மைக காட்டிக்கொடுத்துவிட்டுச் சென்றான் தசரதன்; இவன் அரசாண்ட அழகை என்னென்பது' என்று ஜனங்கள் குறை சொல்லுவராகையாலே அவர்களையும் இசைவித்து முடிசூட்டுவோ

அவர்களையும் இசைவித்துக்கொள்ளுவோம்" என்று பார்த்து பௌரஜாநபதங்களைத் திரட்டி **"गतक्लेशो भविष्यामि पुत्रेऽस्मिन् सन्निवेश्य वै"** (க₃தக்லேஶோ ப₄விஷ்யாமி புத்ரேऽஸ்மிந் ஸந்நி வேச்ய வை) என்றும், **"सोऽहं विश्रममिच्छामि पुत्रं कृत्वा प्रजाहिते"** (ஸோऽஹம் விச்ரமமிச்ச₂ாமி புத்ரம க்ருத்வா ப்ரஜா ஹிதே) என்றும் நெடுங்காலமுண்டு நாம் உங்களை ரக்ஷித்துப்போரு கிறது; நம்மை இப்போது வார்த்த₄கம் வந்து கைகக்கொண் டது; இனி உங்களுடைய ரக்ஷணம் நம்மால் துபமபசமா யிருந்தது; ஆனபின்பு **"आत्मा वै पुत्रनामाऽसि"** (ஆத்மா வை புத்ரநாமாऽஸி) என்கிறபடியே, என்னோடே நிர்விசேஷரான என் பிள்ளையை உங்களுடைய ரக்ஷணத்திலே நியோகித்து இளைப்பாறுவதாகப் பாரியாநின்றோம். **"भवन्तो मेऽनुमन्यन्ताम्"** (ப₄வந்தோ மேऽநுமந்யந்தாம்) என்று இதற்கு நீங் களும் இசையவேணும் என்று சொல்ல, அவர்களும் இது கேட்ட ப்ரியததாலே, **"विमानं कम्पयन्निव"** (விமாநம கமபயந் நிவ) என்று மாளிகை கோப்புக்குலையும்படி பெரிய ஸம்ப்ர மத்தைப் பண்ணி ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு **"अनेकवर्षसाहस्रो वृद्धस्त्वमसि पार्थिव। स रामं युवराजानमभिषिञ्चस्व पार्थिवम्॥"**

---

மென்று எண்ணி நகரத்தாரையும் நாட்டாரையும் கூட்டி, "ராஜ்ய பாரத்தைப் பிள்ளையிடம் வைத்து இடர்தீருகிறேன்" [ரா-அ 2-14] என்றும், "பிள்ளையை ப்ரஜாரக்ஷணத்திற்கு வைத்துவிட்டு நான் களைப்பாற விரும்புகிறேன்" [ரா-அ 2-10] என்றும் நாம் உங்களை நெடுநாள் ரக்ஷித்திருந்தோம்; இப்போது நம்மைக் கிழத்தனம் கைக் கொண்டது; இனி உங்களை ரக்ஷிக்க சக்தியில்லை; ஆகையால் "பிள்ளை யென்னும் பெயரால் விளங்கும் நானேயாகிறாய்" [மந்த்ரப்ரச்நம் 2-11-33] என்று வேதத்தில் சொல்லியபடியே என்னிலும் வேறு படாத என் பிள்ளையை முடிசூட்டி உங்களை ரக்ஷிக்கும்படி நிய மித்து இளைப்பாற எண்ணியிருக்கிறோம்; "நீங்களும எனக்கு அனு மதி கொடுக்கவேண்டும்" [ரா-அ 2-15] என்று சொல்ல, ஜனங் களும் இதைக் கேட்ட உகப்பாலே "அரண்மனை விமானத்தை அசைப்பதுபோல் ஒலியுண்டானது" [ரா-அ 2-18] என்று அரண்மனை யும் இடியும்படி பெரிய பரபரப்போடே ஆநந்தத்துக்குப் போகக் விட்டு முழங்கி, "அரசனே! நீ பல்லாயிரவருடமாண்டு கிழவனாகி

(அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்₃த₄ஸ்த்வமஸி பார்த்தி₂வ। ஸராமம் யுவராஜாநமபி₄ஷிஞ்சஸ்வ பார்த்தி₂வம்॥) என்று வ்ருத்தனுமாய் நன்ருக எங்களை ரக்ஷிப்பதும் செய்தாய். இனி பெருமாளைத் திருவபிஷேகம்பண்ணு என்று இசைந்து. அவன் கேட்ட வார்த்தைக்கு உத்தரம் சொன்னுர்களாகையன்றிக்கே, தங்கள் நினைவுகளையும் வெளியிட்டுப் பெருமாளுடைய ராஜ்யபரண யோக்யதையையும் சொல்லித் தலைக்கட்டுகிருர்கள்.

**வ்யாக்யானம்:—(இச்சாம:)** இட்ட மாலையும் கவித்த அபிஷேகமுமாய் எங்கள் கண்முகப்பே தோற்றவேணுமென்று போரச்ரத்தை பண்ணுகிரேும். **(இச்சாம:)** எங்களுக்குள்ளது இச்சையிறே; முடிவைக்கும்போது நீயே வேணுமிறே. இச்சைக்கு எங்களாசையிறே. **"श्रेयांसि बहुविघ्नानि" (ச்ரேயாம்ஸி பஹு₃விக்₄நாநி)** என்று இப்போது எங்களுக்குக் கிட்டப்புகுகிறதோ? **(இச்சாம:)** கிடைப்பது. கிடையாதொழிவது: நல்லது கண்டால் ஆசைப்படக்கடவதிறே. **(இச்சாம:)** நிரபாயமாக எங்களை ரக்ஷித்த உனக்குக் குறையாகிறதோ என்று

---

விட்டாய்; இளவரசனுன ராமனை அரசனுக்கு" [ரா-அ 2-21] என்று இசைந்து, அவன் கேட்டதுக்கு பதில்சொன்னதாக நினையாமல், தங்கள் எண்ணத்தையும் வெளியிட்டு, அரசாளத்தகுதி ராமனுக்குள்ளபடியையும் சொல்லி முடிக்கிருர்கள்.

வ்யா:—(விரும்புகிரேும்) மாலை சூடிக் கிரீடம் தரித்து எங்கள் கண்முன்னே தோன்றவேணுமென்று மிகவும் ஆசைப்படுகிரேும். (விரும்புகிரேும்) நாங்கள் விரும்பத்தான் முடியும். முடிசூட்டுவதற்கு உன்னுல்தான் முடியும். நாங்கள் விரும்புவதற்குக் காரணம் எங்களாசையேயாகும். "ச்ரேயாம்ஸிப₃ஹு₃விக்₄நாநி ப₄வந்தி மஹதாமபி" [பெரியோர்களுக்கும் நற்காரியங்கள் பல இடையூறுகளை உடையனவாகின்றன] என்று சொல்லப்பட்டிருக்கும்போது, இப்போது எங்களுடைய விருப்பம் நிறைவேறுமோ? (விரும்புகிரேும்) கிடைக்கட்டும், கிடைக்காமலிருக்கட்டும்; நல்ல விஷயத்தைக்கண்டால் ஆசைப்படுவது மனுஷ்யஸ்வபாவமன்ரேு. (விரும்புகிரேும்) ஒரு குறையில்

வாயிட்டுச் சொல்லிற்றிலோம். ஆனுலிப்போதுதான் சொலல லாமோவென்னில்: **"भावं विज्ञाय सर्वशः"** (ப₄ாவம விஜஞாய **ஸர்வஶ:**) என்று அவனுடைய நினைவறிந்து சொல்லுகிறவர் களாகையாலே இபபோது "இச்சாம:" என்னத்தட்டில்லை. இந்த ஆசை சிலர்கருண்டாய்ச் சிலர்க்கில்லையாயிருக்குமோ என்னில்: **(இச்சாம:)** நாங்கள் இருந்ததேகுடியாக இது தலைக்கட்டவற்றே என்று உம்மையிரக்கிறேும்.

உங்கள் நெஞ்சில் கிடந்தது நாமறியும்படியென் என்ன.- **(ஹி)** பிறர் சொல்லவேண்டியிருந்ததோ? இது எல்லார்க்கும் ஒக்குமென்னுமிடம் **"जनघोषो महानभूत्"** **(ஜநகே₄ாஷோ மஹாந பூ₄த்)** என்றும் **"विमानं कम्पयन्निव"** **(விமாநம் கம்பயந்நிவ)** என்றும் நாட்டார் பண்ணின ஆரவாரத்தாலே கோப்புக்குலைந்த உன் மாளிகையிலேயும் விமானங்களிலேயும் கண்டுகொள்ளு மித்தனையன்றே. **(ஹி)** **"अकामयत मेदिनी"** **(அகாமயத மேதி₃நீ)** என்று நீயும் நிர்வாஹகனுயிருக்க, பூமிதானே ஸ்வயம்வரித்து

---

லாமல் எங்களை ரக்ஷிதத உனக்குக் குறைசொன்னதாகுமெனறு இதுவரையில் வாய்விட்டுச் சொல்லாமலிருந்தோம். ஆனுல், இப் போது சொல்லலாமோவெனில்: "தசரதனுடைய நினைவை எல்லாப் படியாலுமறிந்து பிரஜைகள் சொன்னுர்கள்" [ரா-அ 2-19] என்று அரசனுடைய நினைவறிந்து சொல்லுகிருர்களாகையாலே இப்போது 'விரும்புகிறேும' என்னகுறையில்லை. இந்த ஆசை சிலர்க்கு உண டாய்ச் சிலர்க்கு இல்லையாயிருக்குமோ என்னில: (விரும்புகிறேும்) உன்நாட்டில் குடியிருப்போராகிய நாங்களெல்லாரும் 'இவ்விருப்பம நிறைவேறுமோ' என்று உன்னை யாசிக்கிறேும்.

உங்கள் நெஞ்சிலேயிருக்கும் விருப்பத்தை நான் எப்படி அறிவது? என்ன,-(அனறே) பிறரொருவர் இதை எடுத்துச்சொல்ல வேண்டுமோ? எல்லாருக்கும் இவ்விருப்பம் உண்டென்பது "ஜனங் களின் ஒலியானது பெரிதாக உண்டாயிற்று" [?] என்றும, "விமா னத்தை அசைப்பதுபோல் ஒலியுண்டாயிற்று" [ரா-அ 2-18] என றும் பிரஜைகள் பண்ணின பேரொலியிலே கட்டுக்குலைந்த உன் மாளிகைகளிலும் விமானங்களிலேயும் கண்டுகொள்ளலாமன்றே. (அன்றே) "பூமியானவள் ராமனைக் காதலித்தாள்" [ரா-அ 2-48]

மாலையிட்டபோதே அறிந்திலையோ? (**அகாமயத**) நீ கர க்ரஹணம் பண்ணிப்போரச்செய்தேயும், முறை மசக்கி மாலையிட்டதில்லையோ? காமுகருக்கு முறைதெரியாதிறே. (**லோகபாலோபமம் நாத$_2$மகாமயத மேதி$_3$நீ**) லோகபாலோபம:- "**विष्णुना सदृशः**" (**விஷ்ணுநா ஸத்$_3$ருஶ:**) என்று ஸர்வேச்வரனைப் போலே இருக்கையாலே மேல் விழுந்து ச்ரத்தைபண்ணினாள். அதற்கடியென்னென்னில்: (**மேதிநீ**) மேதிநியாகையாலே. எங்ஙனேயென்றால் மதுகைடபர்களுடைய வஸா விஸ்ரகந்தத்தாலே உபஹதையாயிருக்கிற தன்னை, "**सर्वगन्धः**" (**ஸர்வக$_3$ந்த$_4$:**) என்கிற அவனுடைய ஸௌகந்த்யத்தாலே வாஸிதையாக்குகைக்காக. வாஸிதமாக்கவேணுமத்தைப் புறம்பேயும் சொன்னார்களிறே. "**मधुकैटभदानवेन्द्रमेदःप्लवविस्राविषमैव मेदिनीयम्। अधिवास्य यदि**" (**மது$_4$கைடப$_4$தா$_3$நவேந்த்$_3$ர மேத$_3$: ப்லவவிஸ்ரா விஷமைவ மேதி$_3$நீயம அதி$_4$வாஸ்ய யதி$_3$**)

---

என்று நீ அரசாண்டுகொண்டிருந்த போதிலும், பூமிதானே ஸ்வயம்வரம் செய்து ராமனுக்கு மாலையிட்டபோதே அறிந்திலையோ? (காதலித்தாள்) நீ கையைப்பிடித்துக்கொண்டிருக்கும்போதே, முறை மயக்கி ராமனுக்கு மாலையிட்டாளல்லவோ? காமவசப்பட்டவர்களுக்கு முறைதெரியாதன்றோ. (லோகபாலனுக்கு ஒப்பான நாதனை மேதினியானவள் காமுற்றாள்) (லோகபாலனுக்கு ஒப்பானவன்) "வீர்யத்திலே விஷ்ணுவுக்கு ஒப்பானவன்' [ரா-பா 1-18] என்று ஸகல லோகபாலனான விஷ்ணுவைப்போலேயிருக்கையாலே மேல் விழுந்து காமுற்றாள். அதற்குக் காரணமென்னென்னில்: (மேதினி) மேதினியாகையாலே. எங்ஙனேயென்றால்: மதுகைடபர்களுடைய மாமஸாதிகளாகிற மேதஸ்ஸாலே துர்க்கந்தமுடைய மேதினியான தன்னை "எல்லா கந்தங்களையுமுடையவன்" [சாந் 3-14-2] என்கிற அவனுடைய நற்கந்தத்தாலே நறுமணமூட்டிக் கொள்வதற்காக விரும்பினாள். மேதினியானவள் மணமூட்டத்தக்கவள் என்பதை "மது$_4$கைடப$_4$தா$_3$நவேந்த்$_3$ரமேத$_3$: ப்லவ விஸரா விஷமைவ மேதி$_3$நீயம் அதி$_4$வாஸ்ய யதி$_3$ ஸ்வகைர்யசோபி$_4$ச் சிரமேநாமுபபு$_4$ஞ்ஜதே நரேந்த்$_3$ரா" [அநர்க்கராகவம் 1-14] (மதுகைடபர்களாகிற அஸுரச்ரேஷ்டர்களின் மாம்ஸவெள்ளத்தினால் துர்க்கந்தங்கொண்டவளாயும், (கந்த விஷயத்தில்) விஷமையாகவுமிருக்கிறாள் இந்த பூமி. தங்களுடைய கீர்த்திகளாகிற நறுமணத்தினால் மணமூட்டி, அரசர்கள் இவளை

*என்று. இஸ்ஸௌகந்த்யமாத்ரத்துக்காகக் கர்ப்பூரசந்தநாதிகளைப்போலே உபகரணமாய் ஶேஷகோடியிலேயோ அவதரித்தது என்னில்:* **(நாதம)** *ஏதாத்ருஶகந்தமே பிடித்து இல்லாதபடி ரக்ஷிப்பானாய். அஸௌகந்த்யஸௌகந்த்யங்கள் தனக்கே அனுபவிக்கவேண்டும்படி நிருபாதிகஶேஷியுமாய்.*

*மெய்படவே உங்களெல்லார்க்கும் இச்சை உண்டாகில் முடிசூட்டுகிறோம். அவர்தாம் நாட்டை அடக்கி ஆளவல்ல ஸாமர்த்யம் உடையவரோ என்னில்,–* **(மஹாபாஹும்)** *அவர் தோட்பரப்புக்கு நடக்கிற கழஞ்சுமண்ணும் ஒரு சரக்கோ?* **(மஹாபாஹும்) "शक्तस्त्रैलोक्यमप्येष भोक्तुं किन्नु महीमिमां"** (ஶக்த **ஸ்த்ரைலோக்யமப்யேஷ போ₄க்தும் கிந்நு மஹீமிமாம்)** *என்று கோஸலராஜ்யமன்றிக்கே லங்காராஜ்யமும் கைக்கொள்ளும் படியான தோளையுடையவர்.* **(மஹாபாஹும்) "आयताक्ष" (ஆயதாக்ஷ)** *என்றும்,* **"आजानुबाहुं" (ஆஜாநுபா₃ஹும்)** *என்றும்*

---

*அனுபவிப்பார்களாகில், அப்போதுதான் நெடுங்காலம் அனுபவிப்பார்கள்] என்று முராரிகவியும் சொன்னான்றோ. இவளை மணமூட்டுவதற்காக, கர்ப்பூரம், சந்தநம் முதலியவற்றைப்போல் உபகரணமாய் சேஷகோடியிலேயோ அவதரித்தது? என்னில்,– (நாதனை) இம்மாதிரியான துர்க்கந்தமில்லாதபடி ரக்ஷிப்பவனாய், துர்க்கந்தமும், நறுமணமும் தனக்கே அனுபவிக்கவேண்டும்படி இயற்கையாகவே ஸவாமியாயிருப்பவனை; மேதினியானவள் காதலித்தாள் என்று கூட்டிக்கொள்வது.*

*உண்மையிலேயே உங்களெல்லாருக்கும் விருப்பமுண்டாகில முடிசூட்டுகிறோம், ராமன் தான் நாட்டை அடக்கி ஆளவல்ல ஸாமர்த்தியம் உடையவனோ? என்ன,–(பெரிய கையை உடையவரை) அவருடைய தோள்பரப்பைக் காணும்போது நாம் நடக்கிற இவ் வல்பமான மண் ஒரு பொருளாகுமோ? (பெரிய கையை உடையவரை) "மூவுலகையும் ஆளவல்லவர் இவர். இந்த பூமியை ஆளவல்லவரென்று சொல்லவும் வேண்டுமோ" [ரா-அ 2-45] என்கிற படியே கோஸலராஜ்யத்தோடு லங்காராஜ்யத்தையும் கைக்கொள்ளும் படியான தோளையுடையவர். (பெரிய கையை உடையவர்) "நீண்ட கைகள்" [ரா-கி 3-14] "முழந்தாள்வரையில் நீண்ட கைகளையுடைய ராமனை சூர்ப்பணகை கண்டாள்" [ரா-அ 17-7] என்கிற அவருடைய*

அவருடைய ஸாமுத்ரிகலக்ஷணம் கண்டால் சிலரைக் கேட்.க வேணுமோ? (மஹாபாஹும) "பொங்கோதஞ்சூழ்ந்த புவனி யும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற" என்று உபயவிபூதியையும் வஹிக்கிற தோளிறே. (மஹா பாஹும்) அத்தோள்தான் வேணுமோ? **"बाहुच्छायामवष्टब्धः'** (பா$_3$ஹுச்சா$_2$யாமவஷ்டப்த$_4$:) என்று அவருடைய தோள்' நிழல்தானே அமையாதோ எங்களை ரக்ஷிக்கைக்கு?

**"ररक्षधर्मेण बलेन चैव"** (ரரக்ஷ த$_4$ர்மேண ப$_3$லேந சைவ) என்றும், **"धर्मतः परिरक्षिता:"** (த$_4$ர்மத: பரிரக்ஷிதா:) என்றும் சிலரைச் சிலர் ரக்ஷிக்குமிடத்தில் தர்மபலங்கள் இரண்டும் வேணு மிறே. இவர் பலமுண்டென்று தோள்வலியாலே ரக்ஷிக்கு மித்தனையோ? தார்மிகராய் ரக்ஷிக்கும் ஆகாரம் இல்லையோ? என்னில்: (ரகுவீரம்) **"दीनान् दानेन राघवः"** (தீ$_3$நாந் தா$_3$நேந ராக$_4$வ:) என்று அவ்வாகாரம் பிறந்து படைத்ததன்றோ? இப்போதா கத் தேடவேணுமோ? (ரகுவீரம) **"आनृशंस्यं परो धर्मस्त्वत्त एव**

---

ஸாமுத்ரிக லக்ஷணத்தைக் கண்டால் போராதோ? அவர் பலத்தைப் பற்றிச் சிலரைக்கேட்கவேணுமோ? (பெரிய கையை உடையவர்) "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற" [நாச்-திரு 11-3] என்று அகல்விசும்பும் நிலனுமாகிற இரண்டு விபூதிகளையும் தாங்குகிற தோளன்றோ (பெரிய கையை உடையவர்) அத்தோள்தான் வேணுமோ? "பாஹுச்சா$_2$யாமவஷ்டப்$_3$தே$_4$ா யஸ்ய லோகோ மஹாத்மந:" [ரா-ஸு 34-31] [எந்த மஹாத்மாவினுடைய தோள் நிழலைப்பற்றி உலகெல் லாம் விளங்குகிறதோ] என்று அவருடைய தோள் நிழலே போராதோ எங்களைக் காப்பாற்றுவதற்கு?

"தர்மத்தினுலும் பலததினுலும் ரக்ஷித்தான்" [ரா-கி 1-128] "தர்மத்தினலே ரக்ஷிக்கப்பட்டார்கள் [ரா-யு 1-12] என்று சிலரைச் சிலர் ரக்ஷிக்கவேண்டுமாகில் தர்மமும் பலமும் வேண்டுமே; இவர் பலமிருக்கிறதென்று தோள்வலியால்மட்டுமோ ரக்ஷிப்பது, தர்மவழி யிலே ரக்ஷிக்கும் தன்மையில்லையோ? என்னில்: (ரகுவீரனை) "ராகவன் தீனர்களைத் தானத்தாலே வெல்லுகிறுன்" [ரா-அ 12-29] என்று தர்மத்தாலே ரக்ஷிக்கும் தன்மை ரகுகுலத்திலே பிறந்து படைத்த தன்றோ. இப்போது போய்த் தேடவேணுமா? (ரகுவீரனை) "இரக்க

**मया श्रुतः"** (ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்மஸ் த்வத்த ஏவ மயா ச்ருத:) *என்று பிறருக்குங் கூட உபதேசிக்கும்படியாயன்றோ அதிருப்பது.* **(ரகுவீரம்)** *தார்மிகத்வந்தன்னில் ரகுக்களைக் காட்டில் இவர்க்குள்ள தன்னேற்றம். அதெங்ஙனேயென்னில்: ரகுதான் ராக்ஷஸன் க்ஷுதார்த்தனாய் 'ம்ருதனானால் இத்தால் வரும் பாபம் உனக்குண்டாகாதோ' என்ன, மேல் ஒரு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதேயிருந்தானிறே. இவர்* **"अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणां"** **(அப்யஹம ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம்)** *என்று ப்ராணன் ஒருதலையாகவும்,* **"प्राणेभ्योऽपि गरीयसी"** **(ப்ராணேப்₄யோऽபி க்₃ரீயஸீ)** *என்ற பிராட்டியொரு தலையாகவும அழியமாறி ரக்ஷிக்குமவரிறே.*

*இப்படி இவர் ரக்ஷிக்குமிடத்தில்,* **"वध्यतां वध्यतां" (வத்₄யதாம் ப₃த்₄யதாம்)** *என்று விலக்குவாருண்டானால் அவர்கள் வழியேபோய் இளநெஞ்சாய் மீளுவரோவென்னில்:* **(மஹாபலம்) "न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः"** **(ந து ப்ரதிஜ்ஞாம**

---

மான மேலான தாமம் உம்மிடமிருந்தே எனனால் கேட்கப்பட்டது" [ரா-ஸு 38-41] என்று பிறருக்கும் உபதேசிக்கும்படியன்றோ அத் தன்மையிருப்பது. *(ரகுவீரனே)* தார்மிகர்களான ரகுகுலவரசர்களில் இவர் சிறந்தவர். எப்படியெனில்: ரகுவானவன், ராக்ஷஸன பசியினாலே வருந்தி இறந்தால், அதனாலுண்டாகும் பாபம உனனுடைய தன்றோ? எனன, மேல் ஒரு செயலற்று நின்றான். இவரோவெனில், "நான் (ப்ராஹ்மணாகளுக்குச் செய்த பரதிஜ்ஞையைக் காப்பாற்று வதற்காக) உயிரையும் விடுவேன். லக்ஷ்மணனுடன் கூடிய உன்னை யும் விடுவேன்" [ரா-ஆ 10-19] என்று ப்ராணன் ஒரு பங்காகவும் "ப்ராணனைக்காட்டிலும் மேலானவள்" [ரா-ஆர 10-22] எனப்பட்ட பிராட்டி ஒரு பங்காகவும் அழித்து ஆச்ரிதர்களை ரக்ஷிப்பவரன்றோ.

இப்படி இவர் ரக்ஷிக்கும்போது, நண்பர்களிலே சிலர் "கொல்லப் படட்டும்; கட்டப்படட்டும்" [ரா-அ 21-12] என்று விலக்கினார்களா கில், அவர்கள் சொற்கேட்டு மநோபலமற்றவராய் ரக்ஷணத்தைக் கைவிடுவரோ என்னில: (பெரும்பலமுள்ளவரை) "ப்ரதிஜ்ஞையைச் செய்துவிட்டு——அதிலும் ப்ராஹ்மணர்களுக்குச் செய்துவிட்டு——

ஸம்ச்ருத்ய ப்₃ராஹ்மணேப்₄யோ விசேஷத:) என்றும், **"एतद्-व्रतं मम"** (ஏதத்₃ வ்ரதம் மம) என்றும், **"न त्यजेयं कथञ्चन"** (ந த்யஜேயம் கத₂ஞ்சந) என்றும் அவர்கள் தங்களைக் கைவிட்டும் ஆச்ரிதரை ரக்ஷிக்கும்படியான வ்யவஸாயமுடையவர். பலம் என்றதிவ்விடத்தில் மநோபலத்தை; **"नायमात्मा बलहीनेन लभ्यः"** (நாயமாத்மா ப₃லஹீநேந லப்₄ய:) என்கிறபடியே. துடங்கின கார்யத்தில் அசஞ்சலராயிருக்கும் இருப்புக்கு **"धैर्येण हिमवानिव"** (தை₄ர்யேண ஹிமவாநிவ) என்னக்கடவதிறே.

உங்களுக்கேற ராஜ்யபரணத்துக்கு ஶக்தராகில் நீங்கள் சொன்னபடியே செய்கிறோம். இப்போது நானிருந்த விடத்திலேயிருக்க நாட்டுக்கு வேண்டுவதெல்லாமாராய்ந்து நடத்தாநின்றீராகில் அமையாதோ? என்ன; உன் ப்ரயோஜனம் தலைக்கட்டிற்றே; அவ்வளவிலே விடலாமோ? எங்களுடைய ப்ரயோஜனமும் பெறவேண்டாவோ? என்கிறார்கள்

---

அதைக்கைவிடமாட்டேன்" [ரா-ஆ 10-19] என்றும் "சரணமடைந்தவர்களை ரக்ஷிப்பது என் விரதம்" [ரா-யு 18-34] என்றும், "சரணமடைந்தவனை ஒருபோதும் விடமாட்டேன்" [ரா-யு 18-3] என்றும் அப்படி விலக்குவாரைக் கைவிட்டாவது அடியடைந்தவரை ரக்ஷிக்கும்படியான உறுதியுடையவர். இவ்விடத்தில் பலமென்கிறது மநோபலத்தையாகும்; 'மஹாபாஹும' என்றவிடத்திலே தேஹபலம் சொல்லப்பட்டுவிட்டதாகையாலும், மநோபலம் இவ்விடத்தில் அவசியம் சொல்லவேண்டியதொன்றாகையாலும், "இந்தப் பரமாத்மாவானவன் மநோபலமற்றவனால் அடையத்தகாதவன்" [முண்ட-3-2-4] என்று மநோபலத்தை பலசப்தத்தால் குறிப்பதுண்டாகையாலும். தொடங்கின காரியத்தில் அசையாமலிருக்கும் இருப்புக்கு "தைர்யத்தில் ஹிமவானைப்போன்றவர்" [ரா-பா 1-17] என்று சொல்லப்படுகிறவரன்றோ இவர்.

உங்கள் நினைவிலே ராஜ்யபாரத்தைத் தாங்கவல்லராகில் நீங்கள் சொன்னபடியே செய்கிறோம். இப்போது நானிருக்கும் ஸிம்ஹாஸனத்திலே இருந்து, நாட்டுக்கு வேண்டியதெல்லாம் ஆராய்ந்து அரசுசெய்தால் போராதோ? என்ன, "ராஜ்யத்தைக கைவிட்டு இளைப்பாறுவதாகிற பலனை நீ அடைந்தால் போருமா?

மேல். ஆகில், நீங்கள் சொல்லுகிறதென்னென்ன,- (**கஜேந மஹதா யாந்தம்**) நீ இசைந்தமையும் முடிசூட்டினமையும் தோற்ற, ஶத்ருஞ்ஜயன் கழுத்திலே இட்டமாலேயும் கவித்த முடியுமாய், எங்கள் கண்முகப்பே தோற்றவேணும். அது செய்யுமிடத்தில் தேரையலங்கரித்து அதிலே வர அமையாதோ? என்ன,- (**கஜேந**) அங்நெண்ணது. **"मत्तमातङ्गगामिनं" (மத்தமாதங்கககாமிநம்)** என்ற அவருடைய நடைக்குச் சேர்ந்த வாஹநமாகவேணும். அது செய்யுமிடத்தில் ஏதேனுமொரு யானையாகவொண்ணுதோ? என்ன.- (**கஜேநமஹதா**) ஸர்வலக்ஷணோபேதமாய், பட்டத்துக்குரிய யானையாகவேணும். (**மஹதா**) ஸர்வசக்தியை வஹிக்கவற்றாகவேணுமிறே. உங்களுக்கு இப்படி அபீஷ்டமாகில், முடியையும் வைதது கஜாதிரூடராம்படி பண்ணிவிடுகிறோம் என்ன; (**யாந்தம்**) அவ்வளவும் போராது. யானைக்கழுத்திலே ஏறி நெடுந்தெருவே நடக்கவேணும். அதுவே வேண்டும்போது

---

கண்குளிரக் காண்கையாகிற பலனை நாங்கள் பெறவேண்டாவோ?'' என்கிறார்கள் மேலே. நீங்கள் சொல்லுவதுதான் என்ன? என்று கேட்க,- (பெரிய யானையின்மேல் எழுந்தருளுகிறவரை) நீ அங்கீகரித்ததும், முடி சூட்டினதும் தோன்றும்படியாக, சத்ருஞ்ஜயனுகிற பட்டத்துயானையின் கழுத்திலே, மாலேதரித்து முடிசூடி எஙகள் கண்முன்னே எழுந்தருளவேணும். "மாலேதரித்து முடிசூடி வரும்போது அலங்கரித்ததேரிலே வநதாலாகாதோ?'' எனில: (யானையின்மேல்) தேரில் ஏறிவந்தால் போதாது; "மதங்கொண்ட யானை போனற நடையையுடையவனை'' [ரா-அ 3-28] என்கிறபடியே அவருடைய நடைக்குப் பொருத்தமான நடையையுடைய யானைவாஹனமாகவேணும். அது செய்யும்போது ஏதேனும் ஒரு யானையாகக் கூடாதோ? என்ன,- (பெரிய யானையின்மேல்) எல்லா லக்ஷணங்களும் கூடியதாய், பட்டத்துக்குரிய யானையாகவேணும். (பெரிய) ஸர்வசக்தியை தரிக்கவல்லதாகவேணுமன்றோ. உங்கள் விருப்பம் இப்படியாகில், முடியைச் சூட்டி யானையினமேல் ஏற்றிவைக்கும்படி பண்ணிவிடுகிறோம் என்ன,- (எழுந்தருளுமவரை) அதுமட்டும் போராது. யானைக் கழுத்திலே ஏறி நெடுந்தெருவிலே எழுந்தருளவேணும். 'அதுவே விருப்பமாகில், இங்கு எல்லாரும் வந்தால் முடி

அடைய இங்கே திரண்டிகோளாகில், முடிசூட்டி யானைக் கழுத்திலே ஏற்றினவளவே அமையாதோ? என்ன. 'புதிய துண்பார் தனியுண்பார்களோ' என்கிறார்கள்,—(யாந்தம்) "**ननन्दुस्सप्रजाः प्रजाः**" (நநந்து₃ஸ் ஸப்ரஜா: ப்ரஜா:) என்று இந்த மஹோத்ஸவத்தை எங்கள் மித்ராதிகளோடே அங்கேயெழுந்தருளக் காணவேணும். (யாந்தம்) (ஆயாந்தம்) முகமும் முறுவலும் கஸ்தூரி திருநாமமும் கருணைகடாக்ஷத்தோடே எழுந்தருள ஸேவிக்கவேணும். இப்படி ஸேவிக்கிறதுதான் யாரையென்னில்,- (ராமம்) "ரமயதீதி ராம:" என்ற வ்யுத்பத்தியாலே ஸமஸ்தஜனங்களையும் கல்யாணகுணங்களாலே ரஞ்ஜிப்பிக்கிறவரை. (ராமம்) "**रमु-क्रीडायां**" (ரமு-க்ரீட₃ாயாம்) என்கிற த₄ாத்வர்த்தத்தின்படியே, எல்லாரோடுங்கூட விஹரிக்குமவராகையாலே என்றுமாம்.

வெறும் யானைக்கழுத்திலே எழுந்தருளுகிறமாத்ரம் அமையுமோ? என்ன,—(சத்ராவ்ருதாநநம்) "**पाण्डरस्यातपत्रस्य**

---

சூட்டி யானைக் கழுத்திலே ஏற்றி எழுந்தருளும்படி செய்கிறோம். என்ன,-(எழுந்தருளுமவரை) நல்விருந்து உண்பார் தனியாக உண்பார்களோ? "குழந்தைகளுடன் கூடிய பிரஜைகள் அனைவரும் ஆநந்தித்தார்கள்" [ரகுவம் 4-3] என்று இந்த மஹோத்ஸவத்தை எங்கள் பிள்ளைகள் நண்பர்கள் முதலானருடன் கூட அங்கே எழுந்தருளக் காணவேணும். (போகின்றவரை—வருகின்றவரை) முகமும் முறுவலும் கஸதூரி திருநாமமும் கருணைகடாக்ஷமும் கொண்டு வரும்போது ஸேவிக்கவேணும்- முன்ஸேவையும் பின்ஸேவையும் ஸேவிக்கவேணும். இப்படி ஸேவிப்பதுதான் யாரையென்னில்; (ராமனை) "ரமிக்கச்செய்கிறனகையால் ராமனகிறன்" என்னும் வ்யுத்பத்தியின்படியே எல்லாஜனங்களையும் தன்திருக்குணங்களாலே ரமிக்கச்செய்பவரை. (ராமனை) "ரமு என்னும் தாது விளையாட்டு என்னும் பொருளையுடையது" என்கிற தாதுப்பொருளின்படியே, எல்லாரோடும் கூட விளையாடுமவராகையாலே ராமன் என்று பெயர்பெற்றவரை என்றும் கொள்ளலாம்.

வெறும் யானைக் கழுத்திலே எழுந்தருளினல்மட்டும் போதுமோ என்ன,-(குடையால் மறைக்கப்பட்ட முகத்தையுடையவனை) வெயில்

**छायायां जरितं मया"** (பாண்டு₃ரஸ்யாதபத்ரஸ்ய ச₂ாயாயாம் ஜரிதம் **மயா**) *என்று தசரதசக்ரவர்த்தி முதலான ராஜாக்களாலே இச்சிக்கப்படுமதாயிருக்கிற திருமுகமண்டலத்தை ஸேவிக்க வேணுமென்றுமாம்.*

**அயோத்யாகாண்டம் 2-வது ஸர்க்கம் 33-வது ச்லோகம்**

**प्रियवादी च भूतानां सत्यवादी च राघवः।**
**बहुश्रुतानां वृद्धानां ब्राह्मणानामुपासिता।**

**ப்ரியவாதீ₃ ச பூ₄தாநாம் ஸத்யவாதீ₃ ச ராக₄வ:।**
**ப₃ஹுச்ருதாநாம வ்ருத்₃த₄ாநாம் ப்₃ராஹ்மணாநாமுபாஸிதா॥**

**பதவுரை:—ராக₄வ:**—*ரகுகுலதிலகரான ஸ்ரீராமபிரான்,* **பூ₄தாநாம்**—*ஸத்தையை உடைய எல்லாப் பிராணிகளுக்கும்,* **ப்ரியவாதீ₃**-*இனியதையே உரைப்பவர்;* **ஸத்யவாதீ₃ ச**-*ஹித மானதையே சொல்லுவர்,* **ப₃ஹுச்ருதாநாம**-*பலரிடம்பலகால் கேட்டறிந்த,* **வ்ருத்₃த₄ாநாம்**-*பெரியோர்களான,* **ப்₃ராஹ்மணாநாம்**-*ப்ராஹ்மணர்களுக்கு,* **உபாஸிதா**-*ஸேவை செய்பவர்.*

**அவதாரிகை:**—*ஒருவன் ஒருவனுக்குக் கூறுசெய்யப்புக் கால் ப்ரஜைகள் பக்கலிலும் குளிர விழியாநின்ருனயிற்று. அவ்வாஸனையும் புறம்பு "குடிமகன் 'ஏனே நீ பண்ண வேண்டியிருக்கிறதோ' என்னும்" என்னும் பயத்தாலே.*

---

படாமல் வெண்கொற்றக் குடைநிழலிலே எழுந்தருளக் காண வேணும். "வெண்குடையின் நிழலிலேயே நான் கிழத்தனமடைந் தேன்" [ரா-அ 2-7] என்று தசரதசக்ரவர்த்தி முதலான அரசர் களால் விருமபப்படுவதாயிருக்கிற வெண்குடையாலே வெயில் படா மல் மறைக்கப்பட்டிருக்கிற திருமுகமண்டலத்தைக் காணவேணும் என்றுமாம்.

அவதாரிகை:-(ப்ரியவாதீ) ஒருவன் சிலரை ஆட்சி செய்யப் புகுந்தால் குடிகளைக் குளிரநோக்குவதைக் காண்கிருேம். "குடிகள் 'நீ மட்டும் ஏனே எங்களை அரசுபுரியவேண்டும்?' என்று கேட்பார் கள்" என்னும் பயத்தாலேயே மற்றுள்ள அரசர்கள் அப்படிக் குளிரநோக்கும் வாஸனையை (வழக்கத்தை) உடையராகிருர்கள். அவ்

*அவ்வளவேயன்றிக்கே, பூமிப்பரப்புக்காகக்கடவரான பெருமாள் ப்ரஜைகள் விஷயத்திலே பலிக்கும்படி சொல்லுகிறது.*

**வ்யாக்யானம்:—(ப்ரியவாதீ)** *க$_4$ர்ம* **(घर्म)** *காலத்திலே ஒடுக்கமாகப் பிளந்த நிலத்திலே ஒரு பாட்டம் மழை விழுந்தாப்போலேயாயிற்று ஒருவனைக் குறித்து வார்த்தையருளிச் செய்வதாயிருக்கும்படி. இப்படிச் செய்வதுதான் திவ்யாந்த:புரத்துக்காதல், திருத்தாய்மார்க்காதல் வஸிஷ்டாதிகளுக்காதலோவென்னில்,* **(பூதாநாம்)** *ஸத்தாயோகி ஸகலபதார்த்தங்களுக்கும் இப்படியே இருப்பர். இருந்ததே குடியாக எல்லார்க்கும் ஒக்க ஒரு வார்த்தை சொல்லிவிடுமத்தனையோவென்றால்:* **(ஸத்யவாதீ ச)** *அதுதான் பூதஹிதமுமாய், அத்$_3$ருஷ்டார்த்த ஸாத$_4$கமுமாயிருக்கும். கீழ்ச்சொன்ன இரண்டாலும் ப்ரியஹிதங்களைச் சொன்னபடியிறே. இவைதான்*

---

வளவேயன்றிக்கே உலகம் முழுவதையும் ஆளும் ராமபிரான் குடிகள் விஷயத்திலே நடந்துகொள்ளும்படியை இந்த ச்லோகத்தாலே சொல்லுகிறது.

வ்யா:—(இனிதுரைப்பவர்) கோடைகாலத்திலே காய்ந்து ஒடுங்கிப் பிளந்த நிலத்திலே ஒருபாட்டம் மழை விழுந்ததுபோலேயிருக்கும் ராமன் ஒருவனைக் குறித்து வார்த்தை சொல்லும்போது. அந்த:புரத்திலேயுள்ள ஸீதை முதலானோர்க்காவது, தாய்மார்களான கௌஸல்யை முதலியவர்களுக்காவது, ஆசாரியர்களான வஸிஷ்டர் முதலியவர்களுக்காவதுதானோ இப்படி 'இனிதுரைப்பது? என்னில்: (பூதங்களுக்கு) "பூ$_4$ஸத்தாயாம்" என்ற தாது. ஸத்தை (இருப்பு) உடைய எல்லாப் பிராணிகளிடத்திலும் இனியதாகவே பேசுவர். ஸத்தையுடைய பிராணிகளுக்கெல்லாருக்கும் ஓரே மாதிரியாக இனியவார்த்தை பேசி விட்டுவிடுவாரோ எனில: (ஸத்யவாதீ) "ஸத்யம் பூ$_4$தஹிதம் ப்ரோக்தம்" [பூதங்களுக்கு ஹிதமாயிருப்பது ஸத்யமாகும்] என்கிற லக்ஷணத்தின்படியே அவர் சொல்லும் வார்த்தைகள் இவ்வுலகத்திலும் பிராணிகளுக்கு நன்மைபயப்பதாய் மறுமையின்பத்தையும் தரவல்லதாயிருக்கும். ஆக, "ப்ரியவாதீ ஸத்யவாதீ" என்னும் இரண்டு பதங்களாலும், "ஸத்யம் ப்$_3$ரூயாத் ப்ரியம் ப்$_3$ரூயாந்ந ப்$_3$ரூயாத் ஸத்யமப்ரியம் ப்ரியம் ச நாந்ருதம் ப்$_3$ரூயாதே$_3$ஷ த$_4$ர்மஸ் ஸநாதந:" [ஹிதத்தைச் சொல்லக்கடவன்; இனியதைச் சொல்லக்கடவன்;

புறம்பே ஒரு வ்யக்தியிலும் சேராது; இவையிரண்டும் தன் பக்கல் சேர்ந்துகொண்டிருக்கிறது. அகடிதகடநாஸாமர்த் யத்தை உடையவனான ஈச்வரனேயென்னில்: (ராகவ:) குடிப்பிறப்பாலேயாயிற்று.

இப்படியிருக்கும்போது, இப்படிப்பட்ட குணங்களையும் குடிப்பிறப்பையும் அனுஸந்தித்து, 'இவை நமக்குண்டா வதே' என்று மதித்திருப்பரோ என்னில்: 'நம்மைக் கண்டது ப்ரஜைகளுடைய ரக்ஷணார்த்தமாக; ஆனபின்பு இன்னமும் நமக்கு இதுக்கீடான அளவு போராது' என்று உள்ளவளவும் பார்த்து த்ருப்தராகாதே, இன்னமும் இதுக்கீடான நன்மை கள் உண்டாகவேணுமென்று அறிவுடையார் வாசலிலே போய்க் கால்கட்டியிருப்பர். (பஹுச்ருதாநாம்) நாலிரண்டும் கற்றவளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே, ஒரொன்று தன்னைப் பலகாலும் கேட்டிருப்பாராயிற்று. ப$_3$ஹுப்$_4$ய:

---

ஹிதமாயினும் இனிதல்லாததைச் சொல்லக்கூடாது. இனியதாயினும் அஹிதத்தைச் சொல்லலாகாது. இதுவே பழைமையான தர்மம்] [மநு 4-138] என்று மநுவினால் உபதேசிக்கப்பட்ட ப்ரியஹிதங்கள் சொல்லப்பட்டன. இப்படி ப்ரியஹிதங்களிரண்டையும் சொல்லுவது வேறு ஒரு வ்யக்தியிலும் கண்டதில்லை- ராமனிடம் காண்கிறோம். அப்படிப்பட்ட இவன் ஆகாதவற்றையும் ஆக்கிவைக்கும் ஈச்வரனோ என்னில்: (ராகவன்) ஈச்வரத்வம் கிடக்கட்டும்; ரகுகுலத்திற் பிறப பாலேயே இவனுக்கு இத்தன்மைகள் உண்டாயினவென்கை.

இப்படி குணவானாயிருக்கையில், 'இந்த குணங்களும், இவற் றுக்கு ஹேதுவான நற்குடிப்பிறப்பும் நமக்குண்டாவதே' என்று கர்வங்கொண்டிருப்பரோ? என்னில்: அன்று; "நாமிருப்பது குடிகளைக் காப்பதற்காக; ஆகையால் ப்ரஜாரக்ஷணத்திற்கு நம்மிட முள்ள நன்மைகள போராது" என்று தன்னிடமுள்ளதெல்லாம கண்டும் த்ருப்தியடையாமல, ப்ரஜாரக்ஷணத்திற்கு வேண்டிய குணங்கள் மேலும் உண்டாகவேணுமென்று அறிவுடையார் வாச லிலே போய் அவர்களைக் கால்கட்டி நிற்பர் எனகிறது மேலே: (பஹுச்ருதர்களை) நாலிரண்டு அர்த்தங்கள் கற்றவுடன் நில்லாமல், ஒவ்வொரு அர்த்தத்தையும் பலதடவையும் கேட்டிருப்பார்கள். பஹுச்ருதர்கள்-(1) பலரிடமிருந்து கேட்டவர்கள். (2) பலதடவை

ச்ருதம்-ப₃ஹுதா₄ ச்ருதம். "ज्ञानवृद्धा मया राजन् बहवः पर्युपासिताः" (ஜ்ஞாநவ்ருத்₃த₄ாமயா ராஜந் ப₃ஹவ: பர்யுபாஸிதா:) என்றுப் போலே. "सर्वतस्सारमादद्यात्" (ஸர்வதஸ் ஸாரமாத₃த்₃யாத்) என்று பலர் பக்கலிலும் ஸாரக்ரஹணம் பண்ணினதாயிற்று. (வ்ருத்தாநாம) த்ரிவித₄வ்ருத்₃த₄ாநாம். "शीलवृद्धैर्वयोवृद्धैर्ज्ञानवृद्धैः" (ஶீலவ்ருத்₃தை₄ர் வயோவ்ருத்₃தை₄ர் ஜ்ஞாநவ்ருத்₃தை₄:) என்று சீலத்தாலும், வயஸ்ஸாலும், ஜ்ஞாநத்தாலும் அதிகராயிருப் பார்கள். அதுதான் அர்த்தஶாஸ்த்ரம் கற்றுப்போலேயோ வென்னில்: (ப்ராஹ்மணாநாம்) க்ஷத்ரியர் ப்ராஹ்மணரைப் பற்றி, அவ்வழியாலே தத்வங்களையே அபேக்ஷிதமாகப் பெறக் கடவதாயிறே இருப்பது. "ப்ராஹ்மணாநாம்" என்று அவர் கள் பலருமாய்த் தாம் இருந்தவிடத்தே வந்து கேட்கும்படி யான யோக்யதையுண்டானால், அவர்களைத் தாமழைத்து விட்டோ தர்மஸம்ஶயம் அறுத்துக்கொள்வது என்றால்:

---

கேட்டவர்கள். "அரசனே என்னால் அறிவில் முதிர்ந்த கிழவர்கள் பலர் நன்றாக உபாஸிக்கப்பட்டிருக்கிறார்கள்" [பார-ஸபா 33-12] என்றுப்போலே. "ப₃ஹுப்₄யச்ச மஹத்₃ப₄யச்ச சாஸ்த்ரேப்₄யோ மதிமாந் நர. ஸாவதஸ ஸாரமாத₃த்₃யாத் புஷ்பேப்₄ய இவ ஷட்பத₃:" [புத்திமானான மனிதன் பலவும் பெரியவையுமான சாஸ்திரங்களிலிருந்தும், (அந்த சாஸ்திரங்களை அறிந்த) ஞானிகள் அனைவரிடமிருந்தும் புஷ்பங் களிலிருந்து வண்டு (தேனை) கிரஹிப்பதுபோல் ஸாரமானதை கிரஹிக்கக்கடவன்] [பார-சாந்தி 176-66] என்று பலரிடமும் ஸாரத்தை கிரஹித்தவர்கள் என்கை. (வ்ருத்தர்களை) மூன்று வகை யான கிழவர்கள். "நல்லொழுக்கம், வயஸ், அறிவு என்னும் மூன்றி லும் வ்ருத்தர்களாயிருக்கும் மூவகைக் கிழவர்களுடன்" [ரா-அ 1-12] என்கிறபடியே ஒழுக்கத்தாலும், வயஸ்ஸாலும், அறிவாலும், அதிகரா யிருப்பார்கள். இவர்களுடன் கூடுவதும் அர்த்தசாஸ்த்ரம் [ராஜ நீதிசாஸ்த்ரம்] போலே ஒன்றைக கற்பதற்கோ என்னில்,–(ப்ராஹ் மணர்களை) அரசர்கள் ப்ராஹ்மணர்களைப் பற்றுவது சித், அசித், ஈச்வரன் எனனும் தத்துவங்களைப்பற்றிய உண்மையைக்கேட்டு அறிவதற்காகவேயன்றோ. "ப்ராஹமணர்களை" என்று அவர்கள பலராகையாலும் தான் ஒவ்வொருவரிடமும் போவது கடினமாகை யாலும், அவர்களைத் தானிருக்குமிடம் வரவழைத்துக் கேட்கும்படி யான அரச பதவியிலிருக்கையாலும், அவர்களைத் தாம் அழைத்தோ

**(உபாஸிதா)** *அவர்கள் இருந்தவிடத்தே தாமே சென்று அவர்கள் சொல்லும்படிக்கு அவர்கள் காலும் தம்முடைய தலையுமாயாயிற்றுத் தாம் அனுவர்த்திப்பது.*

**அயோத்யாகாண்டம் 17-வது ஸர்க்கம் 14-வது ச்லோகம்**

**यश्च रामं न पश्येत्तु यञ्च रामो न पश्यति।**
**निन्दितस्स वसेल्लोके स्वात्माप्येनं विगर्हते॥**

**யச்ச ராமம் ந பச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி।**
**நிந்தி₃தஸ் ஸ வஸேல் லோகே ஸ்வாத்மாப்யேநம் விக₃ர்ஹதே॥**

**பதவுரை:**—**யச்ச**—*எவனொருவனும்,* **ராமம்**—*ராமனை,* **ந பச்யேத்**—*காணுதிருப்பனே,* **து**—*மேலும்,* **யம்**—*எவனை,* **ராமச்ச**—*ஸ்ரீராமனும்,* **ந பச்யதி**—*காணுதிருக்கிறரோ,* **ஸ:**—*அவன்,* **லோகே**—*உலகினில்,* **நிந்தி₃த:**—*நிந்திக்கப்பட்டவனாய்,* **வஸேத்**—*வாழ்வான்;* **ஸ்வாத்மா அபி**—*தன்னுடைய ஆத்மாவும்,* **ஏநம்**—*இவனை,* **விக₃ர்ஹதே**—*நிந்திக்கிறது.*

**வயாக்யானம்:—(யச்ச ராமம் ந பச்யேத் து) (ராமம்)** *என்கிறது கண்ணுக்கு வகுத்த விஷயத்தை.* **(ய:)** *காணுதிருக்கிருன் யாவனொருவன்.* **(ச)** *எத்தனையேனும் உயர்ந்தவனாகவு*

---

*தர்மஸந்தேஹங்களைப்* போக்கிக்கொள்வது *என்ருல்,-(உபாஸிப்பவர்)* அவர்கள் இருந்தவிடத்தில் *தாமே சென்று,* அவர்கள் உபதேசிக்கும்படியாக அவர்கள் காலிலே தம்தலையை வைத்து வணங்கி அவர்களை அநுவர்த்திப்பவர் *ராமபிரான்.*

*அவ:—(யச்ச ராமம்) ஸ்ரீராமபிரான் வநவாஸச்செய்தியை அறி*வதற்கு முன் *தசரதக்ருஹத்தை நோக்கிச்சென*று கொண்டிருக்கை*யில் குடிகள் அவரைக்கண்டு ஈடுபட்டபடியைச் சொல்லும் பாசுரங்*களில் இதுவொன்று. "ப்ரஜாபதிஸ் த்வம் வேத₃ ப்ரஜாபதிம் த்வோ வேத₃" *[பரம்பொருள் ஒருவனையறிகிருன். பரமனை ஒருவனறிகிருன்]* என்னும் இரண்டு வகையிலும் சேராதவன் அதிநிஹீனன் என்கிறது.

*வ்யா:-(எவனொருவனும் ராமனைக்காண்பதில்லையோ)''ராமனை' [ரமிக்கச்செய்பவனை]* என்றது காண்பதற்காகவே ஏற்பட்ட விஷயத்தை என்றபடி. (எவன்) எவனொருவன் காணுதிருக்கிருனோ. (எவனும்) *ப்ராதாந்யப்பொருளிலே சகாரமாய் எத்தனை உயர்ந்த*

மாம். (து) இது தப்பினலும். தப்பாதது தப்பினல். வருமது இவ்வளவு அன்று என்கைக்காக விசேஷிக்கிறது. (யம் ச ராமோ ந பச்யதி) எத்தனையேனும் சிறியாரும் இவர் கண் பார்வைக்கு இலக்காகாதாரில்லை. (யம்) எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்ணில் பார்வைக்கு இலக்காவார். "யாருமோர் நிலைமை யன் என அறிவரிய எம்பெருமான் யாருமோர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான்". ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞானத்துக்கும் அவிஷயமாயிருக்கும். ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். எத்தனையேனும் உயர்ந்தவனுகிலும் பெருமாளுடைய ஒருவேளை புறப்பாடு காணுனுகில் அவன் பெரியனல்லன். எத்தனையேனும் சிறியனுனவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை. தப்புகிறுன்

---

வனுயிருந்தாலும் என்கை. (மேலும்) ராமனைக் காண்பதாகிற இது தப்பினலும்; பால்குடிக்கக் கால்பிடிக்க வேண்டாமாகையாலே தப்பாததான இது தப்பினலும். மேலே சொல்லப்போவது இதைக் காட்டிலும் க்ரூரமானது என்று உணர்த்துவதற்காக 'து' [மேலும்] என்று விசேஷிக்கிறது. (எவனை ராமனும் காண்பதில்லையோ) எவ்வளவு சிறியவனுயிருப்பவனையும் காணும் ராமனும் எவனைக் காணவில்லையோ. (எவனை) மிகமிகத்தாழ்ந்தவன் என்கிறது. மிகத்தாழ்ந்தவர்களும் இவனுடைய திருக்கண் நோக்குக்கு இலக்காகும்போது, அதற்கும் இலக்காகாதவன் மிகமிகத்தாழ்ந்தவனுகவே இருக்கவேண்டுமன்றே. "யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான் யாருமோர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான்" [திருவாய் 1-3-4] என்றல்லவோ ஆழ்வார் அருளிச் செய்தார். "யாருமோர்...அரிய எம்பெருமான்" என்றதாலே மிகவுயர்ந்த பிரமன் முதலியவர்களுடைய அறிவுக்கும் எட்டாதவன் என்றதாகிறது. "யாருமோர்...எளிய எம்பெருமான்" என்றதாலே மிகத்தாழ்ந்த இடைச்சிக்கும் வேடனுக்கும் கையாளாயிருப்பவன் என்றதாகிறது. இங்கும் "எவன் ராமனைக் காண்பதில்லையோ" என்றதால் மிகவுயர்ந்தவனுயினும் ராமனுடைய ஒருவேளை புறப்பாடு காணுனுகில் அவன் பெரியவனல்லன் என்கிறது; "எவனை ராமனும் காண்பதில்லையோ..." என்றதால் "மிகத்தாழ்ந்தவனையும் விடாத ராமனுடைய பார்வைக்கும் இலக்காகாதவன் முயற்கொம்பு

யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடும் எண்ணப பட்டான். எண்ணப்படாமையிலே எண்ணப்படும். எல லாரும் நிந்தித்துச் 'சிசி' என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்டாதிகள் தொடக்கமானார் நாலவரிருவரோவென்னில்: **(நிந்திதஸ் ஸ வஸேல்லோகே) (லோகே நிந்தித:)** இவனை நிந்திக்கைக்கு உரியரல்லாதார் இல்லை. விஷயப்ரவணனான வன் இப்போது பழியாய், மேல் நரகமாயிருக்கச்செய்தே தான் நல்லது செய்கிறோமென்று இருக்குமிறே. அப்படித் தான் நல்லது செய்கிறோமென்று இருக்குமோவென்னில்: **(ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே)** தானும் தன்னை நிந்தித்துக் கொள்ளும். திருக்கைத்தலம் இழந்தவன் "இற்றைப் புறப்பாடு காணப்பெறாத நாம் கருப்பூரமும் எலுமிச்சங் காயும் பெற்றோமாகில் முடிந்து பிழைக்கலாயிற்று" என்று இருக்குமிறே.

**அயோத்யாகாண்டம் 23-வது ஸர்க்கம் 29-வது ச்லோகம்**

**राज्यश्च तव रक्षेयमहं वेलेव सागरम्।**
**प्रतिजानामि ते वीर माभूवं वीरलोकभाक्॥**

---

[சசவிஷாணம்] முதலிய அபதார்த்தங்களோடும் எண்ணப்பட மாட்டான். எண்ணப்படக்கூடாத பொருளகளின் குழுவிலேயே எண்ணப்படுவான், எல்லாராலும் 'சீசீ' என்று இகழப்படுவான்" என்கிறது. இவனை இகழுமவர்கள் வஸிஷ்டர் முதலானோர் சிலர் தானோ என்னில்: (உலகில் நிந்திக்கப்பட்டவனாய் வாழ்வான்) இவனை நிந்திக்கத் தகாதவர்கள் உலகிலில்லை, விஷயங்களிலே மண்டி யிருப்பவன், இவ்வுலகில் பழிச்சொல்லுக்கும் இலக்காய், மேலே நரகானுபவமும் ஸித்தமாயிருந்தபோதிலும், 'நாம் நமக்கு இனி யதைச் செய்கிறோம்' என்று இருப்பானே; அப்படியே இவனு மிருப்பனோவென்னில்: (தன் ஆத்மாவும் இவனை நிந்திக்கும்) தானும் தன்னை நிந்தித்துக் கொள்ளும்படியான நிலை இவனுடையது. திருக்கைத்தலஸேவையை இழந்தவன் "இன்று ஸேவிக்கப்பெறாத நம் கண்ணை கருப்பூரத்தையும் எலுமிச்சங்காயையும் கொண்டு முடித்தோமாகில் பிழைக்கலாம்" என்று நிந்தித்துக்கொள்வனன்றோ.

ராஜ்யஞ்ச தவ ரக்ஷ்யமஹம் வேலேவ ஸாக$_3$ரம் |
ப்ரதிஜாநாமி தே வீர மாபூ$_4$வம் வீரலோகப$_4$ாக் ||

பதவுரை:—**அஹம்**–*நான்,* **தவ**–*உம்முடைய,* **ராஜ்யம் ச**–*ராஜ்யத்தையும்,* **ஸாக$_3$ரம்**–*கடலை,* **வேலா இவ**–*கரைபோலே,* **ரக்ஷ்யம்**—*காப்பாற்றுவேன்,* **வீர**—*சூரனே!* **தே**—*உமக்கெதிரில்,* **ப்ரதிஜாநாமி**—*ப்ரதிஜ்ஞை செய்கிறேன்; (இல்லாவிடில்)* **மா பூ$_4$வம்**–*(உம் நாட்டிலும்)வாழக்கடவேனல்லேன்;* **வீரலோகப$_4$ாக்**—*வீரரான தசரதர் அடையப்போகும் உலகை அடையக்கடவேன்*

**வ்யாக்யானம்:**–(ராஜ்யஞ்ச தவ ரக்ஷ்யம்) "रक्ष धर्मेण बलेन" (ரக்ஷ த$_4$ர்மேண ப$_3$லேந) *என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக் கடவேன். எனக்குத் தாத$_3$ர்த்$_2$யம் ஸ்வரூபமானாலும் உம்மால் என்னை மீறவொண்ணாது காணும்.* **(அஹம் வேலேவ ஸாகரம)** *கடலுக்குக் கரை ஶேஷமாயிருச்கச்செய்தேயும் கரையை அதிக்ரமிக்கமாட்டாதிறே கடல்; அப்படியே 'நீர் பெரியீர்' என்று உம்மால் என்னை விஞ்சவொண்ணாது காணும்.* **(ப்ரதிஜாநாமி)** *நான் இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன்.* **(தே வீர)** *ஒரு கோழை முன்னேயோ நான்*

---

*அவதாரிகை:—வநவாஸத்தைக் கேட்டுக் கோபமுற்ற இளைய பெருமாள் பாசுரம்.*

*வ்யா:—(உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன) "லக்ஷ்மணன் ராமனை தர்மத்திலும் பலத்திலும் ரக்ஷித்தான்" [ரா-கி 1-128] என்கிறபடியே உம்மைக் காப்பாற்றுவதோடன்றியில உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிப்பேன். உமக்கேயாயிருக்கையே என் ஸ்வரூபத்திற்குத தகுந்ததானாலும் உம்மால் என்னை மீற முடியாதுகாணும். (கரை சமுத்திரத்தைப்போல் நான் ரக்ஷிப்பேன்) கடலுக்காகவே கரை ஏற்பட்டிருந்தபோதிலும் கடல் கரையைத் தாண்டாதன்றோ. அப்படியே நீரும் மிகப்பெரியரானாலும நான் சொல்லுவதைத் தட்டமுடியாது. (ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன்) நானிப்படிப் ப்ரதிஜ்ஞை செய்கிறேன்காணும். (வீரரே உம்மிடம ப்ரதிஜ்ஞை*

ப்ரதிஜ்ஞை பண்ணிற்று. ப்ரதிஜ்ஞை பண்ணினுல் அத்தைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடையஉம்முடைய முன்னேயன்றோ. (மா பூவம) இப்படிச் செய்திலேனுகில் உம்முடைய ஸந்நிதியில வர்த்திக்கப் பெறுதொழிகையன்றிக்கே உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப் பெறுதவனுகிறேன். (வீரலோகபாக்) உம்மை முடிசூட்டி அநுபவிக்கப் பாரித்து அதுபெறுதேபோன சக்ரவர்த்தி புக்க லோகம் புகுகிறேன்.

**அயோத்யாகாண்டம் 30-வது ஸர்க்கம் 3–வது ச்லோகம்**

**किं त्वामन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः।**
**राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम्॥**

**கிம் த்வாமந்யத வைதே₃ஹ: பிதா மே மிதி₂லாதி₄ப:।**
**ராம ஜாமாதரம ப்ராப்ய ஸ்த்ரியம புருஷவிக்₃ரஹம்॥**

**பதவுரை**—**ராம**—(வெளியழகாலே) ரமிக்கச்செய்பவரே! **மிதி₂லாதி₄ப:**—மிதிலைக்கு அரசராய், **வைதே₃ஹ:**—விதேஹ குலத்திற் பிறந்த, **மே பிதா**—என்னுடைய தகப்பனுரான ஜநகர், **புருஷவிக்₃ரஹம்**—ஆணுடம்பையுடைய, **ஸ்த்ரியம்**—பெண்ணுன, **த்வா**—உம்மை, **ஜாமாதரம்**—மாப்பிள்ளையாக, **ப்ராப்ய**—அடைந்து, **கிம் அமந்யத**–என்ன நினைத்திருப்பர்?

---

பண்ணுகிறேன்) ஒரு கோழையின் முன்போ நான் ப்ரதிஜ்ஞை பண்ணுகிறது. செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றவல்ல ஆண் பிள்ளையான உம் முன்பன்றோ நான் ப்ரதிஜ்ஞை செய்வது. (சொன்னபடி செய்திலேனுகில் வாழக்கடவேனலலேன்) உம்மையும் உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கவில்லையாகில் உமக்கு முன்னே இருக்காமல் போவதோடன்றியில் உம்முடைய ராஜ்யத்திலும் வாழக் கடவேனல்லேன. (வீரலோகத்தை அடைகிறேன்) உம்மை முடி சூட்டி அநுபவிக்க மநோரதித்து அது பெருமையாலே தசரத சக்ரவர்த்தி அடையப்போகும் உலகத்தை அடைகிறேன். ['சக்ரவர்த்தி புக்க லோகம்' என்றது ஸ்வர்க்கம புகப்போகிருர் என்னும் நிச்சயத்தாலே. "ந தே₃வலோகாக்ரமணம்" என்னும் லக்ஷ்மணன் வீரலோகத்தை ஒரு பொருளாகக் கருதமாட்டாமையால் இப்பொருளே சிறந்தது.]

**அவ:**—*பித்ருவசநபரிபாலநார்த்தமாக,* **"वनवासो महोदय:"** **(வநவாஸோ மஹோதயः)** *என்று ஸௌமுக்யத்தோடே, வநவாஸ ஸுமுகரென்று நாட்டார் அபர திருநாமம் சாற்றும் படி வநவாஸ ஸுமுகராய், அப்போது உலகுடைய நாச்சியாரான ஸ்ரீ ஜநகராஜன் திருமகளுடைய ஸுகுமாரமான திரு மேனியில் மென்மையைத் திருவுள்ளம்பற்றிப் பிராட்டியை "திருவயோத்யையிலே நாம் மீண்டுவருமளவும் ச்வச்ரு ச்வசுராதி பரிபாலநம் பண்ணிக்கொண்டு இரும்" என்று பெருமாள் வேண்டிக்கொள்ள, அவ்வார்த்தை வ்ரணக்ஷாரம போலே பிராட்டிக்கு அஸஹ்யமாய், ப்ரணயாபிமாநங்கள் வ்யுத்க்ரமமாகையாலே, பெருமாளைக்குறித்து க்ஷேபோக்தி பண்ணுகிறாள் இச்லோகத்தாலே.*

**வ்யாக்யானம்**:—**(கிம்)** *என்கிற இது குத்ஸாபரமான அவ்யயம். அப்போது* **(கிம வக்ஷ்யதி)** *என்று குத்ஸாபர மாகச் சொல்லுவரென்றபடி. அன்றிக்கே* **(கிம்)** *என்று ப்ரச்ந மானபோது, 'என் சொல்லுவர்' என்று பொருள்.* **(அமந்யத)**

---

அவ:—(கிம் த்வா) தந்தையின் வார்த்தையைக் காப்பாற்றுவதற் காக "வநவாஸமே பெருஞ்சிறப்பாகும்" [ரா-அ 22-29] என்று இனியமுகத்தோடே, 'வநவாஸத்திலுமினியர்' என்று ஜனங்கள் மற்றொரு திருநாமமிடும்படி வநவாஸத்திலினியராய், அப்போது உலகுடைய நாச்சியாரான ஸ்ரீஜநகராஜன் திருமகளுடைய இளந் திருமேனியில் மென்மையை நினைத்துப் பிராட்டியிடம் "திருவயோத் யைக்கு நான் மீண்டுவரும் வரையில் மாமியார்கள் மாமனார் முதலானோரை ரக்ஷித்துக்கொண்டிரு" என்று பெருமாள் வேண்டிக் கொள்ள, அவ்வார்த்தை புண்ணில் புளிப்பெய்தாற்போலே பிராட் டிக்குப் பொறுக்கவெண்ணாததாய், ப்ரணயகோபத்தில் அபிமானங் கள் முறைகெட்டிருக்குமாகையாலே, பெருமாளைக்குறித்துச் சுடுஞ் சொற்களைப்பேசுகிறாள் இங்கு.

வ்யா:—(கிம்) என்பதைத் தாழ்ச்சியைக் காட்டும் அவ்யயச் சொல்லாகக்கொண்டால் (கிம்வக்ஷ்யதி) என்றதற்கு "தாழ்வாகச் சொல்லுவர்" என்று பொருள். (என்ன) என்று கேள்விச்சொல் லானபோது "என்ன சொல்லுவர்" என்று பொருள். "கிம் த்வா

என்று பாடமானபோது 'குத்ஸாவிஷயமாக நினைத்திருப்பர்' என்றும், 'என் நினைத்திருப்பர்' என்றும் இரண்டு அர்த்தம். **(த்வா)** உளுத்த வில்லைமுறித்தது. லோகத்தை ஊமத்தங்காய் தீற்றின உம்மை. **(த்வா)** வஸிஷ்டாநுவர்த்தநம் பண்ணிப் போருகையாலே என்னோபாதி ஸூக்ஷ்ம தர்மஜ்ஞரில்லை யென்று பொய்யே இறுமாந்திருக்கிற உம்மை. **(த்வா)** எழிலிலே கோழையான உம்மை. **(கிம் த்வாமந்யத)** **(கிம் வக்ஷ்யதி)** ராஜாவன்றென்னவொண்ணுதே. ராஜதர்மம் அறியீரென்னவொண்ணுதே. குருகுலவாஸம் பண்ணியறியீர் என்னவொண்ணுதே. குலக்ரமாயாதமான ஆசாரம் அறியீர் என்னவொண்ணுதே. குலஸ்த்ரீகளுக்கு பர்த்ருஸஹவாஸம் ஆவச்யகமென்னுமிடம் அறியீர் என்னவொண்ணுதே. குலஸ்த்ரீயை உபேக்ஷியாமைக்கு ப்ரதமபரிகரமான ஏகதார வ்ரதத்வம் உமக்கில்லையென்னவொண்ணுதே. கிம் பஹுநா;

---

வக்ஷ்யதி" என்று பாடமல்லாமல் "கிம்த்வாமந்யத" என்று பாடமானபோது "தாழ்வாக நினைத்திருப்பர்" என்றும் "என்ன நினைத்திருப்பர்" என்றும் இரண்டு பொருள். (உம்மை) "தத₃ா து ஜ்ரும்பி₄தம் சைவம் த₄நுர் பீ₄மபராக்ரமம் [பயங்கரமான பராக்ரமத்தையுடைய அந்த சிவதநுஸ் (விஷ்ணுவின் ஹுங்காரததாலே) முறிந்தது.] [ரா-பா 75-20] என்கிறபடியே முறித்து உளுத்த வில்லை முறித்து உலகினரை ஊமத்தங்காய் தீற்றினாப்போலே பித்தராகச் செய்த உம்மை. (உம்மை) வஸிஷ்ட சிஷ்யனாகையாலே 'என்னைப்போலே தர்மநுணுக்கங்களை அறிந்தாரில்லை' என்று கர்வங்கொண்டிருக்கிற உம்மை. (உம்மை) என வெளியழகைமட்டும் கண்டு, மனவுறுதியை அறியாமல் 'வனம்செலல வல்லளோ' என்று பயந்து கோழையான உம்மை. (என்ன நினைப்பர்) (என்ன சொல்லுவர்) நீர் அரசரன்று என்னலாகாதே; அரசதருமம் அறியாதவர் என்னமுடியாதே. குருகுலவாஸம் பண்ணாதவர் என்னவொண்ணாதே. வமிசமுறைப்படி வந்த ஒழுக்கத்தை அறியாதவர் என்னமுடியாதே. நற்குடிப்பிறந்த பெண்களுக்குக் கணவனுடன் கூடிவாழ்வது அவசியமானதென்பதை அறியாதவர் என்ன முடியாதே. நற்குடிப்பெண்ணைத் தள்ளிவிடாமலிருக்கைக்கு முக்கியமாக வேண்டிய ஏகதாரவ்ரதத்வம் உமக்கு இல்லை என்னலாகாதே. பல சொல்லியென்? நீர் என்னை விட்டுச்

தேவர் அநுஷ்டாநம் கண்டால். உம்மைக் கனக்கத்தப்பித மென்று இருகரூமித்தனையிறே.

(**கிம் த்வாமந்யத வைதேஹ:**) உம்மை ஐயர் என்ன நினைத்திருப்பர்? திருமாமனார் தசரதசக்ரவர்த்தி கையிலாதல், திருமாமியார் ஸ்ரீகௌஸல்யையார் கையிலாதலன்றே என்னைக் காட்டிக்கொடுத்தது. (**இயம ஸீதா**) என்று உம்முடைய கையிலன்றோ காட்டிக்கொடுத்தது ஸ்த்ரீத்வத்தில் கொற்றையற்ற பெண்களுக்கு பர்த்ருவிரஹத்தில் ஸத்தாநாமும் பிறக்குமென்று சொல்லிக்கொடுத்தாரே; (**இயம**) இவள் அத்யந்தாபிமாநிநி என்று சொல்லிக்கொடுத்தாரே. **"आर्तार्ते मुदिते हृष्टा प्रोषिते मलिना कृशा। मृते म्रियेत वा पत्यौ सा स्त्री ज्ञेया पतिव्रता॥" (ஆர்த்தார்த்தே முதி₃தே ஹ்ருஷ்டா ப்ரோஷிதே மலிநா க்ருஶா। ம்ருதே ம்ரியேத யா நாரீ ஸா ஸ்த்ரீ ஜ்ஞேயா பதிவ்ரதா॥)** இத்யாதி ச்லோகங்களாலே மந்வாதிஸ்மர்த்தாக்கள் பாதிவ்ரத்யத்துக்கு வாயோலையிட்ட பெண்டாட்டியன்றுகிடீர் இவள் என்று சொன்னரே. அந்த லக்ஷணங்கள் சொல்ல

---

செல்வதைக் கண்டால் நீர் பெருந்தவறு செய்ததாகவே நினைத்திருப்பர் என் தந்தை.

(விதேஹராஜா உம்மை என்ன நினைத்திருப்பர்) என் தந்தை உம்மை என்ன நினைத்திருப்பா? மாமனரான தசரதசக்ரவர்த்தி கையிலாவது, மாமியாரான ஸ்ரீகௌஸல்யையார் கையிலாவது எனனைக் காட்டிக் கொடுக்கவில்லையே. "இந்த ஸீதை .." [ரா-பா 17-26] என்று உமமுடைய கையிலனறோ என்னைக் காட்டிக்கொடுத்தது. (இவள்) என்னும் பெண்பால் சொல்லாலே பெண்மையில் குற்ற மற்ற பெண்களை கணவனைப்பிரிந்தால் வாழமாட்டார்கள் என்று சொல்லிக்கொடுத்தாரே. (இவள்)இவள்மிகுந்த அபிமானமுள்ளவள்; ஒரு சொல பொறுக்கமாட்டாள் என்று சொன்னரே. (இவள்) "(கணவன்) வருந்தினபோது வருந்துவள்; இன்புற்றபோது இன்புறுவள; பிரிந்தபோது அழகிழந்தும மெலிந்துமிருப்பள்; இறந்தால் இறப்பள்; இப்படிப்பட்ட பெணபிள்ளையே பதிவ்ரதையெனறு அறியத்தக்கவள்" [ப்ருஹஸ்பதிஸ்மருதி-கெய்க்வாட் பதிப்பு 25-13] என்று மநுமுதலிய ஸ்ம்ருதிகர்த்தாக்கள் சொன்ன பதிவ்ரதா லக்ஷணத்தையும் விஞ்சியிருப்பவள் என்று சொன்னரே. கண

லாவது. பர்த்தாவுக்கும் தங்களுக்கும் பிரிந்து உடலும் உயிரும் உள்ளார்க்கன்றோ. இவளுககு உடலும் உயிரும் தேவரீர் என்று அறுதியிட்டுக்கொடுததாரே. (இயம) நிழலோடே மற்பொருவாரில்லை கிடீரென்றுரே. (இயம்) இவள் தலையாலே ஏதேனும் குறைவிளைந்ததுண்டாகிலும் தேவரீரதுகிடீர் என்றுரே. (ஸீதா) பெண்களுக்குத தாய்ககூறுமிக்கிருக்குமாகையாலே வேறு மணங்கிடீர்; எடுந்து விநியோகங்கொள்ளுமத்தனைகிடீர் என்று சொன்னுரே. (ஸீதா) பிறக்கிறபோது கீற்று தப்பாமல பிறந்தாள் என்றுரே. (மம ஸஹதா) இவளைப்பாராதே என்னைப் பார்ககவேணுமென்றுரே. (ஸஹதர்மசரீ) தேவர் உத்யோகத்துக்குக் கூட எழுந்தருளியிருக்கும் இவள் என்றுரே. (தவ) ஸஹதர்மசரியாமிடத்திலும் சேஷத்வம் கைவிடாள் என்றுரே. (ப்ரதீச்ச) அத்தலைக்கு அர்ஹமாம்படி திருவுள்ளம் பற்றவேணும்

---

வனிலும் வேறுபட்ட உடலும் உயிருமுள்ள அப்பதிவிரதைகளைபபோலன்றிக்கே இவளுக்கு உடலும் உயிரும் நீரே எனறு உறுதிகூறிக் கொடுத்தாரே. (இவள்) நிழலோடே மல்யுத்தம் செய்வாருண்டோ? உம்முடைய நிழல்போன்றவளான இவள் சொல் தட்டலாகாதுகிடீர் என்றுரே. (இவள்) இவளாலே குறையுண்டானுலும் உம்முடையதன்றோ. நிழலிலுள்ள தோஷம் நிழலையுடையவனுடைய தோஷத்தாலன்றோ எனறுரே. (ஸீதை—பூமியிற்பிறந்தவள்) "மாதரமங்கஜா:" என்கிறபடியே பெண்களுககுத் தாயின் ரத்தமும் குணங்களும் அதிகமாகையாலே கந்தவதியாய், க்ஷமாதேவியான பூமியின் பெண்ணுன இவள் விலக்ஷணமான மணமுடையவளாயும், பொறுமை மிக்கவளாயும் இருப்பாள். இந்த நறுமணத்தை எடுத்துக் காரியங்கொள்ளுவதே நீர் செய்யவேண்டியது என்று சொன்னுரே. (ஸீதை—கலப்பை கீறின கோட்டிலே பிறந்தவள்) பிறக்கிறபோதே கீறினகோடு தாண்டாமல் பிறந்தவள்; நீர்கீறின கோட்டைத் தாண்டமாட்டாள் என்றுரே. (என் பெண்) இவள குறையைக் காணுமல் ஒரு சொல் பொருத என்னைப் பார்க்கவேணும் என்றுரே. (கூடவிருந்து தர்மங்களை அனுஷ்டிப்பவள்) ஆச்ரிதரக்ஷணமான உம்முடைய தர்மத்துக்குக் கூட இருந்து உதவுமவள என்றுரே. (உமக்கு) அந்த தசையிலும உபாயத்வத்தை ஏறிட்டுக்கொண்டு தானே ஆச்ரிதரக்ஷணம் செய்யாமல், உமக்குப் பரதந்த்ரையாய்ப் புருஷகாரபூதையாயிருந்து காரியம செய்பவள் என்றுரே. (அங்கீகரியும்) தேவரீர்க்குத்

என்றூரே. (ச) அர்ஹதாஜ்ஞாநமாத்ரமன்றிக்கே விஷய வைலக்ஷண்யாநுரூபமாக போ₄க₃ம் கொடுத்தருளவேணும் என்றூரே. (ஏநாம்) இப்படி நோற்றுப்பிறந்தவளை. (ப₄த்₃ரம் தே) நோற்றுப் பிறந்தாள் என்கிறேனைத்தனைபோக்கி பேறு தேவரீரதுகாணும் என்றூரே. போக்யம் மிக்கதனையும் போக்தாவுக்குப் பேறுமிகததனையிறே. (பாணிம க்ருஹ்ணீஷ்வ) 'கை நீட்ட அறியாள்காணும், நீரே பிடியீர்' என்றூரே. கையைப் பிடிப்பது கையாலேயாயிருக்க, லோகமெல்லாம் ஒதுங்கினூலும் நிழல்விஞ்சிப போஷ்யம் சிறுக்கும்படியான வீரப்பாட்டையுடைத்தான தேவரீர் திருத்தோளிலே கண் வைத்துத் தகுதியாகத் தொழில் செய்யவல்ல கையாலே பிடியீர் என்று விசேஷித்தாரே. (பாணிநா) என்று கையை விஶேஷித்துக் கவிபாடுகிறது. இங்ஙனொத்த தலையிலே எடுத்துக்கொண்டு போம் என்றூரே. இவ்வாகாரங்கள்

---

தகுந்தவளென்று திருவுள்ளம்பற்றவேணும் என்றூரே. (ச—உம்) சகாரம அநுக்த ஸமுச்சயமாய், தகுந்தவளென்று திருவுள்ளம் பற்றுவதோடன்றியில், இவளுடைய பெருமைக்குத் தகுந்தபடியான நிரந்தர போகத்தையும் கொடுத்தருளவேணும்' என்றூரே. (இவளை) "நெடுங்காலமும் கணணன் நீ ண ம ல ர் ப் பாதம் பரவிப்பெற்ற தொடுங்காலொசியுமிடையிளமான்" [திருவிருத்தம்-37] என்றுப் போலே நோற்றுப் பிறந்தவளை. (உமக்கு மங்களமாகுக) நோற்றுப் பெற்றவள் நானுயினும், பலன் உம்முடையதல்லவோ எனறூரே. போக்யம் சிறந்ததாலல் போக்தாவுக்கன்றோ பலன் சி ற க் கு ம். (கையைப் பிடியும்) கைநீட்டவும் அறியாள்; நீரே பிடியீா என்றூரே. (கையாலே பிடியீர்) 'கையைப் பிடியீர்' என்றாலே போதுமாயிருக்க, 'கையாலே பிடியீர்' என்று சொல்லுவதனமூலம், "பா₃ஹுச்ச₂ாயாமவஷ்டப்₃தே₄ா யஸய லோகோ மஹாத்மந." [ரா-ஸு 34-31] [எந்த மஹாத்மாவினுடைய தோள்நிழலைப்பற்றி உலகெல்லாம் விளங்குகிறதோ] என்கிறபடியே உலகெல்லாம் ஒதுங்கினூலும் தோள்நிழல் அதிகமாக வும் நிழலில் ஒதுங்குவார் சிறிதாகவுமிருக்கும்படியானதாய், பராக்ரமத்தையுடையதான உம்முடைய திருத்தோளைக் கணிசித்து 'நன்றாகக் காரியம் செய்யவல்ல கையாலே பிடியீர்' என்று விசேஷித்தாரே. (கையாலே) என்று சொல்லுவது கையின் பெருமையைக் காட்டுவதற்காக. இப்படி இவள் அத்யந்தபாதந்த்ரையாயிருக்கும் தசை

ஒன்றும் தேவரீர் திருவுள்ளம் பற்றிலீரே. உம்முடைய ப்ரதிபத்தி அந்யதாவிறே இருந்தது. (இயம) என்று என்னுடைய ஸௌந்தர்யம் சொல்லுகிறார் என்று இருந்தீர். (ஸீதா) என்று என்னுடைய மாதருகுலஶுத்தி சொல்லுகிறார் என்றிருந்தீர். (மம ஸுதா) என்று என்னுடைய பித்ரு குலஶுத்தி சொல்லுகிறார் என்றிருந்தீர். (ஸஹதர்மசரீ) என்று என்னுடைய ஸௌஶீலயம சொல்லுகிறார் என்றிருந் தீர். (தவ) என்று உம்மைக் கொண்டாடுகிறார் என்றிருந்தீர். (ப்ரதீச்ச) என்று 'வரில் பொகடேன், கெடில் தேடேன்' என்றிராதே கொள்ளீர் என்கிறார் என்றிருந்தீர். சகாரத் தாலே கண்ணுக்குத்தைத்ததோ என்று கேட்டார் என் றிருந்தீர். (ஏநாம்) என்று என் தகப்பனுகையாலே ஸௌந்தர் யாதிகள் கண்ணிலேபட்டு வாத்ஸல்யததாலே சொல்லு கிறார் என்றிருந்தீர். (பத்ரம் தே) என்பக்கல் ப்ரேமத்தில் ஶதகுணமான ப்ரேமம் உம்முடைய பக்கலிலே விளைந்து

---

யிலே எடுத்துக்கொண்டுபோம் என்றுரே. பிரிவு பொறுக்காமை, சொல்பொறுக்காமை, அத்யந்த பாரதந்த்ர்யம், தர்மாநுஷ்டாந ஸஹகாரித்வம், நிரந்தரபோகார்ஹத்வம், போக்யதை முதலான இத்தன்மைகள் ஒன்றையும் நீர் அறிந்திலீர்; என் தந்தையின் வார்த்தையை நீர் விபரீதமாகப் பொருள் கொண்டீர். (இவள்) என்று என்னுடைய அழகு சொல்லுகிறார் என்றிருந்தீர். (ஸீதை-பூமியிற்பிறந்தவள்) என்று என்னுடைய தாய்குலசுத்தியைச் சொலலுகிறார் என்று நினைத்தீர். (என் பெண்) என்று தந்தைக் குலசுத்திசொலலுவதாக நினைத்தீர். (கூடவிருந்து தர்மங்களை அநுஷ் டிப்பவள்) என்று எனனுடைய ஸௌசீல்யகுணம் சொல்லுகிறார் என்று எண்ணினீர். (உமக்கு) என்று உம்மைக் கொண்டாடுவதாக நினைத்தீர். (அங்கீகரியும)என்று 'வந்தால் விடமாட்டேன்; போனால் தேடமாட்டேன' என்றிராமல் கைக்கொள்ளீர் என்கிறுரென்று எண்ணினீர். சகாரததாலே இவளுடைய அழகு கண்ணில்பட்டதோ என்று கேட்பதாக நினைத்தீர். [சகாரம் அநுக்தஸமுச்சயமாய் 'அழகையும பாரும' என்று பொருள்.] (இவளை) என்று என் தந்தை யாகையாலே என அழகு முதலானவை கண்ணில் பட்டு, தோஷங் களையும் குணமாக நினைக்கும் வாத்ஸல்யத்தாலே சொல்லுகிறார் என்று எண்ணினீர். (உமக்கு மங்களமாகுக) எனனிடமுள்ளது

த்ருஷ்டிதோஷம் வருகிறதென்றஞ்சி உமக்குக் காப்பிட்டார் என்றிருந்தீர். (பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா) என்று க்ரியாகலாபத்துக்குச் சடங்கம் சொல்லுகிறுர் என்றிருந்தீர். அப்படி ஸர்வஜ்ஞரான ஐயர் சொன்ன வார்த்தையை நேராகத் திருவுள்ளம் பற்றுதே. இன்றென்னை வைத்துப்போனீரென்ருல். (கிம் த்வாமந்யத) உம்மை ஐயர் என்ன நினைத்திருப்பர்?

(வைதேஹ:) "कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादय:" (கர்மணைவ ஹி ஸம்ஸித்$_{3}$தி$_{4}$மாஸ்தி$_{2}$தா ஜநகாத$_{3}$ய:) என்று க்ரியாகலாபாதிகளைக் கைவிடாதே மோக்ஷஸித்திக்கு யத்னிக்குமவராகையாலே ஒருமுஹூர்த்தமும்பத்நீவியுக்தரா யிருந்து பழக்கமில்லாதவர். (வைதேஹ:) என்னுமவர்; பழுதறவென்னுமவர். (வைதேஹ:) ஜந்மப்ரப்ருதி ஶோகங் கண்டறியாதவர். என்னைப் பெறுகையாலே எல்லாம் காண

---

போல் நூறு மடங்கு அன்பு உம்மிடமுண்டாகிக் கண்ணெச்சில் படப்போகிறதே என்று உமக்குப் பல்லாண்டுபாடினுர் என்றிருந்தீர். (கையைக் கையாலே பிடியீர்) என்று விவாஹகர்மத்தில் அங்கமான சடங்கொன்றைச் சொல்லுகிறுர் என்றெண்ணினீர். எல்லாமறிந்த வரான என் தந்தை அப்படிச்சொன்ன வார்த்தையின் பொருளை சரியாக அறியாமல், இன்று என்னை விட்டுக் காடுபோனீர் என்று என் தந்தையறிந்தால், (என்ன நினைப்பர்) அவர் உம்மை என்ன நினைப்பர்?

(வைதேஹர்) "ஜநகர் முதலானோர் கர்மத்தினுலேயே ஸித்தி யடைந்தனர்" [கீதை 3-20] என்று கருமங்களைக் கைவிடாமல் மோக்ஷ மடைய முயற்சிசெய்பவராகையாலே ஒரு முஹூர்த்தமும் மனைவி யைப்பிரிந்தறியாதவர். அவர் நீர் என்னைப் பிரிவதைப் பொறுப் பாரோ என்கை. (வைதேஹர்-விகததேஹாபிமானர்) எனறு சொல் லப்படுமவர். தேஹம் முதலான பழுதுகள் அற்றுப்போகவேணும் என்பவர். நீர் பழுதான இக்காரியம் செய்வதைப் பொறுப்பரோ அவர் என்கை. (வைதேஹர்-விகததேஹர்) தேஹகார்யமான துன்பங் களைப் பிறப்பிலிருந்து அறியாதவராகையாலே வைதேஹர் (தேஹ மற்றவர்) என்று பெயர்பெற்றவர். "பதி ஸம்யோக$_{3}$ ஸுலப$_{4}$ம் வயோ

வேண்டாநின்றதிறே. (பிதா மே) பிள்ளைகள் ஸமர்த்தர்க ளானால் கல்நெஞ்சராய்க் காட்டுக்கு விடவல்லாருமுண்டு. நானேதேனும் அஸமர்த்தையாகிலும் அவருக்கு வயிறு பிடியேயிறே உள்ளது. தனியிருக்கவும் பொறுக்கவும் வல்ல பிள்ளையைப் பெறாதே வகுத்தவன் நிழல்பெறில் பிழைத்து, இழக்கில் ஸத்தாநாஶம் பிறக்கும்படியான என்னைப் பெற்றுக் கெட்டாரே. (மிதிலாதிப:) ஐயர் திருவுள்ளத்திலே நோவ, அத்தேசமெல்லாம் நோமே. (மிதிலாதிப:) ஒரு தேஶத்தைத் தோள்நிழல்கீழ் இட்டுக்கொண்டிருக்கிறவர்க்கு ஒருவன் ஒருத்தியைத் தோள்நிழற்கீழ் ஒதுக்கமாட்டிற்றிலனென்றால் புண்ணாயிருக்குமே.

(ராம) ஐயோ! வடிவில் பசைபோலே இருந்ததாகில் உன் அகவாயும்! (ராம) அகவாய்கண்டு ஶத்ருக்₄நனென்று

---

த₃ருஷ்ட்வா து மே பிதா, சிந்தார்ணவக₃த: பாரம் நாஸஸாத₃ப்லவோ யதா₂" [ரா-அ 118-34] [கணவனுடன் சேர்க்கவேண்டிய பருவம் என்னை அடைந்திருப்பதைக் கண்டு, கவலைக் கடலுள் கிடந்த என் தந்தை, (கடலில் தத்தளிக்கும்) ஓடம்போலே கரைகாணவில்லை.] என்று என்னைப் பெற்றபின்பே கவலையை அறிந்தார். அவரை மேலும் பெருங் கவலைக்கடலிலே அமிழ்த்திவிடாதீர். (என் தந்தை) ஸமர்த்தர்களான பிள்ளைகளைப்பெற்ற உம் தந்தைபோல்வார் கல் நெஞ்சராய்ப் பிள்ளைகளைக் காட்டுக்கும் விரட்டுவர்கள். என்னிடம் ஸாமர்த்தியமின்மையைச் சிறிது கண்டாலும் துன்பப்படுபவ ராயிற்றே என் தந்தை. மனைவியைப் பிரிந்து தனியிருக்கவும் அதைப் பொறுக்கவும்வல்ல உமமைப்போன்ற பிள்ளையைப் பெறாமல், கைப் பிடித்தவன் நிழலிலே தங்கினால் உயிர்தரித்து, அந்நிழலையிழந்தால் அழிவுபெறும்படியான என்னைப் பெற்றுக்கெட்டாரே. (மிதிலாதிபர்) மிதிலைக்கரசரான அவர் துன்புற்றால் மிதிலாஜனங்களனைவரும் துன் புறுவரே! (மிதிலாதிபர்) ஒருதேசம் முழுவதையும் தன் தோள்பலத் தாலே காப்பாற்றுகிற அவருடைய நெஞ்சு நீர் என்னைத் தோள்வலி யாலே காப்பாற்றமுடியாதவரானீர் என்றால் என்ன பாடுபடும்?

(ராம!–ரமிக்கச்செய்பவரே) ஐயோ! உம் வெளியழகு போலே உள்ளழகும் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! (ராம) உம் கடினமான நெஞ்சைக்கண்டு சத்ருக்னன் என்று பேரிடவில்லையே!

பேரிட்டதன்றே. அது கடைக்குட்டியான தம்பியார்க்கா யிற்றே. **"राम इत्यभिरामेण वपुषा तस्य चोदितः। नामधेयं गुरुश्चक्रे जगत्प्रथममङ्गलम्॥"** (ராம இத்யபி₄ராமேண வபுஷா தஸ்ய சோதி₃த:। நாமதே₄யம் கு₃ருச்சக்ரே ஜக₃த் ப்ரத₂மமங்க₃ளம) என்று உம்முடைய அழகுமாத்ரத்துக்கன்றே வஸிஷ்டன் பேரிட்டது. அஜ்ஜகத்தோடும் எனக்கு உறவற்றதிறே (ராம) **"सहस्रनामतस्तुल्यं"** (ஸஹஸ்ரநாமதஸ் துல்யம்) என்று ஆயிரம் பேருடைய ஶக்திக்கு ஸமாநமாய், தனித்தனியே எழுந்திரா நின்றதாயிற்று.

நாம் இங்ஙனேயாகவேணுமோ? (ஜாமாதரம்) உங்கள் ஐயருக்கு மூத்தபிள்ளையாளுப்போலே எங்களையருக்கும் மணவாளப்பிள்ளையானீரே. (ஜாமாதரம்) **"जामाता दशमो ग्रहः"** (ஜாமாதா த₃ஶமோ க்₃ரஹ:) என்று பெண்பிள்ளை பெற்றுக் கொடுத்தார்க்கு க்ரஹம் பத்தாயிறே இருப்பது. (ப்ராப்ய)

---

அப்பெயர் கடைசித்தம்பிக்காயிற்றே. "அழகிய அவனுடைய வடிவால் தூண்டப்பட்டவராய் உலகிற்கு முதல் மங்களமான 'ராமன்' [ரமிக்கச் செய்பவன்] என்னும் பெயரை குருவான வஸிஷ்டர் இட்டருளினர்" [ரகுவம்சம் 10-67] என்று உம்முடைய வெளியழகை மட்டும் கண்டன்றே ஸ்ரீவஸிஷ்டபகவான் பெயரிட்டது. 'உலகிற்கு முதல் மங்களமான ராமநாமத்தை' என்றதில் சொல்லப்பட்ட உலகிலும் நான் சேராதவளாய்விட்டேனே. "இவற்றின் புறத்தாளென்றெண்ணோ" [திருவிருத்தம் 33]. (ராம) "ஸஹஸ்ரநாமதஸ் துல்யம் ராமநாம வராநநே!" [அழகியவளான பார்வதியே! ராமநாமமானது ஆயிரம் நாமங்களுக்கும் ஸமானமானது] [பார-ஸஹஸ்ர நாமாத்யாயம்] என்று ஆயிரம் பெயர்களுடைய சக்தியையும் தானே கொண்டு என்னை நலிவதற்குத் தனியே எழுந்திருந்த பெயர் இருந்தபடியென்!

'நான் இப்படி நலிவதற்குக் காரணமென்ன?' என்று ராமன் கேட்பதாக நினைத்துச் சொல்லுகிறாள்,-(மாப்பிள்ளையை) உம் தந்தைக்குப் பிள்ளையானுப்போலே என் தந்தைக்கு மாப்பிள்ளையானீரே! அது போராதோ? (மாப்பிள்ளையை) "மாப்பிள்ளை பத்தாவது கிரஹமாவான்" என்கிறபடியே பெண் பெற்றுக்கொடுத்தவர்களை ஆட்டிவைப்பதற்கு நவக்ரஹங்களுக்குமேலே, அவை

*தாமே உகந்து செய்ததாகையாலே ஒருவர் முகம்பார்த்து வெறுக்க விரகில்லையே.* (ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்) *உம்முடைய முடியும் உடையும் பேதித்த பெண்டாட்டியானீரே.* (புருஷவிக்ரஹம்) *அது தனக்கு நிலையுண்டாமாகில் காட்டிலும் துணையாமிறே.* (புருஷவிக்ரஹம்) *புறம்பூச்சான ஆண் தோலிறே படைவடித்தது.* (புருஷவிக்ரஹம்) *உடம்பு எரி குத்தாதே நாட்டுவயலுக்கு மிரள் காட்டினுப்போலே பேர் சுமந்தீரித்தனையிறே.* (புருஷவிக்ரஹம்) *அகவாய் ஸ்த்ரீயும் புறவாய் புருஷனுமான ஸ்த்ரீ புருஷக்கலப்பை த்ருதீய ப்ரக்ருதி யென்பார்கள் நாட்டார். த்ருதீயப்ரக்ருதியை நாடு சொல்லும் பேரை நான் சொல்ல அஞ்சினேன். நாடுதானும் சொல்லாதிறே! ஆண்பிள்ளைச் சொற்ருழ்வி என்னுமித்தனையிறே.*

---

யெல்லாவற்றின் சக்தியையும்கொண்ட மாப்பிள்ளையும் சேர்ந்து க்ரஹங்கள் பத்தாயனரோ இருப்பது! (அடைந்து) தாமே தேடி அடைந்ததாகையாலே ஒருவரிடம் போய்ப் பேச வழியில்லையே. (ஆணுடம்பையுடைய ஸ்த்ரீயான உம்மை) ஆண்களுக்குள்ள மயிர் முடியும் உடையும் கொண்டவராயிருந்தும் குணங்களில் பெண்ணானீரே! (ஆணுடம்பையுடைய) நிலையான பெண்ணாகவாவது இருந்தால், பெண்களை ஒருவரும் ஹிம்ஸிக்கமாட்டார்களாகையால், காட்டிலும் துணையாகக்கூடும். ஆணுடையுடுத்திய பெண்ணாகையால் நீர் காட்டிலும் துணையாகமாட்டீர். (ஆணுடம்பையுடைய) வெளிப்பூச்சான ஆண்தோலல்லவோ ஆயுதம் பிடித்திருககிறது. (ஆணுடம்பையுடைய) உடம்பிலே செம்புள்ளி கரும்புள்ளிகள் குத்தாமல் வயலுக்கு மிரள் கட்டினுப்போலே ஆணென்று பேர் சுமந்து கொணடிருக்கிறீர். [பட்சிகள் தானியங்களை எடுத்துச் செல்லாமலிருப்பதற்காக, அவைகளை மிரளச்செய்வதும், செம்புள்ளி கரும்புள்ளிகள் குத்தப்பெற்றதுமான மனிதவுருவமொன்று வயல்களிலே நாட்டப்பட்டிருக்கும். அதற்கு 'மிரள்' என்று பெயர்.] (ஆணுடம்பையுடைய) உள்ளே பெண்ணும் வெளியிலே ஆணுமான ஆண்பெண்கலப்பை ''மூன்ருவது வஸ்து'' என்பார்கள் ஜனங்கள். அந்த மூன்ருவது வஸ்துவுக்கு உலகம் சொல்லும் [அலி, பேடி என்னும்] பெயரை நான் சொல்லப் பயப்படுகிறேன்! உலகமும் பெயரையிட்டுச் சொல்லுவதில்லையே! ''ஆண்பிள்ளைச் சொற்ருழ்வி'' என்றல்லவோ அந்த த்ருதீயப்ரக்ருதியைச் சொல்லுவது.

அயோத்யாகாண்டம் 31-வது ஸர்க்கம் 2-வது ச்லோகம்

स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः।
सीतामुवाचातियशा राघवञ्च महाव्रतम्॥

ஸ ப்₄ராதுச்சரணௌ கா₃ட₄ம நிபீட்₃ய ரகு₄நந்த₃ந: |
ஸீதாமுவாசாதியஶா ராக₄வஞ்ச மஹாவ்ரதம் ||

**பதவுரை:**–**ரகு₄நந்த₃ந:**–*ரகுகுலத்தை ஆநந்திப்பிப்பவராய்,* **அதியஶா:**—*மிகுந்த கீர்த்தியை உடையவரான,* **ஸ:**—*அந்த லக்ஷ்மணன்,* **ப்₄ராது:**-*தமயனுருடைய,* **சரணௌ**–*திருவடிகளை,* **கா₃ட₄ம்**—*நன்ருக,* **நிபீட்₃ய**–*பிடித்துக்கொண்டு,* **ஸீதாம**–*சீதா பிராட்டியையும்,* **மஹாவ்ரதம்**—*பெரிய விரதத்தையுடைய,* **ராக₄வம் ச**—*ஸ்ரீராமனையும் (பார்த்து),* **உவாச**–*சொன்னுர்.*

**அவ:**— *சக்ரவர்த்தித்திருமகன் வநவாஸோந்முகனுன தசையிலே, திருவயோத்யையிலுள்ளார்க்கு ரக்ஷகராகவும், ஸ்ரீபரதாழ்வானுக்குத் துணையாகவும் நில்லென்று இளைய பெருமாளை அருளிச்செய்ய, காட்டிலும் கூடப்போய் அடிமை செய்கையிலுண்டான ருசியாலே, அருளிச்செய்த வார்த்தை அஸஹ்யமாய், கூடப்போகவேணுமென்று பிராட்டி முன்னிலாகப் பெருமாள் திருவடிகளிலே ஶரணம் புகுருகிருர்.*

**வ்யா:**— (ஸ:) *அவதரித்தவிடத்திலும் அடிமைசெய்ய வேணுமென்று பரமபதத்தில்நின்று தொடர்ந்துபோந்து,*

---

அவதாரிகை:–(ஸ ப்ராது:) ஸ்ரீராமபிரான் காடுசெல்லப் புறப்பட்ட தசையிலே, "திருவயோத்தியிலுள்ளாரைக் காப்பாற்றுவதற்காகவும், ஸ்ரீபரதாழ்வானுக்குத் துணையாகவும் நில்" என்று லக்ஷ்மணனை நோக்கிச்சொல்ல, காட்டிலும் கூடச்சென்று கைங்கரியம் செய்யவேண்டுமென்னும் ஆசையாலே ராமன் அருளிய வார்த்தையைப் பொறுக்காமல் 'நானும் கூடக் காட்டுக்குப் போக வேணும்' என்று பிராட்டியைப் புருஷகாரமாகப்பற்றிப் பெருமாள் திருவடிகளிலே சரணம் புகுகிருர் இளையபெருமாள்.

**வ்யாக்யானம்:**—(அவா) பகவான் அவதாரம் செய்தபோதும் அடிமைசெய்ய நினைத்து பரமபதத்திலிருந்து கூடவந்து அவதரித்த

கூடத் திருவவதரித்தபின்பு "**बाल्यात्प्रभृति सुस्निग्धः**" (பா₃ல்யாத் ப்ரப்₄ருதி ஸுஸ்நிக்₃த₄:) என்கிறபடியே எல்லா அவஸ்தை களிலும் பிரியாதேபோந்து "**जलान्मत्स्याविवोद्धृतौ**" (ஜலாந் மத்ஸ்யாவிவோத்₃த்₄ருதௌ) என்று அந்வயத்தில் தரித்து. வ்யதிரேகத்தில் முடியும்படியான இளையபெருமாள். (ப்ராது:) இவருடைய அநுவ்ருத்தியைக்கொண்டு அவ்வழியிலே அவரை ப₄ரித்துக்கொண்டு போந்தவர். (**ப்ராது:**) ப்ராதாவி னுடைய. நாராயணனுடைய என்றபடி. "**माता पिता भ्राता निवासश्शरणं सुहृद्गतिर्नारायणः**" (மாதா பிதா ப்₄ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத்₃ க₃திர் நாராயண:) என்னக்கடவதிறே. பூர்வவாக்யத்தில் ப்ரதமபதம் ஷஷ்ட்யந்தம் என்னுமிடம் தோற்ற 'நாராயணஸ்ய' என்றிறே இருப்பது. (**சரணௌ**) '**நாராயணஸ்ய சரணௌ**' என்றபடி. (சரணௌ) என்ற த்வி வசநத்துக்கு ப்ரயோஜநம் "சரக₃திப₄க்ஷணயோ:" என்கிற

---

பின்பு, "லக்ஷ்மணன் இளமையிலிருந்தே ராமனிடம் மிகவும் அன் புள்ளவன" [ரா-பா 18-27] என்கிறபடியே எல்லா நிலைகளிலும் பிரி யாமலிருந்து "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக₄வ, முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யாவிவோத்₃த்₄ருதௌ [ரா-அ53-31] [ராகவரே! உம்மைப் பிரிந்த ஸீதையும் பிழைக்கமாட்டாள்; (உம்மைப்பிரிந்த) நானும்இல்லையாய்விடுவேன்.பிழைத்தோமாகில்,ஜலத்திலிருந்து எடுக் கப்பட்ட மீன்களைப்போல் சிறிதுகாலமே பிழைத்திருப்போம்.] என்று கூடி யிருந்தபோது உயிர்தரித்து, பிரிந்தபோது முடிந்துபோகும்படியான இளையபெருமாள். (ப்ராதாவினுடைய) இவருடைய கைங்கரியத்தை ஏற்றுக்கொண்டு அவ்வழியாலே இவரை ரக்ஷித்தவரான பெருமா ளுடைய. "ப₄ரதஞ்ச ப்₄ராதா". (ப்ராதாவினுடைய) நாராயணனுடைய என்றபடி. "மாதாவும், பிதாவும், ப்ராதாவும், தங்குமிடமும், உபாய மும், நண்பனும், உபேயமும் நாராயணனே" [ஸுபாலோபனிஷத்] என்று சொல்லப்பட்டதன்றோ. த்வயத்தில் பூர்வவாக்யத்தில் "ஸ்ரீமந் நாராயண" என்ற முதல்பதம் ஆறுவது வேற்றுமையைக் கொண் டது என்பது தெரியும்படியாக இங்கு "ப்ராது:-நாராயணஸ்ய" என்று ஆறுவது வேற்றுமையாயிருக்கிறது. (இருதிருவடிகளை) "நாராயணனுடைய இருதிருவடிகளை" என்று த்வயத்தில் சொன்னப் போலே இருக்கிறது. "சரணம்' என்று ஒருமையாகச் சொன்னாலே

தாதுவிலே ப்ராப்யமுமாய், ப்ராபகமுமாயிருக்கும் என்கைக்காக. **(சரணௌ)** கையைப்பிடித்து அபேக்ஷித்தால் மறுக்கலாம்; மறுக்கவொண்ணாதபடி திருவடிகளைப்பிடித்து. அடிமைசெய்ய இழியும்துறையிறே ஆச்ரயிக்கும் துறை. **(காடம் நிபீட்ய)** வ்யதிரேகத்தில் தரிக்கமாட்டாத தம்முடைய அபிநிவேசமெல்லாம் தோற்றும்படி பிடித்து. **(காடம்)** காடமென்கிறது, இவை யதார்த்தமென்கிறது. ஸ்வீகாரத்தைச் சொன்னபடி. **(ரகுநந்தந:)** ஜ்யேஷ்டாநுவ்ருத்தியை உகந்து போரும் ரகுகுலத்தாரெல்லாரையும் தம்முடைய அநுவ்ருத்தியாலே உகப்பித்தவர்.

**(ஸீதாமுவாச)** பிராட்டியையும் பார்த்துவார்த்தை சொன்னார். திருவடிகளைப் பிடித்துச் செவியிலே வார்த்தை

---

ஜாத்யேகவசனமாய் இரு திருவடிகளையும் காட்டக்கூடியதாயிருக்க, இருமை [த்விவசனம்] யாகப் பிரயோகித்தது "சரக₃திப₄க்ஷணயோ:" ['சர' என்னும் தாது கமந ஸாதநத்தையும், [போக்யமாக] உண்பதையும் சொல்லும்.] என்ற தாதுவிலிருந்து உண்டான சரண சப்தத்துக்கு ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் என்னும் இரண்டு தன்மைகள் உண்டென்று காட்டுவதற்காக. "சரணௌ சரணம் பரபத்₃யே" என்கையாலே கதிப்பொருளான மோக்ஷஸாதநத்வமும், "விஷ்ணோ: பதே₃ பரமே 'மத்₄வ உத்ஸ:" [விஷ்ணுவின் மேலான திருவடியில் தேன் ஒழுகுகிறது.]என்கையாலே பக்ஷணார்த்தமானமோக்ஷப்ராப்யத்வமும் இத்திருவடிகளுக்குச் சொல்லப்பட்டனவன்றோ. (திருவடிகள்) கையைப்பிடித்துக் கெஞ்சினாலும் மறுக்கலாமாகையாலே மறுக்க முடியாதபடி திருவடிகளைப் பிடித்துச் சொன்னார். கைங்கரியம்செய்ய முற்படுமிடமான திருவடிகளே ஆச்ரயிக்குமிடமாகவுமுள்ளதன்றோ. (நன்றாகப் பிடித்து) பிரிந்தால் உயிர்தரிக்கமாட்டாத தம்முடைய ஆசையெல்லாம் தோற்றும்படி பிடித்து. (நன்றாக) என்று சொல்லுவதிலிருந்து இவர் சொல்லுமவை மந:பூர்வமாகச் சொல்லும் உண்மை வார்த்தைகள் என்று தெளிவாகிறது. "சரணம் ப்ரபத்யே" என்ற உபாய ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது. (ரகுக்களை உகப்பிப்பவர்) தமயனுக்குக் கைங்கரியம் செய்வதை விரும்பும் ரகுகுலத்தாரெல்லாரையும் தான் தமயனுக்குச் செய்யும் சிறந்த கைங்கரியத்தாலே ஆநந்திப்பிக்குமவர்.

சொல்லுவாரைப்போலே. திருமுகத்தாலேயிறே ஆச்ரயணோந்முகரான சேதநருடைய வார்த்தை கேட்டருளுவது. (அதியஶா:) மிக்க யஶஸ்ஸை உடையவர். தானும் ராஜகுமாரனுயிருக்க, இழிதொழிலென்று பாராதே "अहं सर्वं करिष्यामि" (அஹம ஸர்வம் கரிஷ்யாமி) என்று ஒருவன் ஜ்யேஷ்டாநுவர்த்தனம் பண்ணினபடியே! என்று லோக மடங்க ஆச்சர்யப்படும்படியான வார்த்தைப்பாடுடையவர். (ராகவஞ்ச மஹாவ்ரதம்) மஹாவ்ரதரான பெருமாளைப்பார்த்தும் வார்த்தை சொன்னுர். (ராகவஞ்ச) ஶரணுகத விஷயத்தில் புருஷகாரம் வேண்டாதபடியான பிறப்பையுடையவரை. (மஹாவ்ரதம்) குடிப்பிறப்புதான் மிகுதியென்னும்படி "अभयं

---

(சீதையிடம் சொன்னுர்) திருவடிகளைப் பிடித்துக் காதிலே வார்த்தை சொல்லுவாரைப்போலே பிராட்டியைப்பார்த்து வார்த்தை சொன்னுர். "ச்ருணோதி ச்ராவயதீதி ஶ்ரீ:" [தான் (ஆச்ரிதர் வார்த்தையைக்) கேட்டு எம்பெருமானையும் (அவற்றைக்) கேட்பிக்கிருளாகையால் 'ஶ்ரீ' எனப்படுகிருள்] என்கிறபடியே தான் கேட்பதும், எம்பெருமானைக் கேட்பிப்பதும் செய்கையாலே எமபெருமானுக்குக் காதுபோன்றவளன்றோ பிராட்டி. திருமுகத்தாலேயன்றோ ஆச்ரயணோந்முகரான சேதனருடைய வார்த்தையை பகவான் கேட்டருளுவது. [இது சாடூக்தி. இரண்டு பொருள்கள்:-(1) தன் திருமுகத்தாலேயன்றோ ஆச்ரயிக்க விரும்பும் சேதனருடைய வார்த்தை கேட்பது. (2) ஆச்ரயிக்க முகம்பார்க்கும் சேதனருடைய வார்த்தைகளைத் திருவாகிற (பிராட்டியாகிற) முகததாலேயன்றோ (அல்லது பிராட்டியின் மூலமாயன்றோ) கேட்டருளுவது.] (மிகவும் கீர்த்தியுள்ளவர்) தானும் ராஜகுமாரனுயிருந்தபோதிலும், அடிமை செய்வது இழிதொழில் என்று நினையாமல் "நான் எல்லா அடிமையும் செய்வேன்" [ரா-அ 31-25] என்று இவன் தமயனுக்கு அடிமை செய்தபடியென்! என்று உலகமெல்லாம் ஆச்சரியப்படும்படியான கீர்த்தியை உடையவர். (மஹாவ்ரதரான ராகவரையும்) பார்த்து வார்த்தை சொன்னுர் எனறு கூட்டிககொள்வது. (ராகவரையும்) சரணுகதனை ரக்ஷிக்கும விஷயத்தில் புருஷகாரமும்—(சிபாரிசு செய்வோரும்)— வேணடாதபடியான குடிப்பிறப்பை உடையவர். ரகுராக்ஷஸஸம்வாதத்தில் ப்ரஸித்தமன்றோ இவர்களுடைய சரணுகதரக்ஷகத்வம் என்று பாவம். (பெரிய விரதமுடையவரை) நற்குடிப்பிறப்பும் வேண்

सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम"(அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$த$_3$ாம் யேதத்$_3$ வ்ரதம் மம) என்று ஸர்வலோகபூஜ்யமான ஸங்கல்பத்தை உடையவரன்றோ தேவர். 'ஸர்வ பூதங்களும்' என்றால் உம்மால் வரும் பயம் பரிஹரிக்கவேண்டாவோ என்று கருத்து. அதியஶா: ரகுநந்தந: ஸ: ப்ராதுச்சரணௌ காடம் நிபீட்ய ஸீதாமுவாச।

அயோத்யாகாண்டம் 31-வது ஸர்க்கம் 25-வது ச்லோகம்

भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते॥

ப$_4$வாம்ஸ்து ஸஹ வைதே$_3$ஹ்யா கி$_3$ரிஸாநுஷு ரம்ஸ்யதே।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்$_3$ரத: ஸ்வபதச்ச தே॥

பதவுரை:—*ஸ்ரீராமனே!* ப$_4$வாம்ஸ்து — *தேவரீரே,* வைதே$_3$ஹ்யா ஸஹ—*சீதாபிராட்டியோடுகூட,* கி$_3$ரிஸாநுஷு—*மலைத்தாழ்வரைகளில்,* ரம்ஸ்யதே—*விளையாடுவீர்;* அஹம்—*அடியேன்,* ஜாக்$_3$ரத: ஸ்வபத:—*விழித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டுமிருக்கிற உமக்கு,* ஸர்வம்—*எல்லா அடிமைகளையும்,* கரிஷ்யாமி—*செய்வேன்.*

அவ:— "ஸ ப்$_4$ராது:" *என்கிற ச்லோகத்தாலே ஶரணம் புக்கால், அந்த ஶரணாகதிக்குப் பலம் கைங்கர்யம் என்று ஸப்ரகாரமாகப் பலத்தைச்சொல்லுகிறது இச்லோகத்தாலே.*

---

*டாதபடி "எல்லா பூதங்களிடமிருந்தும் (சரணாகதனுக்கு) அபயமளிக்கிறேன். இது என் விரதம்" [ரா-யு 18-33] என்கிற மஹனீயமான — எல்லாவுலகும் கொண்டாடும்—விரதத்தையுடையவரன்றோ தேவரீர். "எல்லா பூதங்களிடமிருந்தும் அபயமளிக்கிறேன்" என்றால் உம்மிடமிருந்து ஏற்படும் கைங்கரியம் கொள்ளாமையாகிற பயத்தைத் தவிர்க்கவேண்டாமோ என்று கருத்து.*

*அவ:—(பவாம்ஸ்து) "ஸ ப்ராது:" என்ற முன் ச்லோகத்திலே சரணம்புகுந்தபடியைச்சொல்லி, அந்த சரணாகதிக்குப் பலம் கைங்கரியம் என்று ஸ்வபாவங்களுடன் கூடிய பலத்தைச் சொல்லுகிறது*

திருவயோத்யையில் வர்த்திக்கிற காலத்தில் அடிமை பூண்ட என்னோபாதி அங்குள்ளாருமடிமைசெய்ய, நானும் விழுக் காட்டிலே அடிமைசெய்யப்போந்த என்னை, வநவாஸத்துக் குக் கூடப்போவேனாக இசைந்த உபகாரஸ்ம்ருதியாலே காட் டிலும் ஸர்வாவஸ்தையிலும் ஸர்வஶேஷ வ்ருத்திகளும் பண் ணக்கடவன்; என்னைக்கொண்டு எழுந்தருளீர் என்கிறார் என்றுமாம்.

வ்யா:— (**பவாம்ஸ்து**) அடிமைசெய்யப்பெறுதொழிந்த என்னைப்போலன்றியிலே பூர்ணனாகையாலே,உமக்கு அடிமை கொள்ளாவிடினும் செல்லும்; ஆகிலும் விஶேஷமுண்டிறே. ஆனாலும் என்னுடைய ஸ்வரூபஸித்$_3$த்$_4$யர்த்த$_2$மாக அடிமை கொண்டருளவேணும். (**ஸஹ வைதேஹ்யா**) அடிமை செய்யுமிடத்தில் ம்ருகவதார்த்தமாகப் போகுமிடத்திலே ஸஹகரிக்குமதொழிய, பிராட்டியும் தேவரும் கூட எழுந் தருளியிருக்கும் இருப்பிலே அடிமை செய்யக்கடவேன்.

---

இந்த ச்லோகத்தாலே. "தே$_3$வாநாம் பூரயோத்$_4$யா" என்கிற பரமபதத் திலும், திருவயோத்தியிலும் வாழும்போது "யதே$_2$ாசிதம் சேஷ இதீரிதே ஜனை:" [ஸ்தோ-ர-40] என்று சேஷன் எனனும் ஸ்வரூபநிரூபக மான நாமத்தையுடைய என்னைப்போலே அங்குள்ளார் பலரும் அடிமைசெய்ய, நானும் ஒரு சிறிது அடிமை செய்துபோந்த என்னை வநவாஸத்துக்குக் கூடவரும்படி அங்கீகரித்த நன்றியறிவாலே காட்டிலும எல்லா நிலையிலும் எல்லா அடிமைகளும் செய்கிறேன்; என்னைக் கூட்டிக்கொண்டு போகவேணும் என்கிறார் இந்த ச்லோகத் தாலே என்றும் கொள்ளலாம்.

வ்யா:-(தேவரீரோவெனில்) அடிமை செய்யப்பெறுவிடில் நான் உயிர்தரியேன்; நீரோவெனில் நிறைவாளராகையாலே கைங்கரியம கொள்ளாவிடிலும் உயிர்வாழக் கூடியவர். ஆனாலும், என்னுடைய அடிமையைக் கொண்டால் உமக்கும் அதிசயம்-(பெருமை)-உண்டு. எப்படியானாலும் என்னுடைய சேஷத்வஸ்வரூபம் நிலைநிற்பதற் கர்கக் கைங்கரியம் கொண்டருளவேணும். (வைதேஹியுடன் கூட) அடிமைசெய்யும்போது வேட்டையாடப்போகும்போது கூடவந் தடிமை செய்வதோடன்றியில், பிராட்டியும் தேவரீரும் கூட எழுந் தருளியிருக்கும்போது அடிமை செய்யவேண்டும்.

**(கிரிஸாநுஷு ரம்ஸ்யதே)** *அவளோடே கூட அடிமை செய்யுமிடத்திலும் பர்ணஶாலையிலே எழுந்தருளியிருக்க அடிமை செய்யுமளவன்றிக்கே ஜலக்ரீடை பண்ணி மலைத தாழ்வரைகளிலே ஒருவர்க்கொருவர் வெற்றிசொண்டாடி ரஸிக்குமளவிலும் அடிமைசெய்யக்கடவேன்.* **(அஹம்)** *தாஸ்ய ரஸங்களில் யாரெருவனுய் அடிமைசெய்யவேணும். அவ் வவஸ்தைகளில் அதுவே ஸ்வரூபமாக உடையனுன நான்.* **(ஸர்வம் கரிஷ்யாமி)***ம்ருகயார்த்தமாகப் போமிடத்தில் கையும வில்லுமாயடிமைசெய்தும், காயும் கிழங்கும் கல்லுமிடத்தில் கநித்ரபிடகாத₄ரனுய் அடிமைசெய்தும்.* **"इदं मेध्यमिदं स्वादु" (இத₃ம் மேத்₄யமித₃ம் ஸ்வாது₃)** *என்னுமிடத்தில் மாம்ஸ பசநம் பண்ணியும், பர்ணஶாலாநிர்மாணத்தில்* **"क्रियतामिति मां वद" (க்ரியதாமிதி மாம் வத₃)** *என்று எல்லா அடிமைசெய்தும்*

---

(மலைத் தாழ்வரைகளிலே விளையாடுவீர்) பெருமாளும் பிராட்டியும் கூடியிருக்கும் இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்யும் போதும், பர்ணசாலையில் எழுந்தருளியிருக்கும்போது அடிமை செய்வதோடன்றியில் மலைத்தாழ்வரைகளிலே நதிஜலங்களில் விளையாடி "த்வாமாஹஸீதா பு₃ஹூவாக்யஜாதம்" [ரா-ஆ 63-12] [லக்ஷ்மணு! உன்னைநோக்கி ஸீதை பல (வெற்றி) வாக்கியஙகளைச் சொன்ஞள்] என்ருப்போலே ஒருவர்க்கொருவர் வெற்றிகொண்டாடி ரஸிக்கும் போதும் கைங்கரியம் செய்யக்கடவேன். (நான்) அடிமைச்சுவைகளை நான் ஒருவனே அநுபவிக்கும்படி அடிமைசெய்யவேணும். எல்லா நிலைகளிலும் சேஷத்வத்தையே ஸ்வரூபநிரூபகதர்மமாக உடைய நான். (எல்லா அடிமையும் செய்வேன்) வேட்டையாடப் போகுமிடத்தில் கையும் வில்லுங்கொண்டு அடிமைசெய்தும், காயும் கிழங்கும் வெட்டுமிடத்தில் மண்வெட்டியும் கூடையும் சுமந்து அடிமை செய்தும், "இத₃ம் மேத்₄யமித₃ம் ஸ்வாது₃ நிஷ்டப்தமித₃மக்₃நிநா ஏவ மாஸ்தே ஸ த₄ர்மாத்மா ஸீதயா ஸஹ ராக₄வ:" [ரா-அ 96-2] ['இந்த மாமிசம் பரிசுத்தமானது; இது இனியது; இது அக்னியினுலே பக்குவம் செய்யப்பட்டது' என்று இப்படிச் சொல்லிக்கொண்டு பிராட்டியுடன் கூடப்பெருமாள் எழுந்தருளியிருககிருர்.] என்றிருக்கும் தசையில் மாமிசத்தைப் பக்குவம்செய்தும், பர்ணசாலையைக் கட்டும் போது, "ஸ்வயம் து ருசிரே தே₃சே க்ரியதாமிதி மாம் வத₃" [தேவரீரே அழகியதோரிடத்தில் (பர்ணசாலை) கட்டப்படட்டும் என்று என்னை

*மலைத்தாழ்வரைகளிலே ஜலக்ரீடை பண்ணுமிடத்தில் வல்கலை பிழிந்து உலர்த்தியும், ராக்ஷஸர் வேட்டையாடுமிடத்தில் காவலாயிருந்தும் ஸர்வசேஷவ்ருத்திகளும் பண்ணக்கடவேன்.* (ஜாக்ரதஸ் ஸ்வபதச்ச தே) *தேவரும் பிராட்டியும் கண்வளர்ந்தருளும்போது, காட்டில் துஷ்டஸத்வங்களும் துஷ்டப்ரக்ருதியான ராக்ஷஸஜாதியும் கிட்டாதபடி கையும் வில்லுமாய் நோக்கியும், உணர்ந்தருளினபோது எல்லா வடிமைசெய்தும் போரக்கடவேன் என்றபடி.*

**அயோத்யாகாண்டம் 40-வது ஸர்க்கம் 8-வது ச்லோகம்**

**रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम्।**
**अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम्॥**

**ராமம் த$_3$ஶரத$_2$ம் வித்$_3$தி$_4$ மாம் வித்$_3$தி$_4$ ஜநகாத்மஜாம் |**
**அயோத்$_4$யாமடவீம் வித்$_3$தி$_4$ க$_3$ச்ச$_2$ தாத யத$_2$ாஸுக$_2$ம் ||**

**பதவுரை**:—**தாத**-*குழந்தாய்!* **ராமம்**–*ஸ்ரீராமனை*, **த$_3$ஶரத$_2$ம்**-*தசரதசக்ரவர்த்தியாக* **வித்$_3$தி$_4$**–*நினைத்திரு;* **ஜநகாத்மஜாம்**–*சீதாபிராட்டியை,* **மாம்**—*நானுக,* **வித்$_3$தி$_4$**—*நினைத்திரு;* **அடவீம்**—*காட்டை,* **அயோத்$_4$யாம்**-*அயோத்யாபட்டணமாக,* **வித்$_3$தி$_4$**—*அறிவாயாக;* **யத$_2$ா ஸுக$_2$ம்**—*ஸுகமாக,* **க$_3$ச்ச$_2$**—*செல்வாயாக.*

---

*ஆஜ்ஞாபிக்கவேணும்] [ரா·ஆ 15·7]* என்று எல்லாக் கைங்கரியங்களும் செய்தும், *மலைத்தாழ்வரைகளிலே ஜலக்ரீடை பண்ணும்* போது மரவுரியைப் பிழிந்து உலர்த்தியும், ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்யும்போது பிராட்டிக்குக் காவலாயிருந்தும், ஆக இப்படி எல்லாக் கைங்கர்யங்களும் செய்யக்கடவேன். (நீர் விழித்துக் கொண்டிருக்கும்போதும் தூங்கும்போதும்) தேவரீரும் பிராட்டியும் தூங்கும்போது, காட்டில் துஷ்டப்ராணிகளும் துஷ்டஸ்வபாவர்களான *ராக்ஷஸர்களும்* அணுகாதபடி கையிலே விற்கொண்டு ரக்ஷிப்பேன். *விழித்திருக்கும்போது* எல்லாவடிமைகளையும் செய்யக்கடவேன்.

அவதாரிகை:-ஸ்ரீஸௌமித்ரையார், பெருமாள் பக்கலுண்டான வாத்ஸல்யத்தாலும், இளையபெருமாள்பக்கல் ஹித பரதையாலும், **"अहं त्वाऽनुगमिष्यामि वनमग्रे धनुर्धरः"** (அஹம் த்வாऽநுக₃மிஷ்யாமி வநமக்₃ரே த₄நுர்த₄ர:) என்றும், **"अनुज्ञातश्च भवता पूर्वमेव यतोऽस्म्यहं। किमिदानीं पुनरितं क्रियते मे निवारणम्।"** (அநுஜ்ஞாதச்ச ப₄வதா பூர்வமேவ யதோஸ்ம்யஹம் | கிமித₃ாநீம் புநரித₃ம் க்ரியதே மே நிவாரணம் ||) என்றும் மன்றுடிக் கூடப் போக ஒருப்பட்ட இளையபெருமாளை அதிசங்கைபண்ணி, இங்கு படைவீட்டிலுண்டான பந்துபோகங்களைக் குவாலாக நினைத்துக் கால்தாழாதே, எல்லா உறவுமுறையும் பெருமாளும் பிராட்டியுமாக நினைத்துக் கூடப்போம் என்கிறாள்.

**வ்யாக்யானம்:—(ராமம் தஶரதம் வித்தி)** "பெற்றார் பெற்றொழிந்தார்" என்று ஔபாதிக பந்துக்களான எங்களைக் குவாலாக நினைத்திராதே, **"देवदेवो हरिः पिता" (தே₃வதே₃வோ ஹரி: பிதா)** என்றும், "ஒளியுளார் தாமேயன்றே தந்தையுந் தாயுமாவார்" என்றும் சொல்லுகிறபடியே நிருபாதிக பிதா

---

அவதாரிகை:—(ராமம் தசரதம்) ஸ்ரீஸௌமித்ராதேவியார் ஸ்ரீராமனிடத்திலுள்ள வாத்ஸல்யத்தாலும் லக்ஷ்மணனுக்கு நல்ல உபதேசம் செய்யவேண்டுமென்னும் நினைவினாலும், "நான் வில்லேந்தியவனாய், உமக்கு முன்னால் காட்டிற்குக் கூடச்செல்வேன்" [ரா-அ 31-3] என்றும் "முன்பே கூடவர உம்மால் அனுமதிக்கப்பட்டிருக்கிறேன்; அப்படியிருக்கும்போது மறுபடியும் என்னை ஏன் தடுக்கிறீர்?" [ரா-அ 31-7] என்றும் கெஞ்சிக் காட்டிற்குக் கூடச்செல்ல முற்பட்ட லக்ஷ்மணனையும் ஸந்தேஹித்து, 'இங்கு அரண்மனையிலுள்ள உறவினர்களையும் இன்பங்களையும் பெரிதாக நினைத்துத் தங்கிவிடாமல், எல்லா உறவினரும் ராமனும் ஸீதையுமே என்று நினைத்துக் கூடப் போவீர்' என்கிறாள்.

வ்யா:— 1. (ராமனை தசரதனாக அறிவீர்) "பெற்றார் பெற்றொழிந்தார்" [பெரியதிரு 8-9-7] என்கிறபடியே கர்மஸம்பந்தத்தால் உறவினரான எங்களைப் பெரிதாக நினையாமல் "தேவதேவனான ஹரியே தந்தையாவான்" [வி-பு 1-9-126] என்றும் "ஒளியுளார்தாமேயன்றே தந்தையும் தாயுமாவார்" [திருமாலை-37] என்றும் சொல்லு

*வான பெருமாளைத் தஞ்சமாக நினைத்துப்போம்.* **(மாம் வித்தி ஜநகாத்மஜாம்)** *அப்படி ஔபாதிகமாதாவான என்னையும குவாலாக நினைத்திராதே.* **"त्वं माता सर्वलोकानाम्"** **(தவம் மாதா ஸர்வலோகாநாம)** *என்றும்,* **"अखिलजगन्मातरं"** **(அகி$_2$லஜக$_3$ந் மாதரம்)** *என்றும் சொல்லுகிறபடியே பிராட்டியையே தஞ்சமாக நினைத்துப்போம்.* **(அயோதயாமடவீம வித்தி)** **"यत्र नास्ति हरिस्तत्र वस्तव्यं न कृतात्मना। वस्तव्यं तत्र तत्रैव यत्रास्ते मधुसूदनः॥"** **(யத்ர நாஸ்தி ஹரிஸ்தத்ர வஸ்தவ்யம ந க்ருதாத்மநா। வஸ்தவ்யம தத்ர தத்ரைவ யதராஸ்தே மது$_4$ ஸூத$_3$ந:)** *என்று சொல்லுகிறபடியே பெருமாள் ஸந்நிதியிலலாத படை வீட்டை விரும்பாதே. அவருகந்த காட்டைத் தஞ்சமாக நினைத்துப்போம்.*

*அன்றியிலே* **(ராமமித்யாதி)** *லோகமர்யாதையாலே உங்களையரைப் பிரிந்திராக நினைத்திராதே.* **"ज्येष्ठो भ्राता पितृसमः"** **(ஜ்யேஷ்டே$_2$ா ப்$_4$ராதா பித்ருஸம:)** *என்கிற மர்யாதையாலே உங்கள் தமயனுரை ஐயரென்று நினைத்துப்போம்.* **(மாம்**

---

*கிறபடியே இயற்கையிலேயே தந்தையான ராமனைத் தஞ்சமாகிய தந்தையாக நினைத்துப்போம். (ஜானகியை நாகை அறியும்) அப்படியே கர்மஸம்பந்தத்தால் தாயாகிய என்னையும் பெரிதாக நினைத்திராமல், "பிராட்டியே! நீயே எல்லாவுலகுக்கும் தாய்" [வி-பு1-9-126] என்றும், "எல்லாவுலகுககும் தாயாகிய பிராட்டியை சரணமடைகிறேன்" [சரணுகதிகத்யம்-1] என்றும் சொல்லுகிறபடியே பிராட்டியையே தஞ்சமாகிய தாயாக நினைத்துப்போம். (காட்டை அயோத்தியாக நினைப்பீர்) "ஞானியாயிருப்பவன் ஹரியில்லாதவிடத்தில் வஸிக்கக்கூடாது. எங்கு மதுஸூதனன் இருக்கிருனே அங்கேயே வாழவேண்டும்" [ , ] என்று சொலலுகிறபடியே ராமன வாழாத அரண்மனையை விரும்பாமல், அவர் விரும்பிய காட்டையே இருப்பிடமாக நினைத்துப்போம்.*

*2. (ராமனை தசரதனுக நினைப்பீர்) என்று தொடங்கி உலகமரியாதையையிட்டுப் பேசுவதாகவும் கொள்ளலாம். உம் தகப்பனுன தசரதனைப் பிரிந்ததாக நினையாமல், "மூத்த ஸஹோதரன் தந்தைக்கு ஸமானமானவன்" [?] என்கிற முறையாலே, தமயனுன ராமனைத் தந்தையான தசரதனுகவே நினைத்துப்போம். (ஜானகியை*

வித்தீத்யாதி) அந்த மர்யாதையாலே மதினியாரை என்னோ பாதி தாயாராக நினைத்துப்போம். (அயோத்யாமித்யாதி) காடென்று நினைத்திராதே பெருமாள் விரும்பிற்றுகையாலே, அத்தையும் அயோத்யையோபாதி ஸ்மரித்துப்போம்.

அன்றியிலே, (ராமமித்யாதி) கஷாயபானம்போலே ஶாஸ்த்ரவச்யராய் வர்த்திக்கையன்றிக்கே, பாலே மருந்தாமாப்போலே, ரமயதாம்வரரான பெருமாளாகையாலே, அதற்கடியான குணவத்தையில் வந்தால் "गुणैर्दशरथोपमः" (கு₃ணைர் த₃ஶரதோ₂பம:) என்று உங்கள் ஐயரோடொப்பரென்று நினைத்திருக்கும். (மாம்வித்தீத்யாதி) நான் உங்களையருக்கு அநுகுணையாயிருக்குமாப்போலே இவளும் "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்றும் "तुल्यशीलवयोवृत्ताम्" (துல்யஶீல வயோ வ்ருத்தாம்) என்றும் சொல்லுகிறபடியே பெருமாளுக்கு அநுகுணையான ஆகாரத்தாலே உம்மையுகப்பிக்கும் என்று நினைத்திருக்கும். (அயோத்யாமித்யாதி) "रामाभिषवसंयुक्ताः"

---

நாளுக நினைப்பீர்) அந்த முறையாலேயே மதினியான பிராட்டியை என்னைப்போலே தாயென்று நினைத்துப்போம். (காட்டை அயோத்தியாக நினைப்பீர்) காடென்று நினையாமல், ராமன் விரும்பியதாகையாலே அதை அயோத்தியைப்போலே நினைப்பீர்.

3. (ராமனை—ரமிக்கச்செய்பவனை—தசரதனாக நினையும்) கஷாயம் குடிப்பதைப்போலே சாஸ்த்ரம் சொல்லிற்றென்று ஜ்யேஷ்ட கைங்கரியம் செய்யாமல், இனியதான பாலே வியாதிக்கு மருந்தாவது போல் ரமிக்கச்செய்வோரில் சிறந்தவரான ராமனாகையாலே, அதற்கும் காரணமான குணச்சிறப்பில் "குணங்களில் தசரதனை ஒத்தவன் ராமன்" [ரா-அ 1-9] என்று உம் தந்தையோடொத்தவர் என்று நினைத்துப்போவீர். (ஜானகியை நாளுக நினைப்பீர்) நான் உம் தந்தைக்குத தகுந்தவளாயிருப்பதுபோல் இவளும் "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" [திருவாய் 10-10-6] என்றும் "ஒத்த குணம், வயது, ஒழுக்கம் ஆகியவைகளையுடைய ஸீதையை" [ரா-ஸு 16-5] என்றும் சொல்லுகிறபடியே ராமனுக்குத் தகுந்தவளாயிருக்கும் தன்மையாலே உம்மைத் தாயாகிய என்னைப்போல் உகப்பிப்பள் என்று நினைத்துப்போம். (காட்டை அயோத்தியாக நினைப்பீர்)

(ராமாபி₄ஷ்டவஸம்யுக்தா:) என்று படைவீடு அநுகூலமா யிருக்குமாப்போலே, "मङ्गलानि प्रयुञ्जानाः" (மங்க₃ளாநி ப்ரயுஞ் ஜாநா:) என்று அக்காடுதானும் அநுகூலமாயிருக்குமென்று நினைத்திரும் என்றாகவுமாம்.

அன்றியிலே, (ராமமித்யாதி) உங்களைப் பிரிந்த ஐயர் இனி உளராகமாட்டார். இனிமேல் எல்லா உறவுமுறையும் பெருமாள் என்று நினைத்திரும். (மாம் வித்தீத்யாதி) "असत्समा विधवा" (அஸத்ஸமா வித₄வா) என்கிற மர்யாதை யாலே நானுமென்றொருத்தி உண்டாக நினைத்திருக்க வேண்டா, அந்தவுறவும் பிராட்டியென்று நினைத்திரும். (அயோத்யாமித்யாதி) இனி படைவீடென்றும் ஒன்றுண்டாக நினைத்திருக்கவேண்டா "புல்லென்றொழிந்தனகொல்" என்று படைவீடும் இன்றே காடெழுந்ததென்று நினைத்திரும்.

அன்றியிலே, (ராமமித்யாதி) உங்கள் தமயனாரை உங் களையரோபாதி ஸ்த்ரீபரதந்த்ரரென்று நினைத்திரும். அதா

---

"அயோத்தியில் பாலர்களும் ராமனைப்பற்றிய துதிச்சொற்கள் நிறைந்த கதைகளையே ஒருவர்க்கொருவர் சொன்னார்கள்' [ரா-அ 6-16] என்று அயோத்தியிலுள்ளார் அநுகூலராயிருப்பது போல், "முனிவர்கள் மங்களாசாஸனம் செய்துகொண்டு ராமனை வரவேற்றார்கள்" [ரா-ஆ 1-12] என்று அக்காட்டிலுள்ளாரும் அநு கூலராயிருப்பர் என்று நினைப்பீர்.

4. (ராமனை தசரதனாக அறிவீர்) உங்கள மூவரையும் பிரிந்த தசரதர் இனி உயிர்வாழமாட்டார். இனிமேல் தந்தை முதலிய எல்லாவுறவும் ராமனேயென்றறிவீர். (ஜானகியை நானாக நினையும்) "விதவை இல்லாத பொருளை ஒத்தவள்" என்கிற நிலையை அடையப் போகும் 'நான்' என்று ஒருத்தியும் இருப்பதாக நினைக்கவேண்டா; இனிப் பிராட்டியையே தாயாக நினையும். (அயோத்தியைக் காடாக அறிவீர்) இனிமேல் அயோத்தியென்று ஒன்று இருக்கப்போவதாக நினைக்கவேண்டா. "புல்லெனவொழிந்தன கொல்" [பெரியதிருவ 98] என்றாப்போலே அயோததி ராமன் அகலப்போகும் இன்றே காடாகி விடும் என்று எண்ணியிருப்பீர்.

5. (ராமனை தசரதனென்று நினைப்பீர்) உம் தமயனாரை உம தமப்பனாரான தசரதரைப்போலே பெணடாட்டிவார்த்தை கேட்பவர்

வது—கைகேயி வார்த்தையைக்கேட்டு அவர் உங்களைக் காடேறப் போகவிடுமாப்போலே. பிராட்டி வார்த்தையைக் கேட்டு மாயாம்ருகத்தின் பின்னே போகத்துடங்குவர் கிடீர். **(மாமித்யாதி)** நான் உம்மையிப்போது போகவிடுகிறுப் போலே. அவளும் அப்போது தயங்கின உம்மையுங்கூட நிர்ப்பந்தித்துப் போகவிடக்கூடுங்கிடீர். **(அயோத்யாமித்யாதி)** இப்படைவீட்டில் நிற்கப்பெறுதே காடேறப் போகிறுப் போலே. அக்காடுதன்னிலும் நிற்கப்பெறுதே கடற்கரையிலே போகக்கூடுங்கிடீர் என்று அவதாநம் பண்ணிக்கொள்ளும் என்கிறுளாகவுமாம்.

அங்ஙனன்றியிலே. **(ராமமித்யாதி)** வெறும் வடிவழகே யென்றிராதே. ராக்ஷஸரோடே விணையொத்த காலத்தில் உங்களையரைப்போலே தனிவீரம் செய்யவல்ல ஆண்பிள்ளை கிடீர் என்று நினைத்திரும். **(மாமித்யாதி)** அப்பூசல் நிமித்தமாக பயப்படுகையன்றியிலே. தேவாஸுரஸங்க்ராமத்தில் உங்

---

என்று அறியும். கைகேயிவார்த்தைகேட்டு உம் தந்தை உம்மைக் காட்டிற்குத் துரத்தினுப்போலே, ராமனும் சீதைவார்த்தையைக் கேட்டு ஒரு மாயமான் பின்னே ஓடத்துடங்குவர். அப்போது நீரே ரக்ஷிக்கவேணும் என்று கருத்து. (ஜானகியை நாளுக நினையும்) நான் உம்மை இப்போது நிர்ப்பந்தித்துக் காட்டுக்குப்போகவிடுவது போல், பிராட்டியும் 'இது ராக்ஷஸமாயை' என்று தயங்கிய உம்மை நிர்ப்பந்திததுப் போகவிடக்கூடும். அப்போது ஏமாறக்கூடாது. (காட்டை அயோத்தியாக நினையும்) இவ்வயோத்தியில் நிற்கப்பெறு மல் காட்டுக்குச் செல்வதுபோல், அக்காட்டிலும் நிற்கப்பெறுமல் கடற்கரைக்குச் செல்லக்கூடும். அப்போதும் நீரே நோக்கவேணும.

6. (ராமனை தசரதனுக நினைப்பீர்) வெறும் வடிவழகையுடையவர் என்றிராமல், ராக்ஷஸ்ரோடே யுத்தம் செய்யவேண்டிவந்த காலத்தில் உம் தந்தையைப்போலே ஒப்பற்ற வீரியத்தையுடைய ஆண்பிள்ளை யென்று நினைத்திரும். ஆகையால் அரக்கர்மலிந்த காடுசெல்லலாமோ என்று நினைக்கவேண்டாவென்று கருத்து. (ஜானகியை நாளுக நினைப்பீர்) அப்படி அவர் அரக்கரோடு போர்புரியும்போது பயப்

களையருடைய வீரப்பாடு கண்டால்நாங்களுகக்குமாபோலே, அவ்வாண்பிள்ளைத்தனங்கண்டால் **"शत्रुहन्तारं परिषस्वजे"** (ஶத்ரு **ஹந்தாரம் பரிஷஸ்வஜே)** என்று மதித்துப் பாரிதோஷம் கொடுப்பாளொரு வீரபத்நியென்று நினைத்திரும். **(அயோத்யா மித்யாதி)** அப்போது இவளைப் பேணுகைக்கு மதிளும் சிறையுமாயிருப்பதொரு படைவீடில்லையென்று நினைத்திராதே, காட்டோடு நாட்டோடு வாசியில்லை; 'புலிநின்றதூறு' என்னுமாப்போலே நிற்கிறவன்பக்கல் மதிப்பாலே அக்காடு தானே ஒருவராலும் மேலிடவொண்ணாதென்று நினைத்திரும் என்றாகவுமாம்.

அங்ஙனன்றியிலே, **(ராமமித்யாதி)** உங்களையர் உங்கள் விச்லேஷத்தில் பாடாற்றமாட்டாதாப்போலேகிடீர் உங்கள் தமயனும் **"न जीवेयं क्षणमपि विना तामसितेक्षणां" (ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்)** என்றும், **"अद्यैवाहं गमिष्यामि**

---

படாமலிருப்பதோடன்றியில், தேவாசுரயுத்தத்தில் உம் தந்தையுடைய வீரியங்கண்டு நாங்கள் உகப்பதுபோல், ராமனுடைய வீர்யங்கண்டு "சத்துருக்களைக் கொன்ற பெருமானை நன்ருகத் தழுவினள்" [ரா-ஆ 30-39] என்று கௌரவித்துப் பரிசு கொடுக்கும் வீரபத்னி யெனறு நினைத்திரும். ஆகையாலே கோழையான பெண் செல்லுமிடத்திற்கு நாம் செல்லுவதோ என்று நினைத்து இங்கு தங்கவேண்டா என்று, கருத்து. (காட்டை அயோத்தியாக நினைத் திரும்) அப்படி யுத்தம்செய்ய நேரும்போது, பிராட்டியை ரக்ஷிப் பதற்கு மதிளும் சிறையுமாயிருப்பதொரு அயோத்தியில்லையே என்று நினையாமல், 'காடாயினும் நாடாயினும வித்தியாசமில்லை; புலிகிடந்த குகை என்னுமாபோலே, அதிலே வாழும் ராமன் பெருமையாலே அக்காடுதானே ஒருவராலும் யுத்தம்செய்து வெல்லவரிதான அயோத்தியாகும்' என்று நினைப்பீராக. ஆகையாலே, வாழுமிடத்தைக்குறித்து பயப்பட்டு இங்கு தங்கிவிட்வேண்டா என்று கருத்து.

7. (ராமனை தசரதனுக அறியும்) உம் தந்தை உங்களைப்பிரிந்து பொறுக்கமாட்டாததுபோல், உம் தமயனை ராமனும் "கறுத்த கண் களையுடைய சீதையைவிட்டுக் கணநேரமும் வாழமாட்டேன்" [ரா-ஸு 66-10] "லக்ஷ்மணனை அடியொற்றி நான் இன்றே மேல்

**लक्ष्मणेन गतां गतिं**" (**அத்₃யைவாஹம் க₃மிஷ்யாமி லக்ஷ்மணேந க₃தாம் க₃திம்**) என்றும் உங்கள் விச்லேஷத்தில் பாடாற்றமாட்டாதபடியும். (**மாமிதயாதி**) நான் இப்போது உங்களைப் போகவிட்டு "எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேன் எல்லே பாவமே" என்று அநுதபிக்கப்போகிறாப்போலே கிடீர் இவளும் உங்களைப்பிரிந்தால் க்லேசிக்கும் படியும். (**அயோதயாமித்யாதி**) "**अपभ्रष्टमनुष्या च दीननागतुरङ्गमा। आर्तस्वरपरिग्लाना**" (**அபப்₄ரஷ்ட மநுஷ்யா ச தீ₃நநாக₃துரங்க₃மா। ஆர்த்தஸ்வரபரிக்₃லாநா**) என்று இத்திருவயோத்யை இப்போது படப்போகிறாப்போலேகிடீர், உங்களோடு பிரிவுண்டானால்; "**परिशुष्कपलाशानि**" (**பரிஶுஷ்கபலாஶாநி**) என்றும், "**अपि वृक्षाः परिम्लानाः**" (**அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:**) என்றும் அக்காடுதானும் படும்படியென்றாகவுமாம்.

அங்ஙனன்றியிலே, (**ராமமித்யாதி**) 'பெருமாள் என்றும் இப்படி அபஹ்ருதராஜ்யராய்த் திரியுமித்தனையோ' என்று நினைத்திராதே. உங்களையரோயாதி முடியுஞ்சூடிப் பத்துதிக்கிலும் ஆணையும் செங்கோலும் நடத்துவரென்று நினைத்

---

வீடு செல்வேன்" [ரா-உ-107-3] என்று உங்களைப் பிரிந்து பொறுக்கமாட்டார்; ஆகையால் கூடப்போம். (ஸீதையை நானாக அறிவீர்) நான் இப்போது உங்களைப் போகவிட்டு "எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேனெல்லே பாவமே" [பெரியாழ்-திரு 3-2-2] என்று வருந்தப்போவதுபோல் இவளும் உங்களைப்பிரிந்தால் வருந்துவள். ஆகையால் கூடப்போம். (காட்டை அயோத்தியாக நினையும்) "அறிவிழந்த மனிதர்களையுடையதாய், வருந்தும் யானை குதிரைகளையுடையதாய், அழுகுரலாலே வாட்டமுற்றதாய்க் காண்கிறது அயோத்தி" [ரா-அ 59-15] என்று உங்களைப் பிரிந்து இப்போது அயோத்தி படப்போகும் பாட்டை "வனங்கள் உலர்ந்த இலையுடையனவாயின" "மரங்களும் வாடின" [ரா-அ 59-4&5] என்று உங்களைப் பிரிந்தால் காடும் படும்.

8. (ராமனை தசரதனாக அறிவீர்) ஸ்ரீராமன் என்றும் இப்படி அரசிழந்து திரியவேண்டியதுதானோ என்று நினைத்திராமல், உம் தந்தையைப் போல் முடியும் சூடிப் பத்துதிசையிலும் அரசாட்சியும நீதியும் செலுத்தும்படியான காலம் வருமென்று அறிவீர். (பிராட்

திரும். (மாமித்யாதி) பிராட்டியும் அப்படி உடன்கேடாகத் திரிகையன்றியிலே. நான் மஹிஷீபதத்திலே அபிஷேகம் பண்ணியிருந்தாப்போலே. க்ருதாபிஷேகையாய் மஹிஷீ பதத்திலேயிருந்து நிர்வஹிக்குமென்று நினைத்திரும். (அயோத்யாமித்யாதி) இப்படித் திருவபிஷேகம் பண்ணின அநந்தரமே. "**अमी जनस्थानमपोढविघ्नं लब्ध्वा समारब्धनवोटजानि। अध्यासते चीरभृतो यथास्वं चिरोज्झितान्याश्रममण्डलानि**" (**அமீ ஜநஸ்தா₂நமபோட₄விக்₄நம் லப்₃த்₄வா ஸமாரப்₃த₄நவோடஜாநி। அத்₄யாஸதே சீரப்₄ருதோ யதா₂ஸ்வம் சிரோஜ்ஜி₄தாந் யாச்ரம மண்ட₃லாநி**) என்று இக்காடுதானும் படைவீடோபாதி நிறை குடியென்று நினைத்திரும்.

அன்றியிலே, (**ராமம தஶரதம் வித்தி**) "**पदाति वर्जितच्छत्रं**" (**பதா₃திம் வர்ஜிதச்ச₂த்ரம்**) என்றும், "தேரொழிந்து மாவொழிந்து வனமே மேவி" என்றும், "கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து" என்றும் அநுஸந்தித்த வர்கள் வயிறுபிடிக்கும்படி என்றும் இக்கால்நடையோ

---

டியை நானக அறிவீர்) பிராட்டியும் அப்படியே அரசிழந்து கூடத்திரியாமல, நான் பட்டமஹிஷியாய் அபிஷேகம் பணணப் பெற்று வாழ்வதுபோல் வாழ்வளென்று நினையும். (காட்டை அயோத்தியாக நினையும்) இப்படி அபிஷேகம் பணணப்பெற்ற வுடன், "மரவுரியுடுத்த இந்த ரிஷிகள் வெகுகாலத்திற்கு முன் விட்டுச் சென்றதும், புதிதான பர்ணசாலைகள் கட்டப்பெற்றதுமான பழைய ஆச்ரமஸ்தானங்களை அடைந்து, இடையூறு நீங்கப்பெற்ற ஜநஸ்தானத்திலே முன்போலே வாழ்கிறார்கள்" [ரகுவம்சம் 13-22] என்று காடும் அயோத்திபோலேயாகும் என்று நினைத்திரும்.

9. (ராமனை தசரதனாக அறிவீர்) "காலால் நடப்பவனாய், குடையற்றவனான ராமனை" [ரா-அ 33-5] என்றும் "தேரொழிந்து மாவொழிந்து வனமேமேவி" [பெரு-திரு 9-2] என்றும் "கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்துபோய், சிலையும் கணையும் துணையாகச் சென்றான்" [பெரியதிரு 1-5-1] என்றும் இச் செயலை அநுஸந்தித்தவர்கள் வயிறுகலங்கும்படி என்றும் இப்படி ராமன் கால்நடையாகவே செல்லவேண்டி வருமோவென்று நினையாமல்,

*என்றிராதே. பத்து திக்கிலும் புஷ்பகம் துடக்கமான தேர்களிலே ஏறித் திரிவரென்று நினைத்திரும்.* **(மாம் வித்திஜநகாத்மஜாம்)** *"துன்னு வெயில் வறுத்த வெம்பரல்மேற் பஞ்சடியால் மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கும் அன்னநடைய அணங்கு நடந்திலளே" என்று பிராட்டியும் துஸ்ஸஞ்சாரமான காட்டிலே என்றுமிப்படி நடந்து திரியுமித்தனையோ என்று நினைத்திராதே, நான் உங்களையருகே தேர்த்தட்டிலேயிருக்குமாப்போலே, புஷ்பகாதிகளிலே பிராட்டியும் கூட வருவரென்று நினைத்திரும்.* **(அயோத்யாமித்யாதி)** *'இக்காட்டிலேயோ உருவற்றிருந்து விடப்புகுகிறது?' என்றிராதே, 'இதிலே இப்போது நித்யஸஞ்சாரம் பண்ணப் புகுகிறப்போலேகிடீர் மீண்டு புகுந்து இப்படை வீட்டிலேயும் நித்ய ஸஞ்சாரம்பண்ணப் புகுகிறது' என்று நினைத்திரும்.*

*ஆக இப்படிப் போகிறவிடத்தில் அஸ்வாஸ்த்யத்தை அநுஸந்தித்துப் பிற்காலித்த இளையபெருமாளோடு ஏற்றி வார்த்தை சொல்லிற்றுகவிறே ஆபாதத்தில் தோற்றுகிறது.*

---

பத்துதிக்குகளிலும் புஷ்பகம் முதலான ரதங்களிலே ஏறித்திரியும் காலமும் வருமென்று நினைத்திரும். (ஜானகியை நாளுக அறிவீர்) "துன்னுவெயில் வறுத்தவெம்பரல் மேல் பஞ்சடியால் மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கும் அன்னநடையவணங்கு நடந்திலளே' [பெரியதிருமடல் 50, 51, 52] என்று பிராட்டியும் நடக்கவரிதான காட்டிலே என்றும் இப்படி நடந்து திரிய வேண்டியதுதானே என்று நினைத்திராமல், நான் உம் தந்தையருகே தேர்த்தட்டிலேயிருந்து ப்ரயாணம் செய்ததுபோல், புஷ்பகம் முதலான தேர்களிலே பிராட்டியும் கூட வருவாளென்று நினைத்திரும். (அயோத்தியைக் காடாக நினையும்) காட்டிலேயே வாழ்ந்து ராமபிரான் உருவழிந்து விடப்போகிருரோ என்று நினையாமல். இக்காட்டிலே இப்போது இடைவிடாமல் திரிவதுபோல், மறுபடியும் வந்து அயோத்தியிலும் இடைவிடாமல் ஸஞ்சரிப்பர் என்று நினைத்திரும்.

ஆக இம்மாதிரியாக, காட்டிலுள்ள கஷ்டங்களை நினைத்துத் தயங்கிய லக்ஷ்மணனைப் போகவேண்டுமென்று உரையேற்றி இந்த

இது "प्रागेव तु महाभागस्सौमित्रिर्मित्रनन्दनः। पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलङ्कृतः॥" (ப்ராகேவ து மஹாபாகஸ் ஸௌமித்ரிர் மித்ர நந்தந:। பூர்வஜஸ்யா நுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத: ||) 'बाष्पपर्याकुलमुखः शोकं वोढुमशक्नुवन्' (பாஷ்பபர்யாகுலமுக: ஶோகம் வோடுமஶக்நுவந்) என்றும் "कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते" (குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ விதயதே) என்றும் வ்யதிரேகத்தில் ஸத்தையே பிடித்து இல்லையாம்படியாய்ப் போகைக்கு முற்கோலிநிற்கிற இளையபெருமாள் நிலைக்குச்சேராது.

இது சேரும்போது இங்ஙனே பொருளாகவேணும்: (ராமமித்யாதி) "अहं तावन्महाराजे पितृत्वं नोपलक्षये" (அஹம் தாவந் மஹாராஜே பித்ருத்வம் நோபலக்ஷயே) என்று உங்கள் ஐயரளவில் நீர் நெகிழ்ந்து நிற்கிறதொன்றுண்டு. அத்தைவிட்டுப் பெருமாளைப் பெற்றார் என்னுமாகாரத்தாலேயாகிலும், அவரோபாதி இவருமொருத்தர் உண்டென்று நினைத்திருக்க

---

வார்த்தை சொன்னதாக மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது பொருள் தோன்றுகிறது. ஆனால் இவ்வர்த்தங்கள், "மித்திரர்களை உகப்பிக்கும் லக்ஷ்மணன் தமயனுருடன் காடுசெல்வதற்காக, அவருக்கு முன்னாலேயே மரவுரியாலே தன்னை அலங்கரித்துக்கொண்டான்" [ரா-ஸு 33-28] "கண்ணீர் நிறைந்த முகத்தையுடையவனாய் சோகத்தைத் தரிக்கமுடியாதவனான லக்ஷ்மணன்" [ரா-அ 31-1] "என்னைக் கைங்கர்யபரனாகக் கொள்ளும்; இதில் தவறொன்றுமில்லை" என்று பிரிந்தால் வாழ்வில்லையாம்படியானவனாய், கூடச்செல்வதற்கு முற்பட்டுநிற்கிற லக்ஷ்மணனுடைய நிலைக்குப் பொருந்தமாட்டா. ஸுமித்திரை மேலே சொன்ன பொருள்களை மனத்தில் கொண்டிருக்கக் கூடுமாயினும், லக்ஷ்மணன் இத்த ச்லோகத்திற்கு இப்படிப் பொருள் கொண்டிருக்கமாட்டான்.

அவனுடை நிலைக்குப் பொருந்தியதான பொருள் பின்வருமாறு:-
10. (தசரதனை ராமனாக அறிவீர்) "நான் தசரதச்சக்கரவர்த்தியை தந்தையாகக் காண்கிறேனல்லேன" [ரா-அ 58-31] என்று உம் தந்தையாகிற தசரதரை நீர் தாழ்வாக நினைத்திருப்பதுண்டு. அப்படியிராமல் ஸ்ரீராமனைப் பெற்றவர் என்பதை நினைத்தாவது, ராமனைப்போலே கௌரவிக்கத்தகுந்த இவரும் ஒருவருண்டு என்று

வேணும். (மாமித்யாதி) என்னையும் அவர் கைப்பிடித்தார் என்கிற ஆகாரத்தாலே நெகிழ்ந்திராதே, பெருமாளோட்டை ஸம்பந்தத்தாலே பிராட்டியை ப்ரதிபத்திபண்ணியிருக்கிற மாத்திரம் அவரோட்டைக் குடற்றுவக்காலே நானு மொருத்தியுண்டென்று நினைத்திரும். (அயோத்யாமித்யாதி) **"वनं नगरमेवास्तु येन गच्छति राघवः"** (வநம் நக₃ரமேவாஸ்து யேந க₃ச்ச₂தி ராக₄வ:) என்று பெருமாள் விரும்பின காட்டையே படைவீடாக நினைத்து இவ்வூரை நெகிழ்ந்திருக்கிறதொன் றுண்டு. அத்தைவிட்டு அவர் தங்களையர் சொல் மாறுமைக் காகக் காட்டை விரும்பினாப்போலே, தம்பிசொல் மாறுமைக் காக இப்படைவீட்டையும் விருமபுவர். ஆகையாலே இத்தையும் அத்தோபாதி உத்தேச்யமென்று நினைத்திருக்க வேணும். இப்படி இளையபெருமாள் நினைவு இதுவேயாகு லும், ராமவாத்ஸல்யத்தாலே கலங்கிச் சொல்லுகிறாளாகை யாலே முன்பு சொன்னவையும் அர்த்தமாகக் குறையில்லை.

(கச்ச) ஆகையால் அங்குள்ள குறைகளை நினைத்து நெஞ்சாரல் பட்டிராதே அவ்வோவிடங்களுக்குத்தக்கபடியே

---

நினைத்திரும. (எனனைப் பிராட்டியாக நினையும்) 'ராமனைக் காட்டுக்கு விரட்டிய தசரதர் மனைவிதானேயிவள்' என்றிராமல், ராமபத்னியான சீதையைப்போலேயாவது ராமமாதாவான நானும் கௌரவிக்கத் தகுந்தவளெனறிரும. (அயோத்தியைக் காடாக நினையும்) "ராகவன் செல்லும் வனமே நகரமாகட்டும்; நாமும் நீங்கினபிறகு அயோத்தி நகரமும் காடாகட்டும்" [ரா-அ 33-22] என்ற நகரஜனங்களைப் போலே நீரும் ராமன் விரும்பிய காட்டையே விரும்பி இவ்வூரைக் குறைவாக நினைத்திருப்பதுண்டு. அந்நினைவைவிட்டு, ராமன் தந்தை சொல்கேட்டுக் காட்டை விரும்பினாப்போலே, தம்பியான பரதன் சொல்கேட்டு அயோத்தியை விரும்பும காலமும்வரும். ஆகை யாலே இவ்வயோத்தியையும் காட்டைப்போலே உத்தேச்யமாக நினைத்திருக்கவேணும் என்றபடி. இப்பொருளே இளையபெருமாள் உகந்ததானாலும், ஸௌமித்திரை ராமனிடத்தில் வாத்ஸல்யத்தாலே கலங்கிச் சொல்லுகிறாளாகையாலே அவள் நினைவாலே முன் சொன்னவையும் பொருளாகத்தட்டில்லை.

பேணிக்கொண்டு போகப்பாரும். (கச்ச தாத யதாஸுகம்) **"येन येन धाता गच्छति तेन तेन सह गच्छति"** (யேந யேந த₄ாதா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி) என்றும், **"कामरूप्यनुसञ्चरन्"** (காமரூப்யநுஸஞ்சரந்) என்றும். **"छाया वा सत्त्वमनुगच्छेत्"** (ச₂ாயா வா ஸத்வமநுக₃ச்சே₂த) என்றும் "நிழலுமடி தாறுமானேம்" என்றும் சொல்லுகிறபடியே தொடர்ந்து குற்றேவல் செய்யப்பாரும். (கச்ச) **"एतत्सामगायन्नास्ते"** (ஏதத் ஸாம க₃ாயந் ஆஸ்தே) என்றும். "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும் இருந்தவிடத்தே இருநது கைங கர்யம் பண்ணவேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை. பின்சென்ற வில்லியென்று பேர்படைக்கப்பாரீர். (தாத) 'பகவத் விஷயத்திலே போராடி ஓரடி புகுரநின்றவர்களை கௌரவித்து வார்த்தை சொல்லக்கடவது' என்கிற மர்யாதையாலே ஐய

---

(கூடப்போம) ஆகையால ஆங்காங்கு உள்ள குறைகளை நினைத்து மனங் கலங்காமல், அந்தந்த இடங்களுக்குத் தக்கபடி ராமனுக்குக் கைங்கரியம் செய்துகொண்டு போவீராக. (அப்பனே! ஸுகமாகக் கூடப்போவீர்) "எப்படி யெப்படிப் பரமபுருஷன செல்லுகிருனே. அபபடியப்படியே முக்தஜீவனும் கூடப்போகிருன்," [பரமஸம்ஹிதை] என்றும், "இஷடப்பட்ட உருவங்களையுடைய வனுய்ப் பரமாத்மாவைப் பின்தொடர்ந்துகொண்டு" [தை-ப்ரு 10-5] என்றும் "தத₃ யத₂ா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் ச₂ாயா வா ஸத்வமநுக₃ச்சே₂த தத₂ாப்ரகாரம்" [எப்படி இளங்கன்றை யுடைய பசு கன்றையும், கன்று தாய்ப்பசுவையும் நிழல் பிராணி யையும் பின்தொடர்கிறதோ அப்படிப் பரமாத்மாவைப் பின்தொடர்கிருன்] [பரமஸம்ஹிதை] என்றும் "நிழலும் அடிதாறும் ஆனேம்" [அடிதாறு—பாதரக்ஷை] [பெரியதிருவ 31] என்றும் சொல்லு கிறபடியே கைங்கரியம் செய்யப்பாரும். (கூடப்போவீர் "இந்த ஸாமத்தை கானம் செய்துகொண்டு இருக்கிருன் முக்தன்" [தை-ப்ரு 10-5] என்றும் "அத்தமில் பேரின்பத்தடியரோடு இருந்தமை" [திருவாய் 10-9-11] என்றும் இருந்தவிடத்திலேயிருநது கைங்கரியம் செய்யவேண்டுமென்று நிர்ப்பந்தமில்லை. பின்சென்ற வில்லி யென்று பேர் படைக்கப்பாரீர். (அப்பனே!) பகவத்விஷயத்திலே நிர்ப்பந்தித்துச் சிறிது அடிமை செய்யவல்லவர்களையும கௌரவ மாக வார்த்தை சொல்லவேண்டும் என்னும் வரம்பையொட்டி

றென்று சொல்லுகிருள். அன்றியிலே (தாத) 'உம்மைப்பெற்ற நானும் கைகேயி படைத்த பேர் படையாதபடி பண்ணப் பாரீர்' என்று உபசரித்து வார்த்தை சொன்னுளாகவுமாம்.

(யதாஸுகம்) "யதா₂ஸம்ப₄வம்ஸுக₂ம்" என்ருய், நன்மைகளும் வந்தது வரக்கண்டு போகப்பாரும். இவர் ஸுகத்துக்கு வைகல்யமாவது, **"भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते। अहं सर्वं करिष्यामि"** (பவாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று அச்சேர்த்தியிலே அடிமைசெய்யப் பாரித்தவருக்கு அது கிடையாதே, அம்மிதுநம் அக்கரையும் இக்கரையுமாய்ப் பிரிந்து ஏகதேஶ கைங்கர்யமாகையிறே. அங்ஙனன்றியிலே (யதாஸுகம்) என்றது "ராமஸ்ய யதா₂ ஸுக₂ம் ப₄வதி ததா₂ க₃ச்ச" என்ருய், **"भावज्ञेन कृतज्ञेन धर्मज्ञेन च लक्ष्मण। त्वया पुत्रेण धर्मात्मा न संवृत्तः पिता मम॥"** (பா₄வஜ்ஞேந க்ருதஜ்ஞேந த₄ர்மஜ்ஞேந ச லக்ஷ்மண। த்வயா புத்ரேண த₄ர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம॥) என்று

---

'ஐயனே' என்கிருள். அன்றிக்கே, (அப்பனே) 'கைகேயிபெற்ற பேரை நானும படைக்காத படி பண்ணப்பா!' என்று உபசாரமாகச் சொல்வதாகவும் கொள்ளலாம்.

(முடிந்தவரையில் ஸுகமாக) 'யதாஸுகம்'—முடிந்தவரையில் ஸுகமாக என்றபடி. 'அப்படியாளுல் இவருடைய ஸுகத்திற்குக் குறைவும் உண்டோ?' என்னில்: உண்டு, அதாவது:-"ராமபிரானே! தேவரீர் பிராட்டியுடன் கூட மலைத்தாழ்வரைகளில விளையாடுவீர் அப்போது நான் எல்லா அடிமைகளையும் செய்வேன்" [ரா-அ31-25] என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமைசெய்ய ஆசைப்பட்ட இவ்விளையபெருமாளுக்கு அது கிடைக கப்பெருமல், பெருமாளும் பிராட்டியும் கடலுக்கு இக்கரையிலும் அக்கரையிலும் எழுந்தருளியிருந்து, பெருமாளுக்கு மட்டும் கைங கரியம் செய்ய நேரிடுவதுதான் இவருடைய ஸுகத்துக்குக் குறையாகும். அன்றிககே, (ஸுகமாகச்செல்வீர்) எனறது, 'ராமனுக்கு ஸுகமுண்டாகும்படி செல்வீர்' என்ருகவுமாம், "லக்ஷ்மணு! என் நினைவை அறியுமவனுய், (தசரதர்) செய்யும்படிகளை அறிந்த

அவர் உம்மை உடையவராகையாலே, யாதொருபடியிலுலே நெஞ்சிற் குறையற்று உகப்பேயாயிருப்பர். அப்படியே பேணிக்கொண்டு போகப்பாரும் என்றுகவுமாம். அங்ஙனன்றியிலே உமக்குப் படைவீட்டிலும் ஸுகஹேதுவாயிருப்பது, **"ऐश्वर्यं वाऽपि लोकानां कामये न त्वया विना" (ஐச்வர்யம் வாபி லோகாநாம காமயே ந த்வயா விநா)** என்று பெருமாளோட்டை அவிச்லேஷமிறே. அது எங்கும் உண்டாகையாலே உம்முடைய ஸுகத்துக்கு வைகல்யமில்லைகாணும் எனறுகவுமாம். இப்படி ஸ்ரீஸுமித்ரையார் பெருமாள்பக்கல் உண்டான வாத்ஸல்யத்தாலே இளையபெருமாளை பஹுமுகமாகத் தாம் ஶிக்ஷித்து வார்த்தை சொன்னாராயிற்று.

**அயோத்யாகாண்டம் 41-வது ஸர்க்கம் 20-வது ச்லோகம்**

**ये तु रामस्य सुहृदस्सर्वे ते मूढचेतसः।**
**शोकभारेण चाक्रान्ताश्शयनं न जहुस्तदा॥**

**யே து ராமஸ்ய ஸுஹ்ருதஃஸ் ஸர்வே தே மூட₄சேதஸ:।**
**ஶோகப₄ாரேண சாக்ராந்தாச் ஶயநம் ந ஜஹுஸ் தத₃ா॥**

---

வனுய், சேஷத்வமாகிற பரமதர்மத்தையறிந்தவனை உன்னைப் புத்திரனுகவுடைய தர்மாத்மாவான தசரதர் எனக்குச் சாகவில்லை" [ரா-ஆ16-29] என்று, உம்முடையஸ்வாமியான ராமன் நீர் எப்படி நடந்தால் மனமுகந்திப்பரோ அப்படி அடிமைசெய்துபோம் என்கிருள். அன்றிக்கே, (ஸுகமாகப்போவீர்) என்றது, 'அயோத்தியில் எப்படி ஸுகமாயிருந்தீரோ, அப்படியே காட்டிலும் ஸுகமாகப் போவீர்' என்றுகவுமாம். "உம்மைப் பிரிந்த நான் பரமபதம் செல்வதையும், கைவல்யத்தையும், இவ்வுலகிலுள்ள ஐச்வர்யங்களையும் விரும்பேன்" [ரா-அ31-5] என்னும் உமக்கு அயோத்தியிலும் ராமனைப் பிரியாமலிருக்கையேயன்றே ஸுகத்தைத்தரும். அது இங்குபோலே காட்டிலும் உண்டாகையாலே உம்முடைய ஸுகத்திற்கு ஒரு குறையுமில்லை. ஆகையாலே செல்வீர் என்கிருள். இம்மாதிரியாக ஸ்ரீஸுமித்ராதேவியார் ஸ்ரீராமபிரானிடத்திலுள்ள பேரன்பாலே லக்ஷ்மணனுக்கும பலபடியாக உபதேசித்து வார்த்தை சொன்னளாயிற்று.

பதவுரை:—ராமஸ்ய—ராமபிரானுக்கு, ஸுஹ்ருத₃:—தோழர்கள், யே து-எவர்களோ, ஸர்வே தே—அவர்கள் அனைவரும், ஶோகபா₄ரேண—துன்பப்பளுவினால், ஆக்ராந்தா:—அமுக்கப்பட்டவர்களும், மூட₄சேதஸ:ச-அறிவற்ற மனததை யுடையவர்களுமாய், ஶயநம்-படுக்கையை, தத₃ா-அப்போது, ந ஜஹு:—விட்டார்களில்லை.

வ்யாக்யானம்:-(யேது) சக்ரவர்த்தி போக்கை அநுமதி பண்ணினான். ஸ்ரீகௌஸலையார் மங்களாஶாஸநம் பண்ணி விட்டாள். அவ்வளவன்றிக்கே பத்தொன்பதாம் பாஷையாயிற்று தோழன்மார்படி. (ராமஸ்ய ஸுஹ்ருத:) தாய்தகப்பனுக்கு மறைத்தவையும் வெளியிடும்படி உட்புக்கவர்களிறே தோழன்மாராகிறார். தங்களைப் பேணாதே அவனுக்கே நன்மையை எண்ணிப்போந்தவர்கள் படுகுலைப்பட்டார்கள் என்கிறது. (ஸர்வே தே) ஒரு விபூதியாக ஸாம்யாபத்தி பெற்றிருக்குமாபோலே. (மூடசேதஸ:) ஸுஹ்ருத்துக்களாகில் எழுந்திருந்து காலைக்கட்டி மீளாதொழிவானென்னென்னில்:

---

அவதாரிகை:—(யே து ராமஸ்ய) ராமன் வனம் செல்வதை யறிந்த தோழன்மார் நிலையை விவரிக்கும் பாசுரமிது.

வ்யா:—(எவர்களோவெனில்) மற்றுள்ளாரைக்காட்டிலும் இவர்களுடைய ஏற்றம் சொல்லுகிறது. தந்தையான தசரதசக்ரவர்த்தி ராமன் வனம் செல்வதை அனுமதித்துக்கிடந்தான். தாயான ஸ்ரீகௌஸல்யாதேவி பல்லாண்டுபாடிப் போகவிட்டாள். அவ்வளவன்றிக்கே உலகிற்காணாத ஒரு விலக்ஷணமான பாஷையாலே தோழனமார் தங்கள் நிலையை வெளியிட்டார்கள். (ராமனுடைய நண்பர்கள்) தாய் தந்தையருக்கு மறைத்தவற்றையும் வெளியிடும்படி அந்தரங்கராயிருபபவர்களன்றோ நண்பராவார். தங்களை நோககாமல் அவனுக்கே நன்மையை நினைத்துப்போந்த இவர்கள வெட்டுண்ட வாழைக்குலை போலே சாய்ந்தார்கள் என்கிறது. (எல்லாரும்) நித்யவிபூதியான பரமபதத்திலுள்ளாரெல்லாரும் பரமஸாமயத்தைப் பெற்றிருப்பதுபோல் இவர்களுமாயினர். (மழுங்கின மனத்தையுடையராயினர்) ராமனுக்கு நண்பர்களாகில் எழுந்திருந்து ராமனுடைய கையைக் காலைப் பிடித்துக்கொண்டு வனம்

*அறிவுகலந்தால் செய்யுமத்தை நெஞ்சில் வெளிச்செறிப்பில் லாதபோதும் செய்யப்போகாதிறே. அறிவுகெடுகைக்கு ஹேதுவென்னென்னில்:* (ஶோகபாரேண சாக்ராந்தா:) *மலை அமுக்கினாற்போலே ஶோகம் அமுக்காநிறகச்செய்வதென்?* (ஶயநம ந ஜஹூஸ் ததா) *படுக்கையைவிட்டு எழுந்திருந்தார் களாகில் மீட்டுக்கொண்டு புகுந்த வாசியன்றோ. தாந்தாமே படுக்கையிறகிடந்து போந்தவர்களன்றே.*

**அயோத்யாகாண்டம் 42-வது ஸர்க்கம் 34-வது ச்லோகம்**

**रामं मेऽनुगता दृष्टिरद्यापि न निवर्तते।**
**न त्वा पश्यामि कौसल्ये साधु मा पाणिना स्पृश॥**

**ராமம் மேநுக₃தா த்₃ருஷ்டிரத்₃யாபி ந நிவர்த்ததே।**
**ந த்வா பச்யாமி கௌசல்யே ஸாது₄ மா பாணிநா ஸ்ப்ருஶ॥**

**பதவுரை:**—**மே**—*என்னுடைய,* **த்₃ருஷ்டி:**-*கண்,* **ராமம்**-*ஸ்ரீராமனை,* **அநுக₃தா**-*பின்சென்றது;* **அத₃ய அபி**-*இப்போதும்,* **ந நிவர்த்ததே**—*திரும்பவில்லை;* **கௌஸல்யே**—*கௌசல்யா தேவியே!,* **த்வா**-*உன்னை,* **ந பச்யாமி**—*காண்கிறேனல்லேன்,* **மா**-*என்னை,* **பாணிநா**—*(உன்) கையால்,* **ஸாது₄**—*நன்றாக,* **ஸ்ப்ருஶ**—*தொடு.*

**அவதாரிகை:**— *"முடியானே"யில் கரணங்கள்போலே சக்ரவர்த்தியினுடைய கரணங்களும் பெருமாள்பக்கல் தனித் தனியே அநங்யார்ஹஶேஷமானபடியைச் சொல்லுகிறது.*

---

*செல்லாமல் தடுத்துக் கூட்டிக்கொண்டு வராதிருப்பானென் என் னில்: அறிவுளளவராயிருந்தால் அப்படிச் செய்திருப்பார்கள். அறி வே மழுங்கிவிட்டதாகையால் செய்யமுடியாதே. அறிவு மழுங்கக் காரணமெனனென்னில்;(துன்பப்பளுவினால்அமுக்கப்பட்டனர்) மலை அமுக்கினாப்போலே துன்பம் அமுக்கும்போது என்செய்வது? (அப் போது படுக்கையை விடவில்லை) படுக்கையைவிட்டு எழுந்தாாகளா கில் ராமனை அழைத்துவருவது நிச்சயம். ஆனால் அதற்கு வழி யில்லையே. இரவு வந்ததென்று தாமாகப் படுக்கையில் படுத்த வராகில், விடிநததவுடன் எழுந்திருக்கலாம. வநவாஸச்செய்திகேட்ட வுடன் விழுந்தவர்களாகையால் எழுந்திருக்க வழியேயில்லை.*

வ்யா.–(ராமம் மேऽநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே) 'கடல்கொண்ட வஸ்து மீளப்புகுகிறதோ?' என்கிறான். "समुद्र इव गाम्भीर्ये" (ஸமுத்₃ர இவ கா₃ம்பீ₄ர்யே) என்றும், "गुणा-नामाकरो महान्" (குணாநாமாகரோ மஹாந்) என்றும் அவர் தமமைக் கடலாகச் சொல்லக்கடவதிறே. (ராமம் மேऽநுகதா த்ருஷ்டி:) "रामो रमयतां वरः" (ராமோ ரமயதாம் வர:) என்கிற படியே சேதநாசேதந விபாகமறத் துவக்குகிற அவர் மினுக்கைக் கொடுபோக்கியது குற்றமோ? (ராமம மேநு-கதா த்ருஷ்டி.) சக்ஷுரிந்த்ரியந்தான் ரூபவான்களை க்ரஹிக்கும தொழிய, ரூபவான்கள் சக்ஷுஸ்ஸை க்ரஹித்துக்கொண்டு

---

அவதாரிகை:–"முடியானே" [திருவாய் 3-8] எனனும் திருவாய் மொழியில் "நெடியானே என்று கிடக்கும் என் நெஞ்சமே" "உன்னைக்காணவிரும்பும் என் கண்களே" என்று ஆழ்வாருடைய இந்திரியங்கள் ஒவ்வொன்றும் சேதநஸமாதியையடைநது எம்பெரு மானிடம் ஈடுபட்டதுபோல், தசரதசக்ரவர்த்தியின் இந்திரியங் களும் ராமபிரானிடம் தனித்தனியே ஈடுபட்டபடியைச் சொலலு கிறது இந்த சுலோகம்.

வயா:—(என் கண் ராமனைப் பின்தொடர்ந்தது; இன்றளவும் திரும்பவில்லை) கடல்கொணட பொருள் மீண்டு வரப்போகிறதோ என்கிறன. "காம்பீர்யகுணத்தில் கடலைப்போன்றவன் ராமன்" [ரா பா 1-17] என்றும, "எல்லாக் கல்யாணகுணங்களுக்கும் அமுதக் கடலாயிருபபவன் பகவான்" [ஸ்தோ-ர 18] என்றும், "பெரிய மலை யானது தாதுக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதுபோல் நற் குணங்களுக்கெல்லாம் பெரியதோர் ரத்நாகரமாய்–(கடலாய்)—இருப் பவன் ராமன்' [ரா-கி 16-21] என்றும் ராமபிரானைக் கடலாகச் சொல்லுவதுண்டன்றோ. (ராமனை எனா கண் பின்தொடர்ந்தது) ரமிக்கச்செய்பவர்களுள் சிறந்தவன் ராமன்" [ரா-அ 61-1] என்கிற படியே அறிவுள்ள சேதநரையும் அறிவற்ற அசேதநங்களையும் ஈடு படுத்துகிற ராமன் தேஜோ விகாரமாகையாலே ஒளிமினுக்கத்தைப் பெற்றிருக்கும் நயனேந்திரியத்தைக் கொண்டுபோனதில் தவ றென்ன? (ராமனை என் கண் பின்தொடர்ந்தது) கண்ணுகிற இந திரியம் ரூபமுள்ள பொருளை க்ரஹிக்கும்–(அறியும்)–என்று ப்ர ஸித்தியுள்ளது; இங்கு நேர்மாறாக ரூபவானன–ரூபமுள்ள–புகழப் படும அழகுள்ள-ராமன் கண்ணை க்ரஹித்துக்கொண்டு–கூட எடுத்

போம்படியாவதே! ரூபரூபி ரூபைகார்த்த ஸமவேத க்ராஹியாயிறே சக்ஷுஸ் இருப்பது (அநுகதா) பதார்த்த தர்ஶனத்துக்கே கண்ட கரணம் பாதக்ருத்யமான கமநத்தை அநுஷ்டிப்பதே! (ராமம மேநுகதா த்ருஷ்டி:) **"येन येन धाता गच्छति"** (யேந யேந த₄ாதா க₃ச்ச₂தி) என்றும், **"कामरूप्यनु-सञ्चरन्"** (காமரூப்யநுஸஞ்சரந்) என்றும் அவ்வஸ்துவைப பினை செல்லுகை ஒரு சேதநக்ருத்யமாயிருக்க, அசேதநமான இந்த்ரியம் அநுஷ்டிப்பதே! (ராமம் மேऽநுகதா) அதுதான் செய்யுமிடத்தில, ஒரு தேஶவிஶேஷத்திலே போனால் ஸ்ரீவைகுண்டநாதன் பக்கல் பண்ணும் அநுதாவநத்தை "இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர்" என்கிறபடியே இஸ் ஸம்ஸாரத்திலே ராமவிஷயத்திலே பண்ணப்பெறுவதே! (த்ருஷ்டி ராமமநுகதா) **"चक्षुर्देवानामुत मर्त्यानां"** (சக்ஷுர்தே₃வாநா முத மர்த்யாநாம்) என்றும் "கண்ணுவானென்றும் மண்

---

துக்கொண்டு—போம் படியானது என்ன ஆச்சர்யம்! ரூபத்தையும், ரூபத்தையுடையதான குடம் முதலான பொருள்களையும், ஒரே பொருளான குடம் முதலானவற்றில் ரூபத்துடன் பிரிக்கமுடியாதபடி சேர்ந்திருக்கும் குடமாயிருக்கும் தன்மை (**घटत्व**) முதலானவற்றையும் க்ரஹிப்பதாக—அறிவதாக—இருப்பதன்றோ கண் என்னும் இந்த்ரியம். (பின்தொடர்ந்தது) பொருள்களைக் காண்பதற்கே ஏற்பட்ட இந்திரியம் கால் செய்யும் கமந காரியத்தை— பின்தொடர்வதாகிற செயலைச்-செய்வது என்ன ஆச்சர்யம! (ராமனை என் கண் பின் தொடர்ந்தது) 'எப்படியெப்படி பரமபுருஷன் செல்கின்றானோ அப் படியப்படியெல்லாம் முக்தாத்மாவும் பின்செல்கிறான்" [மூலஸம் ஹிதை] என்றும "வேண்டிய ரூபங்களைக்கொண்டு முக்தாத்மா பர மாத்மாவைப் பின்தொடர்கிறான்" [தை-ப்ரு10-5] என்றும் பரம புருஷனைப் பின்தொடருமவன் அறிவுள்ளவனை ஜீவனென்று சொலலியிருக்க அறிவற்ற இந்திரியம் அச்செயலைச் செய்வதே! (ராமனைப் பின் தொடர்ந்தது) அப்படிச் செய்யும்போதும், பரமபத மாகிறதொரு தேசத்திலே சென்று ஸ்ரீவைகுண்டநாதன் விஷயத்தில் முக்தர்கள் செய்யும் அச்செயலை "இங்கே காண இப்பிறப்பே மகிழ் வர்" [திருவாய் 8-4-11] என்கிறபடியே இவ்விருள்தருமாஞாலத் திலே ராமன் விஷயத்திலே செய்யப்பெற்றது என்ன ஆச்சரியம்! (கண் ராமனைப் பின்தொடர்ந்தது) "தேவர்களுக்கும் மனிதர்களுக்

ணோர் விண்ணோர்க்கு'' என்றும் ஐகத்ப்ரதாநமான *கண் முன்னே போகத்துடங்கினவாறே, நீக்கிநின்ற கண்ணும் அதின் பின்னே போகத்துடங்கிற்று.

(த்ருஷ்டி:) "த்₃ருஶில் ப்ரேக்ஷணே'' என்கிற தாத்வர்த்தத்தின்படியே, ஸாராஸாரவிவேகம்பண்ணி விஶேஷக்ரஹண ஶக்தமாகையிறே அதற்கு அடி என்கிறான். (த்ருஷ்டி:) நமக்ககப்பட நன்மை தீமைகளை அறிவிக்குமது தனக்கு அறியாதிராதிரே. (மே த்ருஷ்டி:) எனக்கு ஶேஷமாய் வைத்தன்றோ தன் கார்யம் செய்கிறது. ஶேஷமாவார்க்குப் பரகதாதிஶயாதாநம் பண்ணவேண்டாவோ? (மே த்ருஷ்டி:) அழகியதாக நெடுங்காலம் பழகிப்போந்தோம்! (மே த்ருஷ்டீ ராமமநுகதா) சிரபரிசிதனான நானிருக்க, அங்கே இதொரு கண்ணின் நாட்டமிருந்தபடியென்! (மே த்ருஷ்டி:) இதுதான் ஸ்வதந்த்ரமாயிற்றாகிலும் இப்படிச் செய்யலாமிறே. (மே த்ருஷடி:)

கும் ஓரே கண்ணாயிருப்பவன்'' [யஜு॰ 4-6-8] "கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு'' [திருவாய் 1-8-3] என்று உலகிற்கோர் கண்ணாயிருப்பவன் முன்னே போகத்துடங்கினவுடன், அவனை நீக்கி நின்ற என் கண்ணும் அவன் பின்னே போக ஆரம்பித்தது.

(திருஷ்டி-கண்) "த்ருசில் தாது நன்றாகக் காண்பது என்னும் பொருள் உள்ளது'' [தாதுபாடம்] என்கிற தாதுப்பொருளின்படியே நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்து சிறப்பை அறியவல்லதாய் என் 'த்ருஷ்டி' (கண்) இருக்கையாலன்றோ இச்செயலைச் செய்தது என்கிறான். (கண்) நமக்குங்கூட நன்மைதீமைகளைக் காட்டும இது தான் அறியாமலிருக்குமோ? (என் கண்) எனக்குசேஷமாயிருந்தும் தன் காரியம் செய்கிறதே! சேஷப்பொருளாயிருப்பது சேஷிக்குச் சிறப்பை உண்டுபண்ணவேண்டாவோ? (என் கண்) நான் என் கண்ணுடன் நெடுங்காலம் பழகினது அழகாயிருக்கிறது! (என கண் ராமனைப் பின்தொடர்ந்தது) நெடுங்காலம் பழகிய நானிருக்கும்போது, சில காலம் பழகிய ராமனிடத்தில் இக்கண்ணின் நாட்டம்-(பார்வை; விருப்பம்)-விழுந்திருப்பது என்ன ஆச்சரியம்! (என் கண்) இது எனக்கு வசப்பட்டிராமல் ஸ்வதந்த்ரமாயிருந்ததாகிலும

*(பா) கரணம்; பொருள்-இந்திரியம்.

கைகேயிமந்தரைகளுடைய கண்ணுகில் இப்படிச் செய்யா திறே. "नन्दामि पश्यन्नपि दर्शनेन" (நந்தா₃மி பச்யந்நபி த₃ர்ஶநேந) என்று இதற்கு வழிகாட்டிக்கொடுந்தேன நானேகிடீர்! (மே தருஷ்டி:) கண்டதிலே காலதாழும்படி சபலனுன என்னுடைய த்ருஷ்டியாகையிறே இப்படி செய்கிறது. (மே தருஷ்டி:) அவ்விஷயத்திலே ப்ரவணமானபடியாலே அதுதான் விட்டுப் போகச்செய்தேயும் இவன் அத்தோடே தனகது ஸம்பந் தத்தை எடுத்துக்காட்டுகிருன். "பெற்ற தாயரை வி(இ)ட்ட கன்று" என்று பெண்பிள்ளைதான் விட்டுப்போகச்செய்தே யிறே. திருத்தாயார் "எந்தன் மடமான்" என்று ஸம்பந்தம் சொல்லுகிறது. (மே த்ருஷ்டி: ராமமநுகதா) என்னுடைய இந்த்ரியமாஞல் என்னெஞ்சைப் பின்செல்லுமித்தனைபோக்கி, ராமனைப் பின்செலலுவதே!

அதற்குறுவதென? தனக்கு விஷயமாகிறவளவும் பின் செல்லுகிறது; அநந்தரம் மீளாதோவென்னில்: (அத்யாபி ந

---

இப்படிச் செய்யலாம்; அதற்கும இடமில்லையே. (என் கண்) கை கேயி, கூனி ஆகிய இவாகளின கண்ணுயிருந்தால் இப்படிச் செய்யாதன்றே. பாவியேன் அவர்களுடைய கண்களைப் பெற்றி லேன்! "நெஞ்சால் (ராமனைக) காண்பதனுலும் ஆநந்திக்கி றேன்; கண்ணுல் கண்டால வாலிபனுகவே ஆகிவிடுகிறேன்" [ரா-அ 12-104] என்று இக்கண்ணுக்கும் வழிகாட்டிக்கொடுத்தவன நானன்றே. (என் கண்) அழகுள்ளதிலெல்லாம் ஈடுபடும்படியான சாபல்யத்தையுடைய என கணணுகையாலேயன்றே இப்படிச் செய் கிறது. (என் கண்) ராமனிடத்திலே ஈடுபட்டு அது விட்டுப்போன போதிலும், தசரதன் அத்துடன தனக்கு ஸமபந்தத்தை எடுத்துக் காட்டுகிருன், பகவத்ப்ராவணயமாகிற பெருமையை அது பெற் றிருக்கையாலே. "பெற்ற தாயரை வி(இ)ட்டகன்று" [பெரியதிரு 3-7-1] என்று தன் பெண் தன்னைவிட்டுச் சென்றதைச் சொல்லும் போதும், "வள்ளிமருங்குல் எந்தன் மடமான்" [பெரியதிரு 3-7-1] என்று அவளுக்கும் தனக்குமுள்ள ஸம்பந்தத்தைச் சொன்னுளன்றே தாயார். (என் கண் ராமனைப் பின்தொடர்ந்தது) என்னுடைய இந்திரியம் என் நெஞ்சைப் பினதொடரவேண்டியிருக்க ராமனைத் தொடர்வது எனன ஆச்சரியம்!

நிவர்த்ததே) "अतिक्रान्तेऽपि राघवे" (அதிக்ராந்தேபி ராக₄வே) என்று ஸ்வவிஷயத்தைக் கைகழிந்த இப்போதும் மீளக் காண்கிறிலோம். (த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே) 'இங்கே வரில் இன்னமும் கைகேயி முகத்தில் விழிக்கவேண்டில் செய்வதென்?' என்கிற பயத்தாலே இன்னமும் வருகிறதில்லை. (மே த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே) ஒருவனுக்கு ஒரு க்லேசம் பிறந்தால் பரிகரபூதரானவர்களடைய வந்து உதவக்கடவதாயிறேயிருப்பது ஆயிருக்க, நான் ராமவிரஹத்தாலே க்லேஶிதனை இவ்வளவிலும் வந்து உதவுகிறதில்லை. (மே த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே) நெடுங்காலம் பண்ணின வாஸனையெல்லாம் கிடக்க. "नोपजनं स्मरन्निदं शरीरं" (நோபஜநம் ஸ்மரந்நித₃ம் ஶரீரம்) என்கிறபடியே நம்மை நேராக மறந்து வாராதொழிவதே! (த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே) போன பெருமாளை மீட்கமாட்டாதாகிலும் தான் மீளத்தட்டென்ன?

"அதற்கென் செய்வது? முடிந்த வரையில் பின்தொடர்ந்து விட்டுப்பிறகு தான் மீண்டுவராதோ?" என்னில்; (இன்றளவும் திரும்புகிறதில்லை) "ராமன் கண்வட்டத்தைவிட்டுச் சென்றபிறகும் அவனைக் காண்பவனுல் கண்ணை மீட்கமுடியவில்லை" [ரா-அ 17-14] என்று ராமன் தன் தேசத்தை விட்டுச்சென்ற இப்போதும் மீண்டு வரக்காண்கிலேன். (கண் இன்றும் திரும்புகிறதில்லை) 'இங்கே வந்தால் கைகேயிமுகத்தில் விழிக்கவேண்டிவந்தால் என்ன செய்வது' என்கிற பயத்தால் இன்னமும் வருகிறதில்லை. (என் கண் இன்றும் திரும்புகிறதில்லை) ஒருவனுக்கு ஒரு துன்பம் நேர்ந்தால் அவனைச் சேர்ந்தவர்களெல்லாம் வந்து உதவுவதன்றோ தகுந்தது. அப்படியிருக்கும்போது நான் ராமனைப் பிரிந்து துன்புறும் இச்சமயத்திலும வந்து உதவவில்லையே என கண்! (என கண் இன்றும் திரும்பவிலலை) நெடுநாள் பழகிப்போந்தபோதிலும் முக்தாத்மாவானவன் "ஜனங்களுக்கு அருகிலிருக்கும் தன்னுடைய பழைய சரீரத்தை நினையாமலிருந்துகொண்டு" [சாந் 8-12-3] என்கிறபடியே தன் பழைய சரீரத்தைச்சிறிதும் நினையாமலிருப்பதுபோல் இக்கண்ணும் என்னை நன்றாக மறந்து வராமலிருப்பது என்ன ஆச்சரியம்! (கண் இன்றும் திரும்பவில்லை) காடுசென்ற ராமனைத்தான் திருப்பமுடியவில்லையென்றால். தான் திரும்பிவர

**(ராமமநுகதா த்ருஷ்டிர் ந நிவர்த்ததே)** ஏதேனுமாக அவ் வஸ்துவைப் பின்சென்றூர்க்கு **"न च पुनरावर्तते" (ந ச புநரா வர்த்ததே)** என்கிறபடியே மீட்சியில்லையாயிருந்ததிறே!

"மீட்சியில்லையாவதென்? அது உம்மைவிட்டுப் போயிற்றோ மீளுகைக்கு?" என்ன,-**(ந த்வா பச்யாமி)** கெடு வாய்! தோற்றுகிற கோளமன்றுகாண் சக்ஷுரிந்த்ரியமாவது! அதீந்த்ரியமாகையாலே கார்யகல்ப்யம். ஆனபின்பு, புரோவர்த் தினியான உன்னைக் காணுமையாலே போயிற்று என்கிறுன். **(ந த்வா பச்யாமி)** உன்னைக் காணுதபோது கண்தோற்றுதே யும், உன்னைக் கண்டபோது கண்விழித்தும் போரக்கடவனை நான் நீ முன்னே நிற்கச்செய்தே காணுதொழிகிறேன். **'த்வா'** என்று என்னை லெங்கிஹிதையாகச் சொல்லாநிற்கச்செய்தே.

---

என்ன தடை? (ராமனைப் பின்தொடர்ந்த கண் திரும்புகிறதில்லை) சேதனமாயினும் அசேதனமாயினும் அவனைப் பின தொடர்ந்தால் "முக்தபுருஷன் மறுபடியும் இவ்வுலகிற்குத் திருமபிவருவதில்லை" [சாந் 8-15-1] என்கிறபடியே மீட்சியில்லாமலிருக்கிறது போலும்!

"கண் திரும்பவில்லையெனகிறீரே; நான் என் கண்ணெதிரே உம்முடைய கண் இருப்பதைப் பார்த்துக்கொண்டே இருக் கிறேனே; உம்மை விட்டுப்போகாமலே இருக்கும்போது அது திரும்பி வருவது எப்படி" எனறு கௌஸல்யை கேட்க,-(உன்னைக் காண்கிறேனல்லேன்) அறிவுகெட்ட பேதையே! உன் கண்ணெதிரே தோற்றும் இவ்வுருண்டையைக் கண்ணென்று பிரமிக்காதே; கண்ணென்பது இந்திரியங்களால் அறியப்பட முடியாததாய் இவ் வுருண்டையினுள் இருப்பதொன்று; உருண்டையான இவ்வஸ்து குருடர்களுக்கு இருநதபோதிலும், அவர்களுக்குப் பார்வையில்லை; மற்றவர்களுக்குப் பார்வை இருக்கிறது. பார்வையாகிற காரியத் தின் ஸதபாவ அஸத்பாவங்களிலிருந்து, உருண்டையாய்த் தோற் றும் இப்பொருளைக் காட்டிலும் வேறுபட்டதாய், இந்திரியங்களுக் குப் புலப்படாததானதொன்றே கண் என்னும் இந்திரியம் என்று கற்பிக்கிருர்கள் அறிவாளிகள். இப்போது உன்னை நான் காணுமை யாலே என் கண் ராமனைப் பின்தொடர்ந்து போயிற்றென்பது ஸித்தமன்றோ என்கிருன். (உன்னைக் காண்கிறேனல்லேன்) நீ முன்னே நிற்காதபோது உன்னைக் காணுமலும், முன் நிற்கும்போது கண்டும் போருகிற நான் நீ முன்னே நிற்கும்போதும் உன்னைக்

'**ந த்வா பச்யாமி**' என்கிறபடியென் என்னில்: (**ந த்வா பச்யாமி**) **அபிதுச்ருஞேமி. "வசஸா ஜ்ஞாத:-ஸ்வரேஞேக்த:"** என்று வார்த்தை சொல்லுகையாலே ஸந்நிஹிதையென்று அநுமித்தேனத்தனை; சக்ஷுரிந்த்ரியம் குடிபோகையாலே ப்ரத்யக்ஷிக்கப்பெற்றிலேன் என்கிருன். (**ந தவா பச்யாமி**) அவர் முகத்திலே விழிக்கப்பெருதொழிந்தால் அவரைப் பெற்ற உன் முகத்திலேயாகிலும் விழிக்கலாமென்றிருந்தேன். அதுவும் கிடையாதொழிவதே! (**ராமம மேநுகதா த்ருஷ்டி: ந த்வா பச்யாமி**) ப்ரதாநபரிகரமான கண்தானே அவர் பின்னே போகையாலே அஸந்நிஹிதமாயிற்று: ஸந்நிஹிதையான உன்னையோ காணப்பெறுகிறிலேன்; நானென்ன செய்வேன் என்கிருன். (**ராமம் மேநுகதா த்ருஷ்டி: ந தவா பச்யாமி**) "அண்டர்கோன் அணியரங்கனென் அமுதனைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே" என்னுமாப்போலே அவ்

---

காணவில்லை. 'உன்னை' என்று அருகிலிருப்பதாகச் சொல்லிக் கொண்டே 'உன்னைக் காணவில்லை' என்று சொல்வது எப்படியெனில்,-(உன்னைக் காணவில்லை) ஆனுல் கேட்கிறேன். "வார்த்தையாலே (இன்னுனென்று) அறியப்பட்டான்; ஸ்வரத்திலுலே (இன்னுனென்று) சொல்லப்பட்டான" என்று உலகவழக்குள்ளதாகையாலே நீ வார்த்தை சொல்லுகையாலே நீ அருகிலிருப்பதாக அனுமானம் செய்தேன்; கண்போய்விட்டதாகையாலே காணப் பெற்றிலேன். (உன்னைக் காண்கிறேனல்லேன்) ராமன் முகத்திலே விழிக்கப்பெருவிடினும் அவனைப் பெற்ற உன் முகத்திலேயாவது விழிக்கலாமென்று நினைத்தேன். பாவியேனுக்கு அதுவும் கிடைக்கவில்லையே. (ராமனை என் கண் பின்தொடர்ந்தது; உன்னைக் காண்கிறேனல்லேன்) "**ஸர்வேந்த்ரியாணும் நயநம் ப்ரதாநம்**" [எல்லா இந்திரியங்களுள்ளும கண் முக்கியமானது] என்கிறபடியே முக்கிய இந்திரியமான கண்ணேவெனில அவன் பின்போகையால் அருகிலில்லை. அருகிலிருக்கும் முக்கிய மஹிஷியான உனனையோ காணப் பெறவில்லை. முக்கியத்தையெல்லாம் இழந்த நான் என்ன செய்வேன் என்கிருன். (ராமனை என் கண் பின் தொடர்ந்தது; உன்னைக் காண்கிறேனல்லேன்) "அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதனைக் கண்ட கண்கள மற்ருென்றினைக் காணுவே" [அமலன்-10]

விஷயத்தில் ஆழங்காற்பட்டது இனி வேறொன்றைக் காண வற்றோ என்கிறான்.

இப்படி சக்ஷுரிந்த்ரியம் தனக்கு உதவாமையாலே வாகிந்த்ரியத்தைக்கொண்டாகிலும் ஆச்வஸிப்போம் என்று பார்த்து அவள் பேரைச் சொல்லி ஆறுகிறான்.-(**கௌஸல்யே**) **"एष मे जीवितस्यान्तो रामो यद्यभिषिच्यते"** (**ஏஷ மே ஜீவிதஸ்யாந்தோ ராமோ யத்₃யபி₄ஷிச்யதே**) என்று தென்றல் பகையாய் பெருமாளுடைய அந்வயத்தில் முடியத்தேடுகிற கைகேயியும் ஒருத்தி! **"किं पुनः प्रोषिते तात ध्रुवं मरणमेव मे"** (**கிம் புந: ப்ரோஷிதே தாத த்₄ருவம் மரணமேவ மே**) என்று அவர் வ்யதிரேகத்தில் முடியத்தேடுகிற நீயுமொருத்தி! (**கௌஸல்யே**) **"कौसल्या लोकभर्तारं सुषुवे यं मनस्विनी"** (**கௌஸல்யா லோகப₄ர்த்தாரம் ஸுஷுவே யம மநஸ்விநீ**) என்று நீ நாடுவாழ மநோரதித்துப் பிள்ளை பெற்றபடியும், அதெல்லாங்கிடக்க, நாடோடு என்னோடு வாசியறக்கெடும்படியாவதே! (**கௌஸல்யே த்வா ந பச்**

---

என்னுமாப்போலே, பகவத்விஷயத்தில் ஈடுபட்ட பொருள் இனி வேறொரு வஸ்துவைக் காணுமோ என்கிறான்.

இப்படிக் கண்ணாகிற இந்திரியம் தனக்கு உதவாமையாலே வாக்காகிற இந்திரியத்தைக் கொண்டாவது தேறுவோம் என்று நினைத்து அவள் பேரைச்சொல்லி ஆறுதலடைகிறான் அடுத்தபடியாக,-(கௌஸல்யே) "ராமன அபிஷேகம் செய்யபெற்றானாகில் நான் உயிர் வாழமாட்டேன" [ரா-அ 9-59] என்று, அனைவர்க்கும் தென்றல் காற்றுபோலே ஆநந்தத்தையளிக்கும் ராமனுக்கும் பகையாயிருப்பவளாய், அவனுடன் கூடியிருந்தால மரணமடைய விரும்புகிற கைகேயி தாழ்மையிலே ஒப்பற்றவள், "அப்பா நீ அருகிலிருக்கும் போதும் என்சக்களத்திகளாலே நான் இப்படி அவமதிக்கப்பட்டேன். நீ வனம் சென்றால் கேட்கவேண்டுமோ? நிச்சயமாக எனக்கு மரணமே உண்டாகும்" [ரா-அ (19-14)] என்று அவனைப் பிரிந்தால் மரணமடைய விரும்புகிற நீ மேன்மையிலே ஒப்பற்றவள். (கௌஸல்யே) "லோகநாயகரான எவரைக் கௌஸல்யை பெற்றெடுத்தாளோ" [ரா-ஸு 48-56] என்று நீ உலகமெல்லாம் வாழப் பிள்ளைபெற்றதெல்லாம் வீணாகி, உலகத்தாரும், பெற்ற தந்தையாகிய நானும் கெட்டுப்போகும்படி ஆகிவிட்டது! (கௌஸல்யே!

யாமி) அநர்த்தகரையான கைகேயியை இத்தனைபோதுகண்ட கண்கள் ஆச்வாஸகரையான உன்னைக் காணுதொழிவதே!

இவன் இபபடி தன் தளர்த்தி தோற்றக் 'கௌஸல்யே' என்று அழைக்தவாறே "தொங்கின இவனையும் இழக்க வாகாதே புகுகிறோம்" என்று துணுக்கோடே கிட்ட வந்து 'செய்யவேண்டுவதென்' என்று கேட்க,-(ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ) 'என்னுடைய க்லேசமெல்லாம் போம்படி உன்னுடைய ஈரக்கையாலே தடவி ஆச்வஸிப்பியாய்' என்கிறுன். (பாணிநா ஸ்ப்ருஶ) புரோவர்த்தினியான உன்னைக் காணுமையாலே சக்ஷுரிந்த்ரியம் குடிபோயிற்று என்றறிந்தோம். உன்னுடைய வாக்ச்ரவணம் பண்ணினபடியாலே ச்ரவணேந்த்ரியம் கிடந்ததென்றறிந்தோம். 'கௌஸல்யே' என்று நாமக்ரஹணம் பண்ணினபடியாலே வாகிந்த்ரியம் கிடந்ததென்றறிந்தோம். கந்தக்ரஹணம் பண்ணுமையாலே அவரை உச்சிமோந்த க்ராணேந்த்ரியம் போயிற்றென்றறிந்தோம்.

---

உன்னைக் காணகிறேனல்லேன்) அநர்த்தத்தை விளைத்த கைகேயியை இவ்வளவு நேரம் கண்ட கண்கள் ஆறுதல் விளைக்கும் உன்னைக் காணமுடியாமல் போனது என்ன தௌர்ப்பாக்கியம்!

தசரதசக்ரவர்த்தி இப்படித் தன் தளர்த்தி வெளிப்படும்படியாக "கௌஸல்யே" என்று அழைத்தவுடன் "நமக்குத் தக்கி நிற்கும் பர்த்தாவான இவரையும் இழக்கப்போகிறோமோ" என்று பயந்து அருகில் வந்து 'நான் செய்யவேண்டியதென்ன' என்று கேட்க,—(நன்ருக எனனைக் கையால் தொடு) 'என்னுடைய துன்பமெல்லாம் போம்படி உன்னுடைய ஈரக்கையாலே தடவி ஆறுதலளிப்பாயாக' என்கிறுன். (கையால் தொடு) 'எதிரே நிற்கும் உன்னைக் காணுமையாலே ஞானேந்திரியமான கண் ராமனுடன் போய்விட்டதென்று அறிந்தேன். உன் வார்த்தையைக் கேட்கையாலே ஞானேந்திரியமான காது போகாமல் கிடந்தது என்று அறிந்தேன். 'கௌஸல்யே' என்று உன் பெயரைச் சொல்லுகையாலே 'வாக்' என்னும் கர்மேந்திரியம் போகாமல் கிடந்தது என்று அறிந்தேன். வாசனையை அறியமாட்டாமையாலே, ராமனை உச்சிமோந்த மூக்கென்னும் ஞானேந்திரியம் அவனுடன் போயிற்றென்று அறிந்

ஸ்பர்ஶேந்த்ரியம் செய்தபடி *என்னென்று அறியலாம்படி என்னை அணைத்துக் காணாய். கள்ளர் புகுந்துபோன அகத்திலே கிடந்ததும், கிடவாததும் ஆராய்வாரைப்போலே. வந்துபோனவர்தாம் §வஞ்சக்கள்வனிறே. "என்னைம்புலனும் எழிலும் கொண்டு இங்கே நெருநல் எழுந்தருளிப் போன புனிதர்" என்றாரிறே.

(ஸாது ஸ்ப்ருஶ) 'இத்தனைபோதும் கைகேயியோடே ஒருமிடறாய், அவனைக் காடேறப்போகவிட்டு, இப்போதாக நின்று ஆரோத்மடியாநின்றான்' என்று நினைத்திராதே. 'அவித்யாஸ்பர்ஶத்தாலே இக்கலக்கம் இவனுக்கு வந்தேறி; இப்பாவி என்செய்வான்' என்று ¶நெஞ்சிரக்கத்தோடே தொடவேணும். (பாணிநா ஸ்ப்ருஶ) அன்று அக்நிஸாக்ஷிகமாக மங்களமுஹூர்த்தத்திலே ஸகௌதுகமாகப் பிடித்த

தேன். ஸ்பர்சத்தை அறியும் ஞானேந்திரியமான த்வகிந்திரியம் போயிற்றோ இருக்கிறதோ என்று அதை அறியலாம்படி என்னை அணைத்துப் பார்ப்பாயாக என்கிறான். திருடர்கள் புகுந்து கொள்ளையடித்துப்போன வீட்டிலே கள்வர் எடுத்துப்போகாமல் கிடந்ததையும் எடுத்துப் போனதையும் ஆராய்வாரைப்போலே ஆராய்கிறான். தசரதனிடம் பிள்ளையாய்ப் பிறந்து வந்து அவனிந்திரியங்களைக் கொண்டுபோனவன "வஞ்சகள்வன்" [திருவாய் 10-7-1] என்று சொல்லப்படுபவனன்றோ. "என்னைம்புலனும எழிலும் கொண்டு இங்கே நெருநல் எழுந்தருளிப், பொன்னங்கலைகள் மெலிவெய்தப் போன புனிதர்" [பெரியதிருமொழி 7-5-9] என்றான்றோ திருமங்கைமன்னனும்.

(நன்றாகத் தொடு) 'இவ்வளவு நாளும் கைகேயியோடு ஒத்திருந்து ராமனைக் காடுசெல்லும்படி செய்துவிட்டு, இப்போது வெளிவேஷக் கூத்தடிக்கிறான' என்று நினைத்திராமல், 'கர்மஸ்பர்சத்தாலே இக்கலக்கம் இவனிடம் வந்து குடிபுகுந்தது. என்ன செயவான் அப்பாவியான இவன' என்று நெஞ்சிலே இரக்கத்தோடு தொட வேணும். (கையால் தொடு) நம் விவாஹத்தின்போது அக்னியை ஸாக்ஷியாகக் கொண்டு, மங்களமான வேளையிலே, கௌதுகத்துடன்

* (பா) என்னெனனில: அஃது அறியலாமபடி.
§ (பா) வஞ்சக்கள்வராகையாலே. ¶ (பா) நெஞ்சிறக்கத்தோடே.

அக்கையாலே அந்நினைவோடே தொடவேணும். (பாணிநா ஸ்ப்ருஶ) ஸர்வாங்கங்களாலும் என்னையணைத்து வெள்ளக் கேடாகாமே ஸாத்மிக்கும்படி ஏகாவயவத்தாலே ஸ்பர்ஶிக்க வேணும். (ஸாது மா பாணிநா ஸ்ப்ருஶ) பெருமாளை எடுப்பது ஒப்பிப்பதாய் அவருடைய அங்கஸ்பர்ஶத்தாலே பரிமளித மான அக்கையாலே தொடவேணும். (மா ஸ்ப்ருஶ) ராம ஸ்பர்ஶம பெறில் உஜ்ஜீவித்தும், பெறுதபோது முடியும் படியுமாயிருக்கிற என்னை அவரைப்பெற்ற உன்னுடைய அக் கையாலே அணைக்கவேணும். பகவத்ஸ்பர்ஶம் நேர்கொடுநேர் கிடையாதொழிந்தால், அவருடைய ஸம்பந்தி ஸம்பந்தி களுடைய ஸ்பர்ஶங்கொண்டு உஜ்ஜீவிக்கக்கடவதாயிறே இருப்பது. "तां स्पृष्ट्वा मामपि स्पृश" (தாம ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ) என்று அவர்தாமும் இத்தலையைப்பெறுதபோது இப் பாடுபட்டாரிறே. (பாணிநா ஸ்ப்ருஶ) "அணிமிகு தாமரைக்

---

(1. மங்கள ஸூத்ரத்துடன், 2. ஆசையுடன்) பிடித்த அக்கையாலே அதே நினைவுடன் என்னைத் தொடவேணும. (கையாலே தொடு) எல்லா அங்கங்களாலும் என்னை அணைத்துத் தாங்கமுடியாதபடி வெள்ளக்கேடாகச் (அதிவ்ருஷ்டியாகச்) செய்யாமல, தாங்கலாம்படி ஒரு அவயவத்தாலே தொடவேணும். (நன்றாக என்னைக் கையால் தொடு) ஸ்ரீராமனை எடுப்பதாலும், அலங்கரிப்பதாலும் அவனுடைய அவயவஸ்பர்சத்தாலே மணமூட்டப்பட்ட அக்கையாலே தொடு. (என்னைத் தொடு) ராமனைத் தொடப்பெற்றால் வாழ்ந்து போம்படி யும், தொடப்பெறாவிடில அழிந்துபோமபடியுமிருக்கிற என்னை அவரைப் பெற்ற உனனுடைய அக்கையாலே அணைக்கவேணும். பகவத ஸ்பர்சம் நேருக்குநேர் கிடைக்காமற்போனாலும், பகவா னுடைய ஸம்பந்தம் பெற்றவைகளுடன் ஸம்பந்தம் பெற்றிருப்பவர் களுடைய ஸ்பர்சம்கொண்டு வாழ்ந்துபோம்படியாகவல்லவோ இருப் பது. "வாஹி வாத யத: காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருச। த்வயி மே கா₃த்ரஸம்ஸ்பர்ச: சந்த்₃ரே த்₃ருஷ்டி ஸமாக₃ம:॥" [ரா-யு 5-6] [காற்றே! என் பிரியையிருக்குமிடத்திலிருந்து நீ வீசுவாயாக. அவளைத் தொட்டுவிட்டு என்னையும் தொடுவாயாக. உன்னிடத்தில் எனக்கு அவளுடைய திருமேனி ஸ்பர்சம ஏற்படுகிறது. சந்திர னிடத்தில் அவளுடைய கண்ணுடன் சேர்த்தி ஏற்படுகிறது.] என்று அந்த பகவானும் ஆச்ரிதையைப் பெறுதபோது இப்பாடு பட்டார்

கையையந்தோ அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்'' என்று அவ்விஷயத்திலே சொல்லக்கடவ பாசுரத்தை, அது கிடையாமையாலே ததீய விஷயத்திலே சொல்லுகிறுனிறே.

(அண்டர்கோன்) இதர விஷயங்களில் போகாதபடி கால்தாழப் பண்ணுகிற விஷயத்தில் வைலக்ஷண்யமிருக்கிறபடி. (அண்டர்கோன்) **"यत्र पूर्वे साध्याः सन्ति देवाः" (யத்ர பூர்வே ஸாத்₄யா: ஸந்தி தே₃வா:)** என்றும், ''விண்ணோர் பரவும் தலைமகன்'' என்றும், ''அயர்வறும் அமரர்கள் அதிபதி'' என்றும் சொல்லுகிறபடியே, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கு நிருபாதிகநிர்வாஹகனை மேன்மையை உடையவன். (அண்டர்கோன்) தனித்தனியே முடியுடைவானவராய் நிரபேக்ஷமான பெருந்திரளுக்கு நியாமகனுமவன். (அண்டர்கோன்) ''மனிசர்க்குத் தேவர்போலத்

---

ரன்றே. (கையால் தொடு) ''அணிமிகு தாமரைக் கையை அந்தோ! அடிச்சியோம் தலைமிசை நீ அணியாய்'' [திருவாய் 10-5-5] என்று பகவான் விஷயத்திலே சொல்லவேண்டிய பாசுரத்தை, பகவத் ஸ்பர்சம் கிடைக்காமையாலே அவன் ஸம்பந்தம் பெற்ற கௌஸல்யை விஷயத்தில் சொல்லுகிறுனன்றே.

(அண்டர்கோன்) மற்ற விஷயங்களை அண்டாதபடி ஈடுபடுத்துகிறதான இவ்விஷயத்தின் பெருமையிருக்கிறபடி. அதாவது,- நித்யஸூரிகளையும் ஈடுபடுத்தி எழுதிக்கொண்டிருக்கை. (அணடர்கோன்) ''யாதொரு பரமபதத்திலே பழைமையானவர்களான ஸாத்யதேவர்கள் எனப்படும் நித்யஸூரிகள் எழுந்தருளியிருக்கிறுர்களோ'' [புருஷஸூக்தம்] என்றும் ''விண்ணோர் பரவும் தலைமகன்'' [திருவாய் 2-6-3] என்றும், ''அயர்வறும் அமரர்கள் அதிபதி'' [திருவாய் 1-1-1] என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸாரத்தின் நாற்றமும் அண்டப் பெறுதவர்களாகையால் அண்டர்களெனப்படும் நித்யஸூரிகளுக்கு இயற்கையாகவே தலைவனுயிருக்கும் பெருமையை உடையவன். (அண்டர்கோன்) அண்டர்-அரசராய், இவர்கள் ஒவ்வொருவரும் ''முடியுடைவானவர்'' [திருவாய் 10-9-8] என்று சொல்லப்படுபவர்களாகையாலே முடிமன்னராய் வேருெருவரையும் எதிர்பாராதவர்களான நித்யஸூரிகளின் பெருங்கூட்டத்தை நியமிக்கும் சக்ர

தேவர்க்கும் தேவாவோ'' என்றும். "परः पराणां" (பர: பராணம) என்றும் சொல்லுகிறபடியே மநுஷ்யாதிகளில் அத்யந்த விலக்ஷணரான நித்யஸூரிகளுக்கு மேலானவன்.

இப்படி நெட்டேணியிட்டு ஏறவேண்டும்படி மிசை கொம்பாய் எட்டாநிலத்தே இருக்குமோவென்னில்: (அணியரங்கன்) அக்குறைதீரத் தன்னைக்கொண்டு வந்து ஸுலபனுக்கினவன். (அணியரங்கன்) "அரங்கத்தரவணைப் பள்ளியான்'' என்னுமாப்போலே போக்குவரத்தற ஸ்தாவரப்ரதிஷ்டையாக வந்து சாய்ந்தவன். "शेष्ये पुरस्ताच्छालायां यावन्मे न प्रसीदति" (ஶேஷ்யே புரஸ்தாச்சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீதஂதி) என்று அவர்பக்கல் நாம் பண்ணுமத்தைத் தாமிங்கே வந்து வளைப்புக்கிடக்கிறவன். பயிர்த்தலையிலே குடில்

---

வர்த்தியாயிருப்பவன். (அண்டர்கோன்) "மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ" [திருவாய் 8–1–5] என்றும் "(மநுஷ்யர்களைக் காட்டிலும்) மேலானவர்களான நித்யஸூரிகளைக் காட்டிலும் மேலானவன்'' [வி பு 1–2–10] என்றும் சொல்லுகிறபடியே தேவர் மநுஷ்யர் முதலானோரிலும் மிகவும் மேம்பட்டவர்களான நித்யஸூரிகளுக்கும் மேலானவன்.

நீண்டதோர் ஏணி வைத்து ஏறவேண்டும்படி இப்படி எட்டாக் கொம்பாய் எட்டாநிலமாகிற பரமபதத்திலே இருப்பனோ இவன் என்னில்: (அணியரங்கன்) எட்டாமலிருக்கையாகிற அக்குறையில்லாதபடி தன்னை இங்கு கொண்டுவந்து ஸுலபனுக்கினவன். அதாவது,—அணித்தாயிருக்கும் (அருகிலேயிருக்கும்) அரங்கத்திலே எழுந்தருளியிருப்பவன. (அணியரங்கன்) "அரங்கத்தரவணைப்பள்ளியான்" [பெரியாழ்திரு 4-10-1] என்னுமாப்போலே போவதும் வருவதுமில்லாதபடி எழுந்திருக்கவொண்ணாத படுக்கையிலே நிலையாகச சாய்ந்தவன். "என்னிடத்தில் திருவுள்ளமிரங்காதவரையில் பர்ணசாலையின் முன்படுத்து ப்ராயோபவேசம் செய்வேன்'' [ரா-அ 111-14] என்று பகவானை அடைவதற்கு நாம் செய்யும் காரியத்தைத் தாமிங்கே வந்து செய்துகொண்டு "வளைத்து வைத்தேன் இனிப்போகலொட்டேன்'' என்றாப்போலே வளைத்துக

கட்டிக் கிடப்பாரைப்போலே, ஜீவஸம்ரக்ஷணார்த்தமாக வந்து படுகாடு கிடக்கிறவன். (அணியரங்கன்) 'அண்டர் கோன்' என்கிறவிடத்தில், அவர்களுக்கும் அணுகவொண்ணுதபடி பெரிய மதிப்போடே, "தஹ பச" என்று நியாமகனாய், அது நிருபகமாம்படியிருந்தான். இவ்விடத்தில் தேசிகரில் தானும் ஒருவனாய்க் கலந்து பரிமாறி, "புனலரங்க மூர்" என்று அடையாளம் சொல்லிப்போயிற்று. (அணியரங் கன்) அப்ராக்ருதமான தேசத்தை விட்டுப்பற்றவேண்டும் படி ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலை உகந்தவன். அண்டர்கோன் அமரும் சோலையிறே. (அணியரங்கன்) நாள் தோறும் போஷ்வஸ்துவைப் பெறுகையாலே நித்யோத்ஸவ மாய், "सिक्तराजपथां कृत्स्नां प्रकीर्णकमलोत्पलां" (ஸிக்த்ராஜபதாம்

---

கொண்டு கிடபபவன. பயிருள்ள இடத்தில் குடிசை கட்டி வாழ்ந்து பயிரை ரக்ஷிப்பவர்களைப்போலே ஜீவப்பயிர்களை ரக்ஷிப்பதற்காக வந்து பழம்புனத்திலே படுத்துக்கிடக்கும் பத்தியுழவனுயிருப்பவன். (அணியரங்கன்) 'அணடர்கோன்' என்கிற பரமபதத்திலே, அண்டவொண்ணுதவர்களான அவர்களுக்கும் அணுகவொண்ணு தபடி பெரிய மதிப்போடு 'எரி, சுடு' என்று நியமிப்பவனாய், அதுவே நிருபகமென்று சொல்லும்படி இருந்தான். இவ்விடத்தில வழிகாட்டும் தேசிகர்களான ஆழ்வார்களோடு தானும் ஒருவனாய்க் கலந்து பரிமாறி "புனலரங்கம் ஊரென்று போயினரே" [திரு நெடு-25] என்கிறபடியே அடையாளம் சொல்லித் தன்னூருக்கு வழிகாட்டிப் போனான்றே. (அணியரங்கன்) அணி- ஆபரணம்; ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான அரங்கத்தில் வாழ்பவன். அப்ராக் ருதமான பரமபதத்தையும் விட்டு ஸர்வேச்வரன் இத்தைப்பற்ற வேண்டும்படியன்றே இது இவ்வுலகிற்கு ஆபரணமாயிருக்கிறது. "அண்டர்கோன் அமரும் சோலை அணி திருவரங்கம்" [திருமாலை-14] என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் அண்டர்கோனயிருக்கும் இருப்பிலும் பொருந்தாமல் இங்கு வந்து அமரும்படி (பொருந்தும் படி) இது ஸம்ஸாரத்திற்கு ஆபரணமாயிருக்கும்படியை அருளிச் செய்தாரன்றே. (அணியரங்கன்) அலங்கரிக்கப்பட்ட அரங்கத்தில வாழ்பவன். நாள்தோறும தனக்குப் பிராட்டியைப் போலும், ஸ்ரீகௌஸ்துபம் போலும் இனியரான சேதனர்களைப் பெறுகையால் நித்யகல்யாணமாயும், நித்யோத்ஸவமாயுமிருக்கிறதாகையாலே

க்ருத்ஸ்நாம் ப்ரகீர்ண கமலோத்பலாம்) என்றும், "पताकाध्वज-मालिनीं" (பதாகாத்₄வஜமாலிநீம்) என்றும், "திட்கொடிமதிள் சூழ் திருவரங்கத்தாய்" என்றும் சொல்லுகிறபடியே நித்யா லங்க்ருதமான கோயிலிலே வாழ்கிறவன். (அணியரங்கன்) "देशोयं सर्वकामधुक्" (தே₃சோ₂யம் ஸர்வகாமது₄க்) என்கிற படியே பரமப்ராப்யமான அவனை யகப்பட இங்கே யழைத்துத் தன்பக்கல் ஏகராத்ரவாஸத்தாலே இஸ்ஸம் ஸாரிகளுடைய ப்ரதிபந்தகங்களையும் போக்கி, சேர்த்து ரக்ஷிக் கக்கடவோம் என்று அதிலே ஒருப்பட்டிருக்கிற கோயிலிலே இருக்கிறவன். (அணியரங்கன்) "रङ्गं स्यान्नर्तनस्थानं" (ரங்க₃ம் ஸ்யாந் நர்த்தந ஸ்த₂ாநம்) என்று சொல்லுகிறபடியே அவர் மநோரதலாபத்தாலே உகந்து வர்த்திக்கிற தேசம். நித்யவிபூதியிலேயிருக்கும்போது அங்கு குறைவாளரில்லாத படியினாலே, தான் குறைவாளனாயாயிற்று இருப்பது.

"(ராமனுடைய பட்டாபிஷேகத்திற்காக) ராஜபாட்டை முழுவதும் நீர் தெளிக்கப்பெற்றதும், தாமரை, உற்பலம் ஆகியமலர்கள் நிறைந் திருக்கப்பெற்றதுமான அயோத்தியை (மந்தரை பார்த்தாள்)" [ரா-அ 7-2] என்றும், "பதாகைகளும், கொடிகளும், மாலைகளும நிறைந்திருக்கப்பெற்ற (அந்நகரத்தைப் பார்த்தாள்)" [ரா-அ 7-6] என்றும் "திட்கொடி மதிள்சூழ் திருவரங்கத்தாய்" [திருவாய் 7-2-3] என்றும் சொல்லுகிறபடியே எப்போதும அலங்கரிக்கப்பட்டிருக்கும் திருவரங்கத்திலே வாழ்கிறவன். (அணியரங்கன்) அணி—ஸம்ஸாரி களுக்கு உத்தேச்யமானதாயிருப்பது. "இந்த தேசம் எல்லா விருப் பங்களையும் அளிப்பது' [காருடம்-11] என்கிறபடியே பரமப்ராப்ய மான அவனையுமுட்பட இங்கே அழைத்து, தன்னிடம் ஒரு ராத்திரி வஸித்தாலும் இந்த ஸம்ஸாரிகளுடைய விரோதிகளையும் போக்கி, எல்லாச்சேதனரையும் சேர்த்து ரக்ஷிப்போம் என்று அதில் தீக்ஷித் திருக்கிற திருவரங்கத்திலே இருக்கிறவன். (அணியரங்கன்) "ரங் க₃ம் ஸ்யாந் நர்த்தந ஸத₂ாநம்" [ஸ்ரீரங்கமாஹாத்ம்யம்] [ஸ்ரீதேவியின் நர்த்தனஸ்தானமே ஸ்ரீரங்கமெனப்படுகிறது] என்று சொல்லுகிற படியே அந்த பகவான், பிராட்டியை அநுபவிக்கையாகிற மநோரதம் நிறைவேறுமிடமாகையாலே ஆநந்தத்துடன் வாழ்கிறதேசம். பரம பதத்திலிருக்கும்போது, அங்கு தன்னைவிடக் குறைந்தார் இல்லாமை யாலே, குறைந்தார்க்கு அளிக்கையாகிற நிறைவைப் பெறாத குறை

இங்கே வந்தபின்பாயிற்று ரக்ஷ்யவர்க்கம் பெற்றுப் பரி பூர்ணராய்த் திருவரங்கச் செல்வராயிற்று. நமக்குப் பரம பதம் உத்தேச்யமாமாப்போலேயாயிற்று. அவருக்குக் கோயில் உத்தேச்யமாயிருக்கும்படி.

ஸௌலபன்யை இத்தால் உமக்குப் பேறென்னென்னில்: (என்னமுதனை) எனக்கு தா$_4$ரகனை என்னமுதனை. தேவர்கள் அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. அதாவது,—தான் உப்புநீராய், அசேதனமாய், உடம்பு நோவக்கடையவேண்டி ஶரீரத்தைப் பூண்கட்டக்கடவதாய், இத்தனை பட்டாலும் மாளும்படி யாயிருக்கும். இது ஸர்வரஸமுமாய், பரமசேதநமுமாய், அயத்நஸித்தமுமாய், ஆத்மாவைப் பூண்கட்டக் கடவதாய், நித்யமுமாயிருப்பது. (*அமுதனை) **"असौ वा आदित्यो देवमधु"** (அஸௌ வா ஆதித்$_3$யோ தே$_3$வமது$_4$) என்றும், **"आत्मा वै पुरुषस्य मधु"** (ஆத்மா வை புருஷஸ்ய மது$_4$) என்றும், **"रसो वै सः"**

---

வாளனாய் இருப்பான் எம்பிரான். இங்கே வந்தபிறகு தான் ரக்ஷிக்கத்தகுந்த குறைவாளர்களைக் கூட்டம் கூட்டமாகப் பெற்றுப் பரிபூர்ணனாய்த் திருவரங்கச் செல்வனானான். நமக்குப் பரமபதம் உத்தேச்யமாவது போல், அவனுக்குக் கோவில் உத்தேச்யமாயிற்று. அணி—உத்தேச்யமான ஆபரணம். இங்கு பரமபுருஷனுக்கு உத்தேச்யமாயிருப்பதென்று பொருள்,

ஸௌலபன்யை இதனால் உமக்கு என்ன பலன்? எனில், —(என் அமுதனை) என்னை தரிக்கச்செய்யும அமுதமாயிருப்பவனை. 'என் அமுதன்' என்று தேவர்களுடைய அம்ருதத்திற்காட்டிலும ஏற்றம் சொல்லப்படுகிறது. அதாவது,—அவர்களுடைய அமுதம் உப்புச் சாறாய், அறிவற்றதாய், உடம்பு வருந்திக் கடையவேண்டியதாய், அதற்காக, இவனுக்கு விரோதியான தேஹத்தை வலியுறச்செய்வதாய், இத்தனை பாடுபட்டாலும் மாளும்படியாயிருக்கும். இந்த அமுதமோவெனில் ஸர்வரஸமென்று மறைமுடிகளிலே புகழப்படுவதாய், மேலான சேதனமாய், முயற்சிசெய்யாமல் ஸித்திக்ககூடியதாய், ஆத்மாவுக்கு பலத்தைத் தருவதாய், நித்யமுமாயிருக்கும். (அமுதனை) "ஆதித்யனுக்கு அந்தர்யாமியாயிருக்கும் இப்பரமாத்மா தேவர்களுக்கும் அமுதாயிருப்பவன்" [சாந் 3-1-1] என்றும், "பர

---

* 'அமுதினை' என்றும் பாடமுண்டு.

(ரஸோ வை ஸ:) "सर्वरसः" (ஸர்வரஸ:) என்றும், "विष्णोः पदे परमे मध्व उत्सः" (விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ:) என்றும், "தூயவமுதை" என்றும். "ஆராவமுதே" என்றும் சொல்லுகிறபடியே ஒருகாலும் தெக்கிடாத அமுதமாயிற்று. (அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதனை) உபயவிபூதி ஒரு தட்டும் நான் ஒரு தட்டுமாயன்றோ விஷயீகரித்தது.

"அண்டர்கோன்" என்கையாலே நித்யவிபூதியோகம் சொல்லிற்று. "அணியரங்கன்" என்கையாலே லீலாவிபூதி யோகம் சொல்லிற்று. அவ்வோபாதிதன்னையும் ஒரு விபூதி யாக நினைத்து 'என்னமுதனை' என்கிறார். "திருமால் வைகுந்தமே திருப்பாற்கடலே என்தலையே" என்னுமாப் போலே. 'அண்டர்கோன்' எனகையாலே ஸ்வாமித்வம் சொல்லிற்று. 'அணியரங்கன்' என்கையாலே ஸௌலப்யம் சொல்லிற்று. 'என்னமுதனை' என்கையாலே ஸௌசீல்ய

---

மாத்மாவே ஜீவனுக்கு அமுதாயிருப்பவன்" [ ] என்றும், "அந்தப் பரமாத்மா ரஸமாயிருப்பவனன்றோ" [தை-ஆ 3-7-1] "எல்லா ரஸமாயுமிருப்பவன்" [சாந் 3-14-2] எனறும் "விஷ்ணுவின் மேலான திருவடியில் மது ஒழுகாநின்றது" [யஜு॰ 2-4-6] என்றும் "தூய அமுதை' [திருவாய்1-7-3] "ஆராவமுதே" [திருவாய்5-8-1] என்றும் சொல்லுகிறபடியே ஒருபோதும் தெவிட்டாத அமுதமா யிருக்கின்றான் இவன். (அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதனை) பரமபதமும் இவ்வுலகமுமாகிற இரண்டு விபூதிகளும் ஒரு தட்டும, நான் ஒரு தட்டுமாய் நினைத்தன்றோ என்னை ஆட்கொண்டது.

"அண்டர்கோன்" என்று நித்யவிபூதியுடன் கூடியிருப்பவன் என்னுமர்த்தம் சொல்லப்பட்டது. "அணியரங்கன்" என்று லீலா விபூதியாகிற இவ்வுலகுடன் கூடியவன் என்னுமர்த்தம் சொல்லப் பட்டது. இவ்விரண்டு விபூதிகளைப்போலே தம்மையும் ஒரு விபூதி யாக நினைத்து "என் அமுதனை" என்கிறார். "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே என்தலையே திருமால் வைகுந்தமே" [திருவாய் 10-8-8] என்று நம்மாழ்வார் அருளிச்செய்தாப்போலே. "அண்டர் கோன்" என்கையாலே ஸர்வஸ்வாமித்வம் சொல்லப்பட்டது. "அணி யரங்கன்" என்கையாலே ஸௌலப்யகுணம் சொல்லப்பட்டது. "என்அமுதனை" என்கையாலே மிகத்தாழ்ந்த தன்னுடன் ஒரு

வாத்ஸல்யம் சொல்லிற்று. 'அண்டர்கோன் அணியரங்கன்' என்கையாலே, "अखिलजगत्स्वामिन्" (அகி₂லஜக₃த்ஸ்வாமிந்) என்கிறார். 'என்னமுதனை' என்கையாலே "अस्मत्स्वामिन्" (அஸ்மத்ஸ்வாமிந்) என்கிறார். (என்னமுதனை) "तमेवं विदित्वा अतिमृत्युमेति" (தமேவ(ம) விதி₃த்வா அதிமருதயுமேதி) என்று அவனைப்பெற்று இவர் அம்ருதனானாப்போலேயாயிற்று, இவரைப்பெற்று அவர் அம்ருதரானபடி.

இப்படி நிரதிசயபோக்யரான இவரைப்பெற்றுச் செய்த தென்னென்னில்: (கண்டகண்கள்) என்றும் பாழ்போகாத படி அனுபவிக்கப் பெற்றனவாயிற்று. (கண்டகண்கள்) "காணவாராய்" என்றும், "कदा नु साक्षात्करवाणि चक्षुषा" (கதா₃ நு ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா) என்றும் காண ஆசைப் பட்டுப் போகையன்றிக்கே, யதாமநோரதம் காணப்பெற் றனவாயிற்று. (அமுதினைக் கண்ட கண்கள்) ரஸநேந்த்ரிய

---

நீராகக் கலக்கையாகிற ஸௌசீல்யமும், தன் தாழ்வுகளையும அமுத மாகக் கொள்வதாகிற வாத்ஸல்யமும சொல்லபபட்டது. "அண்டர் கோனணியரங்கன்" என்கையாலே "எல்லா உலகுக்கும் நாயகனே" [சரணாகதிகத்யம்] எனகிறார். "என்னமுதனை" என்கையாலே "என் னுடைய நாயகனே" [சரணாகதிகத்யம்] என்கிறார். (என்னமுதனை) என்றலே அம்ருதனானவனை, "அவனையே (இப்படி) அறிந்தானாகில் அம்ருதனாயிருக்கும் (இறக்காத) நன்மையை அடைகிறான்" [ச்வே 3-8] என்று ஸர்வேச்வரனைப் பெற்றுச் சேதனன் அமருதனானது போல், இவ்வாழ்வாரைப் பெற்றபின்பே பகவான் அம்ருதனாக -(சாவாதவனாக)- ஆனான எனகை. இவரைப் பெறாதிருந்தால் ஸத்தையிழந்திருப்பான் என்றபடி.

மிகவும் இனியரான இவ்வரங்கனைப் பெற்று இவர்கண்கள் என் செய்தனவென்னில: (கண்ட கண்கள்) "காணுதாா கண என் றும் கண்ணல்ல" [பெரியதிரு 11-7-1] என்கிறபடியே என்றும் வீணாகப்போகாதபடி அநுபவிக்கப்பெற்றன. (கண்ட கண்கள்) "காணவாராய்" [திருவாய் 8-5-2] என்றும், "என்று நான் கண்ணால காணப்பெறுவேன்?" [ஸ்தோ-ர] என்றும் காண ஆசைப்படுவது டன் நில்லாமல், நினைத்தபடியே காணப்பெற்றன. (அமுதினைக்

விஷயமான அம்ருதத்தைச் சக்ஷுஸ்ஸு விஷயீகரிப்பதே! (அமுதனைக் கண்ட கண்கள்) "**बर्हायिते ते नयने नराणां विष्णोर्न लिङ्गानि निरीक्षतो ये**" (பர்ஹாயிதே தே நயநே நராணாம் விஷ்ணோர் ந லிங்கா நி நிரீக்ஷதோயே) என்கிறபடியே பீலிக் கண்களான கண்களன்றிக்கே பெற்ற கண்கள். "**न मांसचक्षुरभिवीक्षते तं**" (ந மாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம்) என்றும், "**न चक्षुषा पश्यति कश्चनैनं**" (ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்) என்றும், "கட்கிலீ" என்றும் ப்ரமாணங்கள் நிஷேதிக்கச்செய்தேயும், முற்பட இன்று காணப்பெற்ற கண்கள். (அமுதனைக் கண்ட கண்கள்) நாட்டாரைப்போலே மாளும்படியாகப் பானம் பண்ணி அநுபவிக்கையன்றிக்கே, "**नाश्नन्ति न पिबन्ति एतदेवामृतं दृष्ट्वा तृप्यन्ति**" (நாச்நந்தி ந பிபந்தி ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி) என்கிறபடியே, * முதலிற் சிதையாதபடி காட்சியாலே பருகிக்களித்தனவாயிற்று இவை. (கண்கள்) அந்யோந்ய ஸத்ருசம் என்னுமாப்போலே ஒன்றுக்கொன்று ஒப்பாமித்தனை போக்கி வேறு உபமானமில்லாதவை.

---

கண்ட கண்கள்) நாவால் சுவைக்கப்படும் அமுதைக் கண்கள் கண்டது என்ன ஆச்சரியம்! (அமுதனைக் கண்ட கண்கள்) "விஷ்ணுவினுடைய சிந்நங்களை எவர்களுடைய கண்கள் காண்கிறதில்லையோ அவர்களுடைய அக்கண்கள் மயில்பீலிக்கண்களைப்போன்றவையே" [ஸ்ரீபாகவதம் 2-3-22] என்கிறபடியே பீலிக்கண்ணாயிராமல் அநுபவிக்கப்பெற்ற கண்களாயிருப்பவை. "ஊனக்கண் அப்பரமனைக் காணாது" [ருக்வேதம்] என்றும், "எவனும் இவனைக் கண்ணால் காண்கிறதில்லை" [தை-நா 1-10] என்றும், "கட்கிலீ" [திருவாய் 7-2-3] என்றும் இவனைக காணமுடியாதென்று ப்ரமாணங்கள் சொல்லியிருந்தும் ப்ரத்யக்ஷமாக இன்று காணப்பெற்ற கண்கள். (அமுதனைக் கண்ட கண்கள்) நாட்டிலுள்ளார் மதுவை மிகுதியில்லாமல் குடித்துத் தீர்த்து அநுபவிப்பதுபோலே செய்யாமல் "பரமாத்மாவாயிருக்கிற இந்த மதுவை உண்பதுமில்லை; குடிப்பதுமில்லை; அமுதமான இவனைக் கண்டுகளிக்கிறார்கள்" [சாந் 3-6] என்கிறபடியே முதலிலிருந்த இருப்புக்குச் சிறிதும் குறையாதபடி காட்சியாலே பருகிக்களித்தன இக்கண்கள். (கண்கள்) ஒன்றுக்கு மற்றொன்றே உபமானம் என்பதுபோலே, ஒன்றுக்கொன்று ஒப்

(மற்றொன்றினைக் காணாவே) பாதிவ்ரத்யதர்மத்திலே தீக்ஷித்தாயிற்று இருப்பது. மற்றொன்றை எடுத்துக் கழிக்கைக்குப் பாத்தம் போராதே இருக்கிறபடி. (காணாவே) **"पश्यन्ति सूरयः'** (பச்யந்தி ஸூரய:) என்றும், **"सदा पश्यन्ति"** **(ஸதா₃ பச்யந்தி)** என்றும் த்ரிபாத்விபூதியாக இமைகொட்டு வதும் செய்யாதே அநுபவிக்கிற வடிவழகு இதொன்றுமே அநுபவிக்கப்புக்கால் வேறொன்றில் பகுரலாயோ இருப்பது? (அணியரங்கனைக் கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே) **"शास्त्राद्वेद्मि जनार्दनं"** (ஶாஸ்தராத₃ **வேத்₃மி ஜநார்த்த₃நம**) என்றும், **"शास्त्रदृष्टेन वर्त्मना"** (ஶாஸ்த்ரத்₃ருஷ்டேந **வர்தமநா**) என்றும் சொல்லுகிறபடியே ஓலைப்புறத்திலே கண்டுபோகை யன்றிக்கே, இக்கண்ணாலே இங்கு காணப்பெற்றது வேறொன்று காணவற்றோ?

(என்னமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) கண்டபோதே முகதைதை மாறவைக்கவேண்டும்

---

பாகுமேயொழிய வேறு உபமாநமில்லாதவை. [இது கண்கள் என்ற த்விவசந தாத்பர்யம்]

(மற்றொன்றினைக் காணாவே) மறந்தும் புறந்தொழாமையாகிற பாதிவ்ரத்யதர்மத்தில் நிலைநின்றபடி. 'இன்னது' எனறு விசேஷித்து எடுக்காமல, 'மற்றொன்று' என்று அநாதரம் தோற்ற எடுக்கையாலே மற்ற விஷயங்கள் எடுத்துக்கழிப்பதற்கும் யோக்யதையற்றவை யென்றபடி. (காணாவே) "நித்யஸூரிகள் காண்கிறார்கள" [ருக வேதம] என்றும், "எப்போதும் காண்கிறார்கள்" [ருக்வேதம்] என்றும் இவ்வுலகிலும் மும்மடங்கு பெரிதான அவ்விபூதியும் இமை கொட்டாமல் அநுபவிக்கும் வடிவழகை இக்கண்மட்டும் அனுப விக்கப்புகுந்தால் வேறொனறில் புக முடியுமோ? (அணியரங்கனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) "ஜநார்த்தனனை நான் சாஸ்திரத்தினாலே அறிகிறேன்" [பார-உத் 68-5] என்றும் "சாஸ்தி ரத்தில் சொன்ன வழியில் காணத்தக்கவன்" [விஷ்வக்ஸேநஸம் ஹிதை] என்றும் சொலலுகிறபடியே ஓலையின்மேல் காணும் காட்சி யன்றிக்கே, இக்கண்ணாலே இங்கே காணப்பெற்ற இக்கண்கள் வேறொன்றைப் பார்க்கமுடியுமோ?

படி செந்தீயாய் எரிந்திருக்கையன்றிக்கே, கண்கள் குளிர்ந் திருக்கும்படி நிரதிசயபோக்யமான அத்தை விட்டுப் புறம்பு கால்வாங்கப்போயோ இருப்பது? (கண்ட கண்கள் மற்றொன் றினைக் காணாவே) காணாதபடி அடியிலே விலக்கிறோமாகில் மீட்கலாமத்தனைபோக்கிக் கண்ட பின்பு மீட்கலாமோ? (அண்டர்கோன் அணியரங்கனென் அமுதனைக் கண்ட கண் கள் மற்றொன்றினைக் காணாவே) உபயவிபூதிவிசிஷ்டனாய், ஸர்வாத்மகனான இவனைக் கண்டால் **"आत्मनि खल्वरे दृष्टे इदं सर्वं दृष्टं भवति"** (**ஆத்மநி க$_2$ல்வரே த்$_3$ருஷ்டே இத$_3$ம் ஸர்வம் த்$_3$ருஷ்டம் ப$_4$வதி**) **"नान्यत्पश्यति नान्यच्छृणोति"** (**நாந்யத்பச்யதி நாந்யச்ச்$_2$ருணோதி**) என்னுமாப்போலே, ஸர்வமும் தத$_3$ாத்மக மாய்த் தோற்றுமத்தனையொழிய, தத்$_3$வ்யதிரிக்தமாக ஒன் றும் தோற்றாது என்றாகவுமாம், (மற்றொன்றினைக் காணாவே) என்று அவனையே உருவக்காணும் என்னும்படியாயிற்று.

---

(என் அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) கண்டவுடன் முகத்தைத் திருப்பிக்கொள்ளவேண்டும்படி "ஒன்று செந்தீ" [திருநெடு-2] என்கிறபடியே செந்தீயைப்போன்று எரிந் திராமல், கண்கள் குளிர்ந்திருக்கும்படி மிகவும் இனியதான அதை விட்டு வேறு பொருள்களில் செல்லும்படியோ இருக்கிறது. (கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) காணாதபடி முதலிலேயே விலக்கி வைத்திருந்தோகில் மீட்டிருக்கலாமேயொழிய, அதைக் காணவிட்டபிறகு இப்போது மீட்கமுடியுமோ? (அண்டர்கோன அணியரங்கனென் அமுதனைக்கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே) இரண்டு விபூதிகளுடனும் கூடியிருப்பவனாய், எல்லா வற்றையும் ஆத்மாவாக உடையவனான இவனைக்கண்டால், "பரமாத் மாவைக் கண்டால் இவற்றையெல்லாம் கண்டதாகிறது" [ப்ருஹ 6-5-6] "எதைக்கண்டால் வேறொன்றையும் காண்பதில்லையோ, எதைக்கேட்டால வேறொன்றையும் கேட்பதில்லையோ அதுவே மிகப் பெரியதான ப்ரஹ்மம்" [சாந் 1-2-4] என்னுமாப்போலே, எல்லாப் பொருளும் அவனாகத் தோற்றுமேயொழிய, அவனைப் பிரிந்து ஒன் றும் தோற்றாது என்றும் பொருள் கொள்ளலாம். (மற்றொன்றினைக் காணாவே) என்று எப்போதும் அவனையே காணும் என்னும்படியா

அதாவது உகந்தருளின திருமேனியில் ஸாக்ஷாத்காரம் "तस्मिन् दृष्टे परावरे" (தஸ்மிந் த்₃ருஷ்டே பராவரே) என்றும், "आत्मा वा अरे द्रष्टव्यः" (ஆத்மா வா அரே த்₃ரஷ்டவ்ய:) என்றும் சொல்லுகிற உபாயதசையில் ஸாக்ஷாத்காரத்திற் கொண்டு போய் மூட்ட, அது "ஸதா₃ பச்யந்தி" என்கிற பலதசையில் ஸாக்ஷாத்காரத்தோடே மூட்ட, அது யாவதாத்மபாவியாகை யாலே உருவ இப்படி நடக்குமென்று கருத்து. அதனையிறே "ராமம் மேऽநுகதா த்ருஷ்டி: ந த்வா பச்யாமி" என்று ரிஷி சொல்லுகிறது.

அயோத்யா காண்டம் 53-வது ஸர்க்கம் 31-வது ச்லோகம்

न च सीता त्वया हीना न चाहमपि राघव।
मुहूर्तमपि जीवावो जलान्मत्स्याविवोद्धृतौ ॥

ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக₄வ ।
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யாவிவோத்₃த்₄ருதௌ ॥

பதவுரை:—ராக₄வ — ரகுகுலத்துதித்தவரே! த்வயா— உம்மோடு, ஹீநா—கூடியிருக்கப்பெறாத, ஸீதா- ஸீதாதேவி, ந—பிழைக்கமாட்டாள்; அஹம் அபி – (உம்மைப் பிரிந்த)

---

யிற்று. அதாவது எம்பெருமான் திருவரங்கம் திருப்பதியிலே உகந்தருளின திருமேனியைக் கண்டால், அக்காட்சியானது "மேலானவருக்கும் மேலான அப்பரவஸ்து பக்தியாலே காணப்பட்டதாகில் ஹ்ருதயத்திலுள்ள அஜ்ஞானாதிகளான முடிச்சுகள் அறுந்துவிடும்" [முண்ட 2-2-9] "இந்தப் பரமாத்மாவானது நேரே காண்பதுபோலே தியானிக்கத்தக்கது" [ப்ருஹ 6-5-6] என்று உபாயதசையிலுள்ள பக்திரூபமான காட்சியோடேயாவது, அல்லது "மயர்வற மதிநல மருளினன்" என்கிறபடியே ஸாத்யபக்தியாகிற ப்ரபத்திதசையிலுள்ள காட்சியோடாவதுமூட்ட, அக்காட்சியானது "எப்போதும் காண்கிறார்கள்" [ருக்வேதம்] என்கிற பலதசையில் காட்சியில் கொண்டுபோய்விட, அது எப்போதும் உள்ளதாகையாலே, எப்போதும் இக்காட்சியேயாயிருக்கும் என்று கருத்து. இதைத்தான "ராமனை என் கண் பின்தொடர்ந்தது; உன்னைக் காணவில்லை" என்று வால்மீகிமஹர்ஷி அருளிச்செய்கிறார்.

நானும், ந ச—பிழைக்கமாட்டேன், அபி ஜீவாவ:–ஒருகால் பிழைத்தோமாகில், ஜலாத்—ஜலத்திலிருந்து, உத்₃த்₄ருதௌ—எடுக்கப்பட்ட, மத்ஸ்யௌ இவ–மீன்கள்போலே, முஹூர்த்தம்—சிறிது நேரமே (உயிர்வாழ்வோம்).

வ்யா:—தேவரையொழிந்தவன்று பிராட்டியும் உளளாகாள். அடியேனும் உளனுகேன். தேவரையொழிந்தவன்று முதலிலே ஜீவிக்குமதுதானில்லை. (அபி ஜீவாவ:) யதி ஜீவாவ: (முஹூர்த்தம்) ஒரு க்ஷணகாலம். (ஜலாந் மத்ஸ்யாவிவ) ஜலத்தைப்பிரிந்த மத்ஸ்யம் ஜீவிப்பது அந்நீர் நசையறுமளவுமிறே. அப்படியே நில்லென்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலும் உண்டென்று அறியுமளவுங் காண் நாங்கள் ஜீவிப்பது.

**அயோத்யாகாண்டம் 59-வது ஸர்க்கம் 4-வது சுலோகம்**

**विषये ते महाराज रामव्यसनकर्शिताः ।**
**अपि वृक्षाः परिम्लानास्सपुष्पाङ्कुरकोरकाः ॥**

**விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்சிதா: ।**
**அபி வ்ருக்ஷா: பரிமலாநாஸ் ஸபுஷ்பாங்குரகோரகா: ॥**

---

அவதாரிகை:–லக்ஷ்மணன், தன்னைக் காட்டிற்கு அழைத்துச் செல்லவேண்டியதற்கு முக்கிய காரணத்தை ராமபிரானிடம் விண்ணப்பித்துக்கொள்ளும் பாசுரமிது.

வ்யா:–(உம்மைப் பிரிந்த பிராட்டியும் இல்லை; நானும் இல்லை) உம்மைப் பிரிந்தவன்று பிராட்டியும் ஸத்தையை–இருப்பை இழப்பாள்; நானும் ஸத்தையிழப்பேன். உம்மைப் பிரிந்து உயிர்வாழ்வதென்பதே முதலிலில்லை. (ஜீவித்தோமானுல்) அப்படியே ஒருகால் உயிர்வாழ்ந்தால். (ஜலத்தைப் பிரிந்த மீன் போல்)ஜலத்தைப்பிரிந்த மீன் உயிர்வாழ்வது அந்த நீரில் பசைபோகும்வரையிலேயன்றே. அதுபோல் 'காட்டுக்குவராதே; நில்' என்று சொன்ன வார்த்தை உம்முடைய நெஞ்சிலேயுமுள்ளது; கருணையால் நனைந்த உம் ஈரநெஞ்சும் நீர்ப்பசையற்று வரண்டுவிட்டது என்று அறியும்வரையிலுள்ள சிறிதுநேரம்தான் நானும் பிராட்டியும் ஜீவிப்போம்.

**பதவுரை:**—மஹாராஜ-மஹாராஜரே! **தே**—உம்முடைய, **விஷயே** — தேசத்தில், **ராமவ்யஸந கர்ஶிதா:** — ராமனுக்கு நேர்ந்த துன்பத்தாலே வருந்துகின்றவையான, **ஸபுஷ்பாங்குர கோரகா:**—பூவோடும், முளையோடும், மொட்டோடும் கூடிய, **வ்ருக்ஷா: அபி**—மரங்களும், **பரிமலாநா:**—மிகவும் வாடின.

**அவதாரிகை:**—கங்காபரிஸரத்திலே பெருமாளைவிட்டுத் தேருங்கொண்டு மீண்ட ஸுமந்த்ரன் சக்ரவர்த்தியைக் கிட்டிப் பெருமாளுடைய விச்லேஷத்தில் பிறந்தவிசேஷங்கள் பலவும்சொல்லி, 'உன் எல்லைக்குள்ளுண்டான ஸ்தாவரங்க ளகப்படப் பட்டபாடு இதுகாண்' என்கிறான்.

**வ்யா:**—(விஷயே தே) நாட்டாருடைய ராஜ்யத்துக்கும் உன்னுடைய ராஜ்யத்துக்கும் உள்ள வாசிகேளாய். (விஷயே தே) தக்ஷிணகோஸலமும், உத்தரகோஸலமுமாய், உன்னுடைய ரக்ஷணத்திலே ஒதுங்கி எல்லைத்தோரணத்துக் குட்பட்ட நாடடங்க. (விஷயே தே) **"इक्ष्वाकूणामियं भूमिः सशैलवनकानना" (இக்ஷ்வாகூணாமியம் பூ₄மிஸ்ஸஶைலவநகாநநா**) என்று விளைநிலத்தோடும், மலைநிலத்தோடும், மரநிலத்தோடும் வாசியற 'எனது' என்று அபிமானித்திருக்கும்படி உன் அபிமானவிஷயமான இப்பரப்பில். (விஷயே) "நாடு

---

அவதாரிகை:—கங்கைக்கரையிலே ராமனைவிட்டு, ராமன் சென்ற தேரையும் கொண்டு மீண்டுவந்து ஸுமந்தரன் தசரதனை அணுகி, ராமனைப் பிரிந்தபின் நடந்த செய்திகள் பலவும் சொல்லி, "உன் தேசத்துக்குள்ளிருக்கும் மரங்களும் பட்டபாடு இதுவன்றோ" எனகிறான் இந்த சுலோகத்தில்,

வ்யா:-(உன் நாட்டில்) மற்றுள்ளாருடைய நாட்டுக்கும் உன் நாட்டுக்குமுள்ள வித்தியாசத்தைக் கேட்பாயாக. (உன் நாட்டில்) தென்கோசலமும், வடகோசலமும் அடங்கிய உன் நாடு முழுவதும். (உன்நாட்டில்) "மலைகள், நீர்நிலைகள், காடுகள் ஆகிய இவற்றுடன் கூடிய இந்நாடு இக்ஷ்வாகுகளுடையது" [ரா-கி 18-6] என்கிறபடியே நீர்நிலமாகிற விளைநிலங்கள், மலைநிலங்கள், மரநிலங்களாகிற காடுகள் ஆகிய எல்லாம் என்னுடையது என்று அபிமானித்திருக்

நகரமும்'' என்கிறபடியே விசேஷஜ்ஞராயும் அவிசேஷஜ்ஞ ராயும், கர்ஷகராயும் பூ₂ல போ₄க்தாக்களாயுமாயுள்ள நாடு இருந்ததே குடியாக.

யாருடைய நாடென்னில்: (தே) "प्रजानां विनयाधानात् रक्षणाद्भरणादपि। स पिता" (ப்ரஜாநாம் விநயாத₄ாநாத் ரக்ஷணாத்₃ ப₄ரணாத₃பி। ஸ பிதா) என்றும், "स पिता यस्तु पोषकः" (ஸ பிதா யஸ்து போஷக:) என்றும் சொல்லுகிறபடியே பெற்ற பிதா ப்ரஜைகளை ரக்ஷிக்குமாப்போலே உன் வயிற்றிலே வைத்து ரக்ஷிக்கிற உன்னுடைய. (தே) ஸ்தாவரங்களகப்பட க்ருதஜ்ஞராய், பக்ஷபாதம் பண்ணும்படி புண்யவானாயிருக்கிற உன்னுடைய. (தே) "हरिबाह्यास्तु बाह्लिकाः" (ஹரிப₃ாஹ்யாஸ்து ப₃ாஹ்லிகா:) என்று பகவத்விமுகமான பாபதேசமன்றியிலே பகவதபி₄முகமாம்படியான இத்தேசத்தையுடைய உன்னுடைய.

---

கும்படி உன் அபிமானத்துக்கு உட்பட்ட இந்நாட்டில். (நாட்டில்) நாடு முழுவதும். "நாடுநகரமும்" [திருப்பல்லாண்டு-4] என்கிறபடியே அறிந்தவர்களான நகரத்தார், அறியாதாரான நாட்டார், உடம்பு நோவ உழுபவர்கள், அவர்கள் உண்டாக்கும் தானியங்களை உண்டு வாழ்பவர்கள் என்னும் பிரிவுகளையுடைய நாடு முழுவதும்.

யாருடைய நாடு என்னில். (உன்னுடைய) "குடிகளை தண்டிக்கையாலும், ரக்ஷிக்கையாலும், போஷிக்கையாலும் அந்த அரசன் குடிகளுக்குத் தந்தையாயிருந்தான். நிஜத்தந்தையர் பிறப்புக்கு மட்டும் காரணமாயிருந்தனர். [ரகுவம்சம் 1-24] என்றும், "எவனொருவன் போஷிக்கிறானோ அவன் தந்தையாவான்" [ ] என்றும் சொல்லுகிறபடியே பெற்ற தந்தை குழந்தைகளை ரக்ஷிப்பது போலே, உன் வயிற்றில் வைப்பதுபோலே ஸுரக்ஷிதர்களாக வைத்துக் குடிகளை ரக்ஷிக்கிற உன்னுடைய. (உன்னுடைய) மரங்கள் கூட நன்றியறிவுள்ளவையாய், அன்புசெலுத்தும்படியான புண்ணியத்தையுடைய உன்னுடைய. (உன்னுடைய) "பகவானுக்குப் புறம்பானவர்கள் பாஹ்லிகதேசத்தவர்கள்" [ ] என்று பகவானை வெறுக்கும் பாபதேசமன்றியிலே, பகவானிடம் ஈடுபடும் இத்தேசத்துக்கு அரசனான உன்னுடைய.

என்னுடைய விஷயமாங்காட்டில் இப்படியாகைக்கு அடியென்னென்னில்: (மஹாராஜ) **"राजा वा राजमात्रो वा"** **(ராஜா வா ராஜமாத்ரோ வா)** என்று க்ஷாத்ரவன்னியமாதல், ஸாமந்தராதல். க்ஷத்ரியஜந்மமாய் வைத்துப் பெட்டைக்குடியாதலாகையன்றியிலே, **"तस्येयं पृथिवी सर्वा"** **(தஸ்யேயம் ப்ருதி₂வீ ஸர்வா)** என்றும் **"एकातपत्रं जगतः प्रभुत्वं"** (ஏகாதபத்ரம் ஜக₃த: ப்ரபு₄த்வம்) என்றும், **"वार्याफलकपर्यन्तामभुङ्क्त महतीं महीं"** (வார்யா ப₂லகபர்யந்தாமபு₄ங்க்த மஹதீம் மஹீம்)என்றும் ஒரு முள்குத்து நிலம் ஆளுமாப்போலே இப்பரப்படங்க ஈரக்கையாலே தடவி யடக்கியாளுகிற உன் மதிப்பான பெருமையாலே என்கிறது. (மஹாராஜ) **"रञ्जनाद्राजा"** **(ரஞ்ஜநாத்₃ ராஜா)** என்றும், **"अनुरक्तः प्रजाभिश्च प्रजाश्चाप्यनुरञ्जते"** (**அநுரக்த: ப்ரஜாபி₄ச்ச ப்ரஜாச்சாப்ய நுரஞ்ஜதே**) என்றும் நாடு இருந்ததே குடியாக உமக்கு நற்படும்படி நீர்தான் நல்லீராய், இப்படி உப₄யாநுராக₃முண்டாம்படி நடத்துகிறவரல்லீரோ? ஆகையாலேயென்கிறது.

---

என்னுடைய தேசமென்பதாலேயே இப்படியாவதற்குக் காரணமென்னெனனில்: (மஹாராஜனே) "அரசனுவது அல்லது பெயரளவுக்கு அரசனுயிருப்பவனுவது" [ரா-யு 63-10; ரா-உ 31-3] என்கிறபடியே தாழ்ந்த அரசனுகவாவது, சிற்றரசனுகவாவது, அரசர் குடியிலே பிறந்தும் பெண்பிள்ளையாகவாவதில்லாமல், "அவனுக்குச் செல்வம் நிறைந்த இந்த பூமி முழுவதும் வசப்பட்டிருககட்டும்" [தை-ஆ] என்றும், "உலகை ஒரு குடை நிழலின்கீழ் ஆளும் ஆட்சி" [ரகுவம்சம் 2-40] என்றும், "கடலாகிற அகழியாலே சூழப்பட்ட மஹாப்ருதிவியை ஆட்சி செலுத்திஞன்" [ரா-பா 70-3] என்றும் சொல்லுகிறபடியே, ஒரு முள்குத்து நிலத்தை ஆளவதுபோலே இந்த பூமி முழுவதும் ஈரக்கையாலே தடவி அடக்கி ஆளுகிற மஹாராஜனை உன் மதிக்கத்தக்க பெருமையாலேயே இப்படி நடக்கிறது என்கிறது. (மஹாராஜனே) "குடிகளை ரஞ்சிப்பிப்பவன் ராஜாவாவான்" என்னும் வ்யுத்பத்தியாலும், "குடிகளால் அன்பு பாராட்டப்படுகிருன்; குடிகளை உகப்பிக்கிருன்' [ரா-அ 1-14] என்று சொல்லுகையாலும் நாட்டிலுள்ளார் அனைவரும் உமக்கு நல்லாராகும்படி நீர் அவர்களுக்கு நல்லீராய், இப்படி இருவர் பக்கலிலும் அன்புண்டாம்படி அரசாட்சி செலுத்தும் மஹாராஜராயிற்றே நீர். அதனுலேயே உம் தேசத்தில் இது நடக்கிறது என்கை.

அது என் பக்கல் க்ருதஜ்ஞதையாலேயாய். பெருமாள் பக்கல் ஓராகாரமில்லையோ? என்னில்: (ராம வ்யஸநகர்ஶிதா:) "गुणाभिरामं रामञ्च" (குணாபி₄ராமம் ராமஞ்ச) என்றும், "வல் வினையேனை ஈர்கின்ற குணங்களையுடையாய்" என்றும் சொல்லுகிறபடியே பெருமாளுடைய குணங்களில் (அகப்) பாட்டாலே என்கிறது. (ராம வ்யஸநகர்ஶிதா:) "எல்லா ரோடும் வரையாதே பொருந்தும்படியான பெருமாளுக்கு இப்ரவாஸம் வருவதே! என்று க்லேஶித்தார்கள். (ராம வ்யஸநகர்ஶிதா:)'எல்லோரையும் வாழ்விக்கிறபெருமாளுக்கு இதொரு வ்யஸநம் வருவதே!' என்று க்லேசத்தால் க்ருசங்களாயின.

இப்படி க்லேஶித்தவர்கள் தான் யாரென்னில்: (அபிவ்ருக்ஷா:)அறிவுடைய சேதனரல்ல; அறிவில்லாத மரங்களகப்பட. (அபிவ்ருக்ஷா:) வ்ருக்ஷா அபி-வ்ருக்ஷங்களும் என்கிற உங்காரத்தாலே தேவ திர்யங் மநுஷ்யர்களேயல்ல;

---

ஆனால் இவர்கள் இப்பாடுபட்டது என்னிடம் நன்றியறிவாலே தானே? ராமனிடம் சில நன்மைகள் கண்டதனாலல்லவோ? என்னில்: (ராமனுடைய துன்பத்தால் துன்புற்றன) "ப்ரசஸ்ய து ப்ரசஸ தவ்யாம் ஸீதாம் தாம் ஹரிபுங்க₃வ: குணாபி₄ராமம் ராமஞ்ச புநச்சிந்தாபரோ ப₄வத் [அந்த ஹனுமான் புகழத்தகுந்தவளான சீதா பிராட்டியை யும். குணங்களில் அழகியவனை ராமனையும் புகழ்ந்து மறுபடியும் ஆலோசிக்கலுற்றான்.] [ரா.ஸு 16-1] என்றும், "வல்வினையேனை ஈர்கின்ற குணங்களையுடையாய்" [திருவாய் 8-1-8] என்றும் சொல்லுகிறபடியே ராமபிரானுடைய குணங்களில் அகப்பட்ட படியாலே இப்பாடுபட்டன என்கிறது. (ராமனுடைய துன்பத்தால் துன்புற்றன) எல்லாரோடும் உயர்வு தாழ்வுகளாகிய வரம்பு பாராமல் நன்றாகப்பொருந்தி அவர்களை ரமிக்கச்செய்யும் ராமனுக்கு இவ்வனவாஸம் வருவதே என்று துன்புற்றன. (ராமனுடைய துன்பத்தால் மெலிந்தன) எல்லாரையும் ரமிக்கச்செய்து வாழ்விக்கிற ராமனுக்கு இதுஒரு துன்பம் வருவதே! என்னும் துக்கத்தால மெலிந்தன.

இப்படித் துன்புற்றதுதான் யாரெனில்: (மரங்களும்) அறிவு விரிந்துள்ள மற்ற ஜீவர்களல்ல; அறிவு சுருங்கிய மரங்களுங்கூடத்

*ஸ்தாவரமகப்பட க்லேஶித்தன என்கிறது. அவர்கள் தான் க்லேஶித்தபடியுண்டோவென்னில்:* **"चुक्रुशुर्वनदेवताः"** *(சுக்ருசு* **வநதே₃வதா:)** *என்று வநதேவதைகள் கூப்பிட்டன.* **"अत्यजन् कबलान् नागाः"** *(அத்யஜந் கப₃லாந் நாக₃ா:) என்றும்* **"मृग्यश्च दर्भाङ्कुरनिर्व्यपेक्षाः"** *(மருக்₃யச்ச த₃ர்ப்ப₄ாங்குர நிர்வ்யபேக்ஷா:) என்றும் யானைகளும், ம்ருகங்களும் கவ்வின புல்லு கடைவாய்சோர நின்றனவென்று சொலலிற்றிறே.* **"इहैव निधनं यामो महाप्रस्थानमेव वा। रामेण रहितानां तु किमर्थं जीवितं हि नः॥"** **(இஹைவ நித₄நம் யாமோ மஹாப்ரஸ்த₂ாநமேவ வா। ராமேண ரஹிதாநாம் து கிமர்த்த₂ம ஜீவிதம் ஹி ந:॥)** *என்று மனுஷ்யர்கள் க்லேசித்தார்கள். அவ்வளவேயல்ல; மரங்களும் க்லேசித்தன என்கிறது. கோடைதட்டி உலருதல், பாரிலே தட்டி உலருதல் செய்த மரங்களன்றியிலே தளிரும் முறியுமான பசுமரங்களகப்பட உலர்ந்தன; நீரில்லாமல் உலர்ந்*

---

துன்புற்றன. (மரங்களும்) மரங்களும் என்கிற உம்மையாலே, தேவர்கள், திர்யக்குகள் (ஊர்வன), மனுஷ்யர்கள் என்னும் மற்ற உயர்ந்த யோநியிற் பிறந்தவர்கள்மட்டுமல்ல; தாழ்ந்த யோநிகளான தாவரங்களும் துன்புற்றன எனகிறது. உயர்யோனிகளான தேவதிர்யங் மநுஷ்யர்கள் ராமவ்யஸநத்தாலே துனபுற்றதுண்டோ என்னில்: "வனதேவதைகள் கூக்குரலிட்டன" [ ] என்று வனதேவதைகள் கூப்பிட்டன; "யானைகள் உணவொழிந்தன" [ரா-அ 41-10] என்றும், "பெண்மான்களும் தர்ப்பைகள் முளைகள் ஆகிய உணவுகளை விரும்பவில்லை" [ரகு 3-25] என்றும் யானைகள் முதலான திர்யக்குகள் ராமவ்யஸநம் செவிப்படுவதற்குமுன் கவ்வின புற்கள், செவிப்பட்டவுடன் கடைவாயிலிருந்து நழுவும்படியாக நின்றன என்று சொல்லப்பட்டதன்றோ. "இங்கேயே நாங்கள் சாகிறோம்; மீளாத யாத்திரையையாவது மேற்கொள்கிறோம; ராமனைப் பிரிந்த எங்களுக்கு வாழ்வு எதற்கு?" [ரா-அ 47-7] என்று மனிதர்களும் துன்புற்றார்கள். அசைவனவான இவர்கள்மட்டுமலல; அசையாப் பொருள்களான மரங்களும் துன்புற்றன என்கிறது. கோடைகால உஷ்ணம் மேலே பட்டு உலர்ந்த மரங்களும், பூமியில் பாறையிலே வேர்பட்டு உலர்ந்த மரங்களுமொழிய, தளிரும் இலையுமாக நின்ற பச்சை மரஙகளுங்கூட உலாந்தன. நீரில்லாமல் உலர்ந்

தனவோ என்னில்: (வ்ருக்ஷா அபி பரிம்லாநா:) "வ்ருஷ ஸேசநே" இறே. ஆகையாலே, ஸிக்தங்களாய்ப் பாத்தியிலே நிரம்ப நீர் நிற்கச் செய்தே உலர்ந்தன.

(பரிம்லாநா:) தறிகையிட்டு வெட்டுண்ட மரங்கள் அடியற்றால் வாடுமாப்போலே வாடின. (பரிம்லாநா:) இப்போது இவ்விச்லேஷ க்லேசத்தாலே செருக்கு வாடிற்றத்தனை போக்கி, **"एति जीवन्तमानन्दो नरं वर्षशतादपि" (ஏதி ஜீவந்தமாநந்தே₃ா நரம் வர்ஷஶதாத₃பி)**என்று உயிர் கிடந்தால் என்று கூடியும் நன்மைவரும் என்கிற ப்ரஸித்தியாலே, பெருமாள் பதினாலாண்டு கழிந்தால் வருவரென்னும் நசையாலே கருகிற்றினவில்லை. (பரிம்லாநா:) ஶாகைகளில் அக்₃ரப்ரதேசமாய், இளசாங்கொழுந்துகள் வாடுகையன்றிலே,– (பரிதோம்லாநா:)– மரங்களில் அடிப்பணையோடு, தலைப்பணையோடு, கொம்புகளில் அடியோடு தலையோடு, முத்தலிலையோடு இளசிலையோடு வாசியற எங்கும் உலர்ந்தன.

---

தனவோ? என்னில்: (விருக்ஷங்களும் நன்கு வாடின) "வ்ருஷ ஸேசநே" [வ்ருஷ என்னும தாது நீர் தெளித்தல் என்னும் பொருளுள்ளது] என்னும் தாதுவிலிருந்து தோன்றியதன்றோ வ்ருக்ஷசப்தம். ஆகையாலே, நீர் தெளிக்கப்பெற்று, பாத்தி முழுவதும் நீர் நிற்கும் போதே உலர்ந்தன.

(நனருக வாடின) உளியாலே வெட்டப்பட்ட மரங்கள் அடிமரம் வெட்டுண்டால் வாடுவதுபோல வாடின. (நன்கு வாடின) வாடினவேயொழியப் பட்டுப்போகவில்லை. இப்பிரிவுத் துன்பத்தாலே இப்போது செழிப்பு வாடிற்றேயொழிய, "பல்லாண்டுகள கழிந்தாகிலும், (துன்புற்ற) மனிதனை இன்பம் வந்தடைந்தே தீரும்" [ரா.ஸு 34-6; ரா-யு 129-2] என்கிறபடியே, உயிரோடிருந்தால் என்றைக்காவது நன்மைவரும் என்னும் ப்ரஸித்தியாலே, ராமன் பதினாலாண்டு கழிந்தாவது வருவான் என்னும் ஆசையாலே கருகிப் போகவில்லை. (சுற்றிலும் வாடின) "பரிதோ ம்லாநா:–பரிம்லாநா" என்று வ்யுத்பத்தியாய், கோடையில் கிளை நுனிகளிலுள்ள இளங் கொழுந்துகள் வாடுவது போலல்லாமல், அடிமரத்தோடு மேல்

வெறும் இலைகளேயோ வாடிற்றின வென்னில்: (ஸ்புஷ்பாங்குர கோரகா:) பூக்களோடு, குருத்துக்களோடு, அரும்புகளோடு வாசியற எல்லாம் சோர்ந்தன. (ஸ்புஷ்பாங்குர கோரகா:) புஷ்பமாகிறது மலர்ந்த பூ. அங்குரமாகிறது முகிழ். கோரகமாகிறது கருமொட்டு. இவையடைய உலர்ந்தன. (ஸபுஷ்பாங்குர கோரகா வ்ருக்ஷா அபி ராமவ்யஸநகர்சிதா: பரிம்லாநா:) ஸபுத்ர பௌத்ரரான மனிதர் உடம்பு மெலிந்து முகம் வாடினாப்போலே, மரங்களும் பூக்களோடு செருந்துகளோடு, ஶாகைகளோடு ஶாகிகளோடு வாசியற, கொழுவியவாய்ப் பருத்துச் செய்வீசுமான மரங்களடைய நோகி உலருவதும் செய்தன. (விஷயே வ்ருக்ஷா: பரிம்லாநா:) உன் எல்லைக்குள் ப்ரமதவநோத்யாநாராம ரூபமாய், இறைத்து வளர்த்த, படைவீடு சூழ்ந்த மரங்களோடு, பறட்டைகளாய் காட்டிலே தானே முளைத்து வளர்ந்த எல்லை நிலத்தில் மரங்களோடு வாசியற எங்கும் உலர்ந்தன என்றாகவுமாம்.

---

மரத்தோடு, அடிக்கொம்போடு நுனிக்கொம்போடு, முற்றின இலையோடு, இளவிலையோடு வித்தியாசமில்லாதபடி எங்கும் வாடின.

இலைகள் மட்டுமோ வாடினது என்னில்: (பூக்களோடும், முகிழ்களோடும், மொட்டுகளோடும,) பூவும், குருதது்ம், அரும்புமாகிற எல்லாம் வாடின. புஷ்பம்–மலர்ந்த பூ; அங்குரம்–முகிழ்; கோரசம்–கெட்டியான மொட்டு. இவையெல்லாம் உலர்ந்தன. (பூவும், குருத்தும் அரும்பும் கூடிய மரங்களும் ராமனுடைய துனபத்தால் துனபுற்று நன்கு உலர்ந்தன) புத்ரபௌத்ரர்களோடு கூடிய மனிதர் உடமபு மெலிந்து முகம் வாடினாப்போலே, மரங்களும்,-பூக்களோடு தளிர்களோடு, கிளைகளோடு,அடிமரங்களோடு கூட செழிப்புள்ளவையாய்ப் பெருத்து, ''செய்கொள் செந்நெல்'' [திருவாய் 6-1-1] என்றாப்போலே செய் முழுவதும் பரவி நிற்கும் எல்லா மரங்களும்–துனபுற்று உலர்ந்தன. (தேசத்தில எஙகும் மரங்கள் வாடின )உன்தேசத்துக்குள் பெண்கள் விளையாடும் வனங்கள், நந்தவனங்கள், தோட்டங்கள ஆகிய பலவிதமாயிருப்பவையாய், மனிதர் இறைத்துவளர்த்தவையான நகரத்திலுள்ள மரங்களோடு, செழிப்பற்றவையாய், காட்டில் தானே முளைத்து வளர்ந்த வெளிப்புறத்தில் மரங்களோடு வித்தியாசமில்லாமல் எங்கும உலர்ந்தன என்றும் பொருள்கொள்ளலாம்.

அயோத்யாகாண்டம் 86-வது ஸர்க்கம் 1-வது சுலோகம்

**आचचक्षेऽथ सद्भावं लक्ष्मणस्य महात्मनः।**
**भरतायाप्रमेयाय गुहो गहनगोचरः॥**

ஆசசக்ஷேऽத₂ ஸத்₃பா₄வம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:।
ப₄ரதாயாப்ரமேயாய கு₃ஹோ க₃ஹநகே₃ாசர:॥

**பதவுரை:**—**அத₂**—*அதற்குப்பின்,* **க₃ஹநகோ₃சர:**-*காட்டில் வஸிக்கிற,* **கு₃ஹ:**-*குஹன்,* **மஹாத்மந:**—*மஹாபுருஷனுன,* **லக்ஷ்மணஸ்ய**—*லக்ஷ்மணனுடைய,* **ஸத்₃பா₄வம்**—*நன்னடத்தையை,* **அப்ரமேயாய**-*அளவிடவொண்ணுதவரான,* **ப₄ரதாய**—*பரதனுக்கு,* **ஆசசக்ஷே**—*சொன்னுர்.*

**அவதாரிகை:— (ஆசக்ஷேऽத ஸத்பாவமித்யாதி)** *ஸ்ரீபரதாழ்வான் வாராநின்ருனென்று ஸ்ரீகுஹப்பெருமாள் கேட்டவனந்தரம் இளையபெருமாள் செய்ததையெல்லாம் சொல்லத் தொடங்கினுர். "வந்தபோது செய்யும்படி சொல்லுகிறதென்? ஓடம் நின்றதே; கோல் இருந்ததே; தானும், தன் பரிகரமும் அக்கரைப்படும்படி காண்கிறேன்" என்று ஆக்₃ரஹஸித்தனுயிருந்தான். அநந்தரம் ஸுமந்த்ரனுள்ளிட்டார் வந்து, "இளையபெருமாள் ஸ்வபாவம்போலேகாண் பரதாழ்வானுடைய ஸ்வபாவமிருப்பது; அவனை நீ காண வேணுங்காண்" என்ன, இவனும் போய்க் கண்டவநந்தரம்*

---

*அவதாரிகை:*—*ஸ்ரீபரதாழ்வான் வருகிருன் என்று கேட்டவுடன், லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைகளையெல்லாம் ஸ்ரீகுஹனும் சொல்லத்துடங்கினுன். " 'பரதன் (ராமனை எதிர்க்க) வரும்போது அடிக்கிறேன, முடிக்கிறேன்' என்று வாய் வார்த்தைசொல்லிப் பயனென்ன? ஓடம் என் வசத்திலுள்ளது; ஓடம் தள்ளும் கோலும் என் கையிலுள்ளது; பரதனும் அவனுடைய சேனையும் கங்கையைத் தாண்டுவதைப் பார்த்துக் கொள்ளுகிறேன்!" என்று உறுதி கொண்ட நெஞ்சினனுயிருந்தான். அதற்குப்பின், ஸுமந்திரன முதலானுர் வந்து, "லக்ஷ்மணனுடைய தன்மை போனறதே பரதனுடைய தன்மையும். அவனை நீ காணவேணும்" என்று சொல்ல,*

"இவனுடைய ஸ்வபாவமிருந்தபடியென்!" என்று ஆச்சர்யப் பட்டு, இவனுக்கு நம்மால் கொடுக்கலாமுபஹாரமென்? என்று பார்த்து, இவனுக்கு ஸத்ருசமான உபஹாரம் இளைய பெருமாள் ஸ்வபாவங்களாமித்தனை என்று, அவற்றைச் சொல்லத்தொடங்கினான்.

வ்யா:— (ஆசசக்ஷே ஸத்பாவம்) ஸத்பாவமாகிறது ஸத்துக்களுடைய ஆசாரம். **"सच्छब्दः साधुवाचकः"** (**ஸச்ச$_{2}$ப்$_{3}$த$_{3}$ஸ் ஸாது$_{4}$வாசக:**) **"साधवः क्षीणदोषास्तु"** (**ஸாத$_{4}$வ: க்ஷீண தே$_{3}$ாஷாஸ்து**) என்கிறபடியே ஸத்துக்களாவார் க்ஷீணதோஷரிறே. ப$_{4}$ாவம் ஆசாரம். ஒருவன் அர்த்த$_{2}$வான், அபி$_{4}$ஜாதன், வித்வான் என்று அறிவது அவர்களநுஷ்டாநங்கொண்டிறே. அப்படியேயிறே இவனுடைய அநுஷ்டாநமும். பெருமாள் கண்வளர்ந்தருளுகைக்குப் பூக்களறுப்பது, படுக்கை படுப்பது, தாமரையிலையைப் பறித்துத் தண்ணீரை முகந்து

---

இவனும் போய்க்கண்டபிறகு, 'இவனுடைய தன்மையிருந்தபடி யென்!' என்று ஆச்சரியப்பட்டு, 'இவனுக்கு நாம் கொடுக்கக்கூடிய காணிக்கையென்ன?' என்று ஆராய்ந்து, 'இவனுக்குத் தகுந்த காணிக்கை லக்ஷ்மணனுடைய குணங்களைச் சொல்லுவதே' என்று நிச்சயித்து அவற்றைச் சொல்லத்தொடங்கினான்.

வ்யா.—(ஸத்பாவத்தை சொன்னான்) ஸத்பாவமாவது ஸத்துக்களுடைய ஆசாரம்; நன்னடத்தை. "'ஸத்' என்னும் சப்தம் ஸாதுக்களைச் சொல்லும்" [வி-பு 3-11-3] "தோஷம் நீங்கப்பெற்றவர்கள் ஸாதுக்களாவர்" [வி-பு 3-11-3] என்கிறபடியே தோஷமற்றவர்கள் 'ஸத்' எனப்படுகிறார்கள். 'ப$_{1}$ாவம்' என்னும சப்தம் ஸ்வபாவத்தைச் சொல்லுவதொடன்றியில், அந்த ஸ்வபாவத்துக்கு ஜ்ஞாபகஹேதுவான ஆசாரத்தையும் சொல்லும். பொருளுடையவன, நற்குடிப் பிறந்தவன், அறிவாளி என்று ஒருவனுடைய ஸ்வபாவங்களை —(தன்மைகளை)— அறிவது அவனுடைய ஆசாரங்களைக் கொண்டன்றோ. அப்படியே இவருடைய ஆசாரமும் இவர் நல்லவர்களின் ஸ்வபாவத்தை யுடையவரென்று காட்டிக்கொடுக்கின்றது. பெருமாள் சயனித்துக் கொள்ளப் பூப்பறிப்பது, படுக்கை விரிப்பது, தாமரை யிலையைப் பறித்துத் தண்ணீரை முகந்து திருவடி விளக்குவது,

*திருவடி விளக்குவது. பின்னையும் தண்ணீரை முகந்து அமுது செய்யப்பண்ணுவது, சேஷித்ததைப் பிராட்டியை அமுது செய்யப்பண்ணுவது, கண் வளர்ந்தருளப் பண்ணிக்கையும் வில்லுமாய்க்கொண்டு, நம்மையுங்கூட அசிர்த்து நோக்கு வதாய்க் காணும் அவருடைய ஆசாரமிருந்தபடி என்று வ்ருத்தாந்தத்தைச் சொல்லத்துடங்கினார். (லக்ஷ்மணஸ்ய மஹாத்மந.) கடலைக் கையாலே இறைக்கத் தொடங்கினார். (லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஸ் ஸத்பாவம் அப்ரமேயாய பரதாய ஆசசக்ஷே) கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லத் துடங்கினார். (பரதாயாப்ரமேயாயாசசக்ஷே) சேஷ பூத னானால் "நான் பணிசெய்யக் கடவேன்" என்று சொல்லியோ*

---

பிறகும் தண்ணீர் முகந்து அமுதுசெய்விப்பது, மிகுந்ததைப் பிராட்டியை அமுதுசெய்விப்பது, பெருமாளையும் பிராட்டியையும் கண் வளரச்செய்து, கையிலே வில்லையேந்தி எனøயும் எமர்களையும் கூட ஸந்தேஹித்துக் கண்கொட்டாமல் விழித்திருந்து ரக்ஷிப்பது ஆகவிப்படியன்றோ அவர் ஆசாரமிருந்தபடி என்று இளையபெருமாளுடைய நடத்தையைச் சொல்லத் தொடங்கினை. (மஹாத்மாவான லக்ஷ்மணனுடைய நன்னடத்தையை) கடலைக் கையாலே இறைப்பது போலேயிருந்தது மஹாத்மாவான லக்ஷ்மணனுடைய நன்னடத்தையை குஹன் பேசியது. (மஹாத்மாவான லக்ஷ்மணனுடைய நன்னடத்தையை அளத்தற்கரியவனை பரதனுக்குச் சொன்னன்) லக்ஷ்மணன் மஹாத்மா; பரதனோ அளவிடவொண்ணாதவன். கடல் போன்றவனை லக்ஷ்மணனும், "அப்ரமேயோ மஹோத$_3$தி$_4$:" என்கிறபடி அளத்தற்கரிய பெருங்கடல் போலேயிருக்கும் பரதனுக்கு ஒப்பிடும்போது, அப்பெருங்கடலின் ஓரத்திலேயுள்ளதொரு உப்பங்கழி போன்றவனாகிறான். ஆக, லக்ஷ்மணனுடைய நடத்தையை பரதனுக்குச் சொன்னது (உப்பங்) கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லுவது போலேயிருந்தது. (அளவிடவொண்ணாத பரதனுக்குச் சொல்லத்தொடங்கினன்) லக்ஷ்மணனைக் கழியாகவும், பரதனை அளவிடவொண்ணாத கடலாகவும் சொல்லவேண்டும்படி இருவர்க்கும் அவ்வளவு வாசியுண்டோ? எனில்: உண்டு; லக்ஷ்மணனுடைய சேஷத்வத்தைக்காட்டிலும், பரதனுடைய பாரதந்த்ரியம் பரிபூர்ணமானதாகையாலே இருவர்க்கும் நெடுவாசியுண்டு. சேஷபூதனயிருப்பவன் சேஷியுகந்த கைங்கர்யம்

பணிசெய்வது; அது கிடக்க. "अहं सर्वं करिष्यामि" (அஹம ஸர்வம் கரிஷ்யாமி) -சொல்லிற்றெல்லாம் செய்யக்கடவேன் - என்று ப்ரதிஜ்ஞைபண்ணி. 'ராஜ்யத்திலே இரீர்' என்ன. மாட்டேன் என்று பின்போகை சேஷத்வக்ருத்யமோ? நெருப்பிலே புகச்சொன்னாராகில் அத்தைச் செய்தல் அதில் நன்றாம்படியான ராஜ்யத்தில் இருக்கச்சொன்னாராகில் அத்தைச்செய்தல், பின்போகச் சொன்னாராகில் அத்தைச்செய்தல் இப்படி சொல்லிற்றுச் செய்கையன்றோ சேஷத்வ க்ருத்யம்.

**அயோத்யாகாண்டம் 99-வது ஸர்க்கம் 12-வது ச்லோகம்**

**सुभगश्चित्रकूटोऽसौ गिरिराजोपमो गिरिः।**
**यस्मिन् वसति काकुत्स्थः कुबेर इव नन्दने॥**

**ஸுபகச் சித்ரகூடோऽஸௌ கிரிராஜோபமோ கிரி:।**
**யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே॥**

**பதவுரை:—நந்தநே**—நந்தனமென்கிற இந்திரனுடைய உத்யானவனத்தில். **குபேர இவ**–குபேரன் வாழ்வதுபோலே, **யஸ்மிந்**—எந்தப் பர்வதத்தில். **காகுத்ஸ்த:**—ககுத்ஸ்த வம் சத்துதித்த ஸ்ரீராமன். **வஸதி**–வாழ்கின்றாரோ. **சித்ரகூட:**– சித்ரகூடமென்னும். **அஸௌ கிரி:**–இந்த மலை, **கிரிராஜோபம:**–

---

செய்யவேண்டுமேயொழிய "நான் அடிமை செய்யக்கடவேன்" என்று நிர்ப்பந்தித்துச் சொலலியோ அடிமைசெய்வது? அப்படி யிருக்க, "நான் எல்லா அடிமையும் செய்யக்கடவேன்" [ரா-அ 31-25] என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, "ராஜ்யத்திலேயே இரு" என்று ராமன் சொல்லியும் மாட்டேனென்று பின்செல்லுகை சேஷபூதன் செய்யத் தகுந்ததோ? நெருப்பில் விழச்சொன்னால விழுவது. அதில் சிறந்த தான ராஜ்யத்தில் இருக்கச்சொனனால் அப்படியேயிருப்பது, கூட வரச்சொன்னால் வருவது ஆக இப்படி சேஷி சொன்னதைச் செய்கை யன்றோ சேஷனுக்குத் தக்கது. இத்தன்மை லக்ஷ்மணனுக்கில்லை யாகையாலும், பரதனுக்கிருந்தமையாலும் இருவரையும் முறையே கழியாகவும் கடலாகவும் சொல்லக்குறையில்லை. 'அப்ரமேய:' (அளத்தற்கரியவன்)என்று ரிஷி பரதனுக்கு விசேஷணமிட்டதுக்கும் கருத்து இதுவே.

திருமாலிருஞ்சோலைமலையை உபமானமாகக் கொண்டதாய், ஸ்ரூபக:—பெருமை பெற்றதாயுள்ளது.

அவ:-"इक्ष्वाकूणामियं भूमिः सशैलवनकानना" (இக்ஷ்வாகூணாமியம் பூ₄மி: ஸஶைலவநகாநநா) என்று நாடு நகரமும் காடும் மலையுமான இக்ஷ்வாகுக்களுடைய ராஜ்யத்துக்குள் பெருமாள் எழுந்தருளியிருக்கையால் வீறுபெற்றது திருச்சித்ர கூடம் என்கிறது.

வ்யா:-(ஸ்ரூபக:) அல்லாத இடங்களைப்பற்ற வீறுடைத்தாயிருக்கை. வீறுடைமையாவது-எல்லாரும் விரும்பும்படியாயிருக்கையிறே. அப்படிக்குப் பெருமாள் எழுந்தருளியிருக்கையாலே, படைவீடு இருந்ததே குடியாக வந்து படுகாடுகிடந்ததிறே.

எழுந்தருளியிருக்கையாலுண்டான வைலக்ஷண்யமொன்றுமேயோ உள்ளதென்ன.—(சித்ரகூட;) தேஶஸ்வபாவந்தன்னால் விலக்ஷணமென்கிறது. (சித்ரகூட:) "रमणीयो ह्ययं देशः" (ரமணீயோ ஹ்யயம் தே₃ஶ:) என்று, திருவயோத்

---

அவதாரிகை:-"மலைநிலம், நீர் நிலம், மர நிலம் என்னும் நிலங்களோடு கூடிய இவ்வுலகம் இக்ஷ்வாகுகுலததவர்க்கு உடைமையாயுள்ளது" [ரா-கி 18-6] என்று நாடும் நகரமும் காடும் மலையும் நிறைந்த இக்ஷ்வாகுககளுடைய ராஜ்யத்துக்குள், ராமபிரான் எழுந்தருளியிருக்கையாலே சித்ரகூடபர்வதம் பெருமைபெற்றது என்கிறது.

வ்யா.—(பெரும் பாக்கியம் பெற்றது) மற்றவிடங்களைக் காட்டிலும் பெருமை பெற்றதாயிருக்கை. பெருமை பெறுகையாவது,—எல்லாரும் விரும்பும்படியாயிருக்கையேயன்றோ. அப்படியே ஸர்வேச்வரனான ராமபிரான் இங்கு எழுந்தருளியிருக்கையாலே, அயோத்தி முழுவதும் இங்குவந்து ராமபிரானை அழைத்துப் போகவேண்டுமென்று படுகாடு கிடந்ததன்றோ.

எழுந்தருளியிருந்ததாலுண்டான பெருமை மாத்திரமோ உள்ளது? என்ன, (சித்திரகூடம்) தேசத்தின் தன்மையாலும் பெருமை பெற்றது என்கிறது. (சித்திரகூடம்)"இந்த தேசம் அழகியதன்றோ"

யையில் நின்றும் லங்கையேற எழுந்தருளுகிற பெரிய பெருமாள், ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தினுடைய போக்யதையாலே அங்கே பதிகொண்டாபபோலே. திருவயோத்யையில் நின்றும் லங்கையேற எழுந்தருளுவதாக. **“जगाम चाश्रमांस्तेषां पर्यायेण तपस्विनां”** (ஜகாமசாஸ்ரமாம்ஸ்தேஷாம பர்யாயேண **தபஸ்விநாம்)** என்று வளையவளைய ஆச்ரமங்கள் தோறும் தட்டித்திரிகிற பெருமாளும், இவ்விடததிலே பிராட்டியும் தாமும் இனிதமரும்படியிறே இந்த தேசததினுடைய போக்யதை. (சித்ரகூட:) நாநாவிதமான தாதுக்களாலும் நாநாவிதமான ரத்நங்களாலும் நாநாவிதமானகொடிமுடிகளாலும் திருவுள்ளம்பிணிட்புண்ணும்படி ஆச்சர்யமாயிருக்கை.

‘இப்படி விசித்ரமான வர்ணகூடமாலைகளை உடைத்தாயன்றோ திருவயோத்யையுமிருப்பது. அத்தையோ சொல்லுகிறது?’ என்ன,-(அஸௌ கிரி:) “கல்லுங்களை கட

---

[ ] என்கிறபடியே, திருவயோத்தியிலிருந்து லங்கைக்கு எழுந்தருளும் அரங்கநகரப்பன, அரங்கநகருடைய இனிமையாலே ஸ்தாவரப்ரதிஷ்டையாக அங்கே கோயில் கொண்டாப்போலே, திருவயோத்தியிலிருந்து லங்கையெழுநததருளும்போது “தவச்செல்வம் நிறைந்த அந்த ரிஷிகளுடைய ஆச்ரமங்களுக்கு மாறிமாறிச் சென்றான் ராமபிரான்” [ரா-ஆ 11-24] என்கிறபடியே சுற்றிச்சுற்றி ஆச்ரமங்கள்தோறும் புகுந்து திரிகின்ற ராமபிரானும், இவ்விடத்திலே “திருமகளோடு இனிதமர்ந்த செல்வன்”[பெருமாள்திரு 10-8] என்று திருவயோத்தியிற்போலே பிராட்டியோடுகூட இனிமையுடன் அமரும்படியன்றோ இந்த தேசத்தின இனிமையிருப்பது. (சித்திரகூடம்) ‘கூடம்’ என்னும் சொல் வடமொழியில் மலையிலுள்ள தாதுக்களையும், ரத்தினங்களையும், சிகரங்களையும் குறிக்குமாகையாலே ‘சித்ரகூடம்’ என்னும் இப்பர்வதம் பலவிதமான தாதுக்களாலும், ரத்தினங்களாலும், சிகரங்களாலும் நெஞ்சையிழுக்கும்படி விசித்திரமாயுள்ளது என்கை.

இப்படி விசித்திரமான நிறமுடைய பெரிய சாலைகளை உடையதாகவன்றோ திருவயோத்தியுமிருப்பது. அதையோ சொல்லுகிறது? என்னில்: (இந்த மலை) “கலலும் கனைகடலும் வைகுந்த வானாடும் புல்

லும் வைகுந்தவானொடும் புல்லென்றொழிந்தனகொல்'' என்று கைவிட்டுப்போந்தவை போலேயோ ''உகந்தினிதுறை கோயில''என்கிறபடியே அவன் உகந்து வர்த்திக்கிற இம்மலை?

என்போலவென்னில்: (கிரிராஜோபம:) பெருமாளும் பிராட்டியும் சேரவெழுந்தருளியிருக்கையாலே, ''திருமாலிருஞ்சோலைமலை'' என்று, அழகரும் நாச்சியாரும் எழுந்தருளியிருக்கிற திருமலையோடு ஒப்புச்சொல்லலாயிருந்தது.

இப்படிக்கு இம்மலைக்கு ஏற்றமென்னென்ன,–(யஸ்மிந் வஸதி காகுதஸ்த:) பிறந்து படைத்துப் பொகட்டுப்போன மதுரைபோலுமன்றியிலே,யாதொரு மலையிலே ''நங்கள் குன்றம் கைவிடான்'' என்கிறபடியே விடாதே எழுந்தருளியிருக்கிறார். இப்படியிருக்கிறவர் தாம் யாரென்னில்: (காகுத்ஸ்த:) இக்குலமாக உத்₃த₄ரிக்கும்படியான பெருமையை

---

லென்றொழிந்தனகொல்'' [பெரிய திருவ-68] என்று ஆழ்வார் நெஞ்சைப்பெற்றவுடன் கைவிட்டுப் போந்த திருமலை, திருப்பாற்கடல், ஸ்ரீவைகுண்டம் போன்றதோ ''உகந்தினிதுறைகோயில'' [பெரிய திரு 3-9-7] என்கிறபடியே அவன உகந்து வாழ்கிற இம்மலை.

எதுபோலவென்னில்: (மலையரசனை யொத்தது) பெருமாளும் பிராட்டியும் சேர்ந்து எழுந்தருளியிருக்கையாலே, அழகரும் நாச்சியாருமாகிற திருவும் மாலும் சேர்ந்திருக்கும் சோலையென்று பொருந்தியபெயர்பெற்ற திருமலையோடு ஒப்புச் சொல்லலாமபடியிருந்தது.

இப்படி இம்மலைக்குப் பெருமையுண்டாகக் காரணமென்னென்னில்: (யாதொரு பர்வதத்தில் காகுத்தன் வஸிக்கிறானோ) ஆள்வதற்கு இட்டுப்பிறந்து வைத்தும் விட்டுப்போன திருவயோத்யை போலுமன்றியிலே, பிறந்தவுடன் விட்டுப்போன மதுரைபோலுமன்றியிலே, யாதொருமலையிலே ''திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம் கைவிடான'' [திருவாய் 10-8-4] என்கிற திருமாலிருஞ்சோலைமலையிற்போலே ராமபிரான் விடாமல் எழுந்தருளியிருக்கிறானே. இப்படியிருக்கிறவர் தாம் யாரெனனில: (காகுத்தன்) ககுத்ஸ்த வமிசமே

யுடைய பெருமாளென்கிறது. (காகுத்ஸ்த: யஸ்மிந் வஸதி) ககுத்ஸ்தகுலத்திலே பிறந்து, திருவயோத்யையிலே எழுந்தருளியிருக்கிற பெருமாள் யாதொரு மலையிலே எழுந்தருளியிருக்கிறார். (காகுத்ஸ்த: யஸ்மிந் வஸதி) இம்மலையின்மேலே எழுந்தருளியிருககிறபோதே, இக்குலத்துக்குக் கூடஸ்தனுயிருப்பானொரு ராஜாவானவன், இந்த்ரன் ருஷபமாயிருக்க அதின் கழுத்திலே நின்றாப்போலே இருந்தது. (காகுத்ஸ்தோ யஸ்மிந் வஸதி) "பரன் சென்று சேர் திருவேங்கடம்" என்கிறபடியே, ஸர்வாதிகவஸ்து இனிதமர்ந்தருளுகிற இடமிறே.

இப்படி இம்மலையிலே எழுந்தருளியிருக்கிற இது வநவாஸ மர்யாதையாலேயாய், க்லேசாத்மகமாயிருக்குமோ வென்னில்: (குபேர இவ நந்தநே) தநபதியான வைச்ரவணன் தன் செருக்காலே ஸ்வர்க்கலோகத்திலே இந்த்ரோத்யானமான நந்தநவனத்திலே இருந்தாப்போலேயிருந்தது. குபேரனுடைய தோப்பு சைத்ரரதமன்றோ? நந்தநவனத்

---

உயர்வடையும்படியான பெருமையை உடைய ஸ்ரீராமபிரான் என்கிறது. (காகுததன் யாதொன்றில் வஸிக்கிறானோ) ககுத்ஸ்தவம்சத்திலுதித்து திருவயோத்தியைப் பிறப்பிடமாகக்கொண்ட ராமன் யாதொருமலையில் எழுந்தருளியுள்ளானோ. (காகுத்தன் யாதொனறில் வஸிககிறானோ) இம்மலையின்மேல் காகுத்தன் எழுந்தருளியிருபபதைபபார்த்தால், இவ்வமிசத்து முனனோர்களில் ஒரு அரசனுகிற ககுத்தன் இந்திரன் காளையாயிருக்க, அவன்மேலே ஏறியிருந்தது போலுள்ளது. (காகுத்தன் எதில வஸிக்கிறானோ) "பரன்செனறு சேர் திருவேங்கடம்" [திருவாய் 3-3-8] எனகிறபடியே பரவஸ்து இனிமையுடன் அமரும் தேசமன்றோ.

இப்படி இம்மலைமேலே எழுந்தருளியிருக்குமிது வநவாஸம் செய்யவேணடுமென்னும் நிர்ப்பந்தத்தாலேயாய், துன்பமளிப்பதாயிருக்குமோ என்னில்:(குபேரன் நந்தனவனத்தில் வஸிப்பதுபோலே) தனத்துக்கு அதிபதியான குபேரன், தன் செல்வச் செருக்காலே ஸ்வர்க்கலோகத்தில் இந்திரனின் தோட்டமான நந்தனவனத்திலிருந்ததுபோலேயிருந்தது. குபேரனுடைய தோப்பு சைத்ரரதமாயிற்றே; நந்தனவனத்திலேயிருந்ததாகச் சொல்லுவானென்

*தைச் சொவ்லுவானென்னென்னில்: அயோத்யா பரிஸரமான தோப்புகளை விட்டுச் சித்ரகூட பரிஸரமான * தேனமரும் பொழிற்சாரலிலே எழுந்தருளியிருந்தபோது, வைஶ்ரவணன் ஸ்வாஸாதாரணமான சைத்ரரதத்தைவிட்டு, இந்த்ரோத்யானமான நந்தநவனத்திலே இருந்தாப்போலேயிருந்தது.*

*இத்தால், பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமிப் பரப்புக்குள், அவன் உகந்தருளின திவ்யதேசமே உத்தேச்ய மென்கிறது.*

தனிச்லோக வ்யாக்யானத்தில் அயோத்யாகாண்டம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

**ஆரண்யகாண்டம் 16-வது ஸர்க்கம், 29-வது ச்லோகம்**

**भावज्ञेन कृतज्ञेन धर्मज्ञेन च लक्ष्मण।**
**त्वया पुत्रेण धर्मात्मा न संवृत्तः पिता मम॥**

**ப₄ாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந த₄ர்மஜ்ஞேந ச லக்ஷ்மண।**
**தவயா புதரேண த₄ர்மாதமா ந ஸம்வ்ருத்த: பிதா மம॥**

பதவுரை:—லக்ஷ்மண! — *லக்ஷ்மணனே!*, **ப₄ாவஜ்ஞேந**— *நினைவை அறிந்தவனாய்*, **க்ருதஜ்ஞேந**—*(தந்தை ராமனுக்குச்) செய்தவற்றை அறிந்தவனாய்*, **த₄ர்மஜ்ஞேந**—*சேஷத்வ தர்மத்தையறிந்தவனாய்*, **புத்ரேண**—*(தந்தையை) நரகத்திலிருந்து ரக்ஷிக்கும் புத்திரனை*, **த்வயா**—*உன்னாலே*, **த₄ர்மாத்மா**—*மஹாதார்மிகரான*, **பிதா**—*தந்தையார்*, **மம**—*எனக்கு*, **ந ஸம்வ்ருத்த**—*இறந்துபோகவில்லை.*

---

*னென்னில்: தனக்கு என்றும் அனுபவிக்க ஏற்பட்ட அயோத்தி நகரத்தோபபுகளை விட்டு, சித்திரகூடத்தைச் சுற்றியுள்ள தேனமரும் பொழிற்சாரலிலே எழுந்தருளியிருந்த இது, குபேரன் தனக்கேயான சைத்ரரதத்தை விட்டு இந்திரன் தோட்டமான நந்தனவனத்திலே யிருந்தாப்போலேயிருந்தது எனகை. இத்தால் ஐமபதுகோடி விஸ்தீர்ணத்தையுடைய பூமிப்பரப்புக்குள் எம்பெருமான் உகந்தருளின திவ்யதேசமே சேதநர்க்கு உத்தேச்யம் என்கிறது.*

**தனிச்லோக த₃ர்ப்பணத்தில் அயோத்யாகாண்டம் முற்றிற்று.**

அவதாரிகை:—**க்ரியதாம்**" (க்ரியதாம்) என்று சொல்லுகிற வரிறே இளையபெருமாள். இப்படிச்செய்யவல்ல நீர் நம்மைக் கேட்டதென்? என்கிறார். பர்ணசாலையைச் சமைந்தவனந் தரம் சொல்லுகிற வார்த்தையிறே.

வ்யா:— (பாவஜ்ஞேந) அல்லாதவை சொன்னாலும், தாமும் பிராட்டியுமாய் ஏகாந்தமாயிருக்குமிடங்கள் சமைக் கும்படி இளைய பெருமாளுக்குப்பெருமாள் அருளிச்செய் யாரிறே; நெஞ்சாலே நினைக்குமித்தனையிறே; இந்நினை வறிந்து செய்தார். (க்ருதஜ்ஞேந) அதுவேயன்றிக்கே, செய்து போரும்படியறிந்து செய்தார். அறுபதினாயிரமாண்டு ஜீவித்த சக்ரவர்த்தி நெடுநாள் மலடுநின்று பிள்ளைபெற்ற வனாகையாலே 'இவரென் நினைத்திருக்கிறாரோ', என்று நினைவை ஆராய்ந்தும். 'இவர்க்கு எத்தாலே என்னகுறை

---

அவதாரிகை:—லக்ஷ்மணன் பர்ணசாலையை அமைத்தபிறகு ராமபிரான சொல்லும் வார்த்தையிது. பர்ணசாலை கட்டப்பட்டி ருககும் அழகைப்பார்த்த ராமபிரான் "இப்படி என் கருத்தறிந்தும், முன செய்ததறிந்தும், தருமமறிந்தும் செய்யவல்ல நீ 'ஸ்வயம து ருசிரே தே₃சே க்ரியதாமிதி மாம் வத₃' [ரா-ஆ 15-7] [தேவரீரே, அழகிய இடத்தில 'இப்படியிப்படிக் கட்டவேண்டும்' என்று என்னைக் கட்டளையிடுவீர்]எனறு கேட்டபடியென்!" என்று கொணடாடுகிறார்.

வ்யா:—(கருத்தறிபவராலே) "'இப்படியிப்படிக்கட்டவேணடும்' என்று கட்டளையிடவேண்டும்" எனறு லக்ஷ்மணன் கேட்டுக் கொண்டதற்கிணங்க, ராமபிரானும் கட்டவேண்டிய முறைகள் சிலவற்றைச் சொல்லியிருந்தபோதிலும், தாமும் பிராட்டியும் தனியா யிருக்குமிடம் முதலியன செய்யவேண்டியதைப்பற்றிச் சொலலி யிருக்கமாட்டாரே; நெஞ்சால, நினைந்துமட்டுமிருப்பரே; அந்நினை வறிந்து அவற்றையும் சமைத்து வைத்திருந்தார். (செய்ததறிந்த வராலே) அத்துடனன்றியில, முன் செய்யும்படிகளை அறிந்து செய்தார். அறுபதினாயிரம் வருஷம் வாழ்ந்த சக்ரவாததி நெடுநாள் பிள்ளைபெருமலிருந்து பிள்ளைபெற்றவராகையாலே, 'நம் செல்வப் பிள்ளை என் நினைந்திருக்கிருனே' என்று நினைவை ஆராய்ந்தும், 'இவனுக்கு எதனல் என்ன குறைவருமோ' என்று சூழ்நிலைகளைப்

வருகிறதோ?' என்று பொருந்துமிடங்கள் பார்த்தும், அவன் செய்துபோருமடைவு அறிவராயிற்று. (தர்மஜ்ஞேந) நினைவறிந்தாலும், செய்துபோரும் அடைவு அறிந்தாலும், தானும் ராஜபுத்ரனைபின்பு 'எனக்கும் ஓரிருப்பிடம் வேண்டாவோ?' என்றிருக்குமவனுக்கு இது செய்யவொண்ணாதிறே; அங்ஙனன்றிக்கே, அத்தலையில் தாதர்த்யமே நமக்கு ஸ்வரூபமான பின்பு. பின்னை அத்தலைக்குறுப்பாகச் செய்து போருமதே நமக்கு வகுத்தது என்று அத்தலைக்காகச் செய்யுமத்தையே தமக்குக் கர்த்தவ்யமென்றிருப்பர். (த்வயேத்யாதி) தாமுள்ளவன்று தாமுளராய், தாம் போனவனறைகதும் உம்மை வைத்துப்போனாரே என்கிறார். (புத்ரேண) 'புத்' என்று ஒருநரகவிசேஷமாய், அதில் புகாதபடி நோக்குமென்றாயிற்று புத்ரனென்று பேராகிறது. ஐயருக்கு, நம்முடைய அபிமதஸித்தியின்றிக்கேயொழிகை தனக்கு மேற்பட நிரயமில்லையிறே. அவர்க்கு அது வாராதபடி நோக்குகிறீர்

---

பார்த்தும் தசரதசக்ரவர்த்தி செய்து போந்தவகைகளெல்லாவற்றையும் அறிபவனாயிற்று லக்ஷ்மணன். (தருமமறிந்தவராலே) ராமபிரானுடைய நினைவறிந்து செய்தாலும், தந்தை செய்த முறையறிந்தாலும் தானும் ராஜபுத்ரனாகையாலே 'எனக்கும் ஓரிருப்பிடம் வேண்டும்' என்று நினைத்தானாகில், தன்னிருப்பிடத்தைக் கட்டுவதில் ஈடுபட முடியுமேயொழிய, ராமபிரானுக்கும் பிராட்டிக்குமான இடங்கள் சமைப்பதில் சிரத்தையிருக்காது. அப்படியில்லாமல், 'பரவானஸ்மி' என்று ராமபிரானுக்கு சேஷபூதனாயிருக்கையே நமக்கு ஸ்வரூபமாயிருக்கும்போது, அவருக்கு உபயோகப்படுவதைச் செய்வதே நமக்கு ஸ்வரூபம் என்று அவருக்காகச்செய்வதே சரியானது என்றிருப்பர். (புத்திரனை உன்னாலே தார்மிகரான தந்தை எனக்கு இறக்கவில்லை) தாமிருக்கும்போது, எனக்கு வேண்டியவைகளைத் தாமே செய்து, தாம் சென்ற பிறகும் அவைகளைச் செய்ய உன்னை வைத்துப் போனாரே எந்தை; என்னிடத்திலே அவருக்கு என்ன அன்பு! என்கிறார். (புத்திரனாலே)'புத்' என்னும் ஒரு நரகத்தில் புகாதபடி காப்பாற்றுமவனாகையாலே புத்திரன் என்னும்பெயர் பிள்ளைக்கு ஏற்பட்டிருக்கிறது. நம் தந்தையான தசரதருக்கு நான் விரும்பியது பெறுமைக்கு மேற்பட்ட நரகாநுபவமில்லை; அவருக்கு அவ்வநு

நீரிறே. (தர்மாத்மா) சக்ரவர்த்தி ப்ரஸ்துதனானவாறே, நம் ஐயரையொப்பார் உண்டோ? அவருமொருவரே! தாமிருந்த நாள் நாம் வேண்டுவன எனக்குச் செய்து, தாம் போனவனறு நமக்கு வேண்டுவன செய்கைக்கு உம்மைப்பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப்போவதே! (மம) இருவருக்கும் பிதாவானமை ஒத்திருக்கச்செய்தே, 'மம' என்கிறாராயிற்று; அவர் நமக்குச் செய்யுமதை நீ ரிருந்து செய்கையாலே நாம் அவரை இழந்திலோம்; நீர் இழந்தீராகிலித்தனையிறே.

ஆரண்யகாண்டம் 19-வது ஸர்க்கம், 14-வது ச்லோகம்

तरुणौ रूपसंपन्नौ सुकुमारौ महाबलौ।
पुण्डरीकविशालाक्षौ चीरकृष्णाजिनांबरौ॥

தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாப₃லௌ।
புண்ட₃ரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்ப₃ரௌ॥

பதவுரை:—தருணௌ-வாலிபர்களாய், ரூப ஸம்பந்நௌ—அழகு நிறைந்தவர்களாய், ஸுகுமாரௌ—மிகவும் மிருதுவான தன்மையை உடையவர்களாய், மஹாப₃லௌ— பெரிய பலத்தையுடையவர்களாய், புண்ட₃ரீகவிசாலாக்ஷௌ-தாமரை போல் பரந்த கண்களையுடையவர்களாய், சீரக்ருஷ்ணாஜிநாம்ப₃ரௌ—மரவுரியையும், மான்தோலையும் உடுப்பாக உடையவர்களாய் (ராமலக்ஷ்மணர்கள் இருக்கிறார்கள்)

---

பவமில்லாதபடி பார்த்துக்கொள்பவன் நீயேயாகையாலே நீயே அவருக்குப் புத்திரனாவாய். (தர்மாத்மா) சக்ரவர்த்தியைப் பற்றிய பேச்சு எழுந்தவுடன், 'நம் தந்தையை ஒத்தவர் உண்டோ? அவரே ஒப்பற்ற தந்தையாவார். தாமிருக்கும்போது நான விரும்பு வதையெல்லாம எனக்குச்செய்து, தாம் போனபின்பும நமக்கு வேண்டியவைகளைச் செய்வதற்கு உம்மைப் பெற்றுவைத்து எனக்குத் தாகமெடுத்தபோதுதவும தண்ணீர்ப்பந்தல போலே வைத்துப்போனாரே! (தந்தை எனக்கு இறக்கவில்லை) இருவருக்கும் தந்தையாயிருந்தபோதிலும் 'எனக்கு' என்கிறார். அவர் எனக்குச் செய்பவற்றை நீயிருந்து செய்கையாலே நான் அவரை இழக்கவில்லை; நீ தான் தந்தையை இழந்துவிட்டாய் என்கிறார்.

அவதாரிகை:-"स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः। अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुः सनातनः॥" (ஸ ஹி தே₃வைருதீ₃ர்ணஸ்ய ராவணஸ்ய வத₄ார்த்தி₂பி₄:। அர்த்தி₂தோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸநாதந:॥) என்கிறபடியே, தாமகண்ட₂குண்டி₂தஶக்திகளான தேவர்கள் ராக்ஷஸர்களுடைய ரஜஸ்ஸைப் போக்கும்படி ரஜோதாஸரமான வடிவுகளும், ராக்ஷஸ ஸ்த்ரீகள் மாங்கல்யங்கள் வாங்கும்படி கழுத்திலே கட்டின *கப்படங்களும், ராவணபந்₃தீ₄க்ருதைகளான தங்கள் ஸ்த்ரீகளுடைய விரித்ததலை, "विमुक्तकेश्यो दुःखार्ताः" (விமுக்தகேச்யோ து₃:க்க₂ார்த்தா:) என்று ராக்ஷஸிகள் தலையிலேயாம்படி தாங்கள் விரித்ததலைமயிரும், "हा पुत्रेति च वादिन्यो हा नाथेति च सर्वशः" (ஹா புத்ரேதி ச வாதி₃ந்யோ ஹா நாதே₂தி ச ஸர்வஶ:) என்கிறபடியே அவர்கள் முகங்களிலே விலாபாக்ஷரங்களாம்படி தங்கள் முகங்களிலே ஸ்புரிச்கிறஶரணாக்ஷரங்களும், "उद्धृत्य च भुजौ काचित्" (உத்₃த்₄ருத்ய ச பு₄ஜௌ காசித்)

அவதாரிகை:— "(வரங்களால்) கொழுத்தவனான ராவணனைக் கொல்லவிரும்பிய தேவர்களால் யாசிக்கப்பட்டு மனிதகுலத்தில் பிறந்த பழையோனான விஷ்ணுவன்றோ அவ்விராமன்" [ரா-அ 1-7] என்கிறபடியே பத்துத்தலையோனாலே மழுங்கிய பலத்தையுடைய தேவர்கள் ராக்ஷஸர்களுடைய ரஜோகுணத்தை (எம்பெருமான் அவதரித்துப்) போக்கும்படியாக தங்களுடைய புழுதிபடிந்த உடம்பையும், ராக்ஷஸ ஸ்த்ரீகளுடைய மாங்கல்யங்களை (ஸர்வேச்வரன்) அகற்றும்படியாகத் தங்கள் கழுத்திலே கட்டிய *கப்படங்களையும் ராவணனால் சிறையிலிடப்பட்ட தங்களுடைய ஸ்த்ரீகளுடைய விரித்த தலை, "மயிரை விரித்துக்கொண்டவர்களாய்க் கன்றிழந்த பசுக்களைப் போல ராவணனை இழந்த ராக்ஷஸிகள் துக்கத்தால் வருந்தினர்" [ரா-யு 115-2] என்கிறபடியே ராக்ஷஸிகள் தலையிலே ஆகும்படி தங்களுடைய விரித்ததலைமயிரையும் "மகனே! என்றும், நாதனே! என்றும் எங்கும் கதறிக்கொண்டிருந்தனர் அரக்கிகள்" [ரா-யு 113-4] என்கிறபடியே அவர்கள் வாயிலே அழுகைகுரலாகும்படி தங்கள் வாயில் அபயக்குரலையும், "ஓரரக்கி கையைக் கூப்பிக்கொண்டு பூமியில் விழுந்து புரளுகிறாள்" [ரா-யு 113-9] என்கிறபடியே

* கப்படம்—தோற்றவர்கள் கழுத்திலணியும் சக்கரம்

என்கிறபடியே அவர்கள் கையெடுத்துக் கூப்பிடும்படி தாங்கள் கொடுத்த அஞ்ஜலி புடங்களும், "**स्नापयन्ती मुखं बाष्पैस्तुषारैरिव पङ्कजं**" (ஸ்நாபயந்தீ முக₂ம் பா₃ஷ்பைஸ் துஷாரைரிவ பங்கஜம்) என்கிறபடியே அவர்கள் கண்களிலே கண்ணீர் பாயும்படி தாங்கள் கண்ணும் கண்ணீருமாய், "**छायावृक्षमिवाध्वगा**" (சா₂யாவ்ருக்ஷமிவாத்₄வகா₃:) என்றும், "**चकोरा इव शीतांशुं चातका इव तोयदम्। अधना इव दातारं देवा जग्मुर्जनार्दनम्॥**" (சகோரா இவ ஶீதாம்ஶும் சாதகா இவ தோயத₃ம் । அத₄நா இவ தா₃தாரம தே₃வா ஜக்₃முர் ஜநார்த்த₃நம ||) என்றும் சொல்லுகிறபடியே அத்₄வச்ராந்தரானவர்கள் சாயாவ்ருக்ஷத்தைச் சென்று சேருமாப்போலேயும், சகோரங்களானவை ஶரச்சந்த்ரனை அணுகுமாப்போலேயும், சாதகங்களானவை வர்ஷுகவலாஹகங்களைச் சென்று கிட்டுமாப் போலேயும், தரித்ரரானவர்கள் தாதாவைச்சென்று கிட்டு

ராக்ஷஸிகள் கையெடுத்துக் கூப்பிடும்படி தங்கள் அஞ்ஜலிபுடங்களையும, "பனியாலே தாமரையை நனைப்பதுபோல் ராவணனுடைய முகத்தைக் கண்ணீரால் நனைத்தாள் ஒருத்தி" [ரா-யு 113-10] என்கிறபடியே அவர்கள் கண்களிலிருந்து கண்ணீர் பொழியும்படியாகத் தங்களுடைய கண்ணீரையும் காட்டிக்கொண்டு,

"தஸ்மிந்நவஸரே தே₃வா: பௌலஸ்த்யோபப்லுதா ஹரிம ।
அபி₄ஜக்₃முர் நித₃ாக₄ார்த்தா: ச₂ாயாவ்ருக்ஷமிவாத்₄வக₃ா:||"
[ரகுவம்சம் 10-5]

[புலஸ்தியருடைய வமிசத்துதித்த ராவணனல் துன்புற்ற தேவர்கள், அந்த ஸமயத்திலே கோடையால வருந்திய வழிப்போக்காகள் நிழல்தரும மரததை அடைவதுபோல் ஜநார்த்தனனை அடைந்தனர்.] என்றும், "சகோர பக்ஷிகள் (பசிதீரச்) சரத்கால சந்திரனையடைவது போலும, சாதகங்கள் (தாகம்தீர) மேகத்தை அணுகுவது போலும், ஏழைகள் வள்ளலை அடைவதுபோலும தேவர்கள் ஜநார்த்தனனை அடைந்தனர்" [ ] என்றும் சொல்லுகிறபடியே, களைப்படைந்த வழிப்போக்கர் நிழலதரும்மரத்தைச் சென்று சேருவது போலேயும், சகோரபக்ஷிகள் சரத்காலசந்திரனை அணுகுவதுபோலேயும், சாதக பக்ஷிகள மழைபொழிமேகஙகளைக் கிட்டுவது போலேயும, ஏழைகள

மாப்போலேயும் ஶ்ரிய:பதியைச் சென்று கிட்டி, **“तमब्रुवन् सुराः सर्वे समभिष्टूय सन्नताः”** (தமப்₃ருவந் ஸுரா: ஸர்வே ஸம பி₄ஷ்டூய ஸந்நதா:) என்று ஸ்தவப்ரியனானவனை ஸ்தோத்ரம் பண்ணுவார்களாகத்தொடங்கி **“सदैकरूपरूपाय”** (ஸதை₃கரூப ரூபாய) என்று அவிக்ருதரான தேவர் ‘‘நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா’’ என்கிறபடியே அழிவுக்கிட்டு, த்ரிபாத்விபூதியிலே இருக்கக்கடவ தேவர் சதுஷ்பாத்தாய் ஹிரண்யாக்ஷக்ஷபணம் பண்ணிற்றும், கேவலம் திர்யக்த்வத் தாலே போராதென்று *நரங்கலந்த சிங்கமாய் ஹிரண்ய நிரஸநம் பண்ணிற்றும், **“महतो महीयान्”** (மஹதோ மஹீயாந்) என்கிற வடிவைக் குறளுருவாக்கி ‘அல்லிமலர்மகள் போக மயக்குகளை’ மறந்து ப்ரஹ்மசாரியாய், **“दद्यान्न प्रतिगृह्णीयात्”** **(த₃த்₃யாந்ந ப்ரதிக்₃ருஹ்ணீயாத்)** என்றும், **“गोसहस्रप्रदातारं”**

---

கொடையாளியைச் சென்றடைவது போலேயும் ஸ்ரீமந்நாராயண னைச் சென்றடைந்து, ‘‘எல்லாதேவர்களும் பரமபுருஷனை மிக வணங்கித் துதித்துப் பின்வருமாறு சொனனூர்கள்’’ [ரா-பா 15-17] என்று ‘‘ஸ்தவப்ரிய’’ [துதியை விரும்புமவன்] என்று விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் கீர்த்திக்கப்படும் பரமபுருஷனைத் துதிக்கத் தொடங்கி, ‘‘எப்போதும் ஒருபடிப்பட்ட உருவத்தையுடைய விஷ்ணு வுக்கு வணக்கம்’’ [வி-பு 1-2-1] என்கிறபடியே விகாரமற்றவரான தேவரீர், ‘‘நாட்டிற்பிறந்து படாதனபட்டு மனிசர்க்கா’’ [திருவாய் 7-5-2] என்கிறபடியே விகாரத்திற்கேயான பிறப்புகளை எடுக்க முற்பட்டு, த்ரிபாத் விபூதியிலே ‘த்ரிபாதூ₃ர்த்₄வ:’ [பு-ஸூ] என்கிற படியே மூன்று பாதங்களோடு-(உருவங்களோடு)-இருக்கும் தேவரீர் நான்கு பாதங்களை-கால்களை-உடையவராய் விகாரமடைந்து இரணி யாக்ஷனை அழித்ததும, மிருகமாகமட்டும் அவதரித்தது போராதென்று சிங்கமும் மனிதனும் கலந்த நரசிங்கவுருவாகி இரணியனை அழித்த தும், ‘‘பெரிதிலும் பெரிதாயிருப்பவன் பரமாத்மா’’ [தை-நா 10-1] என்கிற வடிவைக் குறுக்கி வாமனனுக்கி, ‘அல்லிமலர்மகள் போகமயக்குகளை’ [திருவாய் 3-10-8] மறந்து ப்ரஹ்மசாரியாய்,

‘‘த₃த்₃யாந்ந ப்ரதிக்₃ருஹ்ணீயாத் ந ப்₃ரூயாத் கிஞ்சித₃ப்ரியம்।
அபி ஜீவிதஹேதோர் வா ராம: ஸத்யபாரக்ரம: ॥’’

[ரா-ஸு 33-26]

(கோ₃ஸஹஸ்ரப்ரத₃ாதாரம்) என்றும். "அலம்புரிந்த நெடுந் தடக்கை" என்றும் சொல்லுகிறபடியே ப்₃ரஹ்மாத்₃யநேக பத₃ப்ரத₃ரான தேவர் மஹாபலி பக்கலிலே பத₃த்ரயத்தை அர்த்தித்ததும், "ब्राह्मणोऽस्य मुखमासीद्बाहू राजन्यः कृतः" (ப₃ராஹ மணோஸ்ய முக₂மாஸீத ப₃ாஹூ ராஜந்ய: க்ருத.) என்று ப்ரஹ்மக்ஷத்ரங்களுககு உதபாதகரான தேவர் "पित्र्यमंशमुपवीतलक्षणं मातृकञ्च धनुरूर्जितं दधत्" (பித்ர்யமம்சமுபவீதலக்ஷணம மாத்ருகஞ்ச த₄நுரூர்ஜிதம் த₃த₄த) என்கிறபடியே ஜமதக் நிரேணுகைகள் பக்கலிலே ப்ரஹ்மக்ஷத்ரியராய் வந்து தோன்றி இருபத்தொருபடிகால் துஷ்டக்ஷத்ரியரைப் பரசுவுக்கு ப்ராதரசநமாக்கிற்றும் "भक्तानां" (ப₄க்தாநாம) என்றும். "वरद सकलमेतत्संश्रितार्थं चकर्थ" (வரத₃ஸகலமேதத் ஸமச்ரிதார்தத₂ம சகர்த்த₃) என்றும் அடியோங்களுக்காக வன்றோ என்று ஸ்தோத்ரம்பண்ணி. "चापमानय" (சாபமாநய)

[ஸத்யபராகரமரான பெருமாள் (பிறர்க்குக்) கொடுபபரேயொழிப, தன் உயிரைக் காப்பாற்றவும் (பிறரிடமிருநது) யாசகம வாஙகமாடடார; கடுஞ சொலலைப் பேசவும் மாட்டார்.] என்றும், "ஆயிரக்கணக்கான பசுக்களைக் கொடுத்த கையை" [ரா-யு 21-8] எனறும், "அலம்புரிந்த நெடுந்தடக்கை அமரர்வேநதன் அஞசிறைப்புள் தனிப்பாகன்" [திருநெடு-6] எனறும் சொலலுகிறபடியே ப்ரஹ்ம பதவி முதலிய பலபதஙகளை —பதவிகளை— அளிக்கும் தேவரீர் மஹாபலியிடம மூன்று பதங்களை—அடிகளை—யாசிததது்ம், "பரமபுருஷனுடைய முகத்திலிருந்து ப்ராஹ்மணன் உண்டானை; கையிலிருநது க்ஷத் திரியன உணடானன்' [பு-ஸூ] எனறு ப்ராஹ்மணக்ஷத்திரியர்களை உண்டுபண்ணின தேவரீர் "யஜ்ஞோபவீதமாகிற தந்தையின் அம சத்தையும, உறுதியான விலலாகிற தாயின அமசத்தையுமதரித்த பரசுராமன" [ரகு 11-64] எனகிறபடியே ஜமதக்னிரேணுகைகளிடத் திலே ப்ராஹ்மணராகவும, க்ஷத்திரியராகவும் வந்து தோன்றி இருபத் தொருதடவை துஷ்டவரசர்களைப் பரசுவுக்குக் காலையாகாரமாக்கின தும, "உன்னுடைய ஸ்வரூபரூபாதிகள் பக்தர்களுக்காகவே" [ஜிதநதே] என்றும், "வரதனே! உன்னுடைய ஸவரூபரூபாதிக ளெல்லாவற்றையும் அடியார்க்காகவே ஆக்கிவைத்தாய்" [வர-ஸ்த-68] என்றும் சொல்லுகிறபடியே அடியோஙகளுக்காக வன்றோ என்று துதித்து, "லக்ஷ்மண! விலலையெடு" [ரா-யு 21-22]

என்று கையிலே ஆயுதமெடுக்கும்படி தங்களுடைய வஜ்ர பரசு தண்ட பாசாத்யாயுதங்களைப் பொகட்டும். அவன் "**सागरं शोषयिष्यामि**" (ஸாக$_3$ரம் ஶோஷயிஷ்யாமி) என்னும்படி கண்ணீரைக்காட்டியும். "**सुग्रीवं शरणं गतः**" (ஸுக்$_3$ரீவம் ஶரணம க$_3$த.) என்றும். "**समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति**" (ஸமுத்$_3$ரம ராக$_4$வோ ராஜா சரணம் க$_3$ந்துமர்ஹதி) என்றும அவன சரணம்புகும்படி தாங்கள் ஶரணம்புக்கும், "**अञ्जलिं प्राङ्मुखः कृत्वा**" (அஞ்ஜலிம் ப்ராங்முக$_2$: க்ருத்வா) என்று அவன் அஞ்ஜலிபண்ணும்படி தாங்கள் அஞ்ஜலிபண்ணியும், "**प्रसीदन्तु भवन्तो मे**" (ப்ரஸீத$_3$ந்து ப$_4$வந்தோ மே) என்று அவன் ஸ்தோத்ரம் பண்ணும்படி தாங்கள் ஸ்தோத்ரம்பண்ணியும். "**सर्वे सन्नताः**" (ஸர்வே ஸந்நதா:) என்று தமயனை இந்த்ரனும் முற்பாடனும்படி திருவடிகளிலே நம்ரராய். "**न नमेयं**" (ந நமேயம) என்றிருக்கிறவர்களைத் தலையழித்துத் தர வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பரமகாருணிகனை ஸர்வேச்வரனும் நித்யானபாயினியான பிராட்டியும், "**पितरं**

---

என்று அவன் கையிலே ஆயுதமெடுக்குமபடி தங்களுடைய வஜ்ரம், பரசு, தணடம, பாசம முதலிய ஆயுதங்களைப் போட்டும், அவன் "கடலை வறறச்செய்கிறேன்" [ரா யு 21-22] என்று சொல்லும்படி தஙகள் கண்ணீரைக்காட்டியும், "ஸுக்ரீவனை சரணமடைந்தார் ராகவர்" [ரா-கி 4-19] என்றும் "ராஜாவான ராகவர் ஸமுத்ரததை சரணமடையவேண்டும' [ரா-யு 19-30] எனறும் அவன சரணம் புகுமபடி தாஙகள் பகவானைச் சரணம புகுந்தும், "கிழக்கு முகமாக அஞ்சலிசெய்து கடலை நோக்கிப் படுத்தான் ராமபிரான் ' [ரா-யு 21-1] என்று அவன அஞ்ஜலிபணணுமபடி தாங்கள் அஞ்ஜலிபண்ணியும் "முனிவர்களே! நீங்கள் உகந்தருள வேண்டும" [ரா-ஆ 10-9] என்று அவன் பிறரைத்துதிக்கும்படி தாஙகள அவனைத்துதித்தும், "எல்லா தேவர்களும் மிகவணங்கிச் சொனனார்கள்" [ரா-பா 15-17] என்று வாமனவதாரத்திலே தமயனை இந்திரனை முன்னிட்டுக் கொண்டு திருவடிகளிலே வணங்கி, "இரண்டாகப் பிளக்கப் பட்டாலும் படுவேனேயொழிய வணங்கமாட்டேன்" [ரா-யு 36-11] என்றிருக்கின்றவர்களைத் தலையறுத்துத் தரவேண்டுமெனறு விண்ணப்பஞ்செய்ய, பெருங்கருணையை உடையவனை ஸர்வேச்வரனும்,

रोचयामास तदा दशरथं नृपं" (பிதரம் ரோசயாமாஸ தத₃ா த₃ஶரத₂ம் ந்ருபம்) என்றும், "जनकस्य कुले जाता" (ஜநகஸ்ய குலே ஜாதா) என்றும் சொல்லுகிறபடியே, தாம் தாஶரதியாயும் அவள் ஜநககுல ஸுந்தரியாயும் திருவவதரித்து, இருவரு மிரண்டிடததிலுமாக வளர்ந்தருளுகிற காலத்திலே,- இம் மிதுநம் இப்படி அகலவிருக்கப்பெறுது; இப்படி அகலவிருந்த போது ரக்ஷகராகாமையன்றிக்கே, "जगत्सशैलं परिवर्तयामि" (ஜக₃த் ஸசைலம் பரிவர்த்தயாமி) என்றும், "किन्नु सागरमेखलां महीं दहति" (கிந்நு ஸாக₃ரமேக₂லாம மஹீம் த₃ஹதி) என்றும் இவர்கள் தங்களாலே ஜகத்துக்கு அழிவுவருமென்றும்,

---

அவனையெனறும் விட்டுப்பிரியாத பிராட்டியும், "பரமபுருஷன் அப்போது தசரதசக்ரவர்த்தியைத் தன் தந்தையாக விரும்பினன்." [ரா-பா 15-21] எனறும், "ஜனகருடைய குலத்தில் பிறந்தவள்" [ரா-பா 1-27] எனறும் சொல்லுகிறபடியே தான் தசரதபுத்திரனுக வும், அவள் ஜனககுலத்தழகியாகவும் திருவவதரித்து, இருவரும் அயோத்தியும, மிதிலையுமாகிற இரண்டிடததிலும் வளர்ந்திருககிற காலத்திலே, – இம்மிதுநம் இப்படி அகலவிருக்கக்கூடாது. இப்படி அகலவிருந்தால் ரக்ஷகராகாமையன்றிக்கே,

"புரேவ மே சாருத₃தீமநிந்தி₃தாம்
திஶந்தி ஸீதாம யதி₃ நாத்₃ய மைதி₂லீம்।
ஸதே₃வக₃ந்த₄ர்வமநுஷ்ய பந்நக₃ம்
ஜக₃த் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம் ||"
[ரா-ஆ 64-78]

[அழகிய பற்களையுடையவளும், தோஷமற்றவளும், மிதிலா ராஜ குமாரியுமான என்னுடைய ஸீதையை எனக்கு அளிக்கவில்லையாகில், தேவர்களும், கந்தருவாகளும, மனிதர்களும், நாகர்களும், மலைகளும் நிறைந்த இவ்வுலகை நான தலைகீழாக்கி விடுவேன்.] என்றும,

"குஶலீ யதி₃ காகுத்ஸ்த₂: கிம் நு ஸாக₃ரமேக₂லாம।
மஹீம் த₃ஹதி காகுதஸ்த₂: க்ருத்₃த₄ஸ் தீவ்ரேண சக்ஷுஷா ||"
[ரா-ஸு 36-13]

[காகுத்தர் க்ஷேமமாயிருந்தாராகில், கோபம்கொணட அவர் தம் கொதிக்கும் கண்களாலே கடல்சூழ்ந்த உலகையே கொளுத்தி யிருப்பாரே.] என்றும் இவர்களால் உலகிற்கு அழிவுவருமென்றும,

சேர்ந்தபோது **"आवाभ्यां कर्माणि कर्तव्यानि प्रजाश्चोत्पादयितव्याः"** (ஆவாப₄யாம் கர்மாணி கர்த்தவ்யாநி ப்ரஜாச்சோத்பாத₃யித வ்யா:) என்றும், **"उपेतं सीतया भूयश्चित्रया शशिनं यथा"** (உபேதம் ஸீதயா பூ₄யச்சித்ரயா ஶஶிநம யதா₂) என்றும் ஜகத்துக்கு மங்களாவஹமாயிருக்கையாலும், இம்மிதுநத்தைச் சேர்க்க வேணும்–என்கிற அபி₄ஸந்தி₄யாலும், **"विनाशाय च दुष्कृतां"** (விநாஶாய ச து₃ஷ்க்ருதாம்) என்றும், **"संभवामि"** (ஸம்ப₄வாமி) என்றும் **"यज्ञविघ्नकरं हन्यां"** (யஜ்ஞவிக்₄நகரம் ஹந்யாம்) என்றும் அவருடைய அவதார ரஹஸ்ய ஸங்கல்பத்தை அடியொற்றினவனாகையாலும், விச்வாமித்ரபகவானானவன் தஶரதரத்நாகரத்தைக் கிட்டி ராமரத்நத்தை அபேக்ஷிக்க, அவனும் வாத்ஸல்யத்தாலே 'மதியெல்லாமுள்கலங்கிப்' பெருமானை உள்ளபடி அறியாதே–**"ऊनषोडशवर्षो मे"** (ஊநஷோட₃ஶவர்ஷோ மே) என்று இன்னம் பதினாறுபிராயம் நிரம்பிற்றில்லை; **"बाल आषोडशाद्वर्षात्पौगण्डश्चेति कीर्त्यते"** (பா₃ல ஆஷோட₃

---

சேர்ந்தபோது "நம்மிருவராலும் காரியங்கள் செய்யப்படவேண்டும்; குழந்தைகளும் உற்பத்தி செய்விக்கப்படவேண்டும்" [ ] என்றும் "சித்திரா நக்ஷத்திரத்தோடு கூடிய சந்திரனைப்போலே சீதா பிராட்டியோடு கூடிய ராமபிரானை" [ரா-அ 16-8] என்றும் உலகிற்கு மங்களமுண்டாகையாலும், இம்மிதுனத்தைச் சேர்க்க வேணும்—என்கிற நினைவாலும் "நல்லோர்களைக் காப்பதற்காகவும், தீயவர்களைத் துடைப்பதற்காகவும், அறத்தை நிலைநிறுத்துவதற்காகவும் யுகந்தோறும் பிறக்கிறேன்" [கீதை 4-8] என்றும், "பிறப்பற்றவனயினும், என் ஸங்கல்பத்தால் பிறக்கிறேன்" [கீதை 4-6] என்றும், "யஜ்ஞத்திற்கு இடையூறு செய்பவனையும் பாண்டவர்களின் எதிரியாயிருப்பவனையும் கொல்வேன்" [பாரதம்] என்றும் சொன்ன எம்பெருமானுடைய அவதார ரஹஸ்ய ஸங்கல்பத்தைப் பின்பற்றினவராகையாலும், விச்வாமித்ர மஹரிஷி தசரதனென்கிற ரத்நாகரத்தை –(ரத்தினங்கள் நிறைந்த கடலை)– அணுகி, ராமனென்கிற ரத்தினத்தைக் கேட்க, அவனும் வாத்ஸல்யத்தாலே 'மதியெல்லாமுள்கலங்கி' [திருவாய 1-4-5] ராமனுடைய பெருமையை அறியாமல், "என குமாரனுக்குப் பதினாறு வயது இன்னம் நிரம்பவில்லை"[ரா-பா 20-2] என்று, "பதினாறு வயதுவரையில் பாலனென்றும், பௌகண்ட

ஶாத்₃வர்ஷாத் பௌக₃ண்டச்சேதி கீர்த்யதே) என்கிறபடியே அப்ராப்த வ்யவஹாரராகையாலே தனித்து ஒரு கார்யத்துக்கு ஆளல்லர்; "चतुरङ्गबलैर्युक्तं मया च सहितं नय" (சதுரங்க₃ப₃லைர் யுக்தம மயா ச ஸஹிதம நய) எனகிறபடியே முதுகண்ணாக என்னையும் கூட்டிக்கொண்டுபோ -என்ன. விச்வாமித்ரனும்,-இவர் பருவத்தின சிறுமைகண்டோ நீ வார்த்தை சொல்லுகிறது? "சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" என்று ஸாக்ஷிபூர்வகதுப போய்க்கேட்க முறிந்தாயாகில், "वसिष्ठोऽपि महातेजा ये चेमे तपसि स्थिताः" (வஸிஷ்டோ₂பி மஹாதேஜா யே சேமே தபஸி ஸ்தி₂தா:) என்று அறியுமவர்களாய். ஸந்நிஹிதருமாய்ப் பலருமான இவர்களைக் கேட்கமாட்டாயோ? - என்று ஈடேற்றி இசைவிக்க இவனுமிசைந்து, "ददौ कुशिकपुत्राय" (த₃தௌ₃ கு₃ஶிகபுத்ராய) என்று இவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாகப் பிள்ளைகளிருவரை

---

னென்றும் சொல்லப்படுகிறான்" [ ] என்கிறபடியே வ்யவஹாரத்துககு யோக்யதையற்றவராகையாலே தனியாக ஒரு காரியம் செய்ய சக்தியற்றவனென்றும், "சதுரங்கஸேனையோடு கூட, எனனுடன் கூடிய ராமனை அழைத்துச்செல்" [ரா-பா 20-10] என்கிறபடியே, காப்பாளனாக எனனையும அழைந்துச்செல்லென்றும சொல்ல, விச்வாமித்ரமஹரிஷியும் – ராமனுடைய பருவத்தில் சிறுமை கண்டோ நீ பேசுவது? "சிறுமையின வார்த்தையை மாவலியிடைச் சென்றுகேள்" [பெரியாழ்திரு 1-4-8] என்று ஸாக்ஷி வேண்டுமென்று போய்க்கேட்க நினைத்தாயாகில, "மஹாதேஜஸ்வியான வஸிஷ்டரும தவததில் நிலைநின்ற இம்முனிவர்களும் (ராமனுடைய பெருமையை) அறிவர்" [ரா-பா 19-15] என்று அறிவாளிகளாய், அருகிலிருப்பவர்களாய்ப் பலருமான இவர்களைக் கேட்கமாட்டாயோவென்று பலசொல்லி இசையச்செய்ய, இவனுமிசைந்து

"ஸ புத்ரம் மூர்த₄ந்யுபாக்₄ராய ராஜா த₃ஶரத₂: ப்ரியம் |
த₃தௌ₃ கு₃ஶிகபுத்ராய ஸுப்ரீதேநாந்தராத்மநா ||"
[ரா-பா 22-3]

[அந்த தசரதமகாராஜன் தனக்கினியனை புததிரனை உச்சிமோந்து, மனங்குளிர்ந்து விச்வாமித்திரனுக்குக் கொடுத்தான்.] என்கிறபடியே விச்வாமித்திரனுக்கு இஷ்டபபடி நடத்திக்கொள்ளும்படியாகப்

யும் கொடுக்க, அவனும் ராமலக்ஷ்மணர்களைக்கொண்டு போய்க் காமஜ்ஞாநங்களாலே அவித்யையை நிரஸிக்குமாப் போலே, அவர்களை இடுவித்துத் தாடகையை நிரஸிப்பித்து,- அநந்தரம் அவித்யாஸம்ஸிகமாய், புண்யபாபரூபமான உபய விதகர்மங்களையும்போலே தாடகாஜநிதர்களான ஸுபாஹு மாரீசர்களையுமழித்து, அதுதன்னில் **"उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ"** (உத்தராபூர்வாக$_4$யோரச்லேஷ விநாசௌ) என்னுமாப்போலே ஒருத்தனைக் கொன்று ஒருத்தனை அகலவடித்து, விச்வாமித்ராத்$_4$வரத்ராணம்பண்ணி, **"श्रियमिच्छेद्धुताशनात्"** (ச்ரியமிச்சே$_2$த் ஹுதாசநாத்) என்றும், **"जातवेदो म आवह लक्ष्मीं"** (ஜாதவேதோ$_3$ மமாவஹ லக்ஷ்மீம்) என்றும் லக்ஷ்மியைப் பெறும் போது அக்நிபுரஸ்ஸரமாகப் பெறவேண்டுகையாலே, **"विश्वामित्रेण सहितो यज्ञं द्रष्टुं समागतः"** (விச்வாமித்ரேண ஸஹிதோ யஜ்ஞம் த$_3$ரஷ்டும் ஸமாக$_3$த:) என்று ஜநகனுடைய யஜ்ஞஸமயத்திலே சென்று அக்நித்ரயங்களையுபாஸித்து, "வில்லிறுத்து

---

பிள்ளைகள் இருவரையும் கொடுக்க, அவனும் ராமலக்ஷ்மணர்களை அழைத்துப்போய், காமஜ்ஞாநங்களாலே அஜ்ஞானத்தைப் போக்குவதுபோலே அவர்களைக்கொண்டு தாடகையை அழிக்கச்செய்து, அஜ்ஞானத்தை அழித்தபின் அஜ்ஞானத்தாலுண்டான புண்யபாபரூபமான இரண்டுவிதமான கர்மங்களையுமழிப்பதுபோலே தாடகையிடமிருந்து தோன்றிய ஸுபாஹுமாரீசர்களையுமழித்து, அதுதன்னிலும் "ப்ரஹ்மவித்யையை அடைந்தபின் பின்செய்த பாபங்கள் ஓட்டாமலும, முன்செய்த பாபங்கள் அழிந்தும் போகின்றன" [ப்ர-ஸூ 4-1-13] என்பதுபோலே ஸுபாஹுவைக் கொன்று, மாரீசனை அகற்றி விச்வாமித்ரயாகரக்ஷணம் செய்து, "ஸ்ரீதேவியை -(செலவத்தை)- அக்னியிடமிருந்து விரும்பவேண்டும்" [ப்ரஹ்மாண்டபு] என்றும், "*அக்னியே! எனக்கு லக்ஷ்மியை அளிப்பாயாக" [ஸ்ரீஸூக்தம்-1] எனறும் லக்ஷ்மீதேவியைப் பெறும்போது அக்நியை முன்னிட்டுப் பெறவேண்டுகையாலே, "விச்வாமித்திர மஹர்ஷியுடன் கூட யஜ்ஞத்தைக் காணவந்தான் ராமபிரான" [ரா-அ 118-44] என்று ஜனகமகாராஜனுடைய யாகசமயத்திலே சென்று கார்ஹபத்ய ஆஹவனீய தக்ஷிணாக்னிகளான மூன்று அக்நி

---

*அக்னியே!-அக்னிக்குஅந்தர்யாமியானபரமபுருஷனேஎன்றுபாவம்.

மெல்லியல் தோள்தோய்ந்தாய்'' என்று சொலலுகிறபடியே ரௌத்$_3$ரமான வில்லையழைப்பித்து தேவதாந்தரஸ்பர்ஶத் தாலே வந்த அதினுடைய தோஷம் போம்படி திருக்கையிலே வாங்கி குணாரோபணம்பண்ணி, ப$_4$ங்க$_3$ஶுல்கையான பிராட்டியையும் கைப்பிடித்து மீண்டுவருகிறவளவிலே, 'ராமத்வமீரரசு பட்டதோ?' என்று அதிகுபிதனாய் வந்த பரசுராமனைக்கண்டு புத்ரவத்ஸலனான சக்ரவர்த்தி சகிதனாய், **"अभयं सर्वभूतेभ्यो ददामि"** (அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$தா$_3$மி) என்னக்கடவ பெருமாள் தமக்கு அதிஶங்கைபண்ணி. **"बालानां मम पुत्राणामभयं दातुमर्हसि"** (பா$_3$லாநாம் மம புத்ராணமப$_4$யம் தா$_3$து மர்ஹஸி) என்று-பேர்வாசிக்குப் பிணங்கிவந்தவனாகையாலே பெருமாள் திருநாமம் சொல்ல அஞ்சி ஸாதாரணமாக என் பிள்ளைகளுக்கு அப$_4$யப்ரதா$_3$நம் பண்ணவேணும் என்று

---

களையும் உபாஸித்து, ''வில்லிறுத்து மெல்லியல தோள்தோய்ந்தாய'' [திருநெடு-13] எனறு சொல்லுகிறபடியே ருத்ரனுடைய வில்லை வர வழைத்து, தாமஸதேவதையாகிய ருத்ரனுடைய ஸ்பர்சத்தாலே அதற்கேற்பட்ட தோஷம போம்படி திருக்கையிலே வாங்கி குணத்தை –(நாணை)– ஏற்றி, தநுர்ப்பங்கத்தை சுல்கமாகவுடைய பிராட்டியையும கைப்பிடித்து மீண்டுவருகிறபோது

**''அங்யதா$_2$ ஜக$_3$தி ராம இத்யயம் ஶப்$_3$த$_3$ உச்சரித ஏவ மாமகா$_3$த்।**
**வ்ரீட$_3$மாவஹதி மே ஸ ஸம்ப்ரதி வ்யஸ்தவ்ருததிருத$_3$யோந்**
**முகே$_2$த்வயி ॥''**

[ரகுவமசம் 11-73]

[ஒருகாலத்தில் ராமனென்னும் இப்பெயர் உச்சரிக்கபபட்டவுடன் என்னையே குறித்து வந்தது. நீ கிளமபின இப்போது இருவரைக் குறிப்பதானபடியாலே அப்பெயர் எனக்கு வெட்கத்தை விளைக் கின்றது.] என்கிறபடியே ராமத்வம் ஈரரசுபட்டதோ என்று மிகக் கோபங்கொண்டு வந்த பரசுராமனைக்கண்டு தசரதசக்ரவர்த்தி நடுங்கி, ''எல்லா பூதங்களிடமிருந்தும் அபயமளிக்கின்றேன'' [ரா-யு 18-34] என்று சொல்லத்தகுந்த ராமனுக்கு என்வருகிறதோ என்று பயந்து, ''குழந்தைகளான என் பிள்ளைகளுக்கு அபயமளிக்க வேண்டும்'' [ரா-பா 75-6] என்று ராமன் என்னும் பெயரைக் கேட்டுக் கோபித்து வந்தவனாகையாலே ராமனுடைய திருநாமத்தைச்

இரக்க. இவ்வார்த்தையைக் கேட்டு ப்ரவர்க்₃யம்போலே கிளர்ந்தெரிகிற இவனைக்கண்டு தணியவிடுவோமென்று பார்த்து, வஸிஷ்ட்டாதிரிஷிகளும் **"तं दृष्ट्वा भीमसङ्काशं ज्वलन्तमिव पावकम्। ऋषयो राम रामेति वचो मधुरमब्रुवन्"** (தம் த்₃ருஷ்ட்வா பீ₄மஸங்காஶம ஜ்வலந்தமிவ பாவகம் | ருஷயோ ராம ராமேதி வசோ மது₄ரமப்₃ருவந் ||) என்கிறபடியே உன்னையொழிய ராமாந்தரமுண்டோ என்று பெருமாளுடைய ராமத்வத்தை யும் அவன் தலையிலே இரட்டிக்கமாட்டெடறிந்து, நெருப்பிலே நீரைச்சொரிவாரைப்போலே குளிர வார்த்தை சொன்ன விடத்திலும், அவன் ஜாமதக்நியாகையாலே ஆருமையாலே, பெருமாளும் இவன் கையிலே இந்தக் காஷ்ட்டமிருக்கை யாலேயிறே இவன் எரிகிறது என்று பார்த்து, மேலெழுந்த க்ஷத்ரதேஜஸ்ஸோடே அத்தை வாங்கி, ஸஹஜமான *ப்ராஹ்

---

சொல்ல பயப்பட்டுப் பொதுவாக 'என் பிள்ளைகளுக்கு அபயமளிக்க வேண்டும்' என்று யாசிக்க, இவ்வார்த்தையைக் கேட்டு ப்ரவர்கய யாகத்தில் அக்னிபோலே கொழுந்துவிட்டு எரிகிற இப்பரசுராமனைக் கண்டு தணியச்செய்வோமென்று நினைத்து வஸிஷ்டர் முதலான ரிஷிகளும, "எரிகின்ற நெருப்பைப்போன்றவனும், பயங்கரமான வனுமான அப்பரசுராமனைப் பார்த்து, ரிஷிகள 'ராம ராம' என்னும் இனிய வார்த்தையைச் சொன்னார்கள்" [ரா-பா 74-21 & 24] என் கிறபடியே 'ராம ராம' என்று இரண்டுதடவை சொல்லுவதனமூலம தசரதராமனுடைய ராமத்வத்தையும் பரசுராமன் தலையிலே ஏறிட்டு 'உன்னைத்தவிர வேறு ராமனுண்டோ' என்று சொல்லி நெருப்பிலே நீரையிட்டு அணைக்க நினைப்பாரைப்போலே குளிர்ந்த வார்த்தைகள் சொன்னபோதும், அவன் ஜாமதக்னி -(1. ஜமதக்னிபுத்ரன் 2. ஆருத நெருப்பு)- ஆகையாலே தணியாதிருக்கையாலே, ராமபிரானும், 'இவன் கையிலே இக்கட்டை -(1. விற்குச்சி; 2. விறகு)- இருப் பதினாலேயன்றோ இவன் எரிகிறான்' என்று நினைத்து, மேலெழுந்த -(1 உயரக்கிளம்பின; 2. வந்தேறியான)- க்ஷத்ரியத்வமாகிற அக்நி யோடுகூட அக்கட்டையை எடுத்து, கூடப்பிறந்த * ப்ராஹ்மண்யமே

---

* தேவதைகளுள் அக்னிக்கு ப்ராஹ்மண்யமுண்டென்பது குறிக் கொள்ளத்தக்கது.

மண்யமே சேஷிக்கும்படி பண்ணி, **"अक्षयं मधुहन्तारं जानामि त्वां सुरोत्तमं। धनुषोऽस्य परामर्शात् स्वस्ति तेऽस्तु परन्तप॥"** (அக்ஷயம் மது$_4$ஹந்தாரம் ஜாநாமி த்வாம ஸுரோத்தமம் । த$_4$நுஷோऽஸ்ய பராமர்ஶாத் ஸ்வஸ்தி தேऽஸ்து பரந்தப||) என்று அவனும் தன் ஸ்வாப$_4$ாவிகமானப்ராஹ்மண்யத்துக்கீடாக ஸ்வஸ்திசொல்ல, தன்னுடைய வைஷ்ணவமான வில்லை வாங்குகையாலே பெருமாளுடைய வைபவம் ஸர்வலோகஸித்தமாம்படி மழு வேந்திப்போக, பெருமாளும், **"ब्राह्मणोसीति पूज्यो मे"** (ப்$_3$ராஹ்மணோஸீதி பூஜ்யோ மே) என்று இவன் ஸ்வஸ்தி சொல்லுகையால் ப்ராஹ்மணன் என்று அறுதியிட்டு அறுகும் தாளியும் பறித்து இவன் காலிலே பொகட்டுக் கும்பிட்டு, மாரில் நூலே கடகாகவிட்டு ரக்ஷித்து, மீண்டு திருவயோத்யையிலே புக்கு, இச்சரக்குப் பெறுகைக்குப்பட்ட வருத்தமறியுமவ ராகையாலே இவள் சீர்மையை அறிந்து, **"रामस्तु सीतया सार्धं विजहार बहून् ऋतून्"** (ராமஸ்து ஸீதயா ஸார்த்த$_4$ம் விஜஹார

---

மிதமாம்படி செய்து, "எதிரிகளைத் தவிக்கச்செய்பவனே! விஷ்ணுவினுடைய இவ்வில்லை வளைத்ததால் உன்னை அழிவற்றவனும், மதுவென்னும் அஸுரனை அழித்தவனும், அமரர் தலைவனுமான விஷ்ணுவென்றே அறிகிறேன. உனக்கு மங்களமுண்டாகுக" [ரா·பா 76-17] என்று அவனும் தனக்கு இயற்கையான ப்ராஹ்மணயத்துக்குப பொருந்தும்படி மங்களாசாஸனம் செய்ய, தனனுடைய விஷ்ணு தநுஸ்ஸை வாங்கி வளைக்கையாலே ராமனுடைய பெருமை எல்லாவுலகுமறியும்படி மழுவேந்தி –(1. தன் ஆயுதமான மழுவை ஏந்தி. 2. ஆணையிட்டு)– போக, ராமனும், "ப்ராஹ்மணராயிருக்கையால் நீர் என்னால் பூஜிக்கத்தக்கவராகிறீர்" [ரா·பா 76-6] என்று பரசுராமன் மங்களாசாஸனம் செய்கையாலே ப்ராஹமணன் என்று நிச்சயித்து அறுகமபுல்லாகிற தர்ப்பத்தையும், தாளியென்னும் கொடியையும் பறித்து அவன அடியிலே ஸமர்ப்பித்து வணங்கி, மார்விலணிந்திருக்கும் பூணூலே காரணமாகப்போகவிட்டு ரக்ஷித்து, மறுபடியும் திருவயோத்யையில் புகுந்து, ஸ்ரீதேவியாகிய இவளைப் பெறுவதற்குப்பட்ட வருத்தமறியுமவராகையாலே, இவளுடைய பெருமையறிந்து, "ராமபிரான் சீதாபிராட்டியோடு கூட பலகாலம் ரமித்தார்" [ரா·பா 77-26] என்கிறபடியே பரமபுருஷனின் அவதார

ப₃ஹூ‌ஃங் ருதூந்) என்கிறபடியே பெருமாளும் பிராட்டியும் இனிதமர்ந்து எழுந்தருளியிருக்கக்கண்ட ஸ்ரீபூமிப்பிராட்டி யானவள், **"लोकपालोपमं नाथमकामयत मेदिनी"** (லோகபாலோபமம நாத₂மகாமயத மேதி₃நீ) என்று தானும் நாச்சியாரோபாதி அம்சப₄ாகி₃நியாகையாலும், **"यदा तु भार्गवो रामस्तदासीद्धरणी त्वियं"** (யத₃ா து ப₄ார்க்க₃வோ ராமஸ் தத₃ாஸீத் த₄ரணீ த்வியம்)என்று தனக்கு வகுத்த பாசுராமாவதாரத்தினுடைய தேஜஸ்ஸும் இங்கே ஸங்க்ரமிக்கையாலும் தன் கூற்றுக்கொக்கப் பெருமாளை ஸ்வயம்வரமாக வரிக்க, ராஜாவும்– "இது காந்தர்வ மான விவாஹமாகவொண்ணாது. ஸமந்த்ரகமாகக்கரக்ரஹணம் பண்ணிவைக்கவேணும்" என்று பார்த்து, பௌரஜாநபத மந்த்ரிபுரோஹிதாதிகளைத் திரட்டி மந்த்ரித்து, **"मन्त्रयित्वा ततश्चक्रे निश्चयज्ञः सुनिश्चयं। श्व एव पुष्यो भविता श्वोभिषिञ्चामि मे सुतम्॥ रामं राजीवताम्राक्षं यौवराज्य इति प्रभुः॥"** (மந்த்ரயித்வா ததச்சக்ரே நிச்சயஜ்ஞ: ஸுநிச்சயம் । ச்வ ஏவ புஷ்யோ

---

மான ராமபிரானும் ஸ்ரீதேவியின் அவதாரமான சீதா பிராட்டியும் இனிதமர்ந்து எழுந்தருளியிருக்கக்கண்ட ஸ்ரீபூமிப்பிராட்டியானவள் "லோகேச்வரனை விஷ்ணுவையே ஒத்தவனை ராமபிரானை பூமிப் பிராட்டியானவள் காமுற்றாள்" [ரா-அ 1-34; 2-48] என்கிறபடியே- தானும் பெரியபிராட்டியாரைப்போலே பரமபுருஷனை அநுபவிப்ப தில் அம்சம்பெற்றவளாகையாலும், "பரமபுருஷன் பரசுராமனாக அவதரித்தபோது இப்பிராட்டியானவள் பூமிப்பிராட்டியானாள்" [வி-பு 1-9-143] என்று தனக்கு ஏற்பட்ட பரசுராமாவதாரத்தி னுடைய வைஷ்ணவ தேஜஸ்ஸும் பரசுராமபங்கத்திற்குப் பிறகு ராமனிடத்தில் கலந்துவிட்டதாகையாலும் தன் பாகத்திற்குப் பொருந்த ராமனை ஸ்வயம்வரமாக வரிக்க, தசரதமஹாராஜாவும், "இது ஒருவருமறியாமல் மந்த்ரமில்லாமல செய்யும் காந்தர்வ விவாஹமாகக்கூடாது; அனைவருமறியுமபடியாக மந்த்ரத்தோடு கூடப்பாணிக்ரஹணம் செய்விக்கும் ப்ராஹ்மவிவாஹமாகவேணும்" என்று எண்ணி, நகரத்தார், நாட்டார், அமைச்சர், ஆசாரியர்கள என்னும் அனைவரையும் கூட்டி ஆலோசனைசெய்து "நிச்சயப்ர காரத்தை அறிந்தவனை தசரதசக்ரவர்த்தி மந்திராலோசனை செய்த பிறகு, "நாளைக்கே புஷ்ய நக்ஷத்திரமுள்ளது; தாமரைபோல் சிவந்த கண்களை உடையவனும் என மூத்த பிள்ளையுமான ராமனை நாளையே

பு₄விதா ச்வோऽபி₄ஷிஞ்சாமி மே ஸுதம்|| ராமம் ராஜீவதாம் ராக்ஷம் யௌவராஜ்ய இதி ப்ரபு₄) என்கிறபடி *ஸம்பந்த நக்ஷத்ரமான பூசத்திலே பெருமாளை அபிஷேகம்பண்ணக் கடவதென்று நிச்சயித்து, அதுக்கு வேண்டும் ஸமவித₄ாநங் களைப்பண்ண, "सोऽहं विश्रममिच्छामि" (ஸோऽஹம் விச்ரமமிச்சாமி) என்றும், "यौवराज्येन संयोक्तुमैच्छत्" (யௌவராஜ்யேந ஸமயோக்துமைச்சத்) என்றும் நாட்டாரோடு ராஜாவோடு பண்ணின ஆசைப்பாடுகள் தாங்கள் பண்ணினதாகையாலே அஸத்யஸங்கல்பமாய் "आवासं त्वहमिच्छामि प्रदिष्टमिह कानने" (ஆவாஸம் த்வஹமிச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே) என்றும், "तपस्विनां रणे शत्रून् हन्तुमिच्छामि राक्षसान्" (தபஸ்விநாம் ரணே ஶத்ரூந் ஹந்துமிச்சாமி ராக்ஷஸாந்) என்றும் ஸத்யஸங்கல்ப ரானவர் தம்முடைய ஸங்கல்பமே ஸங்கல்பமாம்படி கைகேயி மந்தராத்யந்தர்யாமியாய் நின்று கலக்கி, காட்டிலே எழுந் தருளி தண்டகாரண்யவாஸிகளான பரமரிஷிகளைக் காணும்

---

யுவராஜாவாக அபிஷேகம் செயவிப்பேன்" – என்னும் அழகிய நிச்சயத்தைச்செய்தான்" [ரா-அ4-3] என்கிறபடியே *ஸம்பந்நமான(ஸர்வ குணங்களும கூடிய) நக்ஷத்ரமான பூசநக்ஷத்திரத்தில் ராமனை அபிஷேகம் செய்விக்கவேண்டும் என்று நிச்சயித்து, அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்ய, "நான் அரசபதவியிலிருந்து விலக விரும்புகிறேன்" [ரா-அ 2-10] என்றும், "தசரதன் ராமனை யுவராஜாவாக்க விரும்பினன்" [ராபா 1-21] என்றும் ஜனங்களும் அரசனும் செய்த மநோரதங்கள், கர்மவசபபட்டவர்களான அவர்கள் செய்த தாகையாலே "எண்ணினவாருக இக்கருமங்கள் [திருவாய் 10-6-3] என்கிறபடியே முடிவுருதஎண்ணங்களாய், "(முனிவரே!)இக்காட்டில உம்மால் காட்டப்பட்டதோர் இடத்தில் நான் வாழ விரும்புகிறேன்" [ரா-ஆ 5-34; 7-14] என்றும், "தபஸ்விகளுடைய சத்துருக்களான ராக்ஷஸர்களைச் சண்டையில கொல்ல விரும்புகிறேன்" [ரா-ஆ 6-25] என்றும் வீணுகாத ஸங்கல்பத்தைச் செய்துவைத்த பரமபுருஷன் தம்முடைய ஸங்கல்பமே ஸங்கலபமாம்படி கைகேயி மந்தரை முதலானருக்கு அந்தர்யாமியாய் நினறு கலக்கி, காட்டுக்கு எழுந்

---

* புனர்பூசத்திலவதரித்த பெருமாளுக்குப் பூசம் ஸம்பத்தாரையாகையாலே ஸமபநந நக்ஷத்ரமென்றார்.

போது. "**रिक्तहस्तेन नोपेयात्**" (ரிக்தஹஸ்தேந நோபேயாத்) என்கிறபடியே வெறுங்கைக்கொண்டு காணலாகாதென்று பார்த்து விராதவதபுரஸ்ஸரமாகச் சென்று காண, அவர்களும் மஹாராஜரைப்போலே பெருமாளுடைய வீர்யத்திலே அதிஶங்கைபண்ணிப் பரீக்ஷித்துத் தெளியவேண்டாதபடி விராத$_4$வத$_4$த்திலே த்$_3$ருஷ்டேடாத$_3$ஹரணராகையாலே விநீதராய் வந்து. "**परिपालय नो राम वध्यमानान् निशाचरैः**" (பரிபாலய நோ ராம வத$_4$யமாநாந் நிஶாசரை:) என்று எங்களை ரக்ஷிக்க வேணுமென்று ஶரணம்புக, "**भवतामर्थसिद्ध्यर्थमागतोऽहं यदृच्छया**" (ப$_4$வதாமாத்த$_2$ஸித்$_3$த்$_4$யர்த்த$_2$மாக$_3$தோऽஹம் யத்$_3$ருச்ச$_2$யா) என்று ஓம் கொடுத்து. "**जगाम चाश्रमांस्तेषां पर्यायेण तपस्विनां**" (ஜக$_3$ாமசாச்ரமாம்ஸ்தேஷாம் பர்யாயேண தபஸ்விநாம) என்கிறபடியே ஶரப$_4$ங்க$_3$ ஸுதீக்ஷ்ணாக$_3$ஸ்த்ய தத்$_3$ப்$_4$ராத்ருப்ரமுக$_2$ரான ரிஷிகள் ஆச்ரமத்திலே பர்யாயேண எழுந்தருளியிருக்கிற பெருமாள் அகஸ்த்யோபதேசத்தாலே கோதாவரீ தீரமான பஞ்சவடீபரிஸரததிலே பர்ணசாலையும் சமைத்து.

---

தருளி, தண்டகாரண்யத்தில வஸிக்கும் பரமரிஷிகளைக் காணும் போது, "ராஜாவையும், தேவதையையும், பெரியோரையும் காணச் செல்லும்போது வெறுங்கையோடு போகக்கூடாது" [ப்ரஹ்மாண்ட உத்தர 43-67] என்கிறபடியே வெறுங்கையோடு காணலாகாது என்று எண்ணி விராதவதமாகிற பரிசை முன்னிட்டுக்கொண்டு முனிவர்களைச் சென்று காண, அவர்களும் ஸுக்ரீவனைப்போலே ராமனுடைய வீர்யத்தில் ஸந்தேஹித்துப் பிறகு பரீக்ஷித்துத தெளிய வேண்டாதபடி விராதவத$_4$த்திலே ராமனுடைய வலிமைகண்டவராகையாலே அடக்கத்துடன் வந்து, "ராம! அரக்கர்களாலே அழிக்கப்படும் எங்களைக் காத்தருளவேண்டும்" [ரா-ஆ, 6-19] எனறு சொல்லிச் சரணம் புக, "உங்களுடைய காரியம் கைகூடுவதற்காக நான் யாத்ருச்சிகமாக இங்கு வந்துசேர்ந்திருககிறேன்" [ரா-ஆ 7-24] என்று அங்கீகரித்து "முனிவர்களின் ஆச்ரமஙகளுக்கு மறுபடியும் மறுபடியும் சென்றன ராமபிரான்" [ரா-ஆ 11-24] என்கிறபடியே சரபங்கர், ஸுதீக்ஷ்ணா. அகஸ்த்யர், அவர் தம்பி முதலான ரிஷிகளுடைய ஆச்ரமத்திலே மாறிமாறி எழுந்தருளியிருக்கிற ராமபிரான் அகஸ்தியருடைய உபதேசப்படி கோதாவரிக்கரையிலே பஞ்சவடிக்

**"स रामः पर्णशालायामासीनः सह सीतया। विरराज महाबाहुश्चित्रया चन्द्रमा इव॥"** (ஸ ராம: பர்ணஶாலாயாமாஸீநஸ் ஸஹ ஸீதயா। **விரராஜ மஹாபாஹுச்சித்ரயா சந்த்ரமா இவ॥ லக்ஷ்மணேந ஸஹ ப்ராதரா**) என்று நாச்சியாரோடும் இளையபெருமாளோடும் கூட இனிதமர்ந்து எழுந்தருளியிருக்கிறவளவிலே **"तं देशं राक्षसी काचिदाजगाम यदृच्छया। सा तु शूर्पणखा नाम"** (தம தேஶம் ராக்ஷஸீ காசிதாஜகாம யத்ருச்சயா। ஸா து ஶூர்ப்பணகா நாம) என்று சூர்ப்பணகையாயிருக்கிற ராக்ஷஸியானவள் யாத்ருச்சிகஸுக்ருதமடியாக வந்து கிட்டி, ப்ராப்தவிஷயமாயிருக்கச்செய்தேயும் கடகனான ஓராசார்யனடியாக விசேஷஜ்ஞாநம் பிறவாமையாலே, புருஷகாரம் முன்னாகப் பற்றாத அளவன்றிக்கே அவ்விஷயத்திலே அஸஹ்யாபசாரத்தைப்பண்ணி **"न क्षमामि"** (ந க்ஷமாமி)க்கு இலக்காக, **"इत्युक्तो लक्ष्मणस्तस्याः क्रुद्धो रामस्य पश्यतः। उद्धृत्य खड्गं चिच्छेद कर्णनासं महाबलः"** (இத்யுக்தோ லக்ஷ்மணஸ்தஸ்யா: க்ருத்தோ ராமஸ்ய பச்யத:। உத்த்ருத்ய கட்கம் சிச்சேத கர்ண

கருகிலே பர்ணசாலையையும் ஏற்படுத்திக்கொண்டு "தடந்தோளரான அவ்விராமபிரான் சீதாபிராட்டியோடும் தம்பி லக்ஷ்மணனோடும் பர்ணசாலையில் எழுந்தருளியிருந்துகொண்டு சித்திரா நக்ஷத்திரத்தோடுகூடிய சந்திரன்போலே மிகவிளங்கினார்" [ரா-ஆ 17-4] என்று பிராட்டியோடும் லக்ஷ்மணனோடும் கூட இனிதமர்ந்து எழுந்தருளியிருக்கிறபோது, "அவ்விடத்துக்கு யாத்ருச்சிகமாக ஒரு ராக்ஷஸி வந்தாள்; அவள் பெயர் சூர்ப்பணகை" [ரா-ஆ 17-5] என்று முறம்போன்ற நகத்தையுடையவளான சூர்ப்பணகையெனனும் ராக்ஷஸியானவள் யாத்ருச்சிகமாக ஏற்பட்டதோர் புண்ணியம் காரணமாக ராமனை வந்து அணுகி, வகுத்த விஷயத்தை அடைந்திருந்தபோதிலும சேர்ப்பிப்பவனான ஓராசாரியன் மூலமாக நல்லறிவு பிறவாமையாலே, புருஷகாரபூதையான பிராட்டியை முன்னிட்டுப் பற்றாததோடன்றியில், பிராட்டிவிஷயத்தில் பொறுக்கவொண்ணாத அபசாரத்தைப்பண்ணி, "நூறு பத்மகோடிகாலமானாலும் பாகவதாபசாரத்தை நான் பொறுக்கமாட்டேன்" [வராஹபுராணம்] என்னும் பகவத்வசனத்துக்கு இலக்காக "ராமனால் இப்படி உரைக்கப்பட்ட மஹாபலவானான லக்ஷ்மணன், ராமன பார்த்துக்கொண்டிருக்கும்

ஙாஸம் மஹாப₃ல: ||) என்றும், "கூரார்ந்தவாளால் கொடி மூக்கும் காதிரண்டுமீராவிடுத்து" என்றும், "காதோடு கொடி மூக்கன்றுடனறுத்தகைத்தலத்தா" என்றும் சொல்லுகிற படியே த₃க்ஷிணபாஹுவான இளையபெருமாளாலே தாம் கை தொட்டராய் வைரூப்யத்தை விளைப்பிக்க, "**विरूपणश्चात्मनि शोणि-तोक्षिता शशंस सर्वं भगिनी खरस्य सा**" (விரூபணஞ்சாத்மநி ஶோணி தோக்ஷிதா ஶஶம்ஸ ஸர்வம் ப₄கி₃நீ க₂ரஸ்ய ஸா ||) என்று வார்ந்த மூக்கும் வடிகிற உதிரமுமாய்த் தன் ப்ராதாவான கரனுக்கு அறிவிக்க, அவனும் குபிதனாய், "**व्यक्तमाख्याहि केन त्वमेवंरूपा विरूपिता**" (வ்யக்தமாக்₂யாஹி கேந த்வமேவம்ரூபா விரூபிதா) என்று உன்னையிப்படிச்செய்தவர்கள் யார், அவர்களைத் தெளியச்சொல் என்று கேட்க, அவர்களை இன்னா ரென்று அடையாளம் தெரியச்சொல்லுகிறாள் "தருணௌ" என்று தொடங்கி.

"**पुत्रौ दशरथस्यास्तां भ्रातरौ रामलक्ष्मणौ**" (புத்ரௌ த₃ஶரத₂ ஸ்யாஸ்தாம் ப்₄ராதரௌ ராமலக்ஷ்மணௌ) என்று, இன்னார் மகனென்றும், இன்ன பேரையுடையவனென்றும் சொல்ல

---

போதே கத்தியை உருவி அவளுடைய காதையும் மூக்கையும் அறுத்தான்" [ரா-ஆ 18-21] என்றும, "கூரார்ந்த வாளால் கொடிமூக்கும் காதிரண்டும் ஈராவிடுத்து" [சிறியதிருமடல்-59] என்றும், காதோடு கொடிமூக்கன்றுடனறுத்த கைத்தலத்தா" [பெரியதிரு 7-4-3] என்றும சொல்லுகிறபடியே, "ராமனுடைய வலதுகையாயிருப்பவன லக்ஷ்மணன்" [ரா-ஆ 34-13] என்று சொல்லப்பட்ட லக்ஷ்மணனாகிற தன்வலதுகையைக்கொண்டு தானே அங்கபங்கத்தை விளைப்பிக்க, "ரத்தத்தால நனைந்தவளாய், கரனுடைய ஸஹோதரியான அவள் தன்னுடைய அங்கபங்கம முதலிய அனைத்தையும் கரனிடம் சொன்னாள்" [ரா-ஆ 18-26] என்கிறபடியே அறுந்த மூக்கும் ஒழுகும் இரத்தமும் உடையவளாகித் தன் சகோதரனை கரனுக்குச் சொல்ல, அவனும் கோபங்கொண்டு, "எவனாலே நீ இப்படி அங்கபங்கம் செய்யப்பட்டாயென்பதைத் தெளிவாகச் சொல்லு" [ரா-ஆ 19-2] என்று கேட்க, தன்னை அங்கபங்கம் செய்தவர்களை அடையாளமறியும்படியாகச் சொல்லுகிறாள் "வாலிபர்கள்"[ரா-ஆ 19-14]என்று தொடங்கும் இந்த ச்லோகத்தாலே.

ப்ராப்தமாயிருக்க, "தருணௌ ரூபஸம்பந்நௌ" என்று பருவத்தையிட்டுச் சொல்லுவது, வடிவழகையிட்டுச் சொல்லுவதாவதென்னென்னில்: இவளுக்கு வைரூப்யம் பிறந்த தித்தனைபோக்கி வைராக்யம பிறந்ததில்லையிறே. ஆகையாலே, "**काममोहिता**' (காம மோஹிதா) என்கிற தன் அபிநிவேசம் வடிவிட்டு பராதாக்கள் முன்னென்று பாராதே, தன்னுடைய ஹ்ருதகதத்தைச் சொலலுகிருள். அநுகூலராகிலுமாம், ப்ரதிகூலராகிலுமாம் இவ்விஷயத்தில் அகப்பட்டவர்களுக்குப் பணியிறேயிது. "**यानि रामस्य चिह्नानि**" (யாநி ராமஸ்ய சிஹ்நாநி) என்று-அடையாளம் தெரியச் சொல்-என்று பிராட்டி திருவடியைக் கேட்க, "**त्रिस्थिरस्त्रिप्रलम्बश्च**" (த்ரிஸ் ஸ்திரஸ் த்ரிப்ரலமபச்ச) என்று சொல்லுவதற்கு முன்னே, "**रामः कमलपत्राक्षः सर्वसत्त्वमनोहरः**" (ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமனோஹர:) என்று சொன்னுனிறே. இவை

---

"தசரதனின் பிள்ளைகளான ராமலக்ஷ்மணர்கள் என்னும் ஸஹோதரர்கள் இருந்தனர்" [ரா-ஆ 19-15] என்று இனனுர் பிள்ளைகளென்றும் இன்ன பேரையுடையவர்களென்றும் சொல்லவேண்டியிருக்க, "உருவுடையார் இளையார்கள்" என்று பருவத்தையிட்டும், வடிவழகையிட்டும அடையாளம் சொல்லுவதற்குக் காரணமென்னவெனில்: இவளுகக்கு அங்கபங்கம் பிறந்ததேயொழிய ஆசாபங்கம பிறக்கவில்லையனறே; அதனுலே "காமத்தால் மயங்கிய சூர்ப்பணகை" [ரா.ஆ 17-9] எனகிற தன் ஆசை வடிவிலே தோற்றத் தமயன்மாரான கரதூஷணாதியா முன்னே பேசுகிறேம் என்று ஆலோசியாமல், தன்நெஞ்சிலுள்ளதைச் சொல்லுகிருள். விருப்புடையாராலுைம் வெறுப்புடையாராலுைம் இந்த பகவத்விஷயத்திலே அகப்பட்டவர்களுக்கு இது வன்றே காரியம், "ராமபிரானுடைய அடையாளங்களை விளங்கச்சொல்" [ரா-ஸு 35-3] என்று சீதாபிராட்டி ஹனுமானைக்கேட்க, "மூன்றவயவங்களை திருடமாக வுடையவர்; மூன்று அவயவங்கள் நீண்டு தொங்கப்பெற்றவர்" [ரா-ஸு 35-27] என்று அடையாளம சொல்லுவதற்குமுன் "ராமபிரான செந்தாமரையிதழ்போன்ற கண்களையுடையவர்; எல்லாப் பிராணிகளின் நெஞ்சையும் ஈடுபடுத்துபவர்" [ரா-ஸு 35-8] என்று சொன்னனன்றே ஹனுமான். ஒருவரைப்பற்றி வர்ணிக்கும்போது

தனக்கு ப்ரயோஜகரூபநாமங்கள் சொல்லவென்றுமுண்டிறே. அதிலே, "रूपाणि विचित्य धीरः नामानि कृत्वा" (ரூபாணி விசித்ய தீ$_4$ர: நாமாநி க்ருத்வா) என்கிற க்ரமத்திலே ப்ரதமபாவியான ரூபத்தை முற்படச்சொல்லுகிறாளாகவுமாம். அன்றியிலே, "सुप्तप्रमत्तकुपितानां भावज्ञानं दृष्टं" (ஸுப்த ப்ரமத்த குபிதாநாம பா$_4$வஜ்ஞாநம் த்$_3$ருஷ்டம்) என்று குபிதையாகையாலே ஹ்ருத்$_3$க$_3$தார்த்தத்தை அவசமாக வெளியிடுகிறாளாகவுமாம்.

இதிலே, "राममिन्दीवरश्यामं कन्दर्पसदृशप्रभं बभूवेन्द्रोपमं दृष्ट्वा राक्षसी काममोहिता॥" (ராமமிந்தீ$_3$வரச்யாமம கந்த$_3$ர்ப்பஸத்$_3$ருஶப்ரப$_4$ம் । ப$_3$பூ$_4$வேந்த்$_3$ரோபமம் த்$_3$ருஷ்ட்வா ராக்ஷஸீ காமமோஹிதா ॥) என்கிறபடியே தான் அவரைக்கண்டு காமுகையாவதற்கு அடியாயிருப்பதொரு ஆகர்ஷகமான ஆகாரமும், தன்பரிப$_4$வத்தாலுண்டான கோபாதிஶயத்தாலே "तयोस्तस्याश्च

---

வர்ணனவாரத்தைகளுக்கு ஹேதுக்களான வர்ணிக்கப்படுபவர்களின் ரூபத்தையும் நாமத்தையும சொல்லுவது என்னும் நியதியுண்டல்லவோ. அந்த ரூபநாமங்களுக்குள், "ஸர்வஜ்ஞனை பரமபுருஷன் எல்லா ரூபங்களையும செய்து, பின்பு நாமங்களையிட்டு அவற்றை உச்சரித்துகொண்டிருக்கிருன" [புருஷஸூக்தம்] என்கிறகிரமத்திலே முதலிலிருக்கும ரூபத்தை முதலில் சொல்லி, அடுத்தபடியான நாமத்தை "ராமலக்ஷ்மணௌ" என்று பிறகு சொல்லுவதாகவும் கொள்ளலாம். "உள்ளிருக்கும் எண்ணத்தைத் தூங்கும் போதும், பைத்தியம் பிடித்தபோதும், கோபங்கொண்டபோதும் காணலாம்' என்னும உலகவழக்கின்படியே, கோபங்கொண்டவளாகையாலே நெஞ்சிலுள்ள நினைவைத் தன்னையுமறியாமல வெளியிடுவதாகவும் கொள்ளலாம்.

இந்த ச்லோகத்திலே "காயாம்பூவண்ணனும் மன்மதனை ஒத்த காந்தியையுடையவனும், இந்திரனை நிகர்த்தவனை ராமபிரானைக் கண்ட ராக்ஷஸி காமத்தால் மயங்கினள்" [ரா-ஆ 17-9] என்கிறபடியே சூர்ப்பணகையான தான் ராமனைக்கண்டு மயங்குவதற்குக் காரணமான ஈடுபாடு சொல்லும் பொருளொன்றும், தன்னை அவமானப்படுத்தியதாலுண்டான கோபாவேசத்தாலே, "அந்த

**रुधिरं पिबेयमहं**" (தயோஸ் தஸ்யாச்ச ருதி₄ரம் பிபே₃யமஹம்) என்றும் சொல்லுகிறவளாகையாலே "**कोयमेवं महावीर्यः**" (கோயமேவம் மஹாவீர்ய:) என்று இவர்களை அளவிடமாட்டாதே அருகிருக்கிற ப்₄ராதாவான கரனுக்கு. "**फलमूलाशिनौ दान्तौ तापसौ धर्मचारिणौ**" (ப₂லமூலாஶிநௌ தா₃ந்தௌ தாபஸௌ த₄ர்மசாரிணௌ) என்று அவர்கள் எளிமை சொல்லுகிறதோர் ஆகாரமும், "**रामस्य च महत् कर्म महांस्त्रासोऽभवन्मम**" (ராமஸ்ய ச மஹத் கர்ம மஹாம்ஸ்த்ராஸோऽப₄வந்மம) என்று இவர்களுக்கு அஞ்சினவளாகையாலும், அவன் நெஞ்சிலே எரிச்சல் பிறக்கைக்காகவும். "**बुद्ध्याहमनुपश्यामि न त्वं रामस्य संप्रति। स्थातुं प्रतिमुखे शक्तः सचापस्य महारणे॥**" (பு₃த்₃த்₄யாஹமநுபச்யாமி ந த்வம ராமஸ்ய ஸம்ப்ரதி। ஸ்தா₂தும் பரதிமுகே₂ ஶக்தஸ் ஸசாபஸ்ய மஹாரணே॥) என்று கையும் வில்லுமாய் அவ்வாண்பிள்ளை புறப்பட்டால் நீயோ அவர்முன்னே நிற்கிறாய் என்று அவர்களுடைய ஆண்மை சொல்லுவதொரு ஆகாரமும். ஆக ஆகாரத்ரயமும் விவக்ஷிதம்.

---

ராமலக்ஷ்மணஸீதைகளுடைய ரத்தத்தை யுத்தத்தில் நான் குடிக்க விரும்புகிறேன்" [ரா-ஆ 19-20] என்னும் கடுஞ்சொல்லையும் சொல்லுகிறவளாகையாலே "பெருவீரனான எவன் உன்னை-இப்படி அங்கபங்கம் செய்தான்?" [ரா-ஆ 19-6] என்று ராமலக்ஷ்மணர்களுடைய வீரகுணமொன்றையும அளவிடமுடியாமல் அருகிலிருக்கிற ஸஹோதரனான கரனுக்கு, "ராமலக்ஷ்மணர்கள் கனிகளையும் வேர்களையும் உண்பவர்கள்; இந்திரியங்களை அடக்கினவர்கள்; தபஸ்விகள்; தர்மாநுஷ்டானசீலர்கள்" [ரா-ஆ 19-15] என்று அவர்களுடைய எளிமை சொல்லுகிறதொரு பொருளும், "ராமனுடைய பெருங்காரியத்தைக்கண்டு எனக்குப் பெரும்பயமேற்பட்டது" [ரா-ஆ 21-10] என்று இவர்களுக்கு பயப்படுமவளாகையாலும், கரன் நெஞ்சிலே எரிச்சல் உண்டாவதற்காகவும் "வில்லேந்தி வனத்தில்வாழும் ராமனுக்கு முன்னால், இப்போது நீயும்நின்று சண்டைசெய்ய வல்லையல்லை என்று நான் எண்ணுகிறேன்" [ரா-ஆ 21-16] என்று அவர்களுடைய ஆண்மை சொல்லுவதொரு பொருளும், ஆகமூன்று பொருள்களும் இங்கு வால்மீகிபகவான் திருவுள்ளமுகந்தவையாகும்.

**வ்யா:**—அதில் முற்பட ஆகர்ஷகாகாரத்தில் யோஜநை யிருக்கிறபடி. (தருணெள ரூபஸம்பந்நெள ஸுகுமாரௌ மஹாபலௌ। புண்டரீக விஶாலாக்ஷெள சீரக்ருஷ்ணாஜி நாம்பரௌ ||) அவர்களுடைய பருவமிருக்கிறபடியும், வடிவழகிருக்கிறபடியும், செயலிருக்கிறபடியும், மிடுக்கிருக்கிற படியும்; கண்ணழகிருக்கிறபடியும், ஒப்பனையழகிருக்கிற படியும் அவர்களிருவருக்கும் உண்டித்தனை போக்கி, வேறொருவர்க்கும் இல்லைகாண் என்கிருள். "என்னையிது விளைத்த ஈரிரண்டு மால்வரைத்தோள் மன்னன்" என்று என்னை யகப்பட இப்படியாக்கிற்று அந்த குணஸமுதாயமன்றோ. (தருணெள) **"युवाकुमारः"** (யுவாகுமார:) என்றும், **"यः पूर्व्याय वेधसे नवीयसे सुमज्जानये विष्णवे ददाशति यवीयसे"** (ய: பூர்வ்யாய **வேத₄ஸே நவீயஸே ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே த₃தா₃ஶதி யவீயஸே**) என்றும், "அரும்பினையலரை" என்றும் வேதாந்த ஸித்தமான அர்த்தத்தை இவளொரு ராக்ஷஸி கையாட்சியாகச் சொல்லுகிருளிறே. இதுதான் ராக்ஷஸிகளுக்குப்

---

அதில் முதலில், ஈடுபடுத்தும் தன்மையைச் சொல்லும் பொருள் பின்வருமாறு:-(வாலிபர்; உருவுடையார்; மென்மைமிக்கோர்; பெருவலியர்; தாமரைத்தடங்கணணர்; மரவுரி மான்தோலுடுத்தோர்) அவர்களுடைய பருவமுள்ளபடியும், வடிவழகுள்ளபடியும், செயவிருக்கும்படியும், பலமுள்ளபடியும், கண்ணழகுள்ளபடியும், அலங்காரத்தின் அழகிருக்கிறபடியும் ராமலக்ஷ்மணர்களாகிற இருவர்க்கும் உண்டேயொழிய வேறு ஒருவருக்கும் இல்லைகாண் என்கிருள். "என்னை இது விளைத்த ஈரிரண்டு மால்வரைத்தோள் மன்னன்" [பெரியதிருமடல்] என்று கொடுந்தன்மையுடைய என்னையுங்கூட இப்படி ஆக்கினது அந்த குணக்கூட்டமன்றோ என்கிருள்; (வாலிபர்) "யௌவனவயதைப் பூர்ணமாக உடையவன்; சிறிது குமாரனுகவுமிருப்பவன்" [ருக் 2-8-25] என்றும் "முன்னோனும், முதல்வனும், புதியவனும், இளையவனும் லக்ஷ்மீநாதனுமான விஷ்ணுவுக்கு எவன்தன்னை அளிக்கிருனோ" [யஜு ஆ 2-4-3-29] என்றும், "அரும்பினை அலரை" [பெரியதிரு 7-10-1] என்றும் மறைமுடிகளில் முடிவுகட்டப்பட்ட பொருளை, ராக்ஷஸியான இவளொருத்தி கைகண்டவளாகச் சொல்லுகிருளன்றோ. இப்படிச்

பணியாயிருந்ததிறே. "व्यक्तमेष महायोगी परमात्मा सनातनः । तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः ॥" (வ்யக்தமேஷ மஹாயோகீ₃ பரமாத்மா ஸநாதந: । தமஸ: பரமோ தா₄தா சங்க₂சக்ரக₃தா₃த₄ர: ॥) என்றாளிறே மண்டோதரியும். (தருணௌ) முக்தரானவர்களோடு ப₃த்₃த₄ரானவர்களோடு தசரதவாமதேவாதிகளோடு வாசியற "கரியானொரு காளை" என்றும், ' காளைபுகுதக் கனாக்கண்டேன்'' என்றும் ப்ரணயினிகளை அகப்படுத்திக் கொள்ளுவது பருவத்தையிட்டிறே. அப்பருவத்திலேயாயிற்று இவனும் முற்பட ஈடுபட்டது. (தருணௌ) இவள் ப₃த்₃த₄ ப₄ாவையாயிற்றுப் பெருமாள்பக்கலிலேயாகில், வைரூப்யம் விளைந்தது இளையபெருமாள் பக்கலிலேயாகில, இரண்டு பக்ஷத்திலும் ஒருத்தரே அமைந்திருக்க, த்விவசநாந்தமாகச் சொல்லுவானென்னென்னில்: "अन्योन्यसदृशौ वीरौ" (அந்யோந்யஸத்₃ருசௌ வீரௌ) என்று அழகுக்கும் ஆண்பிள்ளைத்தனத்துக்கும் ஒருவர்க்கொருவர் குறையாமை

---

சொல்லுவது ராக்ஷஸிகளுக்குத் தொழிலாயிருந்ததன்றோ. "இந்த ராமன் பெருந்தவத்தையுடையவராகவும், பழமையானவராகவும், மூலப்ரக்ருதியைக்காட்டிலும் மேற்பட்டவராகவும், ஸர்வாத₄ாரராவும், சங்கசக்ரகதைகளை தரிப்பவராகவுமுள்ள பரமாத்மாவேயென்பது தெளிவு" [ரா-யு 114-14] என்று மண்டோதரியாகிற ராக்ஷஸியும் சொன்னாளன்றோ. (தருணௌ) "கரியானொரு காளை" [பெரியதிரு 3-7-1] என்றும, "கோவிந்தனென்பானோர் காளைபுகுதக் கனாக்கண்டேன்" [நாச்-திரு 6-2] என்றும் சொல்லுகிறபடியே, முக்தரோடு பத்தரோடு, தசரதர் வாமதேவர் முதலானோரோடு வாசியின்றிக்கே ஆசையுடையாரை என்றும் எம்பெருமான் ஈடுபடுத்திக்கொள்வது பருவத்தைக் காட்டியன்றோ, அப்பருவத்திலேயாயிற்று இவனும முதலில் ஈடுபட்டது. (வாலிபர்கள்) இவள் ஈடுபட்டது ராமனிடத்திலேயாகையாலே ஈடுபாடு சொல்லும் முதற்பொருளில் ராமனைச் சொன்னால் போதுமானது; இவளை அங்கபங்கம் செய்தவன் லக்ஷ்மணனேயாகையால் எளிமைசொல்லும் இரண்டாம்பொருளில் லக்ஷ்மணனைச் சொன்னால் போதுமானது; ஆக, இரண்டு பக்ஷத்திலும் ஒருவருக்கே அந்வயமாகையாலே ஒருமையே போதுமாயிருக்க, த்விவசனத்திலே—இருமையிலே—சொல்லுவானென்னென்னில்: "ராமலக்ஷ்மணர்கள் ஒருவருக்கொருவர் ஒப்பானவர்கள்" [ரா-கி

யாலும், “कृतदारोऽस्मि भवति भार्येयं दयिता मम” (க்ருதத$_3$ாரோஸ்மி ப$_4$வதி ப$_4$ார்யேயம் த$_3$யிதா மம) என்றும், “श्रीमानकृतदारश्च लक्ष्मणो नाम वीर्यवान्। अपूर्वभार्याप्रार्थी च तरुणः प्रियदर्शनः॥ एनं भज विशालाक्षि भर्तारं” (ஸ்ரீமாநக்ருதத$_3$ாரச்ச லக்ஷ்மணோ நாம வீர்ய வாந்। அபூர்வப$_4$ார்யாப்ரார்த்தீ$_2$ ச தருண: ப்ரியத$_3$ர்ஶந: ॥ ஏநம் ப$_4$ஜ விஶாலாக்ஷி ப$_4$ாத்தாரம) என்றும்-நான் க்ருத விவாஹனுமாய், ஸங்கதபார்யனுமாகையாலே உனக்கு யோக்யனல்லன். இவன் அக்ருதவிவாஹனுமாய், விவாஹம் பண்ணவேணுமென்கிற ஆசையையுடையனுமாயிருக்கிறான். ஆனபின்பு இவனை பர்த்தாவாக வரி-என்று பெருமாள் திருவுள்ளமாக, அவ்வழியாலே இளையபெருமாள் பக்கலிலே இவள் ப$_3$க$_3$க$_4$ப$_4$ாவையாக, “कथं दासस्य मे दासी भार्या भवितुमर्हसि। आर्यस्य त्वं विशालाक्षि भार्या भव यवीयसी” (கத$_2$ம் த$_3$ாஸஸ்ய மே த$_3$ாஸீ ப$_4$ார்யா ப$_4$விது மர்ஹஸி। ஆர்யஸ்ய த்வம் விசாலாக்ஷி ப$_4$ார்யா ப$_4$வ யவீயஸீ ॥) என்று-அவரடிமையான எனக்கு ஸ்த்ரீயானால், நீயும் அடிமையாவாயித்தனை. அது *வணங்

---

3·12] என்று அழகுக்கும் ஆண்பிள்ளைத்தனத்துக்கும் ஒருவருக் கொருவர் குறையாதவர்களாகையாலும், “நான் கலியாணமானவன், இவள் என மனத்துக்கினிய மனைவியாவாள்” [ரா-ஆ 18-2] என்றும், “தடங்கண்ணியே! அழகியவனும், மனைவியற்றவனும், வீரனும், (உன்போன்ற) அபூர்வமான மனைவியை விரும்புபவனும், வாலிபனும, இனியவனுமாயிருப்பவன் லக்ஷ்மணன்; அவனைக் கணவனாக வரி” [ரா-ஆ 18·3] என்றும்— “நான் கலியாணமான வனாய் இனியமனைவியை உடையவனாகையாலே உனக்குத்தகுந்த வனல்லன்; இவன் கல்யாணமாகாதவனாய், கல்யாணம் செய்து கொள்ளவேண்டுமென்னும் ஆசையை உடையவனுமாயிருக்கிறான். ஆகையால் இவனைக் கணவனாகவரிப்பாயாக— என்று ராமபிரான் உரைக்க, அதனாலே இவள் லக்ஷ்மணனிடம் ஈடுபட்டாள். “ராம னுக்கும் சீதாபிராட்டிக்கும அடிமையான எனக்கு மனைவியாகி நீயும் அடிமையாகவாவிரும்புகிறாய்? தடங்கண்ணியே! தமயனுருககு இளையமனைவியாக ஆவாய' [ரா-ஆ 18-10] எனறு— “ராமபிரா னுக்கு அடிமையான எனக்கு மனைவியானால் நீயும் அடிமையாவாய்; அது ‘ந நமேயம் து கஸயசித்’ [ஒருவருக்கும் வணங்கேன்] என்னும்

கவிலரக்கரான உங்களுக்குச் சேராது. நாச்சியாராக வாழ லாம்படி அவர்தமக்கு இளையநங்கையாராகப்பாராய்—என்று இளையபெருமாள் சொல்ல, பெருமாள் பக்கலிலே துவக் குண்டும், ஆக இருவர் பக்கலிலும் துவக்குண்டு இப்படி பத்த பாவையாகையாலும், வைரூப்யகரணத்திலும் "**विरूपयितु-मर्हसि**" (விரூபயிதுமர்ஹஸி) என்று ப்ரயோஜககர்த்தாவாயும், "**उद्धृत्य खड्गं चिच्छेद कर्णनासं महाबलः**" (உத்$_3$த்$_4$ருத்ய க$_2$ட்க$_3$ம் சிச்சே$_2$த$_3$ கர்ணநாஸம மஹாப$_3$ல:) என்று இளையபெருமாள் க்ரியாகர்த்தாவாயும் ஆகவிப்படியிருக்கையாலே, "**ताभ्यामु-भाभ्यां संभूय प्रमदामधिकृत्य तां। इमामवस्थां नीताहं**" (தாப்$_4$யாமுப$_4$ாப்$_4$யாம ஸமபூ$_4$ய ப்ரதமத$_3$ாமதி$_4$க்ருத்ய தாம। இமாமவஸ்த$_2$ாம நீதாஹம்) என்று இருவரையும கூட்டாகச் சொலலுகிறு ளாகையாலும் இங்கு இருவரையும் ஒக்கச்சொல்லுகிறுள். (தருணௌ) "இருவராய் வந்தாரென் முன்னேநின்ருர்" என்னுமாபோலே. ஒருவரிருவராய் வந்தன்ருே என்னை ஈடழித்தது. (தருணௌ) தம்பிதமயனுல் பருவததிலேயும்

* வணங்கலில் அரக்கரான உஙகளுடையதன்மைக்குப் பொருந்தாது. ராணியாக வாழலாம்படி ராமபிரானுக்கே இளையாளாக முயற்சிசெய்" என்று லக்ஷ்மணன் சொல்லுகையாலே ராமனிடத்திலும் ஈடுபட்டாள். ஆகஇப்படி இருவரிடமும ஈடுபடுகையாலே இருவரையும் சொன்னது முதற்பொருளிலும் தோஷமிலலே. அஙகபஙகம் செய்த போதும், "லக்ஷ்மணு இவளை அங்கபங்கம் செய்வாயாக" [ரா-ஆ 18-20] என்று ராமபிரான் கார்யம் செய்விப்பவனுகவும், "மஹாபல வானை லக்ஷ்மணன் கத்தியை உருவி அவளுடைய காதையும் மூக்கையும் அறுத்தான்" [ரா-ஆ 18-21] என்று லக்ஷ்மணன கார்யம் செய்பவனுகவும் ஆகவிபபடி இருக்கையாலே, "அந்தப்பெண்ணிற் காக அவ்விருவராலும் நான் இந்தநிலையை அடைவிக்கப்பட்டேன்" [ரா-ஆ 19-18] என்று இருவரையும் கூடச் சொல்லுகிறவளாகை யாலே இங்கும் இருவரையும் சேர்த்துச்சொல்லுகிருளாகையாலே தோஷமில்லை. (வாலிபர்கள்) "இருவராய் வந்தார் என்முன்னே நின்ருர் [திருநெடு-21] என்னுமாப்போலே ஒருவரே இரண்டுருக் கொண்டு வந்ததுபோல் வந்தன்ருே என்னை ஈடழித்தது. (வாலிபர்கள்) தம்பியும் தமயனுமாஞல் பருவத்திலேயும சிறிது

சிறிது வேறுபாடு காணலாமிறே. அப்படியன்றியிலே ஒரு படியாய்க்காண் இருக்கிறது. புனர்பூசம் பூசமாய், பின்னும் முன்னுமானால் அத்தனை வாசி தெரியாதிறே.

இப்படிப் பருவத்தையிட்டு மயக்குமித்தனையாய், வடிவு தன்னைப்பார்த்தால், போலியாயிருக்குமோவென்னில்: (ரூப ஸம்பந்நௌ) ரூபத்தைப்பார்த்தால், அழகுவேண்டியிருப் பார்க்கு அவர்கள் பக்கலிலே இரந்துகொண்டுபோக வேண்டும்படியாய்க்காண் கூடுபூரித்துக் கிடந்தபடி. (ரூப ஸம்பந்நௌ) "காமனார் தாதை" என்று, அந்தக்காமனகப்பட **"अङ्गादङ्गात्संभवसि" (அங்க₃ாத₃ங்க₃ாத்ஸம்ப₄வஸி)** என்று இவர் திருமேனியில் ஏகதேசத்திலே உத்பந்நனாகையாலன்றோ அவ்வழகுதான் உண்டாயிற்று. (ரூபஸம்பந்நௌ) **"उत्पन्नं द्रव्यं क्षणं निर्गुणं तिष्ठति" (உத்பந்நம் த்₃ரவ்யம் க்ஷணம நிர்க்கு₃ணம் திஷ்டதி)** என்கிறபடியே முற்பட ஆச்ரயமுண்டாய்

---

வேறுபாட்டைக்காணலாமே; அதுவுமில்லாமல் இருவரும் ஒருவயதின ராகவேயிருந்தனர். ராமலக்ஷ்மணபரதசத்ருக்னர்கள் புனர்பூசம், பூசம், ஆயிலயம என்னும் அடுத்தடுத்த நக்ஷத்திரத்திலும், அடுத் தடுத்த நாள்களிலும் அவதரித்தவர்களாகையாலே வயதிலே அதிகமான வேறுபாடு தெரியாதன்றோ.

இப்படி வாலிப வயதையிட்டு மயங்குவதைத்தவிர அழகைப் பார்த்தால் அஸாரமாயிருப்பவர்களோ? என்னில்: (உருவுடையார்) உருவைப்பார்த்தால், அழகு வேண்டியிருப்பவர்களுக்கு அவர் களிடம் யாசித்துக்கொண்டுபோக வேண்டும்படியன்றோ அவா களிடம் அழகு நிறைந்து வழிகிறது. (உருவுடையார்) "காமனார் தாதை" [பெரியதிரு 1-1-3] என்று அந்த மந்மதனும் "பிள்ளாய்! என்னுடைய அவயவத்தின் ஒருபாகத்திலிருந்து நீ பிறக்கிறாய்" [மந்த்ரப்ரச்னம் 2-11-33] என்கிறபடியே *மந்மதமந்மதனை இவ ருடைய திருமேனியில் ஒரு பகுதியிலிருந்து தோன்றுகையாலன்றோ அவனுக்கு அவ்வழகும் உண்டாயிற்று. (உருவுடையார்) "திரவியம் உண்டாகும்போது ஒரு கணநேரம் குணமற்றதாக நிற்கிறது" என்கிற தார்க்கிகர்களின் கொள்கைப்படி முதலில் திருமேனியுண் டாகிப் பிறகு அதிலே ரூபம் முதலிய குணங்களுண்டாகையன்

அதிலே குணங்களுண்டாகையன்றிக்கே "रूपदाक्षिण्यसंपन्नः प्रसूतः" (ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூத:) என்கிறபடியே ரூபததாச்ரயங்கள் ஸஹோத்பந்நங்களாய்க்காண் அவர்கள் பக்கல் இருக்கிறது. (ரூபஸம்பந்நௌ) "வடிவுடைவானோர் தலைவனே" என்றும், "அச்சோவொருவர் அழகியவா" என்றும். "என்முலையாள ஒருநாள் உன் அகலத்தால ஆளாய்" என்றும், "காரார் திருமேனி கண்டதுவே காரணமாப் பேராப் பிதற்றுந் திரிதருவன்" என்றும், "रामेति रामेति सदैव बुद्ध्या विचिन्त्य वाचा ब्रुवती" (ராமேதி ராமேதி ஸதைவ புத்த்யா விசிந்த்யா வாசா ப்ருவதீ) என்றும் பெண் பிறந்தாரைப் பிச்சேற்றி வாய்வெருவப்பண்ணும் வடிவுகாண் அவரது. அவர் தம்பியாரன்றோ மற்றையவர். இவர்கள் இருவருடைய வும் வடிவழகிலேகாண் நான் உழலுகிறது.

இவ்வழகேயாய். அணைத்துப்பார்த்தால் உறைத் திருக்குமோவென்னில்: (ஸுகுமாரௌ) முறட்டு ராக்ஷஸரான

---

றிக்கே, "ராமபிரான் ரூபதாக்ஷிண்யங்களோடு கூடவே பிறந்தவர்" [ரா-ஸு 35-8] என்று ரூபமும திருமேனியும் கூடப்பிறந்தவையா யனறே அவர்களிடமுள்ளது. (உருவுடையார்) "வடிவுடைவானோர் தலைவனே" [திருவாய் 7-2-10] "அச்சோ ஒருவர் அழகியவா" [பெரியதிரு 9-2] "என் முலையாள ஒருநாள உன்னகலத்தால் ஆளாயே" [பெரியதிரு 3-6-9] "காரார் திருமேனி கண்டதுவே காரணமாப் பேராப்பிதற்றுத் திரிதருவன" [சிறியதிருமடல்] "அப் பிராட்டியானவள் ராமனையே எப்போதும புத்தியாலே தியானிததுக கொண்டு வாயாலேயும அவரையே வெருவிக்கொண்டிருந்தாள்" [ரா-ஸு 32-11] என்று பெண்பிறந்தவர்களைக காதல்பித்தேறும்படி செய்து வாய்வெரும்படி பண்ணும வடிவனறே அவருடையது. அவருடைய தம்பியன்றோ மற்றவர். இவர்கள் இருவருடையவும் வடிவழகிலேயன்றோ நான உழல்கினறேன் எனகிறாள்.

"உருவுடையார்" என்று சொல்லப்பட்ட இந்த அழகுமாத்திர மேயாய், அணைத்துப்பார்த்தால் கலலும் முளளுமபோலே கடின மாயும, அஸஹ்யமாயுமிருக்குமோ என்னில்;—(மென்மை மிக்கோர்) முறட்டு ராக்ஷஸர்களான உங்களைப்போலே காடினயமுடையர்

உங்களைப்போலேயன்று காண்! அவர்கள் மார்ந்தவமிருக்கிறபடி-பூவிலே அணைந்தாற்போலே காண் இருப்பது. த்ருஷ்டாந்தம் சொல்லுமவர்களும் "अतसीपुष्पसङ्काशं" (அதஸீபுஷ்ப ஸங்காஶம)என்றும்"राममिन्दीवरश्यामम्" (ராமமிந்தீ₃வரச்யாமம்) என்றும், "பூவைப்பூவண்ணா" என்றும், "காயாம்பூவண்ணா" என்றும் புஷ்பத்தையிட்டிறே சொல்லிற்று. (ஸௌகுமார்யம்) "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" என்று பூவில் பரிமளத்தையும், மண்ணில் பரிமளத்தையும் உபாதா₃நமாகவுடைய பிராட்டிமாருமகப்பட அணைக்கையன்றிக்கே அடுத்தடுத்துப் பார்க்கவும் (பேராத) பொறுதபடியாய்க்காண் அவர்கள் மார்த்தவமிருக்கும்படி. (ஸௌகுமார்யம்) "நடந்த கால்கள் நொந்தவோ" என்றும், "அடியாரல்லல் தவிர்த்த அசைவோ அன்றேல் இப்படிதான் நீண்டு தாவிய அசைவோ" என்றும், "தாளால் உலகமளந்த

---

அன்றுகாண்! அவர்களுடைய மென்மையிருக்கிறபடியைப்பார்த்தால் பூவிலே அணைந்தாற்போலேயன்றோ இருப்பது. பரமபுருஷனுடைய திருமேனிக்கு த்ருஷ்டாந்தம் சொல்லும்போதும், "காயாம்பூவை ஒத்தவனும், பீதகவாடையுடையானுமான அச்சுதனை" [பாரதம்-சாந்தி 46-118] என்று பீஷ்மரும், "காயாம்பூவைப்போலே கருநிறமுள்ள ராமனை" [ரா-ஆ 17-9] என்று வால்மீகியும், "பூவைப்பூவண்ணா" [திருப்பாவை-23] என்று ஆண்டாளும, "காயாம்பூவண்ணா" என்று ஆழ்வார்களும் புஷ்பத்தையிட்டன்றோ சொன்னார்கள். "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" [திருவாய் 9-2-10] என்று தாமரைப்பூவிலே மணத்தாலேயே ஆனதோ இத்திருமேனி என்னலாமபடியிருக்கும் திருமகளும், கந்தவதியான பிருதிவியின் ஸௌகந்தத்தாலேயே ஆனதோ இத்திருமேனி என்னலாம்படியிருக்கும் நிலமகளுமுட்பட அணைப்பதும் செய்யாமல் மாறிமாறித் திருக்கண்களாலே பார்த்தாலும் கன்றிப்போம்படியாய்க்காண் அவர்களுடைய மென்மையிருப்பது. (மென்மைமிக்கோர்) "நடந்தகால்கள் நொந்தவோ" [திருச்சந்த-61] என்றும், "அடியாரல்லல் தவிர்த்த அசைவோ அன்றேல் இப்படி தான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே'

அசைவேகொல்'' என்றும் ஸ்வாப₄ாவிகமான வ்யாபாரமகப் படத் திருமேனிக்குப் பொருமதன்று அநுகூலர் வயிறு பிடிக்கும்படியாய்க்காண் அவர்கள் மார்த்₃வமிருக்கும்படி. (ஸுகுமாரௌ) திவ்யனை காமன் ஒருவனிறே; இவர்கள் § பெ₄ளமராயிருப்பார் 'இரண்டு காமராய்க்காண் தோற்றுகிறது.

(ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ) அவன் அநங்க₃னயிறே இருப்பது. **"कन्दर्प इव मूर्तिमान्"** (**கந்த₃ர்ப்ப இவ மூர்த்திமாந்**) என்கிறபடியே ரூபவான்களாய்க்காண் இந்தக்காமர்களிருப் பது. **"राममन्मथशरेण ताडिता दुस्सहेन हृदये निशाचरी"** (ராமமந்மத₂ **ஶரேண தாடி₃தா து₃ஸ்ஸஹேந ஹ்ருத₃யே நிஶாசரீ**) என்று காமனைகவே பரிக்ரஹித்துச் சொன்னனிறே.

---

[திருவாய் 8-3-6] என்றும், ''தாளாலுலகமளந்த அசைவேகொல் வாளா கிடந்தருளும் வாய்திறவான்'' [நான்-திருவ-35] என்றும் ரக்ஷகனுக்கு இயற்கையானதான ரக்ஷணச்செயலையுங்கூடத் திரு மேனிகுத் தகாது என்று அனபுடையார் பயப்படும்படியன்றோ அவர்கள் மென்மையிருக்கிறது. (பூமியில் மாரர்களாகவே யிருப்பார் இருவர்) 'கு்'என்னும் பதம் பூமியைக் குறிக்கும். ''மத₃நோ மந்மதே₂ா மார:'' என்கிற அமரகோசத்தின்படியே மாரசப்தம மன் மதனைக் குறிக்கும். 'குமாரௌ' எனறு—தேவலோகத்திலிருக்கும் மாரன் ஒருவனன்றோ; இவர்கள் பூமியிலிருக்கும் மாரர்கள் இருவ ராயன்றோ தோற்றுகின்றனர்-என்றதாகிறது. 'ஸு' என்னும் எழுத்து ''ஸுது₃ஷ்ட:'' [மிகவும் துஷ்டன] முதலான இடஙகளிற் போலே இவ்வர்த்தத்தை த்ருடீகரிககிறது.

(உருவுடையார்; பூமியில் மாரர்கள்) அந்த மாரன் சிவனுல் தஹிக்கப்பட்டபின்பு அங்கமற்றவனுயன்றோ இருப்பது; ''உருவோடு கூடிய மன்மதன்போன்றவன் ராமன்'' [ரா-ஸு 34-30] என்கிற படியே உருவுடையாராயன்றோ இந்த மாரர்களிருக்கிறபடி. ''ராம னுகிற மந்மதனுடைய பொறுக்கவொண்ணுத அம்பினுல் மார்பிலே அடிக்கப்பட்ட ராக்ஷஸியான தாடகை, துர்க்கந்தம் வீசும் இரத்த மாகிற சந்தனத்தால் பூசப்பட்டவளாய் யமனுடைய வீட்டை

---

§ (பா) இளமையைப் பாரீர்;

இப்படி எழிலும் அழகுமாய் தூரத்திலே அகப்படுத்து மளவேயாய், கிட்டி அநுபவிக்கப்பார்த்தால் உ(ஆ)டல கொடுக்கமாட்டாத துர்ப்பலராயோ இருப்பது? என்னில்;- (மஹாபலிவள) வையாத்யத்தில் வந்தால் "தோற்றோம் மட நெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" என்றும், "வரையெடுத்த பெருமானுக்கு இழந்தேன் என் வரிவளை" என்றும் பெண்பிறந்தார் தோற்று எழுதிக்கொடுக்கும்படியாய்க் காண் இருப்பது. (மஹாபலிவள) **"रामस्तु सीतया सार्धं विजहार बहून् ऋतून्"** (ராமஸ்து ஸீதயா ஸார்த்த$_4$ம் விஜஹார ப$_3$ஹூந் ருதூந்)என்றும், "மைந்தனை மலராள் மணவாளனை" என்றும் சொல்லுகிறபடியே ச்ருங்காரத்தில் வந்தால் அநேக

அடைந்தாள்*" [ரகுவம்சம 11-20] என்று ராமனைக காமனுகவே ரூபணம்செய்து சொன்னுனன்றோ காளிதாஸன்.

இப்படி யௌவனத்தால் வந்த காந்தியும் வடிவழகுமேயாய், தூரத்தில் நின்று பார்பபவர்களைமட்டும் ஈடுபடுத்துவதாய், அணுகி அணைத்து அநுபவிக்க நினைத்தால உடம்புகொடுக்க –('ஆடல் கொடுக்க' என்று பாடமானபோது ஸம்ச்லேஷிகக என்று பொருள்)– முடியாத பலஹீனராகவோ இருப்பது என்னில்: (வலிமிக்கோர்) தீ$_4$ரோதா$_3$த்தநாயகனும் நாயகியோடு பரிமாறும்படியைப் பார்த்தால் "தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" [திருவாய் 2-1-7] எனறும், "வரையெடுத்த பெருமானுக்கிழந்தேன் என் வரிவளை" [பெரியதிரு 8-3-1] என்றும் பெண்கள் தோற்றுத் தம்மை எழுதிக்கொடுக்கும் படியாயன்றோ இருப்பது. (வலிமிக்கோர) "சீதாபிராட்டியோடுகூட ராமபிரான் பல வருஷங்கள் இன்புற்றார" [ரா-பா 77-26] என்றும், "மைந்தனை மலராள் மணவாளனை' [மைந்தனை—வலிமிக்கவனை] [திருவாய் 1-10-4] என்றும் சொல்லுகிற படியே சிருங்காரரஸம் அநுபவிக்கும்போது, பலவருஷங்கள் இடை

* "அழகிய மந்மதனுடைய பொறுக்கவொண்ணுத அமபினுல நெஞ்சிலே அடிக்கப்பட்டவளாய், இரவில் தான் விரும்பியவனைத் தேடி அலையும் அபி$_4$ஸாரிகை, நறுமணம வீசும் குங்குமத்தாலும் சந்தனத்தாலும் பூசப்பட்டவளாய், தன் ஆருயிர்க்காதலன் வீட்டை அடைந்தாள்" என்னும் மற்ருெரு பொருளும் த்வனிப்பது உணரத்தக்கது.

ருதுக்களை ஒருபடிப்பட நடத்தாநின்றாலும், எதிர்த்தலை அப்ரத₄ர்ஷணமாம்படிகாண் அவர்கள் ப்ராபல்யமிருக்கும்படி. அன்றிக்கே. (மஹாபலௌ) "காதல் கடல்புரைய விளை வித்த காரமர்மேனி நம் கண்ணன" என்கிறபடி பருவத்தை யும் வடிவழகையும் * செவ்வியையுமிட்டுப் பிறரைப் படு குலைப்படுத்தித் துடிக்கும்படி பண்ணி, பின்னை அவர்கள் நினைவில் ஓரடியும் புகுராதபடியாய்க்காண் அவர்கள் அத்₄ய வஸாயப்ராபல்யமிருக்கும்படி என்னவுமாம்.

ஆக இப்படி ஸமுதாயசோபையிலும் அவயவசோபை மட்டமாயிருக்குமோவென்னில்: (புண்டரீகவிசாலாக்ஷௌ) அது கண்ணழகைத் தப்பினாலன்றோ வேறொரு அவயவத்தில் இழியவொட்டுவது. (புண்டரீகவிசாலாக்ஷௌ) அவையெல் லாம் கிட்டினால் அழிக்குமவை. இனி இது அங்ஙனன்றிக்கே. "தூதுசெய் கண்கள் கொண்டொன்று பேசி" என்றும்,

விடாமல் அநுபவித்தாலும், நாயகியானவள் அப்ரதானையாம்படி –['ஸீதயா ஸார்த்த₄ம்' என்றதையும் "ஸஹயுக்தேபரத₄ர்நே" என்ற பாணிநிஸூத்ரத்தையும் நினைப்பது]– தாம் ப்ரதா₄னராகவன்றோ இருப்பது. (வலிமிக்கோர்) "காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி நங்கண்ணன் தோழி கடியனே" [திருவாய் 5-3-4] என்கிற படியே யௌவனப் பருவத்தையும், வடிவழகையும், மென்மையையும் காட்டிப்பிறரை வெட்டுண்ட வாழைகுலைபோலே விழுந்து துடிக் கும்படி பண்ணி, அதற்குப்பின் அவர்களுடைய நினைவுக்கும் எட்டாதவராம்படியான பெரிய மநோபலத்தைக்கொண்டவர்கள் என்றும் பொருள்கொள்ளலாம். இங்கு பலம்–மநோபலம்

"உருவுடையார்" என்று சொன்ன ஸமுதாயசோபையிலும் அவயவசோபை குறைவாயிருக்குமோவென்னில்: (தாமரைத்தடங் கண்ணர்) 'அவயவங்களின் சோபையை அநுபவிக்கலாம்' என்று பாரித்துக் கண்ணுகிற ஓர் அவயவத்தில் இழிந்தால், அதைவிட்டு வேறிடத்தில் கண்வைக்க முடிந்தாலன்றோ வேறொரு அவயவத்தில் இழியமுடிவது. கண்ணுகிற ஓரவயவத்தின் அழகிருக்கும்படி இது. (தாமரைத் தடஙகண்ணர்) யௌவனம், வடிவழகு, மென்மை, பலம் என்னும் அவையெல்லாம் அணுகினால் அழிக்கக்கூடியவை; இக்

* (பா) செவ்வையையும்; சிவப்பையும்.

''தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ'' என்றும் தூர(த்)திலே தோற்றினபோதே அழிக்கும்படியாய்க்காண் கண்களிருப்பது. (புண்டரீகவிஶாலாக்ஷள) "पुण्डरीकं सिताम्भोजं" (புண்ட₃ரீகம் ஸிதாம்பே₄ாஜம்) இறே. "संरक्तनयना घोराः" (ஸம்ரக்தநயநா கே₄ாரா:) என்று உங்களைப்போலே எரிவிழியாயிருக்கையன்றிக்கே ஸுப்ரஸந்நத₄வளமான அக்கண்களிருந்தபடிகாண். (புண்டரீகவிஶாலாக்ஷள) ரக்ஷணோபயோகி₃யான கருவிழியும் செவ்விழியும் கண்பரப்பும், தமோகு₃ணோத்₃ரேகத்தாலேநித்₃ராகஷாயிதமாதல்,ரஜோகுணோத்₃ரேகத்தாலே கோபஸம்ரக்தமாதலன்றிக்கே, ஸத்வப்ரசுரராகையாலே அவர்களுடைய த்ருஷ்டிப்ரஸாதமுமிருந்தபடிகாண். (புண்டரீகவிஶாலாக்ஷள) அவர்தாம் "आत्मानं मानुषं मन्ये" (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) என்று தம்மை மறந்தாராகிலும் "यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी" (யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ) என்கிறபடி அகவாயிற்கிடந்த பரத்

---

கண்ணழகோவெனில் அப்படியல்லாமல் "தூதுசெய்கண்கள் கொண்டு ஒன்றுபேசி" [திருவாய் 9-9-9] என்றும், "தாமரைக் கண்கள் கொண்டீர்தியாலோ" [திருவாய் 10-3-1] என்றும் தூரத்திலே தோற்றினபோதே அழிக்கும்படியன்றோ கண்களிருப்பது. (தாமரைத் தடங்கண்ணார்) "வெண்தாமரை புண்டரீகமெனப்படும்" [அமர 1-10-41] என்று சொல்லப்படுகிறதன்றோ; "(கோபத்தால்) சிவந்த கண்களையுடையவர்களும் பயங்கரர்களுமான ராக்ஷஸர்கள்" [ரா-ஆ 20-12] என்று உங்களைப்போலே நெருப்புக்கண்ணாயிருக்கையன்றிக்கே, மிகத்தெளிந்து வெளுத்திருக்கும் அக்கணகளிருந்தபடியைப் பார். (தாமரைத் தடங்கண்ணார்) ரக்ஷணத்திற்கு உபயோகப்படும் குளிர்ந்த கருவிழியும், அன்பினால் வந்த செவ்விழியும் கண்ணுடைய பரப்பும், தமோகுணத்தின் மிகுதியாலே தூக்கத்தால் சிவத்தல், ரஜோகுணத்தின் மிகுதியாலே கோபத்தால் சிவத்தலன்றிக்கே ஸத்வம் மிகுந்தவர்களாகையாலே அவர்களுடையகண்களில் தெளிவுமிருந்தபடிகாண்! (தாமரைத் தடங்கண்ணார்) அவர்தாம் "என்னை மனிதனாகவே நினைக்கின்றேன்" [ரா-யு 120-11] என்று தம்முடைய பரத்வத்தை மறந்தாராகிலும், "அப்பரம புருஷனுக்கு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இருகண்கள் உள" [சாந் 1-7] என்கிறபடியே உள்ளேகிடந்த பரத்வத்தைக்

வத்தைக் கோட்சொல்லிந் தாராநின்றதாய்த்துக் கண்கள் தான். (புண்டரீக விஶாலாக்ஷ) பாற்கடல்போலே அக் கண்களுக்குள்ள அகலம் ஒருவரால் கரைகாணவொண்ணுத படியாய்க்காண் கண்களிருப்பது. (புண்டரீக விஶாலாக்ஷ) கண்ணிலுண்டான தெளிவுக்குப் புண்டரீகத்தை ஒரு போலி சொன்னுமித்தனைபோக்கி. அகலத்தைப்பார்த்தால் கடலிற் புக்கார் கரைகாணமாட்டாதே மயங்குமாபோலே "புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்பெரியவாய கண்கள்'' என்னுமித்தனைபோக்கி வேறொரு பாசுரமிட வொண்ணுதுகாண். (புண்டரீக விஶாலாக்ஷ) "உயிர்க் கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்'' என் றும், "தடங்கொள் தாமரைக் கண்விழித்து—இடங்கொள் மூவுலகும் தொழ இருந்தருளாய்'' என்றும் சொல்லுகிற படியே ப$_3$த்$_3$த$_4$முக்தநித்யாத்மகமாய், த்ரிவித$_4$கோடியான உப$_4$யவிபூ$_4$தியும் ஏகோத்$_3$யோகத்திலே கடாக்ஷிக்கவற்றாய்க காண் கண்களிருப்பது.

(மஹாபலௌ புண்டரீகவிஶாலாக்ஷ) பலத்தைக காட்டி அவர்களைத் தோற்பித்து, அவர்களை "जितन्ते पुण्डरीकाक्ष"

---

கண்களே வெளிக்காட்டித்தருகின்றன. (தாமரைத் தடங் கண்ணர்) பாற்கடலின் பரப்பைப்போலே கண்ணின் பரப்பையும் ஒருவரால் கரைகாணவொண்ணுதபடிகாண் கண்களிருப்பது. (தாமரைத் தடங் கண்ணர்) கண்களின் தெளிவுக்கு வெண்தாமரையை ஒருபமான மாகச் சொன்னுமேயொழிய, பரப்பைப்பார்த்தால், கடலிலே இறங்கினவர்கள் கரைகாணமுடியாமல் மயங்குவதுபோலே, "..ரிய வாகிய புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்'' [அமலனுதி-8] என்னுமதொழிய வேறொரு பாசுரமிட வொண்ணுது காண். (தாமரைத் தடங்கண்ணர்) "உயிர்க்கெல்லாம தாயாய் அளிக்கின்ற தண் தாமரைக்கண்ணு'' [பெரியதிரு 7-1-9] என்றும், "தடஙகொள் தாமரைக்கண்விழித்து—இடங்கொள் மூவுல கும்தொழ இருந்தருளாய்'' [திருவாய் 9-2-3] என்றும் சொல்லுகிற படியே ப$_3$த்$_3$த$_4$ர், முகதர், நித்யர் எனறு மூவகைப்பட்ட உப$_4$ய விபூ$_1$தியையும் ஒரு பார்வையிலே கடாக்ஷிக்கவல்லதாயன்றோ பரநத கண்களிருப்பது.

(ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்றும், "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்றும் எழுதிக்கொள்வது கண்ணழகையிட்டிறே. (மஹாபலௌ புண்டரீகவிஶாலாக்ஷௌ) அவர்களளவிலே ஈடுபட்டவர்கள் நேராகக் கைவாங்கமாட்டாதே, **"अवलोकनदानेन भूयो मां पालय"** (அவலோகநதா₃நேந பூ₄யோ மாம் பாலய) என்றும், **"पुण्डरीकाक्ष रक्ष मां"** (புண்ட₃ரீகாக்ஷ ரக்ஷ மாம்) என்றும் "தாமரைக்கண்களால் நோக்காய்" என்றும் திரியநசைபண்ணிக் கால்கட்டும்படி பண்ணுவது இக்கண்களில் தண்ணளிகாண்! (புண்டரீக விஶாலாக்ஷௌ) "ஸுகுமாரௌ" என்கிற பதத்தாலே காமர்களென்று சொல்லிற்றிறே. ஆனல் புஷ்பபாணராக வேணுமே; அப்படிக்குக் கண்டதென்னென்னில்: "கடைக்கணென்னும் சிறைக்கோலால் நெஞ்சுடுருவவேவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை" என்னும்படி என்னை நிலைகுலைத்த புஷ்பபாணங்களிருக்கிறபடி காண்!

---

(வலிமிக்கோர் தாமரைத்தடங்கண்ணர்) தம் பலத்தைக்காட்டி அவர்களைத் தோல்வியுறச்செய்து, "தாமரைக்கண்ணனே! நீ (என்னை) ஜயித்தாய்" [ஜிதந்தே 1-1] என்றும், "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை' [திருவாய் 2-7-3] என்றும் அவர்களை அடிமையாக்கிகொள்ளுவது கண்ணழகைக் காட்டியன்றோ. (வலிமிக்கோர்; தாமரைத்தடங்கணணர்) அவர்களுடைய பலத்திலே ஈடுபட்டவர்கள், பலத்தைக்கண்டு பயந்து உடனே பின் வாஙகாமால், "அச்சுதனே! மறுபடியும் கடாக்ஷிப்பதன்மூலம் என்னைக் காப்பாற்றுவாயாக" [வி-பு 1-20-16] என்றும், "புண்டரீகாக்ஷனே! என்னைக் காப்பாற்று" [பாரதம்-ஸபா-96] என்றும், "தாமரைக்கண்களால் நோக்காய்" [திருவாய் 9-2-1] என்றும் மறுபடியும் அன்புசெய்து பகவானுடைய திருவடிகளையே கட்டித்திரியும்படி பண்ணுவது இக்கண்களில் வழியும் இரக்கமன்றோ. (தாமரைத் தடங்கண்ணர்) "ஸுகுமாரௌ" [பூமியில்மாரர்கள்] என்னும் பதத்தாலே இவர்களை மந்மதர்கள் என்று சொல்லிறறன்றோ. மன்மதராஞல் புஷ்பபாண முடையராயிருக்கவேணுமே; இங்கு அது கண்டதுண்டோவென்னில்; "கடைக்கண் என்னும் சிறைக்கோலால் நெஞ்சுடுருவவேவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை" [நாச்-திரு 13-3]

அவயவஶோபாமாத்ரத்தாலேயோ அகப்படுத்துவது? என்னில்:— (சீரகருஷ்ணஜிநாம்பரௌ) ஒப்பனையழகாலும அழிப்பர்கள்காண் அவர்கள் என்கிருள். (சீரகருஷ்ணஜிநாம்பரௌ) "செவ்வரத்தவுடையாடை அதன்மேல ஓர் சிவளிகைக்கச்சு" என்கிறபடியே உள்ளுடுப்பது மரவுரி. மேற்சாத்துவது கலைத்தோலுமாயாயிற்று இருப்பது. (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) தாருண்யாதியான குணஸமுதாயத்தைப் பொதிந்ததொரு கிழிச்சீரையிருந்தபடிகாண். (தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ புண்டரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) **"किमिव हि मधुराणां मण्डनं नाकृतीनां" (கிமிவ ஹி மதுராணம மண்டநம நாக்ருதீநாம்)** என்கிறபடியே வறைமுறுகலான ரிஷிகளுமகப்பட விக்ருதராம்படியிருக்கக்கடவ அம்மரவுரியும்தோலும் அவர்கள் வடிவிலே சேர்ந்தபடியாலே அழகுபெற்றிருந்தபடி காண்! (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) ஏதேனுமாக அங்கே

---

என்னும்படி, என்னை நிலைகுலைத்த அரவிந்த மலர்க்கணைகள் இக்கண்களே காண்!

அவயவசோபையால்மட்டுமோ ஈடுபடுத்துவது என்னில்: (மரவுரி மான்தோல் உடுத்தோர்) அலங்காரத்தின் அழகாலும் அழிப்பர்கள் என்கிருள். (மரவுரிமான்தோலுடுத்தோர்) "செவ்வரத்தவுடையாடை அதன்மேலோர் சிவளிகைக்கச்சு" [பெரியதிரு 8·1·7] என்கிறபடியே உள்ளே உடுப்பது மரவுரியாய், மேலே சாத்துவது மான்தோலுமாயன்றோ இருப்பது. (மரவுரிமானதோலுடுத்தோர்) யௌவனம், வடிவழகு, மென்மை, பலம், கண்ணழகு என்னும் குணக்கூட்டங்களாகிற ரத்தினங்களை முடிந்திருக்கும துணியிருந்தபடி காண்! (வாலிபர்...மரவுரிமான்தோலுடுத்தோர) "அழகிய உடம்புகளுக்கு எதுதான் அலங்காரமாகாது?" [சாகுந்தலம 1-19] எனகிற படியே வறுத்தவஸ்துக்கள்போலே கடினஹ்ருதயரான ரிஷிகளுமுட்பட ஈடுபடும்படியிருக்கும் அம்மரவுரியும் மான்தோலும், இயற்கையிலேயே அழகர்களான அவர்கள் திருமேனியில் சேர்ந்த படியாலே அழகுபெற்றிருநதபடியைப்பார். (மரவுரி மான்தோலுடுத தோர்) ஏதாயிருந்தாலும பரமபுருஷனுடைய திருமேனியில சாத்தினல் காண்பார் நெஞ்சையிழுப்பதாகவேயிருக்குமன்றோ. "புனசிரிப்

சாந்த அமையுமிறே ஆகர்ஷகமாகைக்கு. "तासामाविरभूच्छौरिः स्मयमानमुखांबुजः। पीतांबरधरः स्रग्वी साक्षान्मन्मथमन्मथः" (தாஸாமா விரபூ₄ச்செ₂ளரி: ஸ்மயமாநமுக₂ாம்பு₄ஜ:। பீதாம்ப₃ரத₄ர: ஸ்ரக்₃வீ ஸாக்ஷாந்மந்மத₂ மநமத₂:॥) என்கிறபடியே. "பீதகவாடை யுடைதாழ விருந்தாவனத்தே கண்டோமே" என்றும், "செய்யவுடையும் திருமுகமும் செங்கனிவாயும் குழலும் கண்டு" என்றும் பெண்பிறந்தார் வாய்புலர்த்தும்படியாய்க் காண் உடையழகிருப்பது. (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) "உடுத்துக்களைந்த நின பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு" என்று ஸ்வரூபஜ்ஞர் ஆசைப்படுவதும், "பெருமானரையில் பீதகவண்ணவாடைகொண்டென்னை வாட்டம்தணிய வீசீரே" என்று போ₄கபரர் ஆசைப்படுவதும் பரி வட்டத்தையாயிற்று.

(சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) "रूपसंहननं लक्ष्मीं सौकुमार्यं सुवेषतां। ददृशुर्विस्मिताकाराः" (ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்

---

புடன் கூடிய திருமுகத்தாமரையை உடையவனாய், பீதகவாடை யுடையானாய், வநமாலையால் அலங்கரிக்கப்பெற்றவனாய், ஸாக்ஷாத் மந்மதனுக்கும் மந்மதனாயுள்ள கிருஷ்ணன் அந்த கோபிகளுக் கிடையில தோன்றினான்" [பாகவதம் 10-32-2] என்கிறபடியே "பீதகவாடையுடைதாழ விருந்தாவனத்தே கண்டோமே" [நாச்-திரு 14-5] என்றும், "செய்யவுடையும் திருமுகமும் செங்கனிவாயும் குழலும் கண்டு" [பெரு-திரு 6-7] என்றும் பெண்கள் வாய் வெருவும படியாயன்றோ உடையழகிருப்பது. (மரவுரி மானதோலுடுத்தோர்) "உடுத்துக்களைந்தநின் பீதகவாடையுடுத்து" [திருப்பல்லாண்டு-9] என்று பெரியாழ்வாரைப்போலே ஸ்வரூபஜ்ஞானமுடையார் ஆசைப் படுவதும், "பெருமானரையில் பீதகவண்ணவாடை கொண் டென்னை வாட்டம்தணிய வீசீரே" [நாச்-திரு 13-1] என்று ஆண் டாளைப்போன்ற போகத்தை விரும்பும் நாயகிகள் ஆசைப்படுவதும் திருவரையில் சாத்தின வஸ்திரத்தையேயாகும்.

(மரவுரிமான்தோலுடுத்தோர்) "ராமனுடைய உருவ அமைப்பை யும், வீரஸ்ரீயையும், மென்மையையும், அலங்காரத்தையும் ரிஷிகள்

யம் ஸாவேஷதாம் | த₃த்₃ருஶுர் விஸ்மிதாகாரா:) என்று ஸ்வரூப த்₄யானபரரான ரிஷிகளகப்பட இவ்விக்ரஹகுணத்திலே உடைகுலைப்படாநின்றார்கள். **"कन्या कामयते रूपं" (கந்யா காமயதே ரூபம்)** என்றும் "பெற்றக்கால் அவனாகம் பெண் பிறந்தோம் உய்யோமோ" என்றும் உடம்பை உகக்கக்கடவ ஸ்த்ரீகள் ஆழங்காற்படச் சொல்லவேணுமோ?

எளிமை சொல்லுகிற யோஜனையில்;-(தருணௌ) அவர்கள் பக்கலிலே சரக்குண்டாக நினைத்திருக்கவேண்டா காண்! **"न युद्धयोग्यतामस्य पश्यामि" (ந யுத்₃த₄யோக்₃யதாமஸ்ய பச்யாமி)** என்கிறபடியே பூசலுக்கு ஆளாகாதார் சில பால ராய்க்காணிருப்பது. நானேயோ இது சொன்னேன்? **"बालो ह्यकृतविद्यश्च न च वेत्ति बलाबलं। न चास्त्रबलसंपन्नो न च युद्धविशारदः॥" (பா₃லோ ஹ்யக்ருதவித்₃யச்ச ந ச வேத்தி ப₃லாப₃லம்| ந**

---

ஆச்சரியத்துடன் பார்த்தனர்" [ரா-ஆ 1-13] என்று ஸ்வரூப தியானத்திலேயே ஊன்றிநிற்கும் ரிஷிகளுங்கூட இவனுடைய திரு மேனியின் குணங்களிலே தானேயுடையும் பழக்குலைபோலே தெஞ் சுடையா நின்றார்கள். "கன்னிகையானவள் (மணவாளனுடைய) ரூபத்தை விரும்புகிறாள்" என்றும் "பெற்றக்கால அவனாகவும் பெண்பிறந்தோம் உய்யோமோ" [பெரியதிரு 8-1-8] என்றும் அவ னுடைய உடம்பைவிரும்பும் (சூர்ப்பணகையைப்போன்ற) பெண்கள் ஈடுபடச் சொல்லவேணுமோ?

ராமலக்ஷ்மணர்களின் எளிமை சொல்லும்பொருள் பின்வரு மாறு:-(இளையவர்கள்) "வடுர்மாணவகோத₂ ஸ்யாத் வயஸ்த₂ஸ்தருணோ யுவா" என்று வைஜயந்தியிற் சொன்னபடியே தருணசப்தம் வாலி பனைக்குறிப்பதோடன்றியில் பாலனையும் குறிக்குமாகையாலே, "அவர் களிடம் பலம், வீரம் முதலிய சரக்கு இருப்பதாக நீ நினைக்க வேண்டா காண்; 'இவனுக்கு யுத்தம் செய்யத்தகுதியையே நான் காணவில்லை' [ரா-பா 20-2] என்று தசரதன் சொன்னபடியே "சண்டைசெய்ய முடியாதபாலராகவன்றோ இருக்கின்றனர்" என்கை. நான மட்டுமோ இதைச்சொலலுகிறேன்; "(ராமன்) பாலன்; சஸ்த்ர வித்தையறியான்; தன்னுடையவும் எதிரியினுடையவும் பலாபலங் களையும் அறியான்; அஸ்த்ரபலத்தோடு கூடியவனல்லன்; சண்டை

சாஸ்த்ரப₃லஸம்பந்நோ ந ச யுத்₃த₄விஶாரத₃: ||) என்று பெற்ற தகப்பனகப்பட நெஞ்சாறல் பட்டிலனோ? (தருணௌ) "**यौवने विषयैषिणां**" (யௌவநே விஷயைஷிணாம்) என்கிறபடியே அந்ய பரராய்த் திரிகிறவர்களுக்கும் ஒரு பூசலுண்டோ பொருவது

பாலரான இவ்வளவுமன்றுகாண்; (ரூபஸம்பந்நௌ) "**कन्या कामयते रूपं**" (கந்யா காமயதே ரூபம்) என்றும், "**रूपेण वनिताजनं**" (ரூபேண வநிதாஜநம்) என்றும் ஸ்த்ரீகள் அகப்படுகைக்கு மேனிமினுக்கித் திரியுமத்தனைபோக்கிப் புருஷர்கள் அகப்படும்படியான ஆண்மையுடையவர்களல்லகாண்! (ரூபஸம்பந்நௌ) மூங்கிற்பொந்துபோலே தோலில் பச்சையித்தனைபோக்கி, அகவாயிலுள்ளீடில்லைகாண்!

அதுக்கடியென்? என்னில்: (ஸுகுமாரௌ) ஸ்ரீமத் புத்ரர்களாகையாலே செல்வப்பிள்ளைகளாய்க்காணிருப்பது.

---

யில் தேர்ந்தவனுமல்லன்" [ரா-பா 20-7] என்றுபெற்ற தகப்பனும் வருந்தவில்லையோ என்று பாவம்-(வாலிபர்கள்) 'வா லி ப ர் க ள்' என்றே பொருள் கொண்டாலும், "வாலிபவயதிலே சப்தாதி விஷயங்களை அனுபவிப்பவர்கள் ரகுகுலத்தார்"[ரகுவம்சம் 1-8] என்கிற படியே "விஷயப்ரவணராய்த் திரிகிறவர்களுக்கு சண்டைசெய்ய சக்தியுண்டோ" என்று பாவம்.

பாலரானது மட்டுமன்று; (உருவுடையார்) "கன்னிப்பெண் மணவாளனின் அழகைவிரும்புகிருள்; பெண்ணின் தாய் பணத்தை விரும்புகிருள்; தந்தை கல்வியை விரும்புகிருர்; பந்துக்கள் குலத்தை விரும்புகிருர்கள்; மற்றுள்ளார் நல்ல போஜனத்தை விரும்புகின்றனர்" [ஸுபாஷிதம்] என்றும் "பெண்களை அழகாலே வசப்படுத்த வேண்டும்" என்றும் சொல்லுகிறபடியே பெண்களை வசீகரிக்க மேனிமினுக்கித்திரிபவர்களேயொழிய, புருஷர்களை ஈடுபடுத்தும் ஆண்மையுடையவர்களன்று காண்! (உருவுடையார்) மூங்கில் பொந்துபோலே, பசுகு பசுகென்றுள்ள தோலையுடையவர்களே யொழிய உள்ளே பலமில்லையே.

இதுக்குக் காரணமென்ன? எனில்,— (செல்வப்பிள்ளைகள்) 'ஸுகுமாரௌ' என்று செல்வமாகிற நன்மையையுடைய பிள்ளைகள்

*(ஸுகுமாரௌ)* **"परश्वधहतस्याद्य मन्दप्राणस्य भूतले"** (பரச்வத₄ ஹதஸ்யாத்₃ய மந்த₃ப்ராணஸ்ய பூ₄தலே) *என்கிறபடியே கடைக்கண் சிவந்து நீ பார்க்கும் பார்வையிலே மாயும்படியிருக்கிறவர்களோ உன்னுடைய அத்யுக்₃ரமான ஆயுதங்களைக் பொறுக்கப்புகுகிறீர்கள்?*

*வடிவைப்பார்த்தால் திறவியரல்லராகிலும், கார்யத்தில் வந்தால் திறவியராயிரார்களோவென்னில: (மஹாபலௌ) பலஹீநானவளவேயன்றுகாண்! க்ரமாகதமான ராஜ்யத்தைக் கொடுக்கச்செய்தேயும், அகப்பட ஆளமாட்டாதே ஒதுங்கிப் பெண்டாட்டிக்கு அஞ்சிப் பொகட்டுபபோரும்படி அத்யந்தாபலராய்க்காண் இருப்பது. அன்றியிலே, (மஹாபலௌ) பலவான்கள்தான் ஆனாலும் இவர்களிருவருமித்தனை*

---

என்றபடி. சக்கரவத்தித்திருககுமாரராகையாலே செல்லப்பிள்ளைகளாகவனறோ இருபபது எனகை. (மென்மைமிக்கோர்) "இயற்கையிலேயே மெலலிய ப்ராணனையுடையவனும், என்பரசுவாலே கொல்லப்பட்டவனுமான ராமனுடைய சூடான ரத்தத்தை இன்று நீ குடிப்பாய்" [ரா·ஆ 22-5] என்கிறபடியே கடைக்கண்சிவந்து நீ பார்க்கும் பார்வையிலே அழியும்படி இருப்பவர்களோ உன்னுடைய மிகக்கொடிய ஆயுதங்களைத் தாங்கப்போகிறீர்கள்? "ம்ரியதே இதி மார: குத்ஸிதச்சாஸௌ மாரச்ச குமார: ஸுதராம் குமார: ஸுகுமார:" என்னும் வ்யுத்பத்தியாலே 'மிக எளிதில் அழிபவர்கள்' என்னும் பொருள்கிடைக்கிறது.

ரூபத்தைப்பார்த்தால பலசாலிகளாகத் தோன்றுவிடினும், காரியத்தில பலசாலிகளாயிருப்பதுண்டே; அப்படியிலலையோ எனனில்;- (மிகவும் வலியற்றோர்) மஹா அபலௌ—மஹாபலௌ. பலமற்றவர்கள் என்பது மட்டுமன்று; முறைப்படி வந்த ராஜ்யத்தைத் தந்தை கொடுத்தபோதும், ராஜ்யம் முழுவதையும் ஆளமாட்டாமல ஒதுங்கி, கைகேயியான ஒருபெண்ணுக்கு பயப்பட்டு விட்டுப் போகும்படி மிகவும் பலமற்றவராயனறோ இருப்பது. அன்றிக்கே (வலிமிக்கோர் இருவர்) எனறே கொண்டு "பலம்மிக்கவரானாலும் இருவரேயுள்ளனர்; இவர்களுக்கு வேறுதுணையுண்டோ" என்றுமாம. "மஹதீ அபு₃லா யயோஸ தௌ மஹாபு₃லௌ" [மிகவும் பலமற்ற

போக்கி, இவர்களுக்கு பலமாய் வரப்புகுகிறுர்களுண்டோ? "दृष्टा तत्र मया नारी तयोर्मध्ये सुमध्यमा" (த்₃ருஷ்டா தத்ர மயா நாரீ தயோர் மத்₄யே ஸு⁻மத்₄யமா) என்கிறபடியே காற்கட்டாம்படி குழைச்சரக்காயிருப்பாளொரு பெண்டாட்டியையும முதுகிலேகொண்டு திரிகிறவர்களோ பூசலாடப்புகுகிறுர்கள்?

பூசலாட மாட்டார்களென்று அறிந்தபடியென்னென்னில்,- (புண்டரீகவிசாலாக்ஷௌ) விளைவதறியாமையாலே, 'இவளுக்கு வைரூப்யம் விளைத்தோம்; மேல் என்னுகப்புகுகிறதோ' என்று அவர்கள் வெளுக்க வெளுக்க விழிக்கிற விழியிலேகண்டேன்காண். "पुण्डरीकं सिताम्भोजं" (புணடரீகம் ஸிதாம்பே₄ாஜம) இறே. (புண்டரீகவிசாலாக்ஷௌ) நீரில் தாமரையை வறளிலே இழுப்பாரைப்போலே தன்னிலமான நாட்டுக்கு அவர்கள் ஆளித்தனை போக்கி, வே(ெ)வற்று நிலமான காட்டுக்கு அவர்கள் ஆளல்லர் என்னுமிடம் அவர்கள் கண்கள் தானே சொல்லித்தருகிறனகாண்!

---

பெண்பிள்ளையான ஸீதையை உடையவர்கள் மஹாபலர்கள் என்று கொண்டு "'அவர்களுககு நடுவில் அழகிய இடையை உடையவளான ஓர் பெண்பிள்ளை என்னுல் காணபபட்டாள்' [ரா-ஆ20-17] எனகிறபடியே கால்கட்டாகும்படி அபலையான பெண்பிள்ளையொருத்தியையும சுமந்துதிரிபவர்களோ சண்டை செய்யப் போகிறுர்கள்" என்றபடி.

சண்டை செய்யமுடியாதவர்கள் என்று அறிநதது எப்படி எனில்: (தாமரைத்தடங்கண்ணா) மேலே என்ன வரப்போகிறதோ என்று அறியாமையாலே, 'இவளை அங்கபங்கம் செய்துவிட்டோமே என்ன நடக்குமோ?' என்று பயத்தாலே கண்கள் வேளுத்து விழிக்கிற விழியிலிருந்தே சண்டை செய்யமுடியாதவர்களென்று அறிந்தேன்காண்! "வெண்தாமரை புண்டரீகமெனப்படும்" எனறு அமரகோசத்தில் சொல்லப்பட்டதன்றே. (தாமரைத் தடங்கண்ணர்) நீரிலுள்ள தாமரையை வரண்டநிலத்திலே இழுத்துவைத்திருப்பாரைப்போலே இருந்தது அவர்கள் கண்களையும் அவர்களையும் பார்த்தால். தங்கள் வாழ்விடமான நாட்டில் வாழத்தகுந்தவர்களேயொழிய, வேற்றுநிலமான காட்டில் வாழத்தகாதவர்கள் என்னும் விஷயத்தை அவர்கள் கண்களே கோள் சொல்லித்தருகின்றனகாண்!

'அவர்தாங்கள் அசக்தரானல் ஐச்வர்யத்தாலே படையாண்டு போரத்தட்டென்' என்றிருக்கவேண்டா; (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) உடுக்கைக்கு ஒரு புடவையகப்படலன்றியிலே காட்டில் மரத்தோலையும் மான்தோலையும் உடுத்தித்திரிகிறவர்களோ காசுநேர்ந்து படையாளப் புகுகிறார்கள்? (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) உடுக்கிற புடவையிரண்டும் ஏகஜாதீயமாகப்பெற்றதோ? உள்ளுடையொன்றும், மேலுடையொன்றுமாயன்றோ இருக்கிறது. (சீரக்ருஷ்ணஜிநாம்பரௌ) ஸ்தாவரமொன்று கொடுக்க, ஜங்கமமொன்று கொடுக்க, இப்படி பலர்பக்கலாக இரந்தன்றோ இதுதானும் உடுக்கிறது.

பௌருஷோபபாதக யோஜனையில்;—(தருணௌ) **"ऊनषोडशवर्षः"** (ஊநஷோடஸவர்ஷ:) என்னும்படியான பிள்ளைப்பருவமுமன்றியிலே, **"अनेकवर्षसाहस्रो वृद्धस्त्वमसि पार्थिव"** **(அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ் த்வமஸி பார்த்திவ)** என்னும்படி முதிர்ந்த பருவமுமன்றியிலே, பூசலென்றால்

---

அவர்களுக்கு சக்தியில்லாவிடில், செல்வத்தைக்கொண்டு படைதிரட்டிச் சண்டை செய்யக்கூடாதோ என்று நினைக்கவேண்டா;—(மரவுரிமான்தோலுடுத்தோர்) உடுப்பதற்கு ஒரு வஸ்திரமும் அகப்படாமல் காட்டிலுள்ள மரத்தோலையும மான்தோலையும் உடுத்துத்திரியுமவர்களோ பணம் கிடைத்துப் படையெடுக்கப்போகிறார்கள்? (மரவுரிமான் தோலுடுத்தோர்) உடுக்கும் வஸ்திரம் இரண்டும் ஓரே ஜாதியாகக்கூடக் கிடைக்கவில்லைபோலும்! உள்ளேஉடை ஒருஜாதியாகவும், மேலுடை ஒருஜாதியாகவுமிருக்கும்படியன்றோ அவர்களுடைய ஏழ்மை. (மரவுரி மான்தோலுடுத்தோர்) மரம் மனமிரங்கி ஒன்று கொடுக்க, மான் நெஞ்சிரங்கி ஒன்றுதர, இப்படிப் பலரிடம் யாசித்தன்றோ இதையுமுடுப்பது.

ராமலக்ஷ்மணர்களின் ஆண்மையைச் சொல்லும் பொருள் பின் வருமாறு:- (வாலிபர்) "பதினாறு பிராயமும் நிரம்பப்பெருதவன் ராமன்" [ரா-பா 20-2] என்னுமபடியான பிள்ளைப்பருவமுமன்றியிலே, "அரசனே! பல்லாயிரம் வருடங்களாண்ட கிழவனாயிருக்கிறாய் நீ" [ரா-அ 2-21] என்னும்படியான முதிர்ந்த பருவமுமல்

'காட்டு காட்டு' என்று வரும்படியான நல்ல பருவங்காண்! (தருணௌ) "**यौवने विषयैषिणां**" (யௌவநே விஷயைஷிணாம்) என்றும், "**राज्यकामविषया विभेदिरे**" (ராஜ்யகாமவிஷயா விபே$_4$ தி$_3$ரே) என்றும், "**भवद्विषयवासिनः**" (ப$_4$வத்$_3$விஷயவாஸிந:) என்று விஷயசப்தம் ராஜ்யவாசியாகையாலே, இன்னம் ராஜ்யம் கொள்ளவேணுமென்று மேலே விஜிகீ$_3$ஷுக்களாம் பருவங் காண். (தருணௌ) இப்பருவமுடையார் ஒருவர் அமைந் திருக்க இருவர் கூடினால் இயலாததுண்டோ?

இப்பருவமும் யோக்யதையுமாய் வடிவுபார்த்தால் இவர் கள் என்ன பூசல்பொருவது என்னும்படி ஆப$_4$ாஸமா யிருக்குமோ? என்னில்: (ரூபஸம்பந்நௌ) "**सिंहोरस्कं महाबाहुं**" (ஸிம்ஹோரஸ்கம் மஹாப$_3$ாஹும்) என்கிறபடியே வேறொரு ஆயுதம் வேண்டாதபடி அவர்கள் தோளையும், மார்பையும்

---

லாமல் சண்டையென்றால் "காட்டு, காட்டு" என்று ஆசைப்படும் படியான நல்லபருவமன்றோ. (வாலிபர்) "யௌவனத்தில் ராஜ்யத் தில் விருப்பமுள்ளவர்கள் ரகுகுலத்தார்" [ரகுவம்சம் 1-8] என்றும் "ராஜ்யத்தின்மேலுள்ள விருப்பத்தால் வேறுபட்டனர்" [ ] என்றும், மேலும் ராஜ்யத்தை ஜெயிக்கவேணும் என்னும் ஆசை மேன்மேலும் பெருகிவரும் பருவங்காண். "உம்முடைய விஷயத் திலே–ராஜ்யத்திலே–வஸிக்கும் நாங்கள் உம்மால் ரக்ஷிக்கத்தக்கவர் கள்" [ரா-ஆ 1-20] என்பது போன்றவிடங்களில் விஷயசப்தம் ராஜ்யமென்னும் பொருளையும் உடையதாகையாலே 'விஷயைஷிணாம்' என்ற பதத்துக்குமேலே காட்டியபடி பொருள் கொள்ளப்பட்டது. (வாலிபர் இருவர்) இப்பருவமுடையவர்கள் ஒருவரே ஊரையழிக்கப் போதுமாயிருக்க, இருவர் கூடினால் ஆகாததுண்டோ?

இப்பருவமும் இத்தாலுண்டான ஆண்மையுமேயுள்ளதாய், உருவத்தைப் பார்த்தால் 'இவர்களா சண்டைசெய்யப்போகிறார் கள்?' என்று சொல்லும்படி நலிந்தும்மெலிந்துமிருக்குமோ என்னில்: (உருவுடையார்) "சிங்கத்தினுடையதுபோன்ற மார்பையும் பெரிய கைகளையும் உடைய இராமபிரானைக்கண்டு காமத்தால் மயங்கினாள் சூர்ப்பணகை" [ரா-ஆ 17-7] என்கிறபடியே வேறொரு ஆயுதம் வேண்டாதபடி அவர்கள் தோளையும் மார்பையும் கண்டபோதே

கண்டபோதே எதிரிகள் கால்வாங்கும்படியாய்க்காண் இருப்பது. (ரூபஸம்பந்நௌ) ரூபமென்று மதிப்பாய் இப்பருவங் கொண்டு அநுமிக்கையன்றிக்கே. “गत्वा सौमित्रिसहितो नाविजित्य निवर्तते” (க₃த்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்ய நிவர்த்ததே) என்றும், “यशसश्चैकभाजनं” (யஶஸசைக பா₄ஜநம்) என்றும் சொல்லுகிறபடியே அயோத்₄யாபரிஸரம் துடங்கி ஸுபா₃ஹுமாரீசாதி₃வத₄ம் பண்ணினத்தாலே பெருமதிப்பராயிருக்கிறவர்களல்லவோ என்னுகவுமாம்.

இப்படி விரோதிவதம் பண்ணுமிடத்தில வருத்தத்தோடே க்லேசித்தோ பண்ணுவது? என்னில்: (ஸுகுமாரௌ) அவர்கள் ஆண்மைத்தனத்தில் வந்தால் ஒரு வகைக்குச் சிறிது சொல்லலாமித்தனைபோக்கி, வடிவழகைப் பார்த்தால் பஹுமுகமாய், பொல்லாதாயிருக்கையன்றிக்கே அதயந்தம் அபி₄ரூபமாய்க்காண் இருப்பது. (ஸுகுமாரௌ)

---

எதிரிகள் பின்னிட்டு ஓடும்படியன்றே இருப்பது. (உருவுடையார்) ரூபமென்று ப₃லாட்₄யரூபப₂லமான மதிப்பைச் சொல்லுகிறதாய் “தருணௌ–வாலிபர்” என்னும் இப்பருவத்தைப்பார்த்து ‘நலல ரூபமுடையாராய்த்தானிருப்பார்’ என்று அனுமானம செய்யவேண்டாதபடி அநபி₄ப₄வநீயத்வமாகிற–பிறரால வெல்லவொண்ணாமையாகிற–ப₂லபர்யந்தமான ரூபத்தோடு நன்கு கூடியிருப்பவர்கள்–(ஸம்பந்நர்கள்)—என்றும் கொள்ளலாம். “இலக்குவனோடு சண்டைக்குச் செல்லும் ராமபிரான் ஜயிக்காமல் திரும்பமாட்டான் [ரா-அ 2-37] என்றும், “வீரஸ்ரீயால் வந்த புகழுக்கு ஓரேயிருப்பிடமாயிருப்பவன ராமன்” [ரா-கி 15-19] என்றும் சொல்லுகிறபடியே அயோத்தியின் சுற்றுப்புறங்களில் அடிவைத்ததிலிருந்து ஸுபாஹுமாரீசாதிகளை தண்டித்ததாலே ப₃லாட்₄யரூபபலமான பெரிய மதிப்பையுடையவர்களல்லவோ என்றுபாவம்.

இப்படி ஸுபாஹுமுதலிய விரோதிகளை தண்டிக்கும்போது மிகவருந்தி தேஹச்ரமத்தோடேயோ தண்டிப்பது? என்னில் (ஸுகுமாரர்கள்) “ஸுதராம குமாரௌ–ஸுகுமாரௌ” விரோதிவதம் பண்ணும் போதும் கிலேசம் சிறிதுமில்லாமல், வடிவழகில் சிறிதும் குறையாமல் மிகவழகியவர்களாகவேயிருப்பவர்கள். அவர்களுடைய ஆண்மைத்தனத்தை வர்ணிக்கப்புகுந்தால் சிறிதே சொல்லலாம்; அது பொல்லாததாயிருக்கும். வடிவழகோவெனில் பஹுமுகமாயிருக்

அவர்களுமாய்ச் சிறிப்புறப்பட்டார்களாகில் முன்னே வந்த நாலிரண்டுபேரைக கொன்றுவிடுமளவேயோ? "सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत्सशैलं परिवर्तयामि" (ஸதே₃வக₃ந்த₄ர்வமநுஷ்யபந்நக₃ம் ஜக₃த் ஸஶைலம் பரிவர்த்தயாமி) என்றும், "सागरमेखलां महीं दहति कोपेन" (ஸாக₃ரமேக₂லாம் மஹீம் த₃ஹதி கோபேந) என்றும் பூமியை இருந்ததேகுடியாக நசிப்பியார்களோ?

இப்படி நசிப்பிப்பது எது கைம்முதலாக? என்னில்;– (மஹாபலௌ) தோள்வலியே கைம்முதலாய்க்காண் இருப்பது. (மஹாபலௌ) மஹச்சப்தத்தாலே கேவலம் பாஹுபலமேயன்று, மநோபலமுடையவர்கள்; கேவலம் மநோபலமேயன்று, பாஹுபலமுடையவர்கள் என்று இரண்டை

கும்; மிகவும் அழகிதாயிருக்கும். [இது 'ஸுதராம்' (மிகவும்) என்னும் பொருளுள்ள 'ஸு' என்னும் பதத்தின் பொருள்.] (ஸுகுமாரர்கள்)'கு' சப்தம்பூமியைச்சொல்லும்; "ம்ரு-ஹிம்ஸாயாம்" என்னும் தாது மரணபாயந்தமான ஹிம்ஸையைச்சொல்லும். ஆக, 'குமாரௌ' என்று பூமியிலுள்ளாரை மரணமடைவிப்பவர்களென்ற படி. "ஸுகுமாரௌ' என்று பூமியிலுள்ளார் அனைவரையும் ஒருவர் பாக்கியில்லாமல் மரணமடைவிப்பவர்கள் என்று பொருளாகிறது. "தேவர்களோடும் கந்தருவர்களோடும் மனிதர்களோடும் பாம்புகளோடும் பர்வதங்களோடும் கூடிய உலகம் முழுவதையும நான தலைகீழாக்கிவிடுவேன்" [ரா-ஆ 64-78] என்று ராமபிரானும் "ராமபிரான் க்ஷேமமாயிருந்தாராகில், ஊழிகால நெருப்பைப்போலே கிளம்பிக்கடல் சூழ்ந்த பூமியைக்கோபத்தாலே எரிககவில்லையே" [ரா-ஸு 36-15] என்று பிராட்டியும் அருளிச்செய்தது இவ்விஷயத்தில் ப்ரமாணம.

இப்படி பூமிமுழுவதையும் அழிப்பது எதைக்கொண்டு என்னில் (வலிமிக்கோர்) தோள்வலியைக்கொண்டன்றோ இது செய்வது என்கை. (வலிமிக்கோர்) மிகுந்த பலமுடையார் என்கையாலே சிலரைப்போலே தோள்பலம் மாத்திரமுண்டாய், மநோபலமில்லாமலும், மற்றும் சிலரைப்போலே மநோபலம் மாத்திரமுண்டாய் தோள் வலியில்லாமலும் இராமல் இரண்டுமுடையவர்கள் என்று

யும் நினைத்துச் சொல்லுகிறாள். (மஹாபலௌ) உன்னுடைய சதுரங்கபலமும் அஸத்கல்பமாம்படிகாண் அவர்கள் பலத்தின் மிகுதியிருக்கும்படி. (மஹாபலௌ) நெடும்போது யுத்தம்பண்ணினாலும் ச்ரமம் தட்டாதபடி பலாதிபலைக ளென்கிற வித்யைகள் உடையராய்க்காண் இருப்பது.

இப்படிக்கு ச்ராந்தி தட்டாதென்று அறிந்தபடியென் னென்னில்: (புண்டரீக விசாலாக்ஷௌ) வேற்றுநிலமான இக்காட்டிலே திரியச்செய்தேயும் தன்னிலத்திலே நின்ற தாமரையைப்போலே அக்கண்ணில் செவ்விதானே சொல்லா நின்றதுகாண்! (புண்டரீக விசாலாக்ஷௌ) எதிரிகளென்றால் அவர்கள்பக்கலிலே ஒரு கௌரவத்தைப்பண்ணிச் சிறுத்தல் பெருத்தல் செய்கையன்றிக்கே அவிக்ருதமாய்க்காண் கண்க ளிருப்பது. (புண்டரீக விசாலாக்ஷௌ) **"प्रीतिविस्फारितेक्षणं"** **(ப்ரீதிவிஸ்பாரிதேக்ஷணம்)** என்று எதிரிகளைக்கண்டால்

---

நினைத்துச்சொல்லுகிறாள். (வலிமிக்கோர்) ரதகஜதுரகபதாதி களடங்கிய உன்னுடைய சதுரங்கபலமும் -[பலம்-ஸேனை]- இல்லாத பொருள் என்று சொலலத்தகுந்ததாயன்றோ அவர்களுடைய பலத்தின் மிகுதியிருப்பது. (மஹாபலர்கள்) நெடுநேரம் சண்டைசெய் தாலும் களைப்படையாதபடி பலை, அதிபலை என்னும் வித்தைகளை விச்வாமித்திரரிடமிருந்து பெற்றவர்களாயன்றோ உள்ளனர் என்று மாம். "மஹதீ பலா யயோஸ்தௌ-மஹாபலௌ" என்று பலை யென்னும் பெரிய வித்தையையுடையவர்கள் மஹாபலராகின்றனர். இங்கு பலையைச்சொன்னது அதிபலைக்கு உபலக்ஷணம்.

இப்படிக் களைப்படையாதவர்கள் என்று எப்படி அறிந்தா யென்னில்;- (தாமரைத்தடங்கண்ணர்) வேற்றுநிலமான இக்காட் டிலே திரியும்போதும், தன்நிலமாகிற நீரில் நின்ற தாமரைபோன்ற அக்கண்ணின் அழகே களைப்பில்லையென்று காட்டித்தருகிறதுகாண்! (தாமரைத்தடங்கண்ணர்) எதிரிகளைக்கண்டால் அவர்களை மேலாக மதித்து பயத்தாலே சிறுப்பதும், ஆச்சரியத்தாலே பெருப்பதும் செய்யாமல் என்றும் ஒரே பரப்பையுடையதாகவன்றோ கண்களிருப் பது. (தாமரைத்தடங்கண்ணர்)"எதிரிகளைக்கண்ட ஆநந்தத்தாலே பெரிதான கண்களையுடைய ராமபிரானை" [ரா- ] என்று

உருவுகையன்றிக்கே. மேனாணிப்பாலே ஒருகாலைக்கொருகால் விஸ்ந்ருதங்களாய்க்காண் கண்களிருப்பது.

எதிரிகளென்றால் இப்படி முகம் மலருகைக்கு அடியென்ன? பூசலுக்கென்றுகட்டியுடுக்துஸந்நத்₃த₄ராலன்றோ அப்படியே இருக்கலாவது; அநவஸரத்தில் வந்து தோற்றினாருண்டாகில் செய்யுமதென்னென்னில்: (சீரக்ருஷ்ணஜிநாம் பரௌ) "सन्नद्धौ विचरिष्यतः" (ஸந்நத்₃தௌ₄ விசரிஷ்யத:) என்கிறபடியே உள்ளுடையும் இறுக்கி உடும்புக்கிடுமிட்டு ஸந்நத்₃த₄ராய்க்காண் அவர்களிருப்பது. (சீரக்ருஷ்ணஜிநாம் பரௌ) காட்டிலே ஸர்வவித₄ஸத்வங்களையும் வேட்டையாடித் திரிகிறவர்களாகையாலே உடைத்தோலும் மரச்சட்டையுமாய்க்காண் அவர்களிருப்பது.

ஆகவிப்படி. "सत्येन लोकान् जयति दीनान् दानेन राघवः। गुरून् शुश्रूषया वीरो धनुषा युधि शात्रवान्" (ஸத்யேந லோகாந் ஜயதி

---

எதிரிகளைக் கண்டால் வாட்டமடைகையன்றிக்கே, கர்வத்தாலே மேலும்மேலும பெரிதாகிவருமவையாயன்றோ அவர்களுடைய கண்களிருப்பது.

எதிரிகளைக்கண்ட மாத்திரத்தில், தாமரைத்தடங்கண்ணராய் முகம் மலருவதற்குக காரணமென்ன? சண்டைக்கென்றேற்பட்ட உடையுடுத்து யுத்தஸந்நத்தராலன்றோ இப்படி முகம் மலரலாம். தகாதகாலத்தில் எதிரிகள் வந்து தோன்றினால் என்செய்வது? முகம மலரமுடியுமோ? என்னில்: (மரவுரி மான்தோலுடுத்தோர்) "யுத்த ஸந்நத்தராய் (உடையுடுத்துத்) திரிவார்கள்" [ரா ] என்கிற படியே உள்ளுடையான மரவுரியையும் இறுகக்கட்டி, மேலுடம்புக்கு இடுவதான மான்தோலையும் உடுத்து யுத்தஸந்நததராயன்றோ அவர்களிருப்பது. (மரவுரி மானதோலுடுத்தோர்) காட்டிலே ஸ்தாவரஙகளோடு ஜங்கமங்களோடு வாசியற எல்லாவிதமான பிராணிகளையும் வேட்டையாடித் திரிகிறவர்களாகையாலே அவர்களுடைய உடை மான்தோலாலும் சட்டை மரப்பட்டையாலும் ஆனதாக வன்றோ இருப்பது.

ஆக, "ராமபிரான் உலகங்களை உண்மையுரைப்பதாலே வசப்படுத்துகிறான்; எளியோரை தானத்தாலே தோற்பித்துக்கொள்ளு

**தீ₃நாங் த₃ாநேந ராக₄வ:। கு₃ரூங் ஶுச்ருஷயா வீரோ த₄நுஷா யுதி₄ ஶாத்ரவாங் ||)** *என்கிறபடியே அபலைகளை அழகாலே அழித்தும், அரிகளை பலத்தாலே அழித்தும், அக₃திகளை அருளாலே அளித்தும் தக்கார்க்குத் தக்க கருவிகளை உடையராய்க்காண் அவர்களிருப்பது. ஆனபின்பு "வலலாளன் தோளும் வாளரக்கன் முடியும் தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான்" என்கிறபடியே நான் மூக்கறுப்புண்டாப் போலே நீயும் முடியறுப்புண்டு போமித்தனைபோக்கி, அவர்களோடுபுக்கால் ப₂லியாதுகாண் என்று பரிப₄வித்துச் சொல்லுகிருள்.*

**ஆரண்யகாண்டம 30-வது ஸர்க்கம் 39-வது ச்லோகம**

**तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम्।**
**बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे॥**

**தம் த்₃ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணும் ஸுக₂ாவஹம்।**
**ப₃பூ₄வ ஹ்ருஷ்டா வைதே₃ஹீ ப₄ர்த்தாரம் பரிஷஸ்வஜே||**

**பதவுரை:—ஶத்ருஹந்தாரம்**—*எதிரிகளை அழித்தவரும்,* **மஹர்ஷீணும் ஸுக₂ாவஹம்**—*மஹர்ஷிகளுக்கு ஸுகமளிப்ப*

---

கிருன்; பெரியோர்களைக் கைங்கரியத்தாலே ஈடுபடுத்துகிருன்; யுத்தத்தில் எதிரிகளை வில்லாலே வெற்றிகொள்கிருன்." [ரா-அ 12-29] என்கிறபடியே, "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ" என்னும் அழகாலே அபலைகளான பெண்களை வெற்றிகொண்டும, எதிரிகளை "மஹாபலௌ" என்கிற பலத்தாலே ஜயித்தும், கதியற்றவர்களை "புண்டரீகவிசாலாக்ஷௌ" என்கிற கண்ணிலிருந்து பொழியும் அருளாலே ரக்ஷித்தும் இம்மாதிரியாக அவரவர்களை வெற்றிகொள்ளத்தகுந்த அழகு, பலம், அருள் முதலிய உபகரணங்களை உடையவர்களாயன்றே அவர்களிருப்பது; ஆகையால் "வல்லாளன் தோளும் வாளரக்கன முடியும தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான்" [பெரியாழ்-திரு 4-2-2] எனகிறபடியே நான் மூக்கறுப்புண்டாப்போலே நீயும் தலையறுப்புண்டு போவாயே யொழிய, அவர்களோடு சண்டை செய்யப்புகுந்தால் பலிக்காது காண்! என்று கரனை அவமதித்துச்சொல்லுகிருள்.

*வருமான,* **தம்**—*அவ்விராமபிரானை,* **த்₃ருஷ்ட்வா**—*பார்த்து,* **வைதே₃ஹீ** — *ஸீதாபிராட்டி,* **ப₃பூ₄வ**—*ஸத்தைப்பெற்ருள்;* **ஹ்ருஷ்டா (ச)**—*ப்ரீதியடைந்தாள்,* **ப₄ர்த்தாரம் பரிஷஸ்வஜே (ச)**—*கணவனை அவரை நன்கு தழுவினள்.*

**அவதாரிகை:—"चतुर्दशसहस्राणि" (சதுர்த₃ஶஸஹஸ்ராணி)** *இதிப்ரக்ரியையாலே ராக்ஷஸவேட்டையாடின பெருமாளுடைய யுத்₃த₄ஶ்ரமாஸபரிஸ்விந்நமான திருமேனியில் ராக்ஷஸ ஶரவ்ராத வ்ரணரோபண திவ்யௌஷத₄மான கா₃ட₄ாலிங்க₃னத்தைப்பண்ணி, பிராட்டி ஸத்தை பெற்ருள் என்கிறது.*

**வ்யா:**—*(தம்)* **"स्त्रियं पुरुषविग्रहं" (ஸ்தரியம் புருஷவிக்₃ரஹம)** *என்று விண்ணப்பம்செய்யவேண்டும்படி, "ராக்ஷஸபூயிஷ்டமான தேசத்தில் உன்னைக் கொண்டுபோக அஞ்சுவேன்" என்றவரை. (தம்)* **"स्त्रियं पुरुषविग्रहं"(ஸ்த்ரியம் புருஷவிக்₃ரஹம்)** *என்று பிராட்டி வாயாலே அநுமதமாக ஆண்ட அன்று துடங்கித் திருவுள்ளத்திலே கறுவியிருந்து, பதினலாயிரம்*

---

*அவ.*— **"சதுர்த்த₃சஸஹஸராணி ரக்ஷஸாம் பீ₄மகர்மணும் ஹதாந்யேகேந ராமேண மாநுஷேண பத₃ாதிநா"** *[ரா-ஆ 26-35] [பயங்கரச் செயலையுடைய பதினலாயிரம் ராக்ஷஸர்களும், தரையிலே நிற்கும் மனிதனை ராமன் ஒருவனலேயே கொலலப்பட்டனர்.] என்கிறபடியே ராக்ஷஸவேட்டையாடி நின்ற ராமபிரானுடைய, யுத்தத்தால் களைப்படைந்து வேர்த்திருககும் திருமேனியில், ராக்ஷஸர்களுடைய அமபுக்கூட்டங்களாலேற்பட்ட புண்களுக்கு அருமருநதாயிருக்கும் தன் கா₃ட₄(गाढ)மான ஆலிங்கநத்தைச்—இறுக அணைத்தலைச்—செய்து பிராட்டி ஸத்தைபெற்ருள் என்கிறது.*

**வ்யா:**—*(அவரை)* **"ஆணுருக்கொண்ட பெண்ணகிற உம்மை மாப்பிள்ளையாகப்பெற்ற தந்தையார் என்ன நினைப்பார்?"** *[ரா-அ 30-3] என்று பிராட்டி விண்ணப்பம் செய்யவேண்டும்படி, "அரக்கர்கள் நிறைந்த தேசத்தில் உன்னை அழைத்துப்போக அஞ்சுகிறேன்" என்றவரை. (அவரை) "ஆணுருக்கொண்ட பெண்ணை" என்று பிராட்டி திருவுள்ளத்தில் நினையாவிடினும் வாயாலே சொன்ன அன்றுமுதல் தம்நெஞ்சிலே அதை வைத்திருந்து, பதினலாயிரம்*

ராக்ஷஸரையும் முடியும் உடலுமாகத் தறித்து, உதிரவெள்ளத்திலே மிதக்கவிட்டுப பிராட்டியைக் கைப்பிடித்துக் கொண்டு காட்டினவரை. (தம்) "आदित्य इव तेजस्वी" (ஆதி₃தய இவ தேஜஸ்வீ) இத்யாதிப்படியே, வீரபபாட்டுக்குச் சிறு விரல் முடக்குமபடி அவதீர்ணரானவரை. (தம்) படுக்கைத் தலையிலே விடுபூவிழுந்து திருமேனி சிவக்கும் ஸௌகுமார்யாதிசயத்தை உடையவரை. (தம்) உகப்பாலே அடுத்துப பார்க்கில் நாயநமான தேஜஸ்ஸுக்கும் அஸ்தானமான திருமேனியுடையவரை. (தம்) ரிஷிகளுக்குப் பண்ணின ப்ரதிஜ்ஞையைக் கடலோசையாகாதபடி தலைக்கட்டுகையாலே பூர்ண(மநோரத)ரானவரை. (தம்) ரத்நகூசிதமான பொனனரிமாலைபோலே ஶத்ருஶரவ்ராதவ்ரணாங்கிதமான திவ்யமங்களவிக்ரஹத்தை உடையவராயுள்ளவரை.

---

ராக்ஷஸர்களையும் தலைவேறு உடல்வேறாக வெட்டி ரத்தவெள்ளத்திலே மிதக்கவிட்டுப் பிராட்டியைக் கைப்பிடித்து அழைத்துச் சென்று, 'ஆணுடையுடுத்த பெண்ணின் செயலிருந்தபடி கண்டாயே?' என்று சொலலாமற் சொல்லிக்காட்டியவரை. (அவரை) "ஸூர்யனைப்போலே தேஜஸ்ஸையுடையவர் ராமபிரான்" [ரா-ஸு 34-28] என்னும் சுலோகத்திற் சொன்னபடியே வீரர்களில் அக்ரகண்யராக—முதலில் எண்ணத்தகுந்தவராக — அவதரித்தவரை. (அவரை) பள்ளியறையில் சயனித்துக்கொணடிருக்குமபோது. மேலே கட்டியிருக்கும பூக்கள் உதிர்ந்து திருமேனி கன்றிச்சிவக்குமபடியான மென்மைமிகுதியையுடையவரை. (அவரை) பிரீதியாலே அருகில்வந்து உற்றுப்பார்த்தால், (அக்னியினால போஷிக்கப்படும்) கண்ணாகிற இநதிரியத்திலிருந்து புறப்படும் ஒளியையும் பொறுக்க மாட்டாமல கனறிச்சிவக்கும திருமேனியை உடையவரை. (அவரை) "உற்றுறவினரோடு கூடிய ராவணனை அழிக்கிறேன்" என்று ரிஷிகளுக்குப் பண்ணிய ப்ரதிஜ்ஞையைப் பொருளற்ற கடலோசை போலேயாகாதபடி நிறைவேற்றுகையாலே (மநோரதம்) நிறைவு பெற்றவரை. (அவரை) சிவந்த ரத்தினத்தாலான பொன்மாலையால் அலங்கரிப்பதுபோலே, எதிரிகளின் அம்புக்கூட்டங்களாலுண்டான புண்களாலே அடையாளமிடப்பட்ட திவ்யமங்களத் திருமேனியை உடையவராயிருப்பவரை.

(த்ருஷ்ட்வா) கருமுகைமாலையைப் பன்னீரிலே தோய்த்தெடுப்பாரைப்போலே, யுத்$_3$க$_4$ாயாஸ பரிஸ்விந்நமான திருமேனியைத் தன் பார்வையான பன்னீராலே வழிய வார்த்து. (த்ருஷ்ட்வா) ஆதபாபி$_4$பூ$_4$தருடைய ஶீததடாகப்ரவேஶம் போலே. ராக்ஷஸஶரநிகராபி$_4$பூ$_4$தமான திருமேனியைத் தன் பார்வையாகிற பூர்ணதடாகத்திலே தோய்த்தெடுத்து.

(ஶத்ருஹந்தாரம்) ப்ரதிபக்ஷநிரஸநத்தாலே வந்த புகருடைமை. **"समोऽहं सर्वभूतेषु"** (ஸமோऽஹம் ஸர்வபூ$_4$தேஷு) என்கிற பெருமாளுக்கு ஶத்ருக்களுண்டோவென்னில்: **"ज्ञानी त्वात्मैव"** (ஜ்ஞாநீ த்வாத்மைவ) **"मम प्राणा हि"** (மம ப்ராணா ஹி) இத்யாதிகளாலே ஆஶ்ரிதவிரோதிகள் தனக்கு விரோதிகளாமித்தனையிறே.

---

(பார்த்து) மென்மைமிக்க கருமுகை மாலையைப் பன்னீரிலே தோய்த்தெடுப்பாரைப்போலே, சண்டைசெய்த களைப்பால் வேர்த்து நிற்கும் திருமேனியைத் தன்பார்வையாகிற பன்னீராலே குளிப்பாட்டி. (பார்த்து) ஸூர்யனால் களைப்படைந்தவர்கள் குளிர்ந்த குளத்திலே குடைந்தாடுவதுபோலே, ராக்ஷஸ ச்ரேஷ்டர்களாலே—(அசநிகர:— இந்த்$_3$ர:, ராக்ஷஸாசநிகரா:—ராக்ஷஸேந்த்$_3$ரா:, ராக்ஷஸ ச்ரேஷ்ட$_2$ா இத்யர்த்த$_2$:)—(தங்களுடைய வஜ்ராயுதம் போன்ற) அம்புகளாலே அடிகப்பட்ட திருமேனியைத் தன்நோக்காகிற நிறை குளத்திலே நீராட்டியெடுத்து.

(எதிரிகளை அழித்தவரை) எதிரிகளை அழித்ததாலுண்டான ஒளியுடைமையைச் சொல்லுகிறது. "நான் எல்லா ஜீவராசிகளுக்கும் (என்னை அடையும் விஷயத்தில்) ஒருபடியாயிருப்பவன்" [கீதை9-29] என்கிற ஸர்வேச்வரனை ராமனுக்கு எதிரியுண்டோ? என்னில்: "ஞானியோவெனில் எனக்கே த$_4$ாரகன் என்பது என்நினைவு" [கீதை 7-18] "த்$_3$விஷத$_3$ந்நம் ந போ$_4$க்தவ்யம் த்$_3$விஷந்தம் நைவ போ$_4$ஜயேத் பாண்ட$_3$வாந் த்$_3$விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்ட$_3$வா:" [பார—உத்74-27] [த்வேஷிப்பவனின் அன்னம் புஜிக்கத்தக்கதன்று; த்வேஷிப்பவனை புஜிப்பிக்கவும் கூடாது; அரசனே! நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய். பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ.] என்பது முதலான ப்ரமாணங்களாலே அடியார்க்கு எதிரிகள் தனக்கு எதிரிகளாயன்றோ எமபிரானுக்கிருப்பது.

*(மஹர்ஷீணும் ஸுக$_2$ாவஹம்)யுத்$_3$த$_4$ப்ராரம்ப$_4$ம் துடங்கி, 'கிம் ப$_4$விஷ்யதி' என்று வயிறுபிடித்து து:க்கிதராயிருந்த மஹர்ஷிகளுடைய பயம்தீர ஶத்ருக்களடங்கக்கொன்று, அவர்களுக்கு ஸுக$_2$ாவஹராயிருப்பவரை. (மஹர்ஷீணும் ஸுகா வஹம்) தம்முடைய போஷ்ய குடும்பத்துககு ஸுகத்தைப் பண்ணித் * தம்முடைய ஸத்தைக்கு ஆபாத$_3$கரானவரை.*

*(பபூவ) மாலையும் மணமும்போலே அத்யந்தம் ஸுகுமாரரான விக்ரஹத்தையும் ஸ்வபாவத்தையுமுடைய பெருமாள், கடி$_2$நக$_3$ாத்ரஸ்வப$_4$ாவரான முரட்டுராக்ஷஸரோடே யுத்தம் ப்ராரம்பி$_4$த்தபோது துடங்கி ப்ரேமாதிஶயத்தாலே மாண்டுகிடந்த பிராட்டி, திருமேனியிலே தீங்கின்றியிலே நின்ற பெருமாளைக்கண்டு ஸத்தைபெற்றாள் என்கிறது.*

---

*(மஹர்ஷிகளுக்கு ஸுகமளிப்பவரை) சண்டை ஆரம்பித்தது முதல் 'என்வருகிறதோ?' என்று (பயத்தாலே வலிககும்) வயிற்றைப் பிடித்துக்கொண்டு துன்புற்று நிற்கும் மஹர்ஷிகளுடைய பயம் தீர எல்லா எதிரிகளையும் அழித்து அவர்களுக்கு ஸுகமளப்பவராயுள்ளவரை. (மஹர்ஷிகளுக்கு ஸுகமளிப்பவரை)* "தே வயம் ப$_4$வதா ரக்ஷ்யா ப$_4$வத்$_3$ விஷய வாஸிந:" *[ரா-ஆ 1-20] [உம்தேசத்திலே உம்மையண்டி வஸிககும் நாங்கள உம்மாலே ரக்ஷிக்கப்பட வேணடியவர்கள்]எனகிறபடியே தம்மால் போஷிக்கபபடவேண்டிய குடும்பம போன்றவர்களான மஹர்ஷிகளுக்கு ஸுகமளித்துத் * தம்முடைய ஸ்வரூபத்தை உண்டாக்கிக்கொண்டவரை.*

*(ஸத்தைபெற்றாள்) "பூ$_4$ ஸத்தாயம்" என்றுதாது. மாலையும், அதிலுள்ள மணமுமபோலே மிகவும் மென்மையுள்ள திருமேனியையும அதிலுள்ள ஸௌகுமார்யாதி ஸ்வபாவங்களையுமுடைய ராமபிரான, முரட்டு மேனியையும் தன்மையையும் உடைய அரக்கரோடு சண்டைசெய்ய ஆரம்பித்ததிலிருந்து அன்பின் மிகுதியாலே ஸத்தை அழிந்து கிடந்த பிராட்டி, திருமேனியிலே ஒரு திஙகின்றியிருந்த பிரானைக்கண்டு ஸத்தைபெற்றாள் என்கிறது.*

---

* 'தம்முடைய' என்றது "ப$_3$பூ$_1$வ" என்றதையொட்டிப் பிராட்டியைக் குறிக்கிறதாகவுமாம்.

(ஹ்ருஷ்டா) தர்மியுண்டானல் தர்மம் பிறக்கக்கடவ திறே. ராமஸௌந்தர்யத்தை முழுக்கக் கண்டு திருவுள்ளம் ஈடுபட்டபடி.

(வைதேஹீ) ஐயர் வயிற்றிலே பிறந்திலேனுகில் எனக்கு இப்பேறில்லையே. (வைதேஹீ) இக்குடியில் பிறந்திலேனுகில் பெருமாள் என்னைக் கைபபிடியாரே. (வைதேஹீ) இந்நிலத் தில் பிறந்திலேனுகில் இவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரம் கிடையாதே. அவ்வில்லோட்டை ஸௌப்ரார்த்ரமில்லையாகில வீர்யசுல்கையாக இவ்விவாஹம—(வாகாரம்)—கூடாதே. (வைதேஹீ) தநுர்ப்பங்கமாத்ரத்திலே என்னையும் தம் முடைய வம்சத்தையும் பெருமாளுக்கு அடிமையாக எழுதிக் கொடுத்த ஐயர், இந்த ஆகாரங்கண்டால என்ன படுவரோ?

---

(உகந்தாள்) தர்மிக்கு ஸத்தையுண்டானல் தர்மம் தானகவே உண்டாகுமன்றோ. அப்படியே தர்மியான தான் உண்டாகவே, தர்மமான உகப்பு தானகவே உணடாயிற்று. ஸத்தை பெற்றபின்பு ராமனுடைய வடிவழகைப் பூர்ணமாகப்பார்த்துத் திருவுள்ளம் உகந் தாள் எனறபடி.

(வைதேஹி) பிராட்டியானவள் இச்சமயத்தில் தன் நற்குடிப் பிறப்பை அநுஸந்திக்கையாலே 'வைதேஹீ' என்று நிர்த்தேசிக்கிறார் வால்மீகி பகவான். (வைதேஹி) விதேஹராஜபுத்திரி. விதேஹராஜா வான எநதைக்குப் பெண்ணாய்ப்பிறக்கவில்லையென்றல் இப்பேறு எனக்கு இல்லாமலன்றோ போயிருக்கும் எனறு அநுஸந்தித்தாள். (வைதேஹி) விதேஹ ராஜாக்களின் குலத்துதித்தவள. இக்குலத் திலே பிறந்திலேனுகில் இக்ஷ்வாகுவம்சயரான ராமபிரான் என்னைக் கைபபிடித்திருக்கமாட்டாரன்றோ. (வைதேஹி) விதேஹ தேசத்தின் அரசிளங்குமரி. இந்த தேசத்திலே பிறநதிலேனுகில் இந்த (சிவ) தநுஸ்ஸோடு ஸம்பந்தம கிடைத்திராது. அதிலலையாகில் (அதை முறித்த) வீர்யத்திற்குப் பரிசாக ஏற்பட்ட ராமவிவாஹம் நடந்திரா தன்றோ. (வைதேஹீ) விதேகராஜபுத்திரி. வில்லை ஒடித்ததற்கு மட்டும் தம்முடைய விதேகவமிசத்தையே ராமபிரானுக்கு அடிமை யாக எழுதிக்கொடுத்து என்னைக்கொடுத்த எந்தை இபபடிப் பதி னலாயிரம் அரக்கரை ஒருவராய்க்கொன்று நிற்கும் நிலையைக்கண்

*(வைதேஹீ)* **"पुंसां दृष्टिचित्तापहारिणं"** *(பும்ஸாம் த்₃ருஷ்டிசித்தாப* **ஹாரிணம்)** *என்றபடியே ஸர்வலோகாகர்ஷகமான இந் நிலையை ஐயரையொழிய நான் காண்பதோ என்று பித்ரு ஸ்ம்ருதி பண்ணுகிருள்.*

*(பர்த்தாரம்) பாணிக்ரஹணவேளை துடங்கி பதித்வ ப்ரதிபத்தி பண்ணிப்போந்தாள். இப்போதிறே தாத்வர்த் தம் ஜீவித்தது.*

*(பரிஷஸ்வஜே) (ஸஸ்வஜே) ஆலிங்கநம் பண்ணிஞள்; (பரிஷஸ்வஜே) பரிபூர்ணமாகத் தழுவிஞள். (பரிஷஸ் வஜே) பர்யாப்தமாகத் தழுவிஞள். தழும்பு மாறுமளவும் தழுவிஞள். ப்ரவ்ரணங்களாலே வந்த தழும்பெல்லாம் மாறுமளவும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண்டாள். தான் கைகண்ட மருந்திறே. ப்ரவ்ரணங்களுக்கு ஆலிங் கனமாமிடத்தில் ஐந்தோடு ஐந்நூரோடு வாசியில்லையே.*

---

டால் என்ன பாடுபடுவர்! (வைதேஹி) விதேகராஜபுத்ரி. "தன் வடிவழகு, வண்மை, குணங்கள் ஆகியவற்ருல் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையுங்கூடக் கவருமவன் ராமன்" [ரா-அ 3-29] என்கிறபடியே ஆண்பெண் வாசியில்லாமல் உலகிலுள்ள அனைவரை யும ஈடுபடுத்தும் இவருடைய இந்நிலையை என்தந்தை காணமல் நான் மாத்திரமோ காண்பது? என்று தந்தையை நினைக்கிருள்.

(பர்த்தாவை) ராமபிரானைக் கைப்பிடிததிலிருந்தே 'இவர் நம் கணவர்' என்று நினைத்தவள் பிராட்டி. ஆயினும் இப்போதே "ப்₄ரு- பரணே' என்னும் தாதுவிலிருந்து தோன்றிய 'பர்த்தா' [பரிப்பவன்— ரக்ஷிப்பவன்] என்னும் சொல் பொருளுடையதாயிற்று.

(பரிஷஸ்வஜே-நன்ருகத் தழுவிஞள்) (ஸஸ்வஜே) ஆலிங்கநம் செய்தாள்; (பரிஷஸ்வஜே) பரிபூர்ணமாகத் தழுவிஞள். (பரிஷஸ் வஜே) பர்யாப்தம யதா₂ ப₄வதி ததா₂ ஸஸ்வஜே. போதுமென்று சொல்லும்படி தழுவிஞள். வில்லேந்திய தழும்பு மறையும்வரையில் தழுவிஞள். அம்புபட்ட காயங்கள் எல்லாம் மறையும்வரையில் திருமுலைத்தடங்களாலே ஒத்தடங்கொடுத்தாள். அம்புபட்ட புண் ணுக்கு ஆலிங்கனமே கைகண்ட மருந்து என்பது பிராட்டியே பல சமயங்களில் அநுபவித்தறிந்த விஷயமாயிற்றே. தன்னுடைய

அந்தரங்கர் உள்ளுற எய்த புண்ணுக்கு மருந்தான இது. தோல்புரை எய்த புண்ணுக்கு மருந்தாகச்சொல்ல வேணுமோ? என்றிருந்தாள். ஒரு கொடியாகில் ஒரு(கிறது)-கொள்கொம்பைத் தழுவியல்லது நில்லாதிறே. (பர்த்தாரம் பரிஷஸ்வஜே) நித்யஸம்யோகஸ்திதிரூபமான பர்த்ருத்வாகாரம் ஒரு கொள்கொம்புக்கு உண்டானால், ததாதாரமாய்க்கொண்டு கொள்கொம்பை முட்டப் படர்ந்து அத்தைச் சிறப்பித்துக்கொண்டல்லது ஸ்வரூபமில்லையே பார்யாத்வாகாரமான கொடிக்கு. **"भर्तारमवलम्ब्यैव भार्यायाः स्थितिरिष्यते। अवलम्ब्य द्रुमं वल्ली स्थीयते न विना द्रुमम्॥"** (பர்த்தாரமவலம்ப்₃யைவ பார்யாயா: ஸ்தி₂திரிஷ்யதே| அவலமப்₃ய த்₃ருமம் வல்லீ ஸ்தீ₂யதே ந விநா த்₃ருமம்॥) என்னுமாபோலே.

---

பஞ்சேந்திரியங்களாகிற ஐந்து அம்புகள் எய்ததால் ஏற்பட்ட புண்ணுக்கு ஆலிங்கநம் மருந்தாகும்போது, அரக்கர்கள் நூற்றுக் கணக்கான அம்புகளை எய்ததால் ஏற்பட்ட புண்ணுக்கும் அது தானே மருந்தாகும்? ஐந்து புண்ணுக்கு ஆகும் மருந்து ஐந்நூறு புண்ணுக்கு ஆகாதென்று உண்டோ? அந்தரங்கையாய் (அகலகில்லேனென்று) அருகிலிருக்கும் தான் (இந்திரியங்களாகிற அம்பாலே) நெஞ்சையும் ஊடுருவும்படி எய்ததாலுண்டான புண்ணுக்கு மருந்தான இவ்வாலிங்கனம் தூரஸதர்களான அரக்கர்கள் தோலில் மாத்திரம் தைககும்படி அம்பெய்ததாலுண்டான புண்ணுக்கு மருந்தாவதில் தடையென்ன என்று நினைத்தாள். "கோல்தேடியோடும் கொழுந்து" [இர-திருவ-27] என்கிறபடியே ஒருகொடியாயிருப்பது, ஒரு கொள்கொம்பைத தழுவினலல்லது நிலைநிற்காதே. பெண்கொடியன்றோ இவள். (கணவனைத் தழுவினள்) எப்போதும் (கொடியுடன)சேர்ந்திருக்கையால் பர்த்தாவாய்-(தாங்கி நிற்பதாய்)-இருக்கும் தன்மை ஒருகொள் (கொழு) கொம்புக்கு இருந்தால் அது முழுவதும் வியாபித்து அதற்குப் பெருமையை விளைத்துக்கொண்டிருந்தாலொழிய ஸ்வரூபமில்லையே பார்யா -(பரணீயா, தாங்கப் படுவது)- என்னும தன்மையுடைய கொடிக்கு. "கணவனைப்பற்றி நிற்குமிருப்பே மனைவிக்கு ஸ்வரூபமெனப்படுகிறது; கொடியானது மரத்தைப்பற்றியே நிற்கிறதாயும் மரத்தை விட்டால் ஸத்தையிழக்கிறதாயுமுள்ளதன்றோ" என்னும் ப்ரமாணம் காண்க.

(தம்) என்கிற பதம் பெருமாளுடைய ஸர்வாகாரங்களை யும் காட்டுகிறது. (த்ருஷ்ட்வா) என்கிற பதத்தாலே பெரு மாளுடைய ஸர்வாகாரங்களையும் நோக்கிக் காணக் கண் ணுடையாள் பிராட்டியென்கிறது; (ஶத்ருஹந்தாரம் மஹர் ஷீணும் ஸுகாவஹம்)என்கிற பதங்களாலே தன்னோடு குடல் துவக்கு உண்டான சேதநர்க்கு அநிஷ்டநிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணினபோதல்லது இவரைக்-(னே; ளோ)-காணக் கண்ணிலளே என்கிறது. (பபூவ) அத்தலேக்கு அதிஶயாவஹையாய் ஸத்தைபெற்றபடி. (ஹ்ருஷ்டா) **"ஸதி த₄ர்மிணி த₄ர்மாச்சிந்த்யந்தே."** (வைதேஹீ) உபகாரஸ்ம்ருதி பண்ணுகிறுள். (பர்த்தாரம்) தன் கார்யம் சுமந்து நடத்தினுர் என்கிருள். தன் கார்யம் சுமந்து நடத்துகையாவது.-**"पितुर्दश- गुणं माता"** (பிதுர்த₃ஶகுணம மாதா) என்கையாலே, தன் புத்ர

"அவரை" என்னும் சொல், ஸ்ரீராமபிரானுடைய சௌர்யம், வீர்யம் முதலிய எல்லாத்தனமைகளையும் காட்டுகிறது. "பார்த்து" என்கிற பதத்தாலே, "ராமபிரானுடைய எல்லாத்தன்மைகளையும் நன்ருகக்காணலாம்படியான கண்ணேயுடையவள் பிராட்டியே" என்று உணர்த்தப்படுகிறது. "சத்துருக்களை அழித்தவரை-மஹ ரிஷிகளுக்கு ஸுகமளித்தவரை" என்கிற பதங்களாலே, "தங்கள் பிள்ளைகளான சேதனருடைய துன்பத்தைத் துடைப்பதும், இன்பத் தைப் பெருக்குவதும செய்யாதபோது, பிராட்டி ராமபிரானைக் காண விரும்பமாட்டாள்" எனறு சொல்லப்படுகிறது. (பபூவ-ஸத்தை பெற்ருள்) தன் பார்வையாகிற பன்னீராலே குளிப்பாட்டுவதன் மூலம் ராமபிரானுக்குச் சிறப்பை -(அதிசயத்தை)- விளைப்பிக்கை யாலே தன் சேஷத்வஸ்வருபம் பெற்ருள் என்கிறது. சேஷிக்கு அதிசயத்தை விளைக்கையன்ருே சேஷபூதனுடைய லக்ஷணம், (உகந்தாள்)"தர்மி ஸித்தித்தபிறகே தர்மங்கள ஆராயப்படுகின்றன" என்னும் நியாயத்தாலே தர்மியான தான் ஸத்தைப்பெற்ற பின்பு, தர்மமான உகப்பு தானுகவே உணடாயிற்று. (வைதேஹி) தந்தை விஷயமாக நெஞ்சாலே நன்றி செலுத்துகிருள். (பர்த்தாவை) பர்த்தா-பரிப்பவன்; (குடும்பத்தைச்) சுமப்பவன். பர்த்தாவாகை யாலே என்னுடைய காரியத்தைத் தான் சுமநது நடத்தினுர் என் கிருள். "தந்தையைக்காட்டிலும் தாய் பிள்ளையிடம் பத்துமடங்கு பிரியம் வைத்திருக்கிருள்" [வஸிஷ்ட 13-2] என்று ப்ரமாணம

ரக்ஷணம் பண்ணுகையிறே. (பரிஷஸ்வஜே) ஆச்ரிதரக்ஷணத்தால் வந்தகளிபபுக்குப் போக்குவீடு ஆலிங்கநம்போலேயிருந்தது. அவருக்கும் ப்ரயோஜநம் அதுபோலேகாணும்.

ஆரண்யகாண்டம 63-வது ஸர்க்கம் 12-வது ச்லோகம்

अस्मिन् मया सार्धमुदारशीला शिलातले पूर्वमुपोपविष्टा।
कान्तस्मिता लक्ष्मण जातहासा त्वामाह सीता बहु वाक्यजातम् ॥

அஸ்மிந் மயா ஸார்த்த₄முத₃ாரஶீலா
ஶிலாதலே பூர்வமுபோபவிஷ்டா।
காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா
த்வாமாஹ ஸீதா ப₃ஹு₂ வாக்யஜாதம் ॥

**பதவுரை:—லக்ஷ்மண**—*லக்ஷ்மணனே!* **அஸ்மிந்**—*இந்த.* **சிலாதலே**—*பாறையின் மேல்,* **மயா ஸார்த்த₄ம்**—*என்னோடே கூட.* **உத₃ாரசீலா**-*(உடம்புகொடும்பதில்) உதாரத்தன்மையை உடையவளாய்,* **காந்த ஸ்மிதா**—*இனிய புன்சிரிப்பை உடையவளான,* **ஸீதா**—*சீதாதேவி,* **பூர்வம்**—*முன்னதாகவே,* **உபோபவிஷ்டா**—*நாலாபுறமும் (மாறிமாறி) உட்காருமவளாய்,* **ஜாதஹாஸா**-*பெரிய சிரிப்பை உடையவளாகி,* **த்வாம்**—*உன்னை நோக்கி,* **ப₄ஹு₂**—*பலவிதமான,* **வாக்யஜாதம்**—*வசனஸமூகங்களை,* **ஆஹ**—*சொன்னாள்.*

**அவ:**-*(அஸ்மிந்) முன்பு தாமும் பிராட்டியும் ஜலக்ரீடாதிகள் பண்ணி ஸரஸமாகப் பரிமாறிற்றோரிடத்திலே, பிராட்டி*

---

சொல்லுகையாலே, பிள்ளையை ரக்ஷிப்பதைத் தன் காரியமாகவே நினைக்கிறாளன்றோ தாய். அதனாலே ஸர்வலோகமாதாவான இவளும் "என் காரியத்தைச் சுமந்து நடத்தினார்" என்று அநுஸந்திக்கிறாள் மஹர்ஷி ரக்ஷணம்பண்ணின இப்போது. (நன்றாகத் தழுவினாள்) அடியார்களை அளிப்பதால் ஏற்பட்ட ஆநந்தத்துக்குப் போக்குவீடு ஆலிங்கனம் போலேயிருந்தது பிராட்டி பிரானைத் தழுவியதைப் பார்த்தால், உடம்பு நோவநின்று அடியாருடைய எதிரிகளை அழித்ததுக்கு, இவ்வாலிங்கனத்தையே ராமபிரானும் பிரயோஜநமாகக் கருதுகிறார்போலும்.

யைப்பிரிந்து தாமும் இளையபெருமாளுமாய்த் தேடிக் கொண்டுவாராநிற்கச்செய்தே அவ்விடத்தைக்கண்டு இளைய பெருமாளைப் பார்த்து அருளிச்செய்கிறார்.

**வ்யா:—** (அஸ்மிந்) இப்படி வெறுந்தரையாயிருக்கிற இடத்திலேகாண் அன்று நாம் எடுப்பெடுத்தது. (மயா ஸார்த்தம்) ப்ரணயதாரையில் தம்மைத்தாம் சால மதித்திறே யிருப்பது. நாமுங்கூடக் காணவந்த சோழரோபாதியாகக் கடக்க நிற்கும்படி அவளுடைய அளவுடைமையும் விதக்3த4 மாகப் பரிமாறினபடியுங்காண்! (உதாரஶீலா) படைவீட்டில் இருந்த நாள் மாமனார் மாமியார்க்குக் கூசிப் படிவிடுவாரோ பாதி அளவுபடவாயிற்று போகம் செல்லுவது. இப்போது அவ்வளவன்றிக்கே ஏகாந்த ஸ்தலமாகையாலே, தன்னை முற்

---

அவதாரிகை:— பிராட்டியோடு கூடியிருந்தபோது ஒருநாள் தாமும பிராட்டியும் நீர்விளையாட்டுகள் விளையாடி சிருங்காரரஸத்தோடு பரிமாறப்பெற்ற ஓரிடத்திலே, பிராட்டியைப் பிரிந்து தாமும் லக்ஷ்மணனுமாய்த தேடிக்கொண்டு வரும்போது அவ்விடத்தைக் கண்டு, லக்ஷ்மணனைப் பார்த்து இப்பாசுரம் அருளிச்செய்கிறார் ராமபிரான்.

வ்யா:—(இந்தப் பாறையில்) இப்படி வெறும் தரையாயிருக்கிற இடத்திலேயன்றோ அனறு நாம் பேரின்பம் அனுபவித்தது. (என்னோடு கூட) *மூவாதவரை நெடுந்தோள் மூர்த்தியாகையாலே, காதல் பரிமாற்றததிலே ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவராகத் தம்மை மதித்திருப்பர் ஸ்ரீராமபிரான். அப்படிப்பட்டவர், 'நான்கூட' (நாடகத்திலே) காதல் விளையாட்டுக்களைக் காணவந்த (சோழ) அரசனைப்போலே அப்ரதானனும், தூர நிற்கும்படி அன்று அப் பிராட்டி பேரனபுடையளாயு அதிஸமர்த்தையாய், ப்ரதானையாய்ப பரிமாறினளன்றோ" என்கிறார். "ஸஹ யுக்தேப்ரதா4கே5" என்கிற பாணிநி ஸூத்ரத்தையொட்டி, "என்னோடுகூட" என்று ராமபிரான் சொல்லுகையாலே, காதல்விளையாட்டிலே அவரும அப்ரதானரானார் என்னும் கருத்து வெளிப்படுகிறதன்றோ. (வண்மைமிகுந்தவள்) உடம்பு கொடுப்பதிலே உதாரத்தன்மையுடையவளாயிருந்தாள். எனறபடி. அயோத்தியிலிருககும்போது, மாமனரான தசரதருக்கும், மாமியார்களுக்கும் கூசவேண்டியிருக்கையாலே, தானியத்தை அளந்து கொடுப்பவர்களைப்போலே, போகத்தை அளவோடு

றாட்டாக ஸர்வஸ்வதானம் பண்ணிக்கொண்டு இருந்தாளாயிற்று. (ஶிலாதலே பூர்வம்) ஜலக்ரீடை பண்ணுகிறதோர் இடத்திலே ஶிலாதலமாய், இளைத்தவிடத்திலே அதிலே ஏறுவதாகப் பெருமாள் முற்கோலிக்கணிசிக்க; "प्रेक्षितज्ञास्तु कोसलाः" (ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலா:) என்கிற அதிலேயும் ஒரு ஸம்பந்தமுண்டிறே இவளுக்கு; அத்தை இவருடைய இங்கிதாதிகளைக்கொண்டு அறிந்து, இவரை இளைப்பிக்கவேணுமென்றுபார்த்துப் பெருமாள் ஏறுவதாகக் கணிசித்த துறையை அடைத்துக்கொண்டிருந்தாள். (உபோபவிஷ்டா) அப்படியாயிருக்குமிறே எங்கும்.

(காந்தஸ்மிதா) வெறும்புறந்திலேதானே துவக்கவல்லவள்; முறுவலைச் சேர்த்தாற்போலேயாயிற்று முகந்தானிருப்பது. அதுக்குமேலே அப்போது பிறந்த வெற்றியாலே

---

கொடுத்துவந்தாள் பிராட்டி. இப்போது கூசவேண்டிய பெரியோர்கள் ஒருவருமில்லாமல் தனியிருப்பாகையாலே தன்னைப் பூர்ணமாக எம்பெருமானுக்கு அனுபவிக்கக் கொடுத்தாளாயிற்று. அதை நினைத்து '(உடம்புகொடுப்பதிலே) உதாரத்தன்மையுள்ளவள்' என்கிறார். (பாறையிலே எனக்கு முன்னதாகவே உட்கார்ந்தாள்) நீர் விளையாட்டு விளையாடும் நீர்நிலையில் ஓரிடத்திலே ஒரு கற்பாறையிருந்தது. விளையாடிக்களைத்த ராமபிரான் அப்பாறையிலே ஏறி இளைப்பாறலாம் என்று நினைதது அதைநோக்கிச் சென்றுகொண்டிருந்தார் "பார்வையைக்கொண்டே நினைவை அறியுமவர்கள் கோசலதேசத்தவர்கள்" [ ] என்கிற கோசல ராஜகுடும்பத்திலே புகுந்து ஸம்பந்தம்பெற்றவளான பிராட்டி இவர் நினைவை இவருடைய முகபாவம் முதலானவற்றைக்கொண்டு அறிந்து, இவரைப்பாறையிலே ஏறவிடாமல் செய்து களைப்படைவித்து நம்மிடம் தோற்கச்செய்யவேண்டும் என்று ஸங்கல்பித்து, பாறையிலே பிரான் ஏறுவதற்கு முன்னதாகவே ஏறி அவர் ஏற நினைத்த பகுதியை அடைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். (மாறி மாறி உட்கார்ந்தாள்) அவர் பாறையின் அப்பகுதியைவிட்டு வேறொரு பகுதியில் ஏற முற்பட்டார்; அங்கும் தான் முன்னதாகவே சென்று அடைத்துக்கொண்டாள். இப்படியே அப்பாறையின் எல்லாப்பகுதிகளிலும் பிராட்டிக்கே வெற்றியும் பெருமாளுக்கே தோல்வியும் ஆயிற்று.

(இனிய புன்சிரிப்பையுடையவள்) ஸாமான்யமாகவே புன்சிரிப்பாலே என்நெஞ்சை மயக்கவல்லவள்; முறுவலோடு சேர்த்தே ஸ்ருஷ

ஜாதஹாஸையாளாயிற்று. (த்வாமாஹ) இதுக்குமுனபு. தொடங்கினவற்றில் தலைக்கட்டாதே மீளுமதில்லையிறே பெருமாள்; இதொன்றும் தலைக்கட்டப்பெற்றதில்லை; அந் தாலே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டார் பெருமாள்; அவரை விடா, அவரைப் போரப்பொலியச் சொல்லிக் கொண்டாடும் இளையபெருமாள் முகததைபபார்த்தாள். "பாரீரோதம்பியீர்! நீங்கள் நினைத்ததெல்லாம் தலைக்கட்டினிகோளிறே; நீங்கள் வல்லவலிய ஆண்பிள்ளைகள்; நாங்கள் பெண் பெண்டுகள். நீங்கள் வேட்டைக்கும் வினைக்கும்போய்வ்யாபரிக்குமவர்கள்; நாங்கள் வீடுவிட்டுப் புறப்பட்டறியோம். உங்களுக்கு நினைததவைகளெல்லாம் தலைக்கட்டலாமிறே. உங்கள் தமயனார் வென்றாரிறே" என்று பஹுமுகமாகக்கொண்டு இவ்வார்த்தை அருளிச்செய்தாளாயிற்று.

ஆரண்யகாண்ட தனிச்லோகம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

டிக்கப்பட்டது போலே தோற்றும முகம். (பெருஞ்சிரிப்பை உடைய ளாளுள்) அப்படிபபட்டவள், அப்போது என்னைவெற்றி கொண்ட படியாலே புன்சிரிபபுகளும்மேலே பெருஞ்சிரிப்பை உடையவளானாள். (உன்னைக குறித்துச் சொன்னாள்) இதற்கு முன்பெலலாம் தொடங் கின காரியத்தை முடிக்காமல் மீளுவதில்லை ஸ்ரீராமபிரான. இது ஓரு விஷயத்திலே ஆரமபித்த காரியத்தை முடிக்கமுடியவில்லை. ஆகையாலே வெட்கமடைந்து தலையைக கவிழ்ந்துகொண்டு நின்றார். அவரை விட்டாள பிராட்டி. எப்போதும ராமனுடைய பெருமை யையே பெரிதும் பேசிக்கொண்டிருக்கும தன்மையை உடைய லக்ஷ் மணனுடைய முகததைப்பார்த்தாள். (பலபடியான வாகயஸமூஹங் களைச் சொன்னாள்) "திருத்தம்பியாரே! பார்த்தீரா உம் அணண னுடைய ஸாமர்த்தியததை. நினைத்ததையெல்லாம முடித்தவர்களா யிறறே நீஙகள. வலிமிக்க ஆண்பிள்ளைகளனறோ நீங்கள. நாஙகள் அபலைகளான பெணபிளளைகள். நீங்கள் வேடடைக்கும் சணடைக் கும போய் அருஞ்செயல புரிபவாகள. நாஙகள வீடு விட்டுப் புறப பட்டறியோம். நீஙகள நினைததபடியெல்லாம் முடிக்ககூடியவர்கள். அதனால உஙகள தமயனாரே இப்போதும் வெற்றிகொண்டார்!" எனறு பலவிதமாக இப்படி லக்ஷ்மணனைப் பார்த்து அன்பின மிகுதி யாலேற்பட்ட பரிஹாஸ வார்த்தைகளை அருளிச் செய்தாளாயிற்று.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸ விரசிதமான
தனிச்லோகத (தீ)ர்ப்பணத்தில் ஆரண்யகாண்டம் முற்றிற்று.

கிஷ்கிந்தாகாண்டம் 1-வது ஸர்க்கம் 71-வது ச்லோகம்

पद्मकेसरसंसृष्टो वृक्षान्तरविनिस्सृतः।
निश्वास इव सीताया वाति वायुर्मनोहरः॥

பத்₃மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:।
நிச்வாஸ இவ ஸீதாயா வாதி வாயுர்மநோஹர:॥

பதவுரை:—வாயு:—*காற்று,* பத்₃மகேஸரஸம்ஸ்ருஷ்ட:—*தாமரைப்பூவின் தாதுக்களோடு கலந்ததாய்,* வ்ருக்ஷாந்தர விநிஸ்ஸ்ருத:—*மரங்களின் நடுவேயிருந்து வெளிவருவதாய்,* ஸீதாயா:—*ஸீதாதேவியினுடைய,* நிச்வாஸ: இவ—*மூச்சுக் காற்றுப்போலே,* மநோஹர:—*மநஸ்ஸை அபஹரிப்பதாய்,* வாதி—*வீசுகிறது.*

அவதாரிகை:–*(பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) 'ஸர்வப்ராணிகளுக்கும் ப்ராணநஹேதுவான காற்றுத்தானே நம்மை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணுகின்றதீ' என்கிறார்.*

வ்யா:–*(பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) இக்காற்றின் கார்யம் தூ₄ளியெழுந்து செல்லாநின்றது (பத்மகேஸர ஸம்ஸ்ருஷ்ட:) *தாமரையாள் கைவிட்டபடியாலே தாமரைத்தாதும் ப்ரதி*

---

அவதாரிகை:—பெருமாள் பிராட்டியைப்பிரிந்து பம்போப வனத்தில் தங்கியிருக்கையில், மந்தமாருதத்தைப் பொறுக்கமாட்டாமல், "எல்லாப்பிராணிகளுக்கும் உயிர்வாழக் காரணமான காற்று தானே என்னுடையதான எல்லாவற்றையும் கொள்ளை கொளளகிறது" என்று அருளிச்செய்யும் பாசுரமிது.

வ்யா:—(தாமரைத் தாதோடு கூடியது) இக்காற்றின் காரியம் அடங்கியோ, தாழ்ந்தோ இல்லாமல் எல்லாருமறியும்படி தூ₄ளி யெழுந்து செல்லாநின்றது. கேஸரம்-தாது; மகரந்ததூளி. தாமரைத் தடங்களையெல்லாம் நிர்த்தூளியாக்கிக்கொண்டு, தூளியெழுந்து செல்கின்றது என்றுபூர்வம். (தாமரைத் தாதோடு கூடியது) தாமரை யிலெழுந்தருளியிருக்கும் * தாமரையாளாகிற பிராட்டி "என்னைக் கைவிட்டபடியாலே தாமரைத்தாதும் என்னோடு எதிரிட்டுக்கொண்டு

கூவித்தது. (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) **"पादारुन्तुदमेव पङ्कजरजः"** **(பாத₃ாருந்துத₃மேவ பங்கஜரஜ:)** என்று அவள்தனக்குமகப் பட பு₃ாத₄கமானது நமக்கு பு₃ாத₄கமாகச் சொல்லவேண்டா விறே. (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) இதினுடைய ராஜஸ மிருக்கிறபடியென்! நம்மையும் மதிக்கிறதில்லையே. (பத்மகேஸாஸம்ஸ்ருஷ்ட:) இதுக்கடி கண்டகிகளோட்டை ஸம்ஸர்க₃மிறே. (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) இத்தைக் காற் றென்றிருந்தோம். இது கேஸரியாயிருந்ததீ! (பத்மகேஸர ஸம்ஸ்ருஷ்ட:) தனக்குமேலே கூட்டுப்படையும் தேடிவாரா நின்றது. ரூபவான்களிறே அஸஹாய சூரராயிருப்பார். இது ரூபஹீனமாகையாலே துணைதேடுமிறே.

இப்படி பாதகமாய் வந்ததாகில், அறிந்து ஏற்கவே பரிஹரிக்கத் தட்டென்னென்ன; (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:)

---

காற்றோடு சேர்ந்துவந்து என்னை நலிகின்றது. (தாமரைத் தாதோடு கூடியது) "பிராட்டி! தாமரைத்தாது தேவரீருடைய திருவடிகளைத் துனபுறுத்துவதாகவே ஆகிறது." [ஸ்ரீகுண-42] என்று தன்மேல் எழுந்தருளியிருக்கும் அவளுக்குங்கூடத் துன்பம் விளைக்கும் இது, * திருமகள் கரந்தொடச் சிவந்துகாட்டும் நமக்குத் துன்பம் விளைக்கு மென்பதைச் சொல்லவேண்டாமன்றோ. (தாமரைத் தாதுக்களோடு கூடியது) இக்காற்றினுடைய ராஜஸம்–(1. ரஜோகுணம். 2. தாமரை மகரந்தப்பொடிகள்.) இருந்தபடியென்! சக்ரவர்த்தித்திருமகனை நம்மையும் மதிக்கிறதில்லையே. (தாமரைத் தாதுக்களோடு கூடியது) இதுககுக் காரணம் கண்டகிகளான–(1. துன்புறுத்துவதான 2. முள் நிரம்பியதான)–தாமரையோடு சேர்த்தியன்றோ. (தாமரைக் கேஸரங்க ளோடு கூடியது) இதைக் காற்றென்று நினைத்தோம். இதுவோ வெனில் கேஸரியாய் –(1. ஸிம்ஹமாய். 2. கேஸரங்களோடு கூடிய தாய்)–இருக்கின்றது. (தாமரைத் தாதோடுகூடியது) தான் துன் புறுத்துவதற்குமேலே துணையாக பத்மகேஸரப் படையொன்றையும் தேடிவருகின்றது. (த்₃ருட₄மான) ரூபத்தையுடையவர்களன்றோ துணையில்லாமலே எதிரிகளை ஜயிக்கவல்ல சூரராயிருப்பார்கள. இககாற்று ரூபமற்றதாகையாலே துணைதேடிக்கொண்டு வந்தது.

இப்படித் துன்புறுத்துவதாய் வந்ததாகில், இது வருவதை அறிந்து முனனதாகவே தவிர்த்திருக்கக் கூடாதோ என்னில்:–(மரங

தூரத்திலே கண்டு பரிஹரிக்கவொண்ணுதபடி, "குன்றாடு பொழில் நுழைந்து" என்கிறபடியே மரங்களிலே வந்து பதி கிடந்து நடுவே புறப்படக் கண்டதித்தனை. (வ்ருக்ஷாந்தர விநிஸ்ஸ்ருத:) செல்வப்பிள்ளைகள் வெயில் பொறுமல் நிழலிலே வருமாபோலே, இதுவும் மரத்தின் நிழலிலே வாரா நின்றது. (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:) கீழே "**பத்₃மகேஸர ஸமஸ்ருஷ்ட:**" என்று ஸௌரப்யம் சொல்லிற்று. மரத்திலே தங்கி இடைவெளியாலேயொழுகப் புறப்படுகையாலே மாந்த்யம் சொல்லிற்று. மரத்தின் நிழலிலே வருகையாலும் தாமரையிலுள்ள தேனை அளாவிவருகையாலும் ஶைத்யம் சொல்லிற்று. ஆக, ஸௌரப்யமும், மாந்த்யமும், ஶைத்யமும் சொல்லிற்று. (வ்ருக்ஷாந்தர விநிஸ்ஸ்ருத:) விடாய்த்த நம்மை மரத்தடியிலே ஒதுங்கவொட்டுகிறதில்லை.

இப்படி பாதகமாய் வந்தால், தம்மைக்கொண்டு அகலு மித்தனையன்றோ என்ன; (**நிச்வாஸ இவ ஸீதாயா:**) முகம்

---

களின் நடுவிலிருந்து வெளிப்பட்டது.) தூரத்திலேயே கண்டு தவிர்க்க முடியாதபடி" குன்றாடு பொழில் நுழைந்து" [பெரியாழ் திரு4-8-9-] என்கிறபடியே, மரங்களிலே வந்து பதுங்கிக்கிடந்து நடுவே புறப்படும்போதே அறியும்படி வந்தது. (மரங்களின் நடு விலிருந்து வெளிவந்தது.) செல்வப்பிள்ளைகள் வெயிலில் அடி வைக்கப் பொறுக்காமல் நிழலிலே வருவதுபோலே இதுவும் மரத்தின் நிழலிலே வந்தது. (மரங்களின் நடுவிலிருந்து வெளிவந்தது) கீழே "தாமரைத் தாதோடு கூடியது" என்று நறுமணம் சொல்லிற்று. மரத்திலே தங்கி இடைவெளியாலே மந்தமாகப் புறப்படுகையாலே, இங்கு மந்தமாருதமாயிருக்கும் மென்மை சொலலிற்று. மரத்தின் நிழலிலே வருகையாலும் தாமரையிலுள்ள தேனினுள் நுழைந்து வருகையாலும் இரண்டு பதங்களாலும் குளிர்த்தி சொல்லிற்று. ஆக, நறுமணம், மென்மை, குளிர்த்தி என்னும் மூன்றும் இவ் விரண்டு பதங்களாலே சொல்லிற்று. நாயகியோடு கூடியிருக்கும் போது மிக இனிதாயிருக்கும் இம்மூன்று தன்மைகளும் அவளைப் பிரிந்திருக்கும்போது பொறுக்கவொண்ணுத துன்பத்தைத் தரு கின்றனவென்பது பிரஸித்தமன்றோ. (மரங்களின் நடுவிலிருந்து வெளிப்பட்டது) விரஹதாபத்தாலே தவிக்கும் என்னை மரத்தடியிலே ஒதுங்க முடியாதபடி செய்கிறது இக்காற்று.

பழகினாற்போலேயிருக்கையாலே அதுவும் செய்யப்போகிற தில்லை. (நிச்வாஸ இவ ஸீதாயா:) மைதிலியினுடைய மூச்சுக் காற்றுப்போலேயிருக்கையாலே. அவள் தான் மரத்தடி யிலே ஒளித்துநின்று வருகிறாளோ என்கிற நசையாலே போகப்போகிறதில்லை. (நிச்வாஸ இவ ஸீதாயா:) "आमोदमुपजिघ्रन्तौ स्वनिश्वासानुकारिणं" (ஆமோத₃முபஜிக்₄ரந்தௌ ஸ்வநிச்வாஸாநுகாரிணம்) நிச்வாஸத்துக்குப் பரிமளமுண்டாகச் சொல்லக்கடவதிறே. (நிச்வாஸ இவ ஸீதாயா:) ஸ்பார்ஶநமாய் நலிகிறதற்குமேல் ஸ்மாரகமாயும் நலியாநின்றது.

இப்படிக்கொத்த காற்று தோன்றினவளவோ? என்னில்: (வாதி) காடுதன் பரப்பும் தானும்பாடி உலாவாநின்றது. அன்றியிலே.-(வாதி) என்று பாதகமென்றுகொண்டு போக வொண்ணுதபடி தான் ஸம்பாதித்த கந்தத்தாலே துவக்கா நின்றது. இதுதான் கந்தவாஹமிறே.

---

இப்படி உம்மைத்துன்புறுத்துவதாய் வந்தால், உமமை நீரே அகற்றிக்கொண்டு போய்விட்டால் துன்பமில்லையே என்ன;- (சீதையின் மூச்சுக்காற்றுப்போலே) முகம்பழகின சீதையின் மூச்சுக் காற்றுப்போலேயிருக்கையாலே அப்படி அகலவும் முடிகிறதில்லை. (சீதையின் மூச்சுக்காற்றுப்போலே) மிதிலாராஜ குமாரியின் மூச்சுக் காற்றுப்போலே மணம் வீசுகையாலே, அந்த தேவிதான் மரத்தடி யிலேயிருந்து ஒளிந்து ஒளிந்து வருகிறாளோ என்னும் ஆசையாலே அகலவும் முடிவதில்லை. (சீதையின் மூச்சுக்காற்றுப்போலே) "தம்முடைய மூச்சுக்காற்றை ஒத்திருக்கும் (தாமரைகளின) மணத்தை முகர்ந்துகொணடிருககும் திலீபனும் ஸுதக்ஷிணையும்" [ரகுவம்சம் 1-43] என்று மூச்சுக்காற்றுக்கு மணமுண்டு என்னும் விஷயம் சொல்லப்பட்டதன்றோ. (சீதையின் மூச்சுக்காற்றுப்போலே) ஸ்பர்சநேந்திரியமான தோலைத்தொடுவதன் மூலம துன்புறுத்துவ தோடன்றியில், சீதையின் மூசசுக்காற்றை நினைவுறுத்துவதன் மூலமாகவும் துன்புறுத்துகிறது.

இப்படிப்பட்ட காற்று தோன்றினது மட்டுமோ? என்னில்: (வீசுகிறது) காட்டிலுள்ள இடமெங்கும் தான் வியாபித்து உலாவு கின்றது.அன்றிக்கே 'வா-க₃தி க₃ந்த₄நயோ:'என்று த₄ாதுவாகையாலே (மணம் வீசுகிறது) என்று பொருளாய் துன்புறுத்துகிறதேயென்று

இப்படி பாதகமாக வந்து தோற்றி உலாவுகிறதுதான் ஏதென்னில்: (வாயு:) ஸர்வோஜ்ஜீவநஹேதுவான காற்று கிடீர் இப்படி பா₃த₄கமாகிறது (வாயு:) "भीषास्माद्वातः पवते" (பீ₄ஷாஸ்மாத்₃வாத: பவதே) என்று இவருக்கு அஞ்சித்திரிகிற காற்றிறே இவர் தம்மை அஞ்சப்பண்ணித் திரிகிறது.

இப்படி அஞ்சப்பண்ணுகிறபடியென்னென்னில்: (மநோஹர:) மேலெழுந்ததன்றியிலே உள்ளுள்ள பதார்த்தமகப்பட அபஹரியாநின்றது. (மநோஹர:) இனியாரைப்போலே இன்னாப்புச் செய்யாநின்றது.

இது லோகத்திலே ஒரு வழிபறிக்காரர் ஸமாதியாய் நடக்கிறது. "பத்₃மகேஸரஸம்ஸ்ருஷ்ட:" என்கையாலே, தங்களை இன்னாரென்று அறியாமைக்கும், கண்டால்பயப்படுகைக்

---

அகலமுடியாதபடி தான் ஸம்பாதித்த நறுமணத்தாலே என்னை ஈடுபடுத்துகிறது என்கை. "கந்தவாஹம்" [மணத்தைச் சுமந்து செல்வது] என்று காற்றுக்குப் பெயரன்றோ.

இப்படித் துன்புறுத்துவதாக வந்துதோன்றி உலாவுகின்றது தான் எது? என்னில்: (வாயு) எல்லோருக்கும் வாழ்வையளிக்கும் காற்றன்றோ எனக்கு இப்படித்தாழ்வையளிக்கிறது. (வாயு) "இந்தப் பரமபுருஷனிடம் பயத்தாலே வாயு வீசுகிறது" [தை-ஆந-8] என்று இவருக்கு பயப்பட்டுத் திரிகிறகாற்றல்லவோ இவரை இப்போது பயப்படுத்தித்திரிகிறது.

இக்காற்று இவரை எவ்வழியாலே பயப்படுத்துகிறது என்னில்: (மனத்தை இழுக்கிறது) மேலேயுள்ள தோல் முதலானவற்றைத் துன்புறுத்துவதுடன் நில்லாமல் உள்ளேயுள்ள உள்ளமாகிற பொருளையும் திருடுகின்றது. (மனத்தை இழுக்கிறது) இனியவரைப் போலே நின்று துன்பம் விளைக்கிறது; அடுத்துக்கெடுக்கிறது.

இக்காற்றின் காரியத்தைப்பார்த்தால் இவ்வுலகத்தில் வழிப்பறிக் கொள்ளைக்காரரின் காரியத்தைப்போலே இருக்கிறது. (தாமரைத் தாதோடு கூடியது) என்கையாலே, திருடர்கள் தங்களைப்பிறர் யாரென்று அறியாமைக்காகவும், பார்க்கும்போதே பயப்படுவதற்

காகவும் அவர்கள் உத்தூளநம்பண்ணி வருகிறுப்போலே இருக்கிறது. "வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸருத:" என்கையாலே, அவர்கள் வழிப்போகிறவர்கள் வருந்தனையும் மரத்தடிகளிலே பதிகிடந்து அவர்கள் அணுகவந்தவாறே புறப்படுமாப்போலே இருக்கிறது. "நிச்வாஸ இவ ஸீதாயா" என்கையாலே, அவர்கள் கைகழியபபோகாமே துவக்கும்படி, பண்டு கண்டறியுமாப்போலேயிருந்து, "உம்முடைய ஊர் சொல்லீர்; பேர் சொலலீர்" என்றுற்போலே முகமறிவுசொலலி உகப்பிக்குமாபோலே இருக்கிறது. "வாதி" என்கையாலே கார்யம் கைபுகுருந்தனையும் அவர்கள் நின்றவிடத்திலே நிலலாதே பரகுபரகென்று ஸஞ்சரிக்குமாபோலே இருக்கிறது. 'வாயு." என்கையாலே, யாரேனும் தொடர்ந்து பிடிக்கபபுக்கால் உடம்போடு உடம்பு தாக்காநிற்கச்செய்தேயும், கைக்குப் பிடிகொடாதேயிருக்கும்படியைச் சொல்லுகிறது. "மநோஹர:" என்கையாலே, மேலெழுந்த கிழிச்சீரையன்றியிலே உள்ளுள்ளதடைய அபஹரிக்கும்படி சொல்லுகிறது.

---

காகவும் உடம்பிலே கரிமுதலானவற்றைப் பூசிவருகிறுப்போலேயிருக்கிறது. (மரங்களின் நடுவிலிருந்து வெளிப்பட்டது) என்கையாலே, அக்கொள்ளைக்காரர்கள், வழிப்போககர்கள் வரும் வரையிலும் மரத்தடிகளிலே பதுங்கிக்கிடந்து, கிட்டினவுடன் மேலே பாய்வதுபோலேயிருக்கிறது. (சீதையின் மூச்சுக்காற்றுப்போலே) என்கையாலே அத்திருடர்கள்,வழிப்போக்கர்கள் தங்களை விட்டு அகலாமல் ஈடுபடுத்தும்படி முன்பே அறிந்தவர்களைப்போலேயிருந்து, "உம் ஊர் சொல்லும்; பேர் சொல்லும்" என்றுப்போலே முகமறிந்த வார்த்தை சொல்லி உகப்பிப்பது போலே இருக்கிறது. (ஸஞ்சரிக்கிறது) என்கையாலே அக்கள்வர்கள கொள்ளையடிப்பது முடியுமவரையில் நின்றவிடத்தில் நில்லாமல் சரசரவெனறு ஸஞ்சரிப்பதுபோலேயிருககிறது. (வாயு) என்கையாலே, அந்த வழிப்பறிததிருடர்கள் யாராவது ஓடிப்பிடிக்க ஆரம்பித்தால் பிடிக்கமுடியாதபடியும், உடம்போடு உடம்புமோதி சண்டைசெய்யும்போதும் கைக்குப் பிடிக்கமுடியாதபடியும் இருப்பது போலே இக்காற்றும் இருக்கிறது. (மனத்தையும இழுப்பது) என்கையாலே, அவர்கள் மேலுள்ள முடிப்பை மட்டுமல்லாமல, உள்ளிருக்கும் பொருளையும் கொள்ளையடிப்பதுபோலே இதுவும் காரியம் செய்கிறது என்கை.

கிஷ்கிந்தாகாண்டம் 1-வது ஸர்க்கம் 115-வது ச்லோகம்

पद्मसौकन्धिकवहं शिवं शोकविनाशनम्।
धन्या लक्ष्मण सेवन्ते पम्पोपवनमारुतम्॥

பத்₃மஸௌக₃ந்தி₄கவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம்।
த₄ந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவந மாருதம்॥

பதவுரை:—லக்ஷ்மண — *லக்ஷ்மணா!* பத்₃மஸௌக₃ந்தி₄க வஹம்—*தாமரை ஆம்பல் ஆகிய புஷ்பங்களின் மணத்தை தரித்துநிற்பதும்,* ஶிவம்—*பரிசுத்தமானதாகவும்,* ஶோகவிநாஶநம்—*துன்பத்தைத் துடைப்பதாகவுமிருக்கிற,* பம்போபவந மாருதம—*பம்பாஸரஸ்ஸின் கரையிலுள்ள தோட்டத்திலிருந்து வீசுகிற காற்றை,* த₄ந்யா:—*பாக்கியவான்களே,* ஸேவந்தே—*அநுபவிக்கிறார்கள்.*

வ்யா:—*(பத்மஸௌகந்திகவஹம்) கலம்பகன் சூடுவாரைப்போலே. (ஶிவம்) இதினத்தனை நன்மையுடையார் ஒருவருமில்லை. இதுச்கு நன்மையென்னென்னில்: (ஶோக விநாஶநம்) நம்மைச் சித்ரவதம் பண்ணுது. சோகம் மறுவ விடாதபடி பண்ணும்போலேயிராநின்றது. (தந்யா:) தன*

அவ:—இதுவும் பம்பாவநத்திலிருக்கும்போது பெருமாள் அருளிச்செய்த வார்த்தை.

வ்யா:—*(தாமரையையும் ஆமபலேயும் சுமந்து செல்வது) ஸுகுமாரரான ராஜகுமாரர் கதம்பமாலை சூடுவதுபோலேயிருந்தது. (மங்களமானது) இதைப்போல் நன்மையுடையதொரு பொருள் வேறில்லை. இதுக்கு நன்மையென்ன? எனில்: (துன்பத்தைத் துடைப்பது) சோகநாசநம் மட்டுமன்று; சோகவிநாசநம். துன்பத்தைப் போக்கி, மறுபடியும் துன்பம் விளைந்து, மறுபடியும்போக்கி இப படியே நம்மைச் சித்ரவதம் பண்ணுவதொன்று அன்று; துன்பத்தை மறுபடியும் அநுபவிக்கமுடியாதபடி அடியோடு ஒழிக்கவல்லது. அதாவது:-நம்மை அழிப்பதன்மூலம் மறுபடியும் நமக்குத் துன்பமே வராதபடி செய்யவல்லது என்று ப₄ாவம். (த₁ந்யர்கள்) பணம்*

முடையார் க்ஷாமத்துக்கு அஞ்சார்களிறே. (ஸேவந்தே) அஞ்சாமையேயன்றிக்கே, இத்தை அநுபவிக்கைககு ஏகாந்த மான ஸ்தலம் தேடாநிற்பர்கள். (பம்போபவநமாருநம்) "ஆகரத்தில் நெருப்பு" என்னுமாப்போலே.

கிஷ்கிந்தாகாண்டம் 24-வது ஸர்க்கம் 31-வது ச்லோகம

त्वमप्रमेयश्च दुरासदश्च जितेन्द्रियश्चोत्तमधार्मिकश्च।
अक्षय्यकीर्तिश्च विचक्षणश्च क्षितिक्षमावान् क्षतजोपमाक्ष॥

த்வமப்ரமேயச்ச து₃ராஸ த₃ச்ச
ஜிதேந்த்₃ரியச் சோத்தமத₄ார்மிகச்ச।
அக்ஷய்யகீர்த்திச்ச விசக்ஷணச்ச
க்ஷிதிக்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ॥

பதவுரை:-க்ஷதஜோப்மாக்ஷ-ரத்தம்போல் சிவந்த கண்களையுடைய ஸ்ரீராமபிரானே! த்வம்-நீர், அப்ரமேய: ச-அளவிடவொண்ணாத வராயும், து₃ராஸத₃: ச-கிட்டவெண்ணாத வராயும், ஜிதேந்த்₃ரிய: ச—ஜயிக்கப்பட்ட இந்திரியங்களை உடையவராயும், உத்தமத₄ார்மிக: ச-சிறந்த தர்மத்தை உடைய வராயும், அக்ஷய்யகீர்த்தி: ச—அழிவற்ற புகழை உடைய வராயும்; விசக்ஷண: ச-அதிஸமர்த்தராகவும், க்ஷிதிக்ஷமாவாந்—பூமியைப்போன்ற பொறுமையை உடையவராக வும் (இருக்கிறீர்.)

அவதாரிகை:—"ततः शरेणाभिहतो रामेण रणकर्कशः। पपात सहसा वाली निकृत्त इव पादपः॥" (தத: ஶரேணாபி₄ஹதோ ராமேண

---

படைத்தவர்கள் பஞ்சகாலத்துக்கு பயப்படமாட்டார்களன்றோ. (அநுபவிப்பார்கள்) பயப்படாததோடன்றியில் இக்காற்றை அனுபவிக்கத்தகுந்த இடத்தைத் தேடாநிற்பர்கள். (பம்போபவநத்தில் காற்று) ஸாமாந்யமாகக் "காற்று" என்றாலே விரஹிகளுக்குத் தாபத்தைக் கொடுக்கும். பமபாவநத்தில் காற்று என்றால் கேட்கவும் வேண்டுமா. "நெருப்புச்சட்டியில் நெருப்பு" என்று சொல்லுவதுபோலே.

ரணகர்க்கரு:| பபாத ஸஹஸா வாலீ நிக்ருத்த இவ பாத₃ப: ||)
என்கிறபடியே, பெருமாள் திருக்கையில் அம்பாலே, நினை வன்றியிலே மறுபாடுருவ ஏவுண்டு தரைப்பட்ட வாலியான வன் குபிகளுய். "**जाने पापसमाचारं तृणैः कूपमिवावृतम्। सतां वेषधरं पापं प्रच्छन्नमिव पावकम्॥**" (ஜாநே பாபஸமாசாரம் த்ருணை: கூப மிவாவ்ருதம்| ஸதாம வேஷத₄ரம் பாபம் ப்ரச்ச₂ந்நமிவ பாவகம்||) என்று "கிட்டினுரை விழப்பண்ணுகைக்குப் புல்மூடுகிணறா யிருந்தீர்: அணுகினுரை முடிக்கைக்குப் பொடிமூடு தணலா யிருந்தீர்; இப்படி ப்ரச்சந்நபாபரான நீர், பரமபாவநமாய், ஜடாவல்கலரூபமான இத்தாபஸவேஷத்தை என்செய்யக் கட்டியுடுத்தீர்?" என்று தொடங்கி, "**विषये वा पुरे वा ते यदा नापकरोम्यहं**" (விஷயே வா புரே வா தே யதா₃ நாபகரோமயஹம) என்று "உம்மோடு எங்களுக்குக் *காணித்தாயம், பூமித்

அவதாரிகை:— "அதற்குப்பின் யுதத்தில் வல்லவனை வாலி ராமனுலே அம்பினுல் அடிக்கப்பட்டு, வெட்டுண்ட மரம்போலே உடனே கீழே வீழ்ந்தான்" [ரா-கி 17-1] என்கிறபடியே கருணைக கடலான ராமபிரான் திருவுள்ளத்தில் வாலியை அடிக்கவேணு மென்னும் ஸங்கல்பமின்றிக்கேயிருக்கச் செய்தேயும், (வாலி) கொடிய வனையாலே திருக்கையில் அம்பினுல் அடிக்கப்பட்டு, மார்பிலிருந்து முதுகுவரை அவ்வம்பினுல் துளைக்கப்பட்டுத் தரையில் விழுந்த வாலியானவன் கோபங்கொண்டவனுய், "சாம்பலால மூடப்பட்ட நெருப்புப்போன்றவனும், புல்லாலே மூடப்பட்ட கிணறு போன்ற வனும், நல்லோர்களின் வேஷத்தை தரித்துக்கொண்டிருப்பவனும், பாபவொழுக்கத்தை உடையவனுமாக உன்னை அறிகிறேன்." [ரா-கி 17-21] என்று, "கிட்டி வந்தவர்களை விழும்படி செய்யும் புல் மூடு கிணருயிருந்தீர் நீர்; அணுகிவந்தவர்களை அழியச்செய்யும் நீறுபூத்த நெருப்பாயிருந்தீர்; இப்படி மறைந்து நிற்கும் பாவியான் நீர், மிகப்பரிசுத்தமான சடை மரவுரி ஆகிய இந்த முனிவர் வேடத்தை எதற்காக தரித்துக்கொண்டிருக்கிறீர்" [ரா-கி 17-21] என்று ஆரம்பித்து, "உன் தேசத்திலேயோ, பட்டணத்திலேயோ நான் தீங்கிழைக்காமலிருக்கையில்" [ரா-கி 17-22] என்று, "உம் மோடு எனக்கும் எமர்க்கும் * சிறு நிலத்தகராறுமில்லை, பெருநிலத்

* இங்கு அக்காலத்தில் வழங்கிவந்த பலவிதமான வழக்குகளை அழகாகத் தொகுத்துக் கூறியிருப்பது ஆராய்ந்தநுபவித்து இன்புறத்தக்கது.

தாயமில்லை; எல்லைமயக்கமில்லை; மந்திரவழக்காட்டமில்லை; வான்பகை வழிப்பகையில்லை: ஜ்ஞாதிப்பகை, குடிப்பகை யில்லை; பசு மறித்தல், நிரைசாய்த்தல் செய்ததில்லை; ஊர்ப் பிணக்கு நீர்ப்பிணக்கில்லை; பெண்பிணக்கு மண்பிணக்கு மில்லை;'' **"न च त्वां प्रतिजानेऽहं कस्मान्मां हंस्यकिल्बिषम्"** (ந ச த்வாம் **ப்ரதிஜாநேऽஹம் கஸ்மாந்மாம் ஹம்ஸ்யகில்பி₃ஷம்**) என்று, "நான்தான் உம்மை இன்னார் என்று அறியேன்; இப்படி யிருக்க, நிரபராதரான நாங்களிருக்கிற இடத்திலே நீர்தாமே இடறிக்கொண்டு வந்து என்செய்யக்கொன்றீர்?'' **"मामिहा-प्रतियुद्ध्यन्तमन्येन च समागतम्......धर्मलिङ्गप्रतिच्छन्नः क्रूरं कर्म समा-चरेत्॥"** (**மாமிஹாப்ரதியுத்₄யந்தமந்யேந ச ஸமாக₃தம்......த₄ர்ம லிங்க₃ப்ரதிச்ச₂ந்ந: க்ரூரம் கர்ம ஸமாசரேத்**) என்று, "உம் மோடே பொரவந்தேனல்லன்; வேறொருவனோடே பொரு கிறவன்; இப்படியிருக்கிற என்னைச் சடுதியிலே புகுந்து கொன்று கொடுந்தொழில் செய்தீர்'' **"वयं वनचरा राम मृगा**

---

தகராறுமில்லை; ராஜ்யத்தின் எல்லைதகராறுமில்லை; வீட்டைப் பற்றின வழக்குமில்லை; நீண்டகால விரோதமோ, நடுவில் வந்த விரோதமோ ஏற்பட்டதும் இல்லை; தாயாதிக்காய்ச்சலோ, (பாம்பும் கீரியும்போலே) குலவிரோதமோ இல்லை. உங்களுடைய பசுக்களைக் காவலில் வைப்பதோ, பசுக்கூட்டங்களைத் திருப்பிக்கொண்டு போவதோ நாங்கள் செய்யவில்லை. ஓர் ஊர் விஷயமாகவோ, ஆற்று நீர் விஷயமாகவோ நமக்குள் சண்டையில்லை; பெண்விஷயமாகவோ மண் விஷயமாகவோ நாம் வழக்காடினதுமில்லை'' "நான் உன்னை அறிந்தது கூட இல்லை; குற்றமற்ற என்னை எதற்காக அடித்தாய்?' [ரா-கி 17-23] என்று "நானோ உன்னை இப்படிப்பட்டவன என்று அறியாதவன்; அப்படியிருக்கும்போது குற்றமற்ற நாங்கள் இருககு மிடத்தில் நீராகவே எங்கள் காலை இடறிவிட்டுக்கொண்டு வந்து எதற்காகக் கொன்றீர்?'' "உன்னோடு யுத்தம் செய்யாமலிருப்பவனும், மற்றொருவனோடு யுத்தம் செய்பவனுமான என்னை இங்கு (ஏன கொன்றாய்?) தருமவேஷத்தால் மறைக்கப்பட்ட (எவன்தான்) இக் கொடிய காரியத்தைச் செய்வான்?'' [ரா-கி 17-24 & 25] என்று, "உம்மோடு சண்டைசெய்ய வந்தவனல்லன்; வேறொருவனோடு சண்டை செய்துகொண்டிருக்கிறேன். இப்படியிருககும் என்னைச் சடக்கென நடுவில்வந்து கொன்று கொடுந்தொழில் செய்தீர்''

**मूलफलाशनाः। एषा प्रकृतिरस्माकं पुरुषस्त्वं नरेश्वरः"** (வயம் வநசரா ராம ம்ருகா$_3$ மூலப$_2$லாஶநா:। ஏஷா ப்ரக்ருதிரஸ்மாகம் புருஷ ஸ்த்வம் நரேச்வர:) *என்று "நாங்கள் காடர்; நீங்கள் நாடர்; நாங்கள் ம்ருகங்கள்; நீங்கள் மநுஷ்யர்; நாங்கள் தின்பது காயுங்கிழங்கும்; நீங்கள் தின்பது செந்நெற்சோறு; நாங்கள் குடிமக்கள்; நீங்கள் ராஜாக்கள்" என்றும்.* **"अधार्य चर्म मे सद्भी रोमाण्यस्थि विवर्जितम्। अभक्ष्याणि च मांसानि त्वद्विधैर्धर्मचारिभिः"** **(அத$_4$ார்யம சர்ம மே ஸத்$_3$பீ$_4$ ரோமாணயஸ்தி$_2$ விவர்ஜிதம்। அப$_4$க்ஷ்யாணி ச மாம்ஸாநி த்வத$_3$விதை$_4$ர் த$_4$ர்மசாரிபி$_4$: ||)***என்று. "வேட்டையாட வந்தீராகில், கலைத்தோல் புலித்தோல போலே எங்கள் தோல் யஜ்வாக்களுக்குறுப்பு, தோலுக் குறுப்பு ஆகிறதல்ல; எங்களுடைய ரோமாஸ்திகள் சவரி சாமரங்கள் போலவும், யானைக்கொம்பு புலியுகிர்போலவும் விநியோகயோக்யமுமல்ல; எங்களுடைய மாம்ஸம் முட்பன்றி, மான், உடும்பு, முசல், ஆமை இவற்றின் மாம்ஸங்கள் போலே போஜ்யங்களல்ல; நிஷித்தம்"* **"राजहा ब्रह्महा गोघ्नश्चोरः**

---

*"ராம! நாங்கள் காட்டில் வாழ்பவர்; மிருகங்கள்; வேர்களையும் பழங் களையும் உண்பவர்கள்; (ஒருவரையொருவர் அடித்துக்கொள்வது என்னும்) இது எங்களுக்கு இயற்கை; நீ புருஷன்; (அதிலும்) அரசன்"[ரா-கி 17-28]என்று "நாங்கள் காட்டில் வாழ்பவர்; நீங்கள் நாட்டில் வாழ்பவர்; நாங்கள் மிருகங்கள்; நீங்கள் மனிதர்; நாங்கள் தின்பது காய் கிழங்குகள்; நீங்கள் உண்பது செந்நெற்சோறு; நாங்கள் நரர்கள் (குடிகள்); நீங்கள் குடிகளுக்கு அரசர்கள்"என்றும் "நல்லோர்களுக்கு எங்களதோல் தரிக்கத்தகாதது; (எங்கள்) மயிர் களும் எலும்புகளும் விலக்கப்பட்டவை: உன்போன்ற தபஸ்வி களாலே, எங்கள் மாமிசங்கள புசிக்கத்தகாதவை: [ரா-கி 17-37] என்று, "வேட்டையாடுவதெற்கென்று வந்தீராகில், மான்தோலைப் போலே யாகம் செய்வார்க்கு உபயோகப்படுவதாயும், புலித்தோல போலே மற்றுள்ளார்க்கு உபயோகப்படுவதாயும், இருப்பதல்ல எங்கள்தோல்; எஙகளுடைய மயிர்கள் சவரிசாமரங்கள் போலவும், எங்களுடைய நகமும் எலும்பும் யானைத்தந்தம், புலிநகம் போலவும் உபயோகப்படுவதன்று; 'எங்களுடைய மாமிசம், முள்ளம் பன்றி மான், உடும்பு, முயல், ஆமை [ரா-கி 17-38] ஆகிய இவற்றின் மாமி*

**प्राणिवधे रतः। नास्तिकः परिवेत्ता च सर्वे निरयगामिनः"** (ராஜஹா ப₃ரஹ்மஹா கோ₃க்₄ந: சோர: ப்ராணிவதே₄ ரத:। நாஸ்திக: பரிவேத்தா ச ஸர்வே நிரயக₃ாமிந:॥) *என்று, "ராஜவதாதிகள் பண்ணினூர்க்கு நரகமேகாணும் கதி" என்றுறபோலே இப்புடைகளிலே ஒருகோடி பருஷங்களைச் சொல்லி,* **अधिक्षिप्तस्तदा रामः पश्चाद्वालिनमब्रवीत्। धर्ममर्थञ्च कामञ्च समयञ्चापि लौकिकम्। अविज्ञाय कथं बाल्यान्मामिहाद्य विगर्हसे॥"** (அதி₄க்ஷிப்தஸ்தத₃ா ராம: பச்சாத்₃ வாலிநமப்₃ரவீத்। த₄ர்மமர்த்த₂ஞ்ச காமஞ்ச ஸமயஞ்சாபி லௌகிகம்। அவிஜ்ஞாய கத₂ம் பா₃ல்யாந் மாமிஹாத்₃ய விக₃ர்ஹஸே॥) *என்று–இப்படிப்பாராமல் சொலலப்பட்ட பெருமாளும் "நீ ஒரு விவேகியாய் வைதிக புருஷார்த்தமறிகிறுயில்லை; லௌகிகமான வழக்கும் அறிகிருயில்லை; உன் அறிவுகேட்டால் ந்யாயாநுஷ்டானம் பண்ணின நம்மைப் பழிக்கிருயித்தனையிறே. 'காணித்தாயம் பூமித்தாயமில்லை' என்றுய்;* **"इक्ष्वाकूणामियं भूमिः सशैलवनकानना"**

---

சங்கள்போலே புசிக்கத்தக்கவையன்று; விலக்கப்பட்டவை" "அரசனைக்கொன்றவன்; ப்ராஹ்மணனைக் கொன்றவன்; திருடன்; பிராணிகளை வதைப்பதிலேயே ஈடுபட்டவன்; தெய்வமில்லையென்பவன்; அண்ணன் மணம் புரியாமலிருக்கத் தான் மணம் புரிபவன் ஆகிய இவர்களெல்லாம் நரகத்தை அடைவார்கள்" [ரா-கி 17-35] என்று, "(என்னைப்போன்ற) அரசனைக்கொல்வது முதலான பாபம் செய்யும் உம்மைப்போன்றவர்களுக்கு நரகம்தான் பலன்" என்றுப் போலே இப்படி இப்படியாகக் கணக்கற்ற கடுஞ்சொற்களைச் சொல்லி, "இப்படி நிந்திக்கப்பட்ட ராமபிரான், நிந்திக்கப்பட்டபின் வாலியை நோக்கிப் பின்வருமாறு கூறினன்:— அறம், பொருள், இன்பம் என்னும் வைதிகமான புருஷார்த்தங்களையும், லோக நியாயத்தையும் அறியாது, குழந்தை புத்தியினுல் ஏன் என்னை இகழுகிருய்?" [ரா-கி 18-4] என்று, மேற்கூறியவாறு நியாயத்தை ஆராயாமல் நிந்திக்கப்பட்ட ராமபிரான்· "நீ ஒரு விவேகியாகத் தோற்றவில்லை; (ஏனெனில்;) வைதிகமான அறம் பொருளின்பமென்னும் பலன்களையும் அறியவில்லை; லோகநீதியையும் அறியவில்லை. உன்னுடைய அறிவின்மையால், நீதிநெறி நடந்த என்னைப் பழிக்கிருயே யொழிய நான் செய்ததில் தவறில்லை; சிறுநிலத்தகராறே பெருநிலத்

(இக்ஷ்வாகூணுமியம பூ₄மி: ஸசைலவநகாநநா) என்று மலை முழைஞ்சில்களோடு சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற இந்த பூமியடைய எங்களதன்றோ. "भूमिः क्षेत्रं कलत्रञ्च" (பூ₄மி: க்ஷேத்ரம களத்ரஞ்ச) என்று எங்கள் காணியூராகிறது இதுவன்றோ? 'எல்லை மயக்கமில்லை. மந்திர வழக்காட்டமில்லை' என்றாய்; "त्वं वयस्यश्च हृद्यो मे ह्येकं दुःखं सुखञ्च नौ" (த்வம வயஸ்யச்ச ஹ்ருத்₃யோ மே ஹ்யேகம் து:க்க₂ம் ஸுக₂ஞ் ச நௌ) என்று ஸமாநஸுகது:க்கராம்படி மஹாராஜரோடே ஸக்யம் பண்ணினோம். ஆனபின்பு, "तेनाहं प्रतिषिद्धश्च हृतराज्यश्च" (தேநாஹம் ப்ரதிஷித்₃த₄ச்ச ஹ்ருதராஜ்யச்ச) என்னும்படி எல்லைமாறுபாட்ட மாத்ரமன்றிக்கே, நேராக ராஜ்யத்தைப் பறித்தும், பரிகரத்தை நாலுபேரொழியச் சேர்த்துக் கொண்டும் செய்தாய். 'வாள் பகை வழிப்பகையில்லை' என்றாய்; "यथावच्चाभ्यवादयं। उक्ताश्च नाशिषस्तेन" (யதா₂வச்சாப்₄ய

---

தகராறோ நமக்குள் இல்லையென்றாய்; "மலைகள், சிறு காடுகள் பெருங் காடுகள் ஆகியவற்றோடு கூடிய இந்த பூமிமுழுவதும இக்ஷ்வாகு வமிசத்தவர்களுடையது' [ரா-கி 18-6] என்று நீங்கள் வாழும் மலைக் குகைகளோடு சிறுகாடுகளோடு பெருங்காடுகளோடு வாசியற இந்த பூமிமுழுவதும எங்களுடையதாயிற்றே. "பூமி என்னும் பதம் நிலத்தையும் மனைவியையும் குறிக்கும சொல்" [ ] என்று எங்கள் சிறுநிலமும் ஊருமன்றோ நீ ஆக்ரமித்துக்கொண்டிருக்கும் இக்கிஷ்கிந்தை. எல்லையைப்பற்றிய வழக்கோ வீட்டைப்பற்றின வழக்கோ இல்லையென்றாய். "நீ எனக்கு நண்பன்; இனியவன்; நம் இருவருடைய இன்பதுன்பங்களும் இனி பொதுவாயின"[ரா-கி 5-18] என்று இன்பதுன்பங்கள் பொதுவாம்படி ஸுக்ரீவனோடு நட்பு பூண்டோம். ஆகையால், "நான் அவனால் ராஜ்யமும் அபஹரிக்கப் பெற்று விலக்கப்பட்டேன்" [ரா-கி 10-27] என்கிறபடியே எல்லை மாறுபாடுமட்டுமன்றிக்கே, ராஜ்யம் முழுவதையுமே பிடுங்கிக்கொள் வதும் சுற்றத்தாரிலும் ஹனுமான் முதலான நால்வரொழிய அனை வரையும் அவனைவிட்டுப்பிரித்து உன்னோடு சேர்த்துக்கொள்வதும் செய்தாய். நெடுங்கால விரோதமோ, நடுவில் வந்த விரோதமோ இல்லையென்றாய். "முறைப்படி நான் வாலியை வணங்கினேன்; அவனால் ஆசீர்வாதம் சொல்லப்படவில்லை" [ரா-கி 9-23] என்று

வாத₃யம் । உக்தாச்ச நாஸி₄ஷஸ்தேந) என்று அவன் காலிலே குனிந்தவளவிலும் அங்கீகரியாதே, "वस्त्रेणैकेन वानरः। तदा विद्रावयामास वाली" (வஸ்த்ரேணைகேந வாநர:। தத₃ா வித்₃ராவயாமாஸ வாலீ) என்று ஒற்றையுடையோடே ஓட அடிக்கிறயல்லையோ? 'ஜ்ஞாதிப்பகை குடிப்பகையில்லை' என்றாய். "अयं भ्राता सुदारुणः" (அயம் ப்₄ராதா ஸுதா₃ருண:) என்று நீயே சொன்னாயே; அப்படிக்கொத்த தம்பியோடே வெறுத்தியல்லையோ? 'பசுமறித்தல், நிரைசாய்த்தல் செய்ததில்லை; ஊர்ப்பிணக்கு நீர்ப்பிணக்கில்லை' என்றாய்: அவன் க்ருஷிகோ₃ரக்ஷண வாணிஜ்ய முகத்தாலே அர்த்தார்ஜநம் பண்ணுகிற ஸுரபிமுத்திறமும், பட்டமாக எழுகிற குடிக்காடுகளும், குளங்களும் வாங்கிக்கொண்டாயல்லையோ? 'பெண்பிணக்கு மண்பிணக்குமில்லை' என்றாய்; "भ्रातुर्वर्तसि भार्यायां" (ப்₄ராதுர்வர்த்தஸி ப₄ார்யாயாம்) என்று அநுஜபார்யாபஹாரமும் கிஷ்கிந்தாபஹாரமும் பண்ணிற்றிலையோ?

---

அவன் காலில்விழுந்து வணங்கினபோதும் அங்கீகரிக்காமல், "ஒரே வஸ்திரத்தோடு வாலியானவன் என்னை விரட்டினான்" [ரா-கி 10-26] என்று அவனை ஒற்றை உடையோடே ஓட அடித்தாயல்லையோ? தாயாதிக்காய்ச்சலோ, குலப்பகையோ இல்லையென்றாய்; "மிகக் கொடியவனன இத்தம்பி" [ரா-கி 10-15] என்று நீயே சொன்னாயே. தாயாதிக்காய்ச்சலால்தானே இதைச்சொன்னாய்? அந்தத்தம்பியை வெறுக்கவில்லையா? 'பசுக்களைக் காவலில் வைப்பதோ, அவற்றைத் திருப்பிப்போவதோ செய்யவில்லை; நமக்குள் ஊர் விஷயமாகவோ நீர் விஷயமாகவோ விவாதமில்லை' ,என்றாய். அந்த ஸுக்ரீவன், பயிர்செய்வது, மாடுகளை வளர்ப்பது, வியாபாரம் செய்வது என்னும் மூன்று வழிகளாலே பொருள் ஸம்பாதிப்பதற்கு உபயுக்தமான பசு, ஆடு, எருமை என்னும் மூன்றுவகைக் கால்நடைச்செல்வத்தையும், நீ காணுமலிருக்கையில் அவனுக்குப் பட்டங்கட்டினதால் கிடைத்த குடிக்காடுகளையும், குளங்களையும் நீ பறித்துக்கொணடாயல்லவோ? 'பெணவிஷயமான வழக்கோ மண்விஷயமான வழக்கோ இல்லை' என்றாய். "தம்பியின் மனைவியை நீ வைத்துக்கொண்டிருக்கிறாய்" [ரா-கி 18-18]என்று தம்பியின் மனைவியைப் பற்றிக்கொண்டாயாகையால் பெண் பிணக்கும், கிஷ்கிந்தையை அபஹரித்தாயாகையால்

"நான்தான் உம்மை இன்னுரென்றறியேன்; இப்படியிருக்க நிரபராதரான எங்களை இருந்தவிடத்திலே நீர்தாமே இடறிக் கொண்டு வந்து எனசெய்யக்கொன்றீர்' என்றாய்; "**तां पालयति धर्मात्मा भरतस्सत्यवागृजुः। तस्य धर्मकृतादेशाद्वयमन्ये च पार्थिवाः। चरामो वसुधां कृत्स्नां**" (தாம் பாலயதி த₄ர்மாத்மா ப₄ரதஸ் ஸதயவாக்₃ ருஜு:। தஸ்ய த₄ாமக்ருதாதே₃ஶாத் வயமந்யே ச பார்திவா:। சராமோ வஸுதா₄ம க்ருத்ஸ்நாம்) என்றும், "**त्वाञ्च धर्मादतिक्रान्तं कथं शक्यमुपेक्षितुं**" (த்வாஞ்ச த₄ர்மாத₃திக்ராந்தம் கத₂ம் ஶக்யமுபேக்ஷிதும) என்றும் நாங்கள் ராஜா பரதனுடைய தர்மநிதேஶகாரிகளாய் துஷ்டநிக்ரஹம் பண்ணித்திரிகிறவர்கள். நீ குற்றஞ்செய்தவாறே நீ இருந்தவிடம் தேடிவந்து உன்னை தண்டித்தோம். 'உம்மோடே பொரவந்தவனல்ல; வேறொருவனோடே பொருகிறவன்; இப்படியிருக்கிற என்னைக் கொன்றீர்' என்றாய்; "**वध्यन्ति विमुखांश्चापि न च दोषोऽत्र विद्यते। अयुध्यन् प्रतियुध्यन् वा यस्माच्छाखामृगो ह्यसि॥**" (வத்₄யந்தி விமுக₂ாம்ச்சாபி ந ச தே₃ாஷாத்ர வித்₃யதே அயுத்₄யந் ப்ரதியுத்₄யந் வா யஸ்மாச்ச₂ாக₂ாம்ருகே₃ா ஹ்யஸி॥)

---

மண் பிணக்கும் உண்டாக்கினையல்லவோ? 'நான உம்மை இன்னுரென்றும் அறியேன்; அப்படியிருக்க நீரே வலியவந்து எதற்காகக் கொன்றீர்?' என்றாய்- "அந்த பூமியை தர்மஸ்வரூபியும், உண்மை நேர்மைகளுடையோனுமான பரதன் பரிபாலனம் செய்கிறான். அவனுடைய தருமநெறி பிறழாத ஆணையாலே நாமும் மற்றுமுள்ள அரசர்களும் பூமிமுழுவதும் (தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகத்) திரிகிறோம்" [ரா-கி 18-7&9] என்றும், "தருமவழி மீறி நடக்கும் உன்னை எப்படி தண்டிக்காமல் விடுவது?" [ரா-கி 18-24] என்றும் நாங்கள் அரசனான பரதனுடைய தர்மாஜ்ஞையை நடத்தி வைப்பவர்களாய் துஷ்டர்களை தண்டித்துத் திரியுமவர்கள். நீ குற்றஞ்செய்தவுடன் நீயிருந்தவிடம் தேடிவந்து உன்னை தண்டித்தோம். 'உம்மோடே சண்டைசெய்ய வந்தேனல்லேன்; வேறொருவனோடே சண்டையிடுகிறவன். இப்படியிருக்கும் என்னையன்றோ கொன்றீர்' என்றாய். "புறமுதுகிட்டோடுவதாயினும், மிருகங்களை ராஜாக்கள் கொல்லுகின்றனர்; இதில் தோஷமில்லை. நீ மரமேறித்தாவும் குரங்கென்னும் மிருகமேயாகையால், (என்னோடு) சண்டை செய்யாத

நம்மோடே போராதொழியவுமாம்; கெட்டோடவுமாம்; உன்னைக் கொன்றால் ஒரு தோஷமுமில்லை; நீயோ ஒரு குரங்கன்றோ? ராஜாக்கள் சொல்லுமாப்போலே சொன்னாய்; "நாங்கள் காடர்; நீங்கள் நாடர்; நாங்கள் ம்ருகங்கள்; நீங்கள் மநுஷ்யர்கள்; நாங்கள் பலமூலாசிகள்; நீங்கள் ராஜாந்ந போ₄க்தாக்கள்; நாங்கள் குடிமக்கள்; நீங்கள் ராஜாக்கள்" என்றாப்போலே அப்ரயோஜகமாகச் சொன்னாய்; **"भरतः कामवृत्तानां निग्रहे पर्यवस्थितः"** (ப₄ரத: காமவ்ருத்தாநாம நிக்₃ரஹே பர்யவஸ்தி₂த:) என்றும், **"मृगपक्षिमनुष्याणां निग्रहप्रग्रहावपि"** (ம்ருக₃ பக்ஷிமநுஷ்யாணாம் நிக்₃ரஹப்ரக்₃ரஹாவபி) என்றும், "எங்கேனும் திரியிலுமாம், ஏதேனும் சாதியாகிலுமாம், ஏதேனும் தின்னிலுமாம், இப்படி பவ்யராகிலுமாம், துஷ்டநிக்ரஹம் ராஜாக்களுக்கு அடுத்ததுகாண். எங்களுடைய ரோமாஸ்திமாம்ஸங்கள் நிஷித்தங்கள்; இப்படியிருக்க நிஷ்ப்ரயோஜந வ்யாபாதநம் பண்ணினீர்" என்றாய்;

---

போதும், வேறொருவனோடு சண்டை செய்யும்போதும் கொல்லப்பட்டாய்" [ரா-கி 18-40&42] என்று, என்னோடு சண்டையிடாமலிருப்பினும், தோற்று ஓடினாலும் மிருகமான உன்னைகொன்றால் ஒருதோஷமுமில்லை. நீ ஒரு குரங்கன்றோ? அப்படியிருக்க அரசர்கள் சொல்லும் வார்த்தையைச் சொன்னாய். "நாங்கள் காட்டில் வாழ்வோர், நீங்கள நாட்டில் வாழ்வோர்; நாங்கள் மிருகங்கள, நீஙகள் மனிதர்கள்; நாங்கள் பழம் வேர் காய் கிழங்குகளையுண்போர், நீங்கள் அரசவிருந்துண்போர்; நாங்கள் பிரஜைகள், நீங்கள் பிரஜைகளைக்காக்கும் அரசர்கள்" என்றாற்போலே தகாதகாரணங்களைச் சொன்னாய். "இஷ்டப்படி நடப்பவர்களை தண்டிப்பதில் உறுதிபூணடுள்ளான் பரதன்" [ரா-கி 18-25] என்றும், "மிருகங்கள் பக்ஷிகள், மனிதர்கள் ஆகியவாக்குத் தகுந்த தண்டனைகளையும் ஸம்மானங்களையும் செய்ய அறிந்தவன் பரதன்" [ரா-கி 18-6] என்றும், உன்னைப்போன்ற மிருகம் எங்காவது திரிந்தாலும் சரி, எந்தச் சாதியானாலும் சரி, எதைத்தின்றாலும் சரி, இப்படி பிரஜையாய் எனக்கு வசப்பட்டிருந்தாலும் சரி, துஷ்டர்களாகில் கொல்வது ராஜாக்களுக்குத் தகுந்ததன்றோ. "எங்களுடைய மயிர் எலும்பு மாமிசம் ஆகியவை தொடத்தகாதவை; இப்படியிருக்கும்போது

**"वागुराभिश्च पाशैश्च कूटैश्च विविधैर्नराः। प्रतिच्छन्नाश्च दृश्याश्च निघ्नन्ति स्म बहून् मृगान्"** (வாகு₃ராபி₄ச்ச பாஸைச்ச கூடைச்ச விவிதை₄ர் நரா:। ப்ரதிச்ச₂ந்நாச்ச த்₃ருச்'யாச்ச நிக்₄நந்தி ஸ்ம ப₃ஹூந் ம்ருக₃ாந் ॥) *என்று ராஜாக்களானவர்கள் ரோமாஸ்தி₂மாம் ஸாதிகளாகிற ப்ரயோஜநங்களையொழியவும், ம்ருகங்களாலே நாடு அழியப்புக்கால் ஜநபதஹிதார்த்தமாகவும், வேட்டை யாடுவதாயும், வலைகட்டி வளைத்தும், கண்ணிகட்டிப் பிடித் தும், ஊட்டிச் சதித்தும், பார்வை மாளவைத்தும், ஒளித்து நின்றும் கொல்லக்கடவர்களாய்க்காண் இருப்பது. 'ராஜ வதம் பண்ணினார்க்கு நரகமேகாணும் கதி' என்றாய்;* **"औरसीं भगिनीं वापि भार्यांश्चाप्यनुजस्य यः। प्रचरेद्वानरः कामात् तस्य दण्डो वधः स्मृतः"** (ஔரஸீம ப₄கி₃நீம் வாபி ப₄ார்யாஞ்சாப்யநு ஜஸ்ய ய:। ப்ரசரேத்₃ வாநர: காமாத் தஸ்ய த₃ண்டோ₃ வத₄: ஸ்ம்ருத:॥) *என்று ராஜவதம் பண்ணினலன்றோ குற்றமுள் ளது; நீயொரு குரங்கு; அநுஜபார்யாபஹாரம் பண்ணின யாகையாலே தண்ட்யன்;* **"राजा त्वशासनात् पापं तदवाप्नोति किल्बिषं"** (ராஜா த்வஶாஸநாத் பாபம் தத₃வாப்நோதி கில்பி₃ஷம்)

---

*பலனில்லாமலே வீணாக என்னைக்கொன்றீர்" என்றாய்; "வலைகளாலும் கயிறுகள் கட்டியும், பலவிதமான உபாயங்களாலும், மறைந்து நின்றும், நேரே நின்றும் பலமிருகங்களை அரசர்கள் அடிக்கிறார்கள்" [ரா-கி 18-39] என்று அரசர்கள் மயிர் எலும்பு மாமிசம் முதலிய பலன்களில்லாவிடிலும் மிருகங்களாலே நாடு அழிந்ததென்றால் வீணே மட்டுமல்லாமல் குடிமக்களின் நன்மைக்காகவும் வேட்டையாடியும், வலைகள் கட்டிப்பிடித்தும், கயிறுகள் கட்டிப்பிடித்தும், உணவூட்டி ஹிம்ஸித்தும், பார்வை (சூனியம்) வைத்துப்பிடித்தும் ஒளிந்து நின்றும் கொல்லவேண்டியவர்களாயன்றோ இருப்பது. 'என்னைப் போன்ற அரசனைக் கொன்றார்க்கு நரகமேயன்றோ கதி' என்றாய்; "தன் பெண்ணையாவது, தங்கையையாவது, தம்பியின் மனைவியை யாவது ஒரு வானரன் ஆசையாலே வைத்திருந்தானாகில் அவனுக்கு வதமே தண்டனையாகும்" [ரா-கி 18-23] என்று ராஜவதம் பண்ணி னலன்றோ குற்றமாவது; நீ ஒரு குரங்கு; தம்பியின் மனைவியைப் பற்றினையாகையாலே தண்டிக்கத்தக்கவன். "அரசன் பாபத்திற்கு*

உன்னை தண்டியாதபோது நமக்குப் பாபம் வருமித்தனை என்று இப்புடைகளிலே திருத்தமாகச் சில வார்த்தைகளை அருளிச்செய்ய, வாலியும், **"प्रत्युवाच ततो वाक्यं प्राञ्जलिर्वानरेश्वरः। यत्त्वमात्थ नरश्रेष्ठ तदेतन्नात्र संशयः॥"** (ப்ரத்யுவாச ததோ வாச்யம ப்ராஜ்ஞலிர் வாநரேச்வர:। யத்த்வமாத்த$_2$ நரச்ரேஷ்ட$_2$ ததே$_3$ தந்நாதர ஸம்ஶய:॥) என்று உடன்பட்டு ஶாந்தனை இப்படி புஜபலத்தாலும், வாக்யுத்தத்தாலும், வாலியைச் சென்று கொன்று வென்றிகொண்டு பெருமாள் நிற்கிறவளவிலே, ப$_4$ர்த்ருவத$_4$ஜநிதமானசோகக்ரோதங்களாலேவிக்ருதையாய், 'என் ஆண்மகனைக் கொன்றவனை வாயார வையவேணும்' என்று கட்டியுடுத்துவந்த தாரையானவள், **"सा तं समासाद्य विशुद्धसत्त्वा"** (ஸா தம ஸமாஸாத்$_3$ய விஶுத்$_3$த$_4$ஸத்வா) என்று பெருமாளைக்கண்டு தத்ஸந்நிதி மாஹாத்ம்யத்தாலே கோபம் தணிந்து ஸத்வம் தலையெடுத்து, **"सत्त्वात्सञ्जायते ज्ञानं"** (ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்) என்று ஸத்வகார்யமான ஜ்ஞாநம்

---

தண்டனை விதிக்காவிடில் அப்பாபபலத்தைத்தரன அடைகிறுன்" [ரா-கி 18-33] என்று உன்னை தண்டிக்காதபோதுதான் எனக்குப் பாவம் வரும் என்று இம்மாதிரியாக அழகாகச் சில வார்த்தைகளை அருளிச்செய்ய, வாலியும் "வானரத்தலைவனுன வாலி பின்வருமாறு பதிலுரைத்தான்;– மனிதர் தலைவனே! நீ உரைத்தது அனைத்தும் உண்மை; இதில் ஐயமில்லை" [ரா-கி 18-47] என்று ராமனுடைய வார்த்தையை அப்படியே அங்கீகரித்து அமைதிபெற்று நிற்க, இப்படி தோள் வலிச்சண்டையாலும், வாக்குவன்மைச் சண்டையாலும், வாலியைச் 'சென்று கொன்று வென்றிகொண்டு' [திருச்சந்த-56] ஸ்ரீராமபிரான நிற்கும்போது, கணவனைக் கொன்றதாலுண்டான துன்பத்தாலும், கோபத்தாலும் மநோவிகாரமடைந்து 'என் ஆண்பிள்ளையைக் கொன்றவனை வாயார வையவேண்டும்' என்று உடையை வரிந்துகட்டிக்கொண்டு வந்த வாலியின் மனைவி தாரையானவள், "அந்த ராமனை அடைந்து மனம் பரிசுத்தியடைந்த அந்தத்தாரை" [ரா-கி 24-30] என்று ராமபிரானைக்கண்டு அவனுடைய ஸாந்நித்யப்பெருமையாலே கோபம் தணிந்து ஸத்வகுணம் தலைதூக்கப்பெற்று, "ஸத்வகுணத்தாலே அறிவு பிறக்கிறது" [கீதை 14-17] என்று ஸத்வகுணத்தாலுண்டாகும் பரம்பொருளறிவு

பிறந்து தெளிவுற்ற சிந்தையளாகையாலும், அவ்வஸ்துவை ஒரு போகியாக ஸாக்ஷாத்கரித்து நிர்ணயம்பண்ணி, வையப் புக்க வாயாலே வாழ்த்துகிருள். **"तस्मिन् दृष्टे परावरे-भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः। क्षीयन्ते चास्य कर्माणि"** (**தஸ்மிந் த்$_3$ருஷ்டே பராவரே பி$_4$த்$_3$யதே ஹ்ருத$_3$யக்$_3$ரந்தி$_2$ச்சி$_2$த்$_3$யந்தே ஸர்வஸம்ஶயா:। க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி॥**) என்று பகவத் ஸாக்ஷாத்காரம் பிறந்தால் ப்ரதிபந்தகம் போய் தத்வாநு பவம்பண்ணக் குறையில்லையிறே.

ஸ்ரீவால்மீகிபகவான், அல்லாத ரிஷிகளையும் வேதங்களை யும்போலே **"आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः। इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणस्सदा"** (**ஆலோட்$_3$ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந:। இத$_3$மேகம் ஸுநிஷ்பந்நம் த்$_4$யேயோ நாராயணஸ் ஸதா$_3$॥**) என்றும், **"वेदशास्त्रात्परं नास्ति न दैवं केशवात्परं"** (**வேத$_3$ஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி ந தைவம் கேஶவாத் பரம்**) என்றும், **"नास्ति नारायणसमो न भूतो न भविष्यति"** (**நாஸ்தி**

---

பிறந்து * தெளிவுற்ற சிந்தையுடையவளாகையாலும், அப்பரம் பொருளான ராமனைக்கண்ணாரக்கண்டு 'இதுவே பரம்பொருள்' என்று பரதத்வ நிர்ணயம் பண்ணி வையவந்த வாயாலே வாழ்த்துகிருள். "மேலானவர்களிலும் மேலானவனை அந்தப் பரமாத்மா பார்க்கப்பட்டவுடன் இவனுடைய (ராகம், த்வேஷம் முதலிய) மனமுடிச்சுகள் பிளவுபடுகின்றன; எல்லா ஸம்சயங்களும் சிதறுகின்றன; இவனுடைய கருமங்களும் அழிகின்றன" [முண்ட 2-2-9] என்று பகவானைக்கண்டால், தடைகளெல்லாம் நீங்கப் பெற்று ,பரதத்துவத்தை அநுபவிக்கக் குறையில்லையன்றோ.

ஸ்ரீவால்மீகி மஹர்ஷி, மற்ற ரிஷிகளையும், அபௌருஷேயமான வேதங்களையும்போலே "எல்லா சாஸ்திரங்களையும் படித்து, யுக்தி களைக்கொண்டு அடிக்கடி ஆராய்ந்துபார்த்ததில் இதுவொன்றே நன்கு தேறிநிற்கிறது; அதாவது:—நாராயணனே எப்போதும் தியானிக்கத்தக்கவன் என்பது" [பார-ஆநு 178-11] "மும்முறை சத்தியம்செய்து கைதூக்கிக்கொண்டு கூறுகிறேன்; வேதமாகிற சாஸ்திரத்திலும் மேலான சாஸ்திரமில்லை; கேசவனிலும் மேலான தெய்வமில்லை" [நாரதீயபுராணம் 18-35] என்றும், '(மூவுலகங்

நாராயணஸமோ ந பூ₄தோ ந ப₄விஷ்யதி) என்றும். "न त्वत्समोस्त्यभ्यधिकः कुतोन्यः" (ந த்வத்ஸமோஸ்த்யப்₄யதி₄க: குதோந்ய:) என்றும், "अग्निर्वै देवानामवमो विष्णुः परमः" (அக்₃நிர்வை தே₃வாநாமவமோ விஷ்ணு: பரம:) என்றும், "न तत्सम्श्चाभ्यधिकश्च दृश्यते" (ந ததஸமச்சாப்₄யதி₄கச்ச த்ருச்யதே) என்றும், "यस्मात्परं नापरमस्ति किंचित्" (யஸ்மாத் பரம நாபரமஸ்தி கிஞ்சித்) "न तस्येशे कश्चन" (ந தஸ்யேஶே கச்சந) என்றும் இத்யாதிகளாலே தாந்தாம் பகவத்பரத்வோபபாதநம் பண்ணத்தொடங்கி, "नमो हिरण्यगर्भाय हरये शङ्कराय च" (நமோ ஹிரண்யக₃ர்ப₄ாய ஹரயே ஶங்கராய ச) என்றும், "रुद्राणां शङ्करश्चास्मि" (ருத்₃ராணாம ஶங்கரச்சாஸ்மி) என்றும், "स ब्रह्मा स शिवस्सेन्द्रः" (ஸ ப₃ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்₃ர:) என்றும் வசநாந்தரங்களாலே ஸாம்யஶங்கைபண்ணும்படியாவது, "विश्वाधिकं रुद्रं ब्रह्मकारणकारणं" (விச்வாதி₄கம் ருத்₃ரம் ப்₃ரஹ்ம காரணகாரணம்) என்றும், "विश्वाधिको रुद्रो महर्षिः" (விச்வாதி₄கோ ருத்₃ரோ மஹாஷி:) "न किरिन्द्र त्वदुत्तरो न ज्यायो अस्ति

---

களிலும்) நாராயணனையொத்தவன் இருந்ததுமில்லை; உண்டாகப் போவதுமில்லை' [ஹரிவம்சம்3-32] "உன்னை ஒத்தார் மூவுலகிலுமில்லை; மிக்காரொருவனும் உளனோ" [கீதை 11-43] என்றும், "அக்நிதேவன் தேவர்களுககுள் தாழ்ந்தவன்; விஷ்ணு மிகவுயர்ந்தவன்" [தை-ஸம் 5-1] "அவனை ஒத்தாரும் மிக்காரும காணப்படுகிறதில்லை" [ச்வே-6] "எவனைக்காட்டிலும் மேலான பொருள் வேறில்லையோ" [தை-நா 10-20] "அவனை நியமிப்பவன் ஒருவனுமில்லை" [தை-நா 1-9] என்றும் தாங்களே பரமபுருஷனே பெரியோன் என்று தெளிவிக்கத் தொடங்கி, "பிரமனுக்கும், விஷ்ணுவுக்கும், சிவனுக்கும் நமஸ்காரம்" [வி-பு 1-2-2] என்றும், "பதினொரு உருத்திரர்களுள் நான் சிவனாகி றேன்" [கீதை 10-23] என்றும, "பிரமனும் அவனே; சிவனும் அவனே; இந்திரனும் அவனே" [தை-நா-11] என்று தாங்களே சொன்ன வேறுசில வாக்கியங்களிலே ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரர்கள் ஸமானமானவரோ என்று ஸந்தேஹிககும்படி வார்த்தை சொல்லு வது, "உலகிற்பெரியோனும், பிரமனுக்குக் காரணனுக்கும் காரண னுமாயிருக்கும் உருத்திரனை" [ ] என்றும், "மஹாஞானியும், உலகிற்பெரியோனுமான உருத்திரன் பிறக்கும்போது பிரமனைக

वृत्रहन्" (ந கிரிந்த்₃ர த்வது₃த்தரோ ந ஜ்யாயோ அஸ்தி வ்ருத்ர ஹ.5) "आकाश एभ्यो ज्यायान् आकाशः परायणं" (ஆகாஶ ஏப்₄யோ ஜ்யாயாந் ஆகாஶ: பராயணம) "शिव एको ध्येयः शिवङ्करः" (ஶிவ ஏகோ த்₄யேய: ஶிவங்கர:) என்றும் இத்யாதிகளாலே தேவதாந்தரங்களுடைய ஆதிக்யஶங்கைபண்ணும்படியாவது, இதுக்குப் பூர்வாபரங்களும், தர்மிக்ராஹக ப்ரமாணமுங்கொண்டும், ஸமாநாதிகரண வாக்யங்களுக்கு அந்தர்யாமி பர்யந்தாநுஸந்தானத்தாலேயென்றும், அவ்வோ தேவதைகளைச் சொல்லுகிற ப்ரதேசங்கள்தானும், "क्रय्येयं गौः बहुक्षीरा साध्वी च"(க்ரய்யேயம் கௌ₃: ப₃ஹுக்ஷீரா ஸாத்₄வீ ச) என்று விலைப்பசுவைப் போரப்பொலியச் சொலலுமாப்

கடாக்ஷிக்கிறுன்'' [தை-நா 10-19] என்றும், ''இந்திரனே! உன்னைக் காட்டிலும் உயர்ந்தோன் ஒருவனுமில்லை; வ்ருத்ரனைகொன்றவனே! உன்னிலும் பெரியோனுமில்லை'' [ருக்ஸம்-அஷ்-3] என்றும், ''ஆகாசமே இந்த எல்லாப்பொருள்களைக்காட்டிலும் மேலானது; ஆகாசமே மேலான கதி'' [சாந் 1-9-1] ''மங்களகரனை சிவன் ஒருவனே மற்றெல்லாவற்றையும் விட்டு தியானிககத்தக்கவன்' [அதர்வசிகை 2-20] என்றும் இவை முதலான வாக்கியங்களாலே மற்ற தேவதைகளுடைய பரத்வஸந்தேஹம பணணும்படியாவது, கீழ்ச்சொன்ன இந்த தேவதாந்தர ஸாம்யசங்கையையும், பரத்வ சஙகையையும் விளக்கும் வாக்கியங்களுக்கு முன்பின் வாககியங்களைப்பாாத்தும், ஆகாசத்வம் [எங்கும் பிரகாசமுடைத்தாயிருக்கை] சிவத்வம் [மங்களகரமாயிருக்கை] முதலான தர்மங்களை உடையவனுயிருப்பவனுகப் பரமபுருஷனைச் சொல்லும் மற்ற ப்ரமாணவாக்யஙகளைக் கொண்டும் ''அவனே பிரமன்; அவனே சிவன்'' [தை-நா-11] என்று ஒரே வேற்றுமையில் படிக்கும் வாக்கியங்களுக்கு ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு அந்தர்யாமியான (ஸர்வவ்யாபியாக முன் வாக்கியத்தில் சொல்லப்படும) நாராயணன் வரையில் அர்த்தமாகையாலே இவ்வாக்கியங்கள் ஸாம்யசங்கையை விளக்கமாட்டா என்றும், ''இந்திரனே, விருத்திராசுரனைக்கொன்றவனே! உனைக்காட்டிலும் உயர்ந்தோனில்லை'' [ருக்ஸம்-அஷ்-3] என்றுபோலே மற்ற தேவதைகளுக்கு அஸாதாரணமான அடையாளங்களைச் சொல்லி அவர்களைப் போரப்பொலியக் கொண்டாடுமிடங்களும், சந்தையிலே மாடுவிற்கவருவோர், 'நான் விற்குமிந்தப்பசு நிறையப் பால்கறக்கும்;

போலே தத்வபரமன்று ப்ரஶம்ஸாபரமென்றும், ஆகாஶ ப்ராண வாமதேவேந்த்ர ப்ரஹ்லாதாதிகளுக்குப் பரத்வம் வரிலாயிற்று ருத்ராதிகளுக்குப் ப்ரத்வம் வருவது என்கிற துல்யந்யாயத்தாலும் உபபாதிக்கவேண்டி க்லேஶபஹுளமாயிராதபடி, ஆஸ்த்ரீபாலம் ப்ரஸித்தவைபவர் பெருமாள் என்று அறிவிக்கைக்காகத் தாராங்கதாதிகளையிட்டுத் தத்வ நிர்ணயம்பண்ணுகிறுன்.

இதில், "सुसंवृतं पार्थिवलक्षणैश्च तं चारुनेत्रं मृगशावनेत्रा। अदृष्टपूर्वं पुरुषं प्रधानमयं स काकुत्स्थ इति प्रजज्ञे" (ஸௌஸம்வ்ருதம் பார்த்

---

பரமசாது' என்று மிகவதிகமாகக் கொண்டாடுவதுபோலே உண்மையை உணர்த்தவந்த வாக்கியங்களன்று; புகழ்வதற்காகவே தோன்றிய வாக்கியங்கள் என்றும், "ஆகாசமே பெரிது"[சாந் 1-9-1] என்று மேலெடுக்கப்பட்ட வாக்கியத்தில் சொல்லப்படுவதாகத் தோன்றும் ஆகாசத்திற்கும், "ஸர்வாணி ஹ வா இமாநி பூதாநி ப்ராண மேவாபிஸம்விசந்தி" [சாந் 1-11-5] [இந்த எல்லாப்பொருள்களும் ப்ராணனையே அடைகின்றன] என்ற வாக்கியத்திற் சொலலப்படுவதாகத் தோன்றும் ப்ராணனுக்கும், "அஹம் மநுரப₄வம் ஸூர்யச்ச" [ப்ருஹ 3-4-10] [நானே மனுவும் சூரியனும் ஆகிறேன்] என்று சொன்ன வாமதேவரிஷிக்கும், "மாமுபாஸ்ஸ்வ-மாமேவ விஜாநீஹி" [கௌஷீதகீ] [என்னை உபாசிப்பாயாக; என்னையே அறிவாயாக] என்ற இந்திரனுக்கும், "மத்தஸ் ஸர்வமஹம் ஸர்வம்" [வி-பு 1-19-89] [என்னிடமிருந்தே எல்லாமுண்டாயின; நானே எல்லாம்] என்ற ப்ரஹ்லாதனுக்கும், "கடல் ஞாலம் செய்தேனும் யானே" [திருவாய் 5-6-1] என்ற நம்மாழ்வார் முதலானுர்க்கும் இந்த வாக்கியங்களாலே பரத்வம் வந்தால்தான் கீழ்ச்சொன்ன வாக்கியங்களாலே பிரமன் ருத்ரன் முதலானுர்க்குப் பரத்வம் வரக்கூடும்; அவர்களுக்குப் பரத்வம் வாராமைக்கு எப்படிப்பொருள் கொள்ளுகிறோமோ, அப்படியே இவர்களுக்கும் கொள்ளக்கடவது என்கிற துல்யந்யாயத்தாலும் நிரூபித்துக்காட்ட வேண்டியிருக்கும்படி பல கிலேசங்களை உட்கொண்டதாயில்லாமல் பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் கூட 'பரம்பொருள் ராமபிரானே' என்று உபதேசிக்கைக்காக, தாரை என்னும் ஸ்திரீயையிட்டும், அங்கதனென்னும் சிறுவனையிட்டும் பரதத்வநிர்ணயம் செய்கிறுர்.

தி₂வ லக்ஷணைச்ச தம் சாருநேத்ரம் ம்ருக₃ஶாப₃நேத்ரா। அத்₃ருஷ்ட பூர்வம் புருஷம் ப்ரதா₄நமயம் ஸ காகுத்ஸ்த₂ இதி ப்ரஜஜ்ஞே ||) என்று இற்றைக்கு முன்பு கண்டறியாதிருக்கச்செய்தேயும், திருமேனியில் ஸ்வயம்வரிந்துக்கிடக்கிற ராஜலக்ஷணங்களாலும், "रामः कमलपत्राक्षः" (ராம: கமலபத்ராக்ஷ.) என்று அஸாதாரணமான கண்ணழகாலும், என்னுடைய பர்த்தாவைக்கொன்ற பெருமாளிவர் என்றறிந்தாள் என்று ஸௌலப்யத்திலே ஒரு யோஜனையும், "सुसंवृतं पार्थिवलक्षणैश्च" (ஸுஸம்வ்ருதம் பார்த்தி₂வலக்ஷணைச்ச) என்று ஸௌலப்ய சிஹ்நங்களாலே மறைந்திருக்கச்செய்தேயும். சகாரஸூசிதமான பரத்வகுணங்களாலும், "यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी" (யதா₂ புண்ட₃ரீகமேவமக்ஷிணீ) என்று பரத்வஸூசகமான திருக்கண்களாலும், "கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்" என்று நிழலெழுகிற புருஷப்ராதாந்யத்தாலும்.

---

"அரசர்க்குரிய லக்ஷணங்கள் நன்கு பொருந்தப்பெற்றவனும், அழகிய கண்களை உடையவனும், முன்பு கண்டறியப்படாதவனும், பரமபுருஷனுமான அவனைக்கண்டு இவனேஎன் சணவனைக்கொன்ற காகுத்தன் என்று அறிந்தாள் மான்குட்டியைப்போன்ற கண்களையுடைய தாரை" [ரா-கி 24-28] என்று இதற்கு முன்பு பார்த்தறியாத போதிலும், திருமேனியில் தாமே அமைந்து கிடக்கும் அரசர்க்குரிய லக்ஷணங்களாலும், "தாமரையிதழ் போனற கண்ணையுடையோன் ராமபிரான்" [ரா-ஸு 35-8] என்று தனக்கே உரிய திருக்கண்ணழகாலும், என் கணவனைக் கொன்ற ராமன் இவனே என்று அறிந்தாள் என்று ஸௌலப்யத்தில் ஒரு நிர்வாஹமும், "அரசர்க்குரிய அடையாளங்களாலும் நன்கு மறைக்கப்பட்டவனும்" [ரா-கி 24-28] என்று மனுஷ்யத்வத்தால் வந்த ஸௌலப்யத்தைக் காட்டும் அடையாளங்களாலே மறைந்திருந்தபோதிலும் 'லக்ஷணைச்ச' என்றவிடத்தில் அநுக்தஸமுச்சாயகமான சகாரத்தால் உணர்த்தப்படும் பரத்வ குணங்களாலும், "அந்தப் பரமபுருஷனுக்கு சூரியனால் மலரும தாமரைபோன்ற இரு கண்கள் உள' [சாந் 2-6-7] என்று பரத்வத்தைக் காட்டித்தரும் கண்களாலும், "கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்" [திருவாய் 4.5-10] என்று நிற்கிற நிலையிலே நிழலிடுகிற–(பிரதிபலிக்கிற)–புருஷோத்தமத்வத்தாலும் "இந்தக்

**"अयं स काकुत्स्थ इति प्रजज्ञे"** (அயம் ஸ காகுத்ஸ்த₂ இதி ப்ரஜஜ்ஞே) என்று, "ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்" என்று இச் சக்ரவர்த்தித் திருமகனுர் அப்பரவஸ்துதான் என்று அறிந் தாள் என்று பரத்வத்தில் ஒரு யோஜனையுமிறே. அவ் விரண்டையும் சேர்த்து யோஜிக்கிறது.

**வ்யா:**—(த்வம்) இவளுடைய பர்த்ருபக்தியிருக்கிறபடி; ராஜாக்களையுமகப்பட த்வங்கரிக்கிருள். (த்வம்) மேலே "அப்ரமேயச்ச" என்று தொடங்கி ஏறப்புகுகிற குணபாரத் துக்கு அதிஷ்டான முண்டாம்படி ஆச்ரயந்தன்னைப் பாரிக் கிருள். (த்வம்) **"गुणानामाकरो महान्"** (கு₃ணாநாமாகரோ மஹாந்) என்கிறபடியே, அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுண கணங்களடைய ஒரு சிறுங்கையாம்படியான ஸ்வரூபத்தின் கனமிருந்தபடியென்! (த்வம்) ராவண துந்துபி ப்ரப்ருதி களையகப்படத் தலையழித்த வாலியைக்கொன்று வென்றி

---

காகுத்தன் அப்பரம்பொருளே என்றறிந்தாள்" [ரா-கி24-28] என்று "ஆயர் புத்திரனல்லன் அருந்தெய்வம்" [பெரியாழ்திரு 1-1-7] என்றுப்போலே இச்சக்கரவர்த்தித்திருமகன் அப்பரம் பொருளே யென்று அறிந்தாள் என்று பரத்வத்தில் ஒரு நிர்வாஹமும் ஆக இரண்டு நிர்வாஹங்கள் இந்த ச்லோகத்தில் உண்டு. அவ்விரண்டு நிர்வாஹங்களையும் சேர்த்து வியாக்கியானம் செய்யப்படுகிறது.

(நீ) "தெய்வம் தொழாள் கொழுனன் தொழுதெழுவாள்" என்கிறபடியே பர்த்தாவினிடத்தில் இவளுக்கு பக்தியிருக்கிறபடி; அரசனையும் 'நீ' என்கிருள். (நீ) மேலே 'அறிதற்கரியவன்' என்று தொடங்கித்தான சொல்லவிருக்கும் குணச்சுமைக்குத் தகுந்த இருப்பிடமென்பதைக் காட்டுவதற்காக 'நீ' என்னும் பிரஸித் தியைக் காட்டும் பதத்தையிடுகிருள். (நீ) "மலையரசன் தாதுக் களுக்கு இருப்பிடமாவதுபோலே, குணங்களுக்குப் பெரியதோர் இருப்பிடமாயிருப்பவன் ராமபிரான்" [ரா-கி 15-21] என்று (இத் தாரையாலேயே)சொல்லப்பட்டவையும், எல்லையற்ற மேன்மையுடை யவையும், எண்ணிக்கையற்றவையுமான மங்கள குணக் கூட்டங்க ளெல்லாம கடலிலே கையளவு என்னும்படியாயிருக்கும் ஸ்வரூபத் தின்பெருமையிருந்தபடியென்! (நீ) ராவணனையும், துந்துபியெனும் அசுரனையும், மற்றும் பலரையும் வெற்றிகொண்ட வாலியைச்

கொண்டு ஒன்றும் செய்யாதாரைப்போலே நின்றநிலை என் தான்! (த்வம்) வாலிக்கு அஞ்சிக் கிடங்கடைந்து கிடந்த மஹாராஜருக்ககப்பட வெற்றிகொடுத்து ஶரணாகத வத்ஸல ரான நீர். (த்வம்) ஸ்த்ரீபாலர்களான நாங்களுமகப்பட மதியாதே வந்து கிட்டும்படியான நீர். (த்வம்) வஸ்துவை வஸ்த்வந்தரமாக்குமாபோலே வாயார வையவந்த என்னை வாழ்த்தும்படி பண்ணிவைத்த நீர்.

நீ வாழ்த்துகைக்கு ஒருப்பட்டாயாகில், அது தன்னைத் தொடங்கலாகாதோ? என்ன;— (அப்ரமேய:) உம்மையுமறி யாதே, என்னையுமறியாதே முகங்கொள்ளலாமோ என்று பார்த்தேன்; அது முகங்கொள்ளவொண்ணாதாயிருந்தது. (அப்ரமேய:) நானேயன்று; **"वेदाहं" (வேதாஹம்)** என்று தொடங்கின வேதமகப்பட, **"महान्तं" (மஹாந்தம்)** என்றும், **"क इत्था वेद" (க இத்தா வேத)** என்றும் மீளும்படியன்றோ

*சென்று கொன்று வென்றி கொண்ட பின்பும் ஒன்றும் செய்யா தாரைப்போலே நீ நிற்கும் நிலை என்ன ஆச்சரியம்! (நீ) வாலிக்கு பயப்பட்டு மலைக்கிடங்கிலே அடைந்து கிடந்த இந்த ஸுக்ரீவனுக்கும் வெற்றி கொடுத்து சரணாகத வாத்ஸல்யத்தை வெளிக்காட்டி நிற்கும் நீர். (த்வம்) பெண்ணாகிற நானும் சிறு பிள்ளையாகிற அங்கதனுமாகிற நாங்களுங்கூட உம் பெருமையை யும், எங்கள் சிறுமையையும் நினையாமல் வந்து அணுகத்தக்க ஸௌலப்யத்தை உடைய நீர். (நீ) ஒருபொருளை மற்றொரு பொரு ளாக்குவதுபோலே உன்னை வாயார வையவந்த என்னை வாழ்ததும் படி பண்ணிவைத்த நீர்.

நீ வாழ்த்துவதற்கு இசைந்தாயாகில் அதை ஆரம்பிக்கலாமே என்ன;-(அறிதற்கரியவன்) உம்முடைய பெருமையையும் அறியாமல், என்னுடைய சிறுமையையும் அறியாமல் உம்மை இந்திரியங்களாலே அனுபவித்துவிடலாம் என்று பார்த்தேன்; அப்படி அநுபவிகக முடியாதாயிருந்தது. (அறிதற்கரியவன்) இப்படி அறியமாட்டாதவள் நான் மாத்திரமன்று; "நான் அறிவேன்" [பு-ஸூ] என்று தொடங் கின வேதமும், "பெரியோனை" [பு-ஸூ] என்றும், "அவனை இவ் வளவென்று அறிபவன் யார்?" [கட 2-25] என்றும் அறியமாட்டா

 * திருச்சந்த-56.

உம்முடைய அபரிச்சேத்யத்வம்.(அப்ரமேய:) "ப்ரமா விஷயம் ப்ரமேயம்" இறே. ப்ரமேயமாகிறதுதான் ஸம்யக₃நுப₄வமிறே. அதாவது – ப்ரத்யக்ஷாநுமாநாகமஜந்யஜ்ஞாநமிறே. அவை மூன்றுக்கும் விஷயமல்லீராயிருந்தீர்; "न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्चनैनं" (ந ஸந்த்₃ருேஶ திஷ்ட₂தி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம) என்றும், "கட்கிலீ" என்றும் சொல்லுகிறபடியே ப்ரத்யக்ஷஜ்ஞாந விஷயமல்லீராயிருந்தீர். * த்₃ருஷ்டாநுமானத்தில் வ்யாப்திக்ரஹணத்துக்கு ப்ரத்யக்ஷ யோக்யமல்லாமையாலும், "न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते" (ந தத்ஸமச்சாப்₄யதி₄கச்ச த்₃ருச்யேதே) என்றும், "ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயா" என்றும் த்ருஷ்டாந்தமில்லாமையாலும், * ஸாமாந்யதோ த்₃ருஷ்டாநுமானத்தில் வ்யாப்தி

மல் மீளும்படியன்றே உம்முடைய அளவின்மை? (அப்ரமேயன்-அறிதற்கரியவன்) ப்ரமைக்கு விஷயமாமவன் ப்ரமேயமாகிறான்; ப்ரமையாவது-உண்மையான அநுபவம்; அதாவது–ப்ரத்யக்ஷம், அநுமானம், ஆகமம் என்னும் மூன்று பிரமாணங்களாலும் பிறக்கும் அறிவாகும். அவை மூன்றுக்கும் விஷயமாகாதவராயிருந்தீர். "இவனுடைய உருவம் கண்ணெதிரே நில்லாது; எவனும் இவனைக் கண்ணால் காண்பதில்லை" [தை-நா 1-10] என்றும், "கட்கிலீ" [திருவாய் 7-2-3] என்றும் சொல்லுகிறபடியே ப்ரத்யக்ஷத்தினால் அறியமுடியாதவராயிருந்தீர். அனுமானத்தால் உம்மை அறியலாமென்று பார்த்தால், த்ருஷ்டம், ஸாமாந்யதோ த்ருஷ்டம் என்னும் இரண்டு விதமான அனுமானத்தாலும் உம்மை அறியலாகாதாயிருந்தது. * த்ருஷ்டாநுமானமாவது;– நம் போல்வாருடைய ப்ரத்யக்ஷத்திற்குத் தகுந்ததாயிருக்கும் விஷயத்தில் அநுமானம் செய்வது; பர்வதத்தில் புகையைக்கண்டு நெருப்பை அனுமிப்பது இவ்வகையைச்சேரும். இவ்விதமான அனுமானத்தில் 'புகையிருக்குமிடத்தில் நெருப்பிருக்கும்' என்னும் வ்யாப்தியை அறிந்திருக்க வேணடுமாகையால, அநுமானத்துக்கு விஷயமாயிருக்கும் நெருப்பு ப்ரத்யக்ஷமாகக் காணத்தக்கதாயிருக்கவேண்டும்; இங்கு ஈச்வரன

* ந்யாயபரிசுத்தியில் அநுமாநாத்யாயம்முதலாந்ஹிகம்முடிவில்" அஸமத₃ாதி₃ப்ரத்யக்ஷ யோக்₃யார்த்த₂ாநுமாபகம் விசேஷதோ த்₃ருஷ்டம்; தத₃யோக₃யார்த்த₂ம் ஸாமாந்யதோ த்₃ருஷ்டம் "என்று லக்ஷணமுரைத்திருப்பதையும், நியாயதர்சநம் (1-1-5) ல் வ்யாக்யானத்தையும் காண்பது.

*க்₃ரஹண தசையில், ஸர்வகர்த்ரநுகதமாகக் கர்மவச்யத்வ து:க்கித்வ ஆயாஸித்வ அப்ரயோஜந (வத்) த்வ கி₃ங்நத்வாதி யான அபுருஷார்த்தங்கள் வ்யாப்தி ப₃லந்தன்னுலே வருகை யாலும், பக்ஷத₄ர்மதாப₃லத்துக்கு நித்ய நிர்த்தோஷத₄ர்மி க்ராஹக ச்ருதிப₃லத்தாலே, த்ரிவித காரணமுமாய், ஸகலேதர விலக்ஷணமுமாக அந்யதைவ ஸித்திக்கையாலும், அநுமாந*

---

அப்படி ப்ரத்யக்ஷமாகக் காணத்தக்கவனல்லன். மேலும், இவ்வகை அனுமானத்தில் 'புகையிருக்குமிடத்தில் நெருப்பிருக்கும், சமைய லறையிற்போலே'' என்று த்ருஷ்டாந்தமும் காணப்படவேண்டும். ஈச்வரன் விஷயத்திலோவெனில், ''அந்த ஸர்வேச்வரனுக்கு ஸமானமானவரோ, மேலானவரோ இல்லை'' [ச்வே 6-8] என்றும் ''ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயா'' [திருவாய்2-3-2] என்றும் த்ருஷ்டாந்தமில்லை. ஆகையால் (விசேஷதோ) த்ருஷ்டாநுமானத் தால் அவனை அநுமிக்க முடியாது * ஸாமாந்யதோ த்ருஷ்டாநு மானமாவது;— நம் போல்வாருடைய ப்ரத்யக்ஷத்திற்குத் தகாததா யிருக்கும் விஷயத்தில் அனுமானம் செய்வது; இச்சை முதலான குணங்களைக் கொண்டு ஆத்மாவை அனுமிப்பது இவ்வகையைச் சேரும்; ''இச்ச₂ாத₃ய: கிஞ்சித₃ாச்ரயா: கு₃ணத்வாத்'' [இச்சாதி கள் ஒன்றையாச்ரயித்து நிற்கின்றன ; குணமாயிருக்கையால்] என்று அநுமானசரீரம். இவ்வகையாலே ''க்ஷித்யங்குராதி₃கம் கிஞ் சித்கர்த்ருகம் கார்யத்வாத் க₄டவத்'' [பூமி, முளை முதலானவை (ஈச்வர ஞகிற ஒருவனுல் செய்யப்பட்டவை; கார்யப் பொருளாயிருக்கையால் குடத்தைப்போலே] என்னும் ஸாமாந்யதோ த்ருஷ்டாநுமானத் தாலே ஈச்வரனை ஸாதிக்கப் பார்க்கும்போது, ''எங்கெங்கு காரியப் பொருளாயிருக்கும் தன்மையுளதோ அங்கெல்லாம் ஒருவனுல் செய் யப்படுவதாயிருக்கும் தன்மையும் உள்ளது'' என்று வ்யாப்தியை அறியும் தசையில் கடம் முதலிய மற்ற பொருள்களைச் செய்யும் குயவன் முதலான கர்த்தாக்களுக்குப்போலே, 'கர்மத்துக்கு வசப் பட்டிருக்கை, துக்கத்தை உடையவனுகை, சிரமப்படுகை, பலனின்றிக் கேயொழிகை, வருந்துகை' முதலான தாழ்வுகள் க்ஷித்யங்குராதி கர்த்தாவான ஈச்வரனுக்கும் வ்யாப்தி பலத்தாலே வருகையாலும், பக்ஷத₄ர்மதா பலத்துக்கு நித்யமாய், தோஷமற்றதாய், தர்மியான ஈச்ரவனைக் காட்டுவதான வேதத்தின் பலத்தாலே ஈச்வரன் நிமித் தம், உபாதானம், ஸஹகாரி என்னும் மூவகைக் காரணமாய், மற்ற பொருள்களைக்காட்டிலும் உயர்ந்தவனுய், மேற்கூறிய தாழ்வுக

ஜ்ஞாந விஷயமல்லீர்; **"यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह"** (**யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ**) என்றும் **"नेति नेति"** (**நேதி நேதி**) என்றும். **"यतो न वेद मनसा सहैन-मनुप्रविशन्ति तथैव मौनं"** (**யதோ ந வேத₃ மநஸா ஸஹைநமநுப்ர விஶந்தி ததை₂வ மௌநம**) என்றும் வேதங்களும் பரிச்சேதிக்க மாட்டாமையாலே ஆகமஜந்யஜ்ஞாநத்துக்கும் விஷயமல்லீர். (அப்ரமேய:) ப்ரமாணங்களுக்கு விஷயமல்லீரென்னுமிடம் சொல்லவேணுமோ? * [(அப்ரமேயச்ச) இவர்களைச் சொல்ல வேணுமோ?] **"सो अङ्ग वेद यदि वा न वेद"** (**ஸோ அங்க₃ வேத₃ யதி₃ வா ந வேத₃**) என்றும். "தனக்கும் தன் தன்மை அறி வரியானை" என்றும் ஸ்வதஸ் ஸர்வஜ்ஞரான தேவர் தமக்குத் தான் பரிச்சேதிக்க விஷயமோ? (அப்ரமேயச்ச) நித்யத்வாத் காலபரிச்சேதமில்லை; விபுத்வாத் தேசபரிச்சேதமில்லை; ப்ர

ளற்றவனுகவே ஸிததிக்கையாலும், ஸாமான்யதோ த்ருஷ்டாநு மானத்தாலும் அவனை அறியமுடியாது. ஆக இப்படி அனுமானத் தாலும் அறியமுடியாதவராயிருக்கிறீர். "எந்தப் பரம்பொருளிட மிருந்து மனத்துடன் கூடிய வாக்குகள் அதை அறியமுடியாமல் திரும்புகின்றனவோ" [தை-ஆந-9] என்றும், "பரம்பொருள் இப் படிப்பட்டது மாத்திரமன்று; இப்படிப்பட்டது வேறில்லை" [ப்ருஹ 4-3-6] என்றும், "ஞானிகள் மனத்தோடு கூடிய மற்ற இந்திரியங் களால் இவனை அறியமாட்டாராகையால், இவனைப்பற்றி நினைக்கும் போது மௌனத்தையே அடைகிருர்கள்" [ ] என்றும் வேதங்களும் அளவிட்டறியமாட்டாமையாலே ஆகமத்தாலும அறிய முடியாதவராயிருக்கிறீர். (அறிதற்கரியவன்) உனக்கே நீ அறிய வொண்ணுதவனுயிருக்குமபோது மூவகைப் பிரமாணங்களால் அறியமுடியாதவனெனனும் விஷயத்தைச் சொல்லவும் வேணுமோ? "அப்பரமன் தன்னைத் தானே அறிவனே மாட்டானே அறியோம்!" [தை-ஸம் 2-8-9] என்றும், "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" [திருவாய் 8-4-6) என்றும், இயற்கையாகவே எல்லாமறிந்தவரான நீர் உம்மாலேதான் அளவிட்டு அறியப்படுவீரோ? (அளத்தற்கரி யான) காலத்தாலளவு, தேசத்தாலளவு, வஸ்துவாலளவு என்னும் மூவகை அளவுகளும் இன்மையாலே அளவிடவொண்ணுதவன்.

* குண்டலிதமதிகம்.

கார்யந்தராபாவாத் வஸ்து பரிச்சேதமில்லை. ஆகஇப்படி த்ரி ப்ரகாரத்தாலும், த்ரிவிதசேதநருக்கும், த்ரிவிதகரணங்களா லும், த்ரிகாலத்திலும் பரிச்சேதிக்கவொண்ணுதவரன்றோ.

*(த்வமப்ரமேய:)* முன்னே வந்து நிற்கும் என் கைக்கும் 'எய்தா(ன்?)' என்கிறபடியே, என் கண்முகப்பே நிற்கச் செய்தேயும், எட்டப்போகிறதில்லை. *(த்வமப்ரமேய:)* **'அயம்'** என்னும்படி ஸந்நிஹிததேஶ வர்த்தமாநகால ஸம்பந்தியா யிருக்கச்செய்தேயும், **'ஸ:'** என்னும்படி விப்ரக்ருஷ்டதேஶ காலாந்தரவர்த்திகளைப்போலே அளவிடப்போகிறதில்லை. *(த்வமப்ரமேய:)* கண்ணிட்டுப் பார்த்தவாறே எளியீரா யிருந்தீர். நெஞ்சிட்டுப் பார்த்தவாறே அரியீராயிருந்தீர். **"न चक्षुषा गृह्यते मनसा तु विशुद्धेन" (ந சக்ஷுஷா க்₃ருஹ்யதே மநஸா து விஶுத்₃தே₄ந)** என்கிற ப்ரமாணம் பொய்யாயிருந்

---

நித்யனுகையாலே காலத்தால் அளவில்லை; ஸர்வவ்யாபியாகையாலே தேசத்தால் அளவில்லை; எல்லாப் பொருளோடும் ஒரே வேற்றுமை யில் சொல்லத்தக்க வேறொரு ப்ரகாரி இல்லாமையாலே வஸ்துவால் அளவும் இல்லை. ஆக இப்படி மூவகை அளவுகளாலும், பத்தர், முக்தர், நித்யர் என்னும் மூவகைச்சேதனருக்கும் மனம், வாக்கு, காயம் என்னும் மூவகைக் கரணங்களாலும், இறந்தகாலம், நிகழ் காலம், வருங்காலம் என்னும் முக்காலத்திலும் அளவிடவொண்ணு தவரன்றோ தேவரீர்.

(நீ அறிதற்கரியவன்) முன்னே வந்து நிற்கும் என் கைக்கும் "எய்தா நின்கழல்" [திருவாய் 2-9-2] என்கிறபடியே, என் கண்முன் னுலேயே நிற்கும்போதும் அடையமுடியவில்லை. (நீ அறிதற்கரிய வன்) 'இவன்' (ரா-கி 24-28) என்றும், 'நீ' என்றும் சொல்லும்படி அருகிலுள்ள இடத்திலும் நிகழ்காலத்திலும் நிற்கும்போதும், 'அவன்' [ரா-கி 24-28] என்றும், 'அறிதற்கரியவன்' என்றும் சொல் லும்படி வெகுதூரத்திலும், வேறுகாலத்திலுமுள்ளாரைப்போலே உன்னை அறியமுடியவில்லை. (நீ அறிதற்கரியவன்)கண்ணால் பார்க் கும்போது 'நீ' என்று சொல்லும்படி எளியவராயிருக்கிறீர்; நெஞ் சால் அறியும்போது அறிதற்கு அரியவராயிருந்தீர். "கண்ணால் காண்பரியன்; சுத்தமான மனத்தாலேயே காணத்தக்கவன்" (வ்யாஸ

தது. (த்வமப்ரமேய:) "**अवष्टभ्य च तिष्ठन्तं ददर्श धनुरूर्जितम्**" (அவஷ்டப்₄ய ச திஷ்ட₂ந்தம் த₃த₃ர்ஶ த₄நுரூர்ஜிதம்) என்று-க்கையும் வில்லுமாய் எளியீராயிருக்கிற நீர், "**तमसः परमो धाता शङ्खचक्रगदाधरः**" (தமஸ: பரமோ தா₄தா ஶங்க₂சக்ரக₃தா₃த₄ர:) என்று கையும் ஶங்கசக்ரங்களுமான பரவஸ்துவாயிருந்தீர். (த்வமப்ரமேய:) பரத்வம் எட்டவொண்ணுதென்றிருந்தோம்: ஸௌலப்யந்தானும் எட்டப்போகிறதில்லை. (த்வமபரமேய:) ஒரு பரிகரமுமின்றிக்கே தனிமைப்பட்டாற்போலேயிருக்கிற நீர் "**अनुभावविशेषात्तु सेनापरिवृताविव**" (அநுப₄ாவவிஶேஷாத் து ஸேநாபரிவ்ருதாவிவ) என்கிறபடியே அபரிமித பரிகரரைப் போலே உட்கொள்ளவொண்ணுதபடியாயிருந்தீர். (த்வம ப்ரமேய;) பித்ருநியோக₃த்தாலே தாபஸராய் வநவாஸம் பண்ணப்போந்தீர்; விராத₄ க₂ர கப₃ந்த₄ வாலிப்ரப்ருதிகளைக் கொன்று திரியாநின்றீர்; உம்முடைய நினைவும் செயலும் அறுதியிடப்போகிறதில்லை.

---

ஸ்ம்ருதி) என்னும் ப்ரமாணமும், நிரங்குச ஸ்வதந்த்ரரான உம் விஷயத்தில் பொய்யாயிற்று. (நீ அறிதற்கரியவன்) 'உறுதியான வில்லை அமுக்கிப்பிடித்துக்கொண்டு நிற்கும் (ராமனைப் பார்த்தாள் தாரை)" [ரா-கி 19-25] என்று கையும் வில்லுமாய் அரசனுகக் காட்சியளிக்கையாலே எளியவராயிருக்கும் நீர், "மூலப்ரக்ருதிக்கும் மேற்பட்டவராய், ஸர்வாதாரராய், சங்கசக்ரகதைகளை தரிப்பவரான விஷ்ணுவே நீர்" [ரா-யு114-15] என்று கையிலே சங்கசக்ரமேந்தி நிற்கும் பரம்பொருளாகவும் காட்சியளிக்கிறீர். (நீ அறிதற்கரிய வன்) பரத்வத்தைத்தான அறியமுடியாதென்று நினைத்திருந்தோம்; அவதரித்து நிற்கும் உமமுடைய ஸௌலப்யமும அறியவொண் ணுததாயிருநதது. (நீ அறிதற்கரியவன்) சேனை முதலான அரசர்க் குரிய பரிகரங்கள் இல்லாமல் தனிமைப்பட்டவர்போலேயிருக்கும் நீர், "தேஜோ விசேஷத்தாலே சேனைகளால் சூழப்பட்டவர்கள் போலே இருந்தனர் அவ்விருவரும்" [ரகுவம்1-37] என்கிறபடியே, அளவற்ற படைபலத்தை உடையவரைப்போலே அறியமுடியாதவரா யிருந்தீர். (நீ அறிதற்கரியவன்) தந்தையின் கட்டளையாலே தபஸ்வியாய்க் காட்டில் வாழவந்தீர். விராதன், கரன், கபந்தன், வாலி முதலானுரைக் கொன்று திரியாநின்றீர். உம்முடைய நினைவும், செயலும் ஒருவிதமாக நிச்சயிக்கமுடிகிறதில்லை.

அந்த:கரணத்துக்கு எட்டவொண்ணாது என்றொழிந்தால், பாஹ்யகரணந்தனக்கு எட்டலாமோ என்றிருந்தோம். (துராஸதச்ச) அதுவும் செய்யவொண்ணாதபடியாயிருந்தது. மநஸ்ஸால் கிட்டவொண்ணாததையோ ஶரீரத்தால் கிட்டலாகிறது? (துராஸத:) **"विष्णुराराध्यते पन्थाः"** (விஷ்ணுராராத்₄யதே பந்தா₂:)என்றும், **"महाजनो येन गतः स पन्थाः"** (மஹாஜநோ யேந க₃த: ஸ பந்தா₂:) என்றும் சொல்லுகிற நல்வழியே போவார்க்குக் கிட்டலாமத்தனைபோக்கி, **"पथस्खलितं"** (பத₂ஸ்க₂லிதம்) என்றும், "வழிதிகைத்தலமருகின்றேன்" என்றும் வழிகெட்டு நின்றவர்களுக்கு ஒருகாலும் கிட்டவொண்ணாதாயிராநின்றது. (துராஸத:) **"षद्लृ-विशरणगत्यवसादनेषु"** (ஷத்₃லு விஶரணக₃த்யவஸாத₃நேஷு) இறே. அப்படிச்கு விசரணார்த்தமாய், பொடியாக்கவென்று பார்த்தால், **"सुसूक्ष्मं"**

---

உள்ளிந்திரியமான மனத்துக்குத்தான் எட்டவில்லையென்றால், வெளியிந்திரியங்களுக்குத்தான் எட்டக்கூடுமோ என்று நினைத்தேன்; (அடைதற்கரியவன்) அதுவும் செய்யமுடியாதபடியாய் இருந்தது. அதிவேகமாகச் செல்லக்கூடிய மனஸ்ஸாலே அணுக முடியாததை மந்தமாகச் செல்லும் ச்ரீரத்தாலேயோ அணுகமுடியும்? "வர்ணாச்ரமாசாரத்தையுடைய புருஷனாலேயே பரமபுருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான்; வேறுவழி அவனுக்கு உகப்பை அளிக்காது" [வி-பு 3-8-9] என்றும், "மஹான்களான ஜனங்கள் செல்லும் மார்க்கமே தர்மத்தையடைய வழியாகும்" [பார-ஆர314-19] என்று சொல்லுகிற நல்வழியிலே நடப்பவர்க்கு அடையலாமேயொழிய, "விவேகமின்மையாகிற மேகக்கூட்டத்தாலே திசை தெரியாதவனாகி, பலவிதமாக இடைவிடாத துன்ப மழையைப் பொழியும் ஸம்ஸாரமாகிற மழை காலவிருளிலே வழிதவறினவனை என்னைக் கடாக்ஷித்தருள வேணும்" [ஸ்தோ-ர-49] என்றும், "பாவியேன் பலகாலம் வழி திகைத்து அலமருகின்றேன்" (திருவாய் 3-2-9) என்றும் வழிகெட்டு நின்றவர்களுக்கு ஒருபோதும் அணுகமுடியாததாயிருந்தது. (ஆஸாதனம் செய்யமுடியாதவன்) "ஷத்₃லு என்னும் தாது பொடியாக்குவது, போகச்செய்வது முடிப்பது என்னும் மூன்று பொருள்களை உடையது" (தாதுபாடம்) என்று சொல்லப்படுகிறதன்றோ. அந்த தாதுபாடத்தின்படி 'பொடியாக்குதல்' என்னும் பொருளையுடையதாகக்கொண்டால் இவனைப் பொடியாக்கலாமோவென்று பார்க்கும்

(ஸூஸூக்ஷ்மம்)என்று ஸூக்ஷ்மத்ரவ்யமாகையாலே, ஸ்தூல பதார்த்தம்போலே பொடியாக்கவொண்ணாது. 'கதி'யாய், நின்றவிடத்திலும் கடக்க வடிக்கவென்றுபார்த்தால், "விபும்" (விபு₄ம்) என்று எங்கும் பரந்துளனாகையாலே கடக்கவடிக்கப் போகாது. 'அவஸாதந'மாய், முடிக்கவென்று பார்த்தால், "நித்யம்" (நித்யம்) என்று ஸர்வகாலஸத்தாகையாலே, காதா₃ சித்கமான நாஶம் பண்ணவொண்ணாது. ஆக, "நித்யம் வி₄பும் ஸர்வக₃தம் ஸுஸூக்ஷ்மம்" என்றிருக்கையாலே இவை மூன்றும் செய்யமுடியாது என்றுமாம். வாலிவதகுபிதரான வர்களும் வந்தடர்த்து ப்ரதிக்ரியை பண்ணலாமோ என்றி ருந்தோம். (துராஸத:) அப்படிவருவார்க்கு அணுகவுங்கூட வொண்ணாதபடியாயிருந்தீர் என்றுமாம். பர்ஹ்யகுத்ருஷ்டி

---

போது, "மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பவனை" [முண்ட 1-1-6] என்று மிக நுண்ணிய பொருளாயிருக்கையாலே ஸ்தூலப்பொருள்களைப் போலே பொடியாக்கமுடியாது. 'போகச்செய்வது' என்று பொருள் கொண்டு பொடியாக்கமுடியாமல் நின்றபோதிலும், தூரத்தில் தள்ளமுடியுமோ என்று பார்த்தால் ஸர்வவ்யாபியாயிருப்பவனாகை யால் "எங்கும் பரந்த ஸ்வரூபத்தை உடையவனை" [முண்ட 1-1-6] என்று * உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளனாகை யாலே தூரத்தில் தள்ளவும் முடியாது. 'முடிப்பது' என்று 'ஷத்₃லு' தாதுவுக்குப் பொருள்கொண்டு பொடியாக்கவும், தூரத்தில் தள்ள வும் முடியாது போனாலும், உம்மை ஒரேயடியாக ஒழித்தாவது விட லாமா என்று பார்த்தால், 'என்றுமிருப்பவனை' [முண்ட 1-1-6] என்று எக்காலத்திலுமிருக்கும் பொருளாகையாலே, ஒருபோதும் அழிக்கமுடியாது. ஆக, "என்றுமிருப்பவனும், ஸர்வவ்யாபியாகை யாலே எங்கும் பரந்த ஸ்வரூபத்தையுடையவனும், மிக நுண்ணிய வனுமான பரமாத்மாவை" [முண்ட 1-1-6] என்று சுருதி சொல்லு கையாலே, என் கணவனைக் கொன்றீர் என்னும் கோபத்தாலே வாலியைச் சேர்ந்தவர்கள் உம்மை நொறுக்கிப்பொடியாக்குவதோ, தூரத்தில் தள்ளுவதோ, அழிப்பதோ செய்யமுடியாது என்றும் பொருள் கொள்ளலாம். அன்றிக்கே, "வாலிவதத்தால் கோபங் கொண்டவர்கள் எல்லோரும் சேர்ந்துவந்து உம்மோடு சண்டை செய்து பழிதீர்த்துக கொள்ளலாமோ" என்று நினைத்தோம்; (அடைதற்கரியவன்) அப்படி வருகிறவர்களுக்கு அணுகவுங்கூட

களுடைய குதர்க்கங்களாலே தூஷிக்சலாமோவென்னில்: (துராஸத:) "तर्कोऽप्रतिष्ठः श्रुतयो विभिन्ना न चानृषेर्दर्शनमस्ति किञ्चित्। धर्मस्य तत्त्वं निहितं गुहायां" (தர்க்கோऽப்ரதிஷ்ட$_2$: ச்ருதயோ வி பி$_4$ ந் ந ா ந சாந்ருஷேர்த$_3$ர் $^{}$நமஸ்தி கிஞ்சித் த$_4$ர்மஸ்ய தத்வம நிஹிதம் கு$_3$ஹாயாம்) என்றும், "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்றும் வேதகுஹையிலே ஸுரக்ஷித மாகையாலே, தர்க்காப$_4$ாஸங்களாலேயாதல் ஒருதலை மாற்ற மான ச்ருதிஸ்ம்ருதிகளாலேயாதல் அவிசால்யராயிருந்தீர் என்றுமாம்.

இப்படி அப்ரமேயத்வ துர்த்த$_4$ர்ஷத்வங்களாலே த்$_3$ருப்தராய்,பரதாரராஜ்யங்களைப் பறித்தாளுவதாகக்கொன்

---

முடியாதபடியாய் இருந்தீர்" என்றும் பொருள் கொள்ளலாம். "வேதத்துக்குப் புறம்பானவர்களுடையவும், வேதத்திற்கு அவப் பொருள் சொல்லும் தீக்கண்ணர்களுடையவும் குயுக்திகளாலே தூஷிக்கலாமோ?" எனில் (துஷ்டர்களாலே அசைக்கவொண்ணு தவர்) ["ஷத்$_3$லு" தாதுவுக்கு 'கதி-போகச்செய்வது அதாவது அசைப்பது' என்னும் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது]. "யுக்தி கள் நிலை நில்லாதவை; வேதங்கள் பலபடிப்பட்டிருக்கின்றன; பரஸ்பரவிருத்தமான மதங்களில் ஒன்றுகூட ஒரு ரிஷியால் செய்யப் படாததில்லை. தர்மத்தின் உண்மை வேதமலையின் குஹையொன் றிலே ஒளித்துவைக்கப்பட்டிருக்கிறது." [பார-ஆர 314-19]என்றும், "உளன் சுடர்மிகு சுருதியுள்" [திருவாய் 1-1-7] என்றும், வேதத் தின் குஹையொன்றிலே நன்கு ரக்ஷிக்கப்பட்டிருக்கிறீராகையாலே, குயுக்திகளாலேயாவது, ஒருவரிடம் பக்ஷபாதத்தாலே அவர்களைப் போரப் பொலியப்பேசும் சுருதியிலுள்ள அர்த்தவாதவாக்யங் களாலேயாவது, * இலிங்கத்திட்ட புராணம் முதலான ஸ்ம்ருதி களாலேயாவது, அசைக்கமுடியாதவராயிருந்தீர் என்றும் பொருள் கொள்ளலாம்.

இப்படி மேலே சொல்லப்பட்ட அறியமுடியாமை, அடையமுடி யாமைஎன்னும் பெருமைகளாலே கர்வங்கொண்டவராய், பரதார மாகிய என்னையும், என் கணவனின் ராஜ்யத்தையும் பிடுங்கி ஆள்வ

றீர் என்றிருந்தோம். (ஜிதேந்த்ரியச்ச) அப்படியன்றியிலே மஹாராஜர்க்குக் கொடுத்தபடியாலே விஷயசபலரன்றியிலே யிருந்தீர். (ஜிதேந்த்ரிய:) இந்த்ரியங்களும் அடங்காதே கண்ட விஷயங்களிலே சபலங்களாகையன்றிக்கே, அவை உம்முடைய கீழே அடங்கும்படி அமுக்கி ஆளவல்லீராயிருந் தீர். (ஜிதேந்த்ரிய:) யாதேனும் ஒரு புருஷனும், ஏதேனும் ஒரு ஸ்த்ரீயைக் கிட்டினால ஏறிட்டுப் பார்ககககடவதாயிறே இருப்பது. அப்படியிருக்க, **"न रामः परदारांश्च चक्षुर्भ्यामपि पश्यति"** (**ந ராம: பரதா₃ராம்ச்ச சக்ஷுர்ப்₄யாமபி பச்யதி**) என்கிறபடியே இத்தனைப்போது நான் நிற்கிறவிடத்தில் முகமெடுத்துப் பாராதே நிற்பதே! என்ன விரக்தரோ இவர்? என்கிருள். (ஜிதேந்த்ரியச்ச) **"पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः"** (**பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண:**) என்றும், **"अपाणिपादो जवनो गृहीता"** (**அபாணிபாதோ₃ ஜவநோ க்₃ருஹீதா**) என்றும், **"सर्वेन्द्रियैरपि विना सर्वं सर्वत्र पश्यति"** (**ஸர்வேந்த்₃ரியைரபி விநா ஸர்வம் ஸர்வத்ர பச்யதி**) என்றும், நாட்டோபாதிக்கு அவை படைத்தீ

---

தற்காக வாலியைக் கொன்றீர் என்று நினைத்தோம். (புலன்களை வென்றவன்) அப்படியல்லாமல், வாலியைக் கொன்று அடைந்த ராஜ்யத்தை ஸுக்ரீவனுக்குக் கொடுத்தபடியாலே, விஷயங்களிலே வைராக்யமுள்ளவராயிருந்தீர். (புலன்களை வென்றவன்) இந்திரி யங்கள் எல்லாமும் அடங்காமல் கண்ட விஷயங்களிலே ஈடுபடுகை யன்றிக்கே, அவை உமக்குக் கீழே அடங்கும்படி அமுக்கி அவற்றை நியமிக்கவல்லவராயிருந்தீர். (புலன்களை வென்றவன்) எந்தப் புருஷனாயினும், எந்த ஸ்திரீயை அணுகினாலும் அவளை ஏறிட்டுப் பார்ப்பதை நாம உலகில் காணுநின்றோம். அப்படியிருகக, "ராமன் பிறர் மனைவியரைக் கண்களால்கூடக் காண்பதில்லை' [ரா-அ 72-49] என்கிறபடியே இத்தனைநேரம் நான் நிற்கும்போதும் என்னை முகம் நிமிர்த்திப் பாராமல் நிற்பதே! என்ன வைராக்யமுடையவரோ இவர்! எனகிருள். (புலன்களை வென்றவன்) "கண்ணில்லாமலே காண்பவன்; காதில்லாமலே கேட்பவனவன்" [ச்வே 3-19] "கால் கையற்றவனாயினும், வெகு வேகமாக நடப்பவன்; எல்லாவற்றையும் பிடிப்பவன்" [ச்வே 3-19] என்றும், "எல்லா இந்திரியங்களுமில் லாவிடினும் எல்லாவற்றையும் எங்கும் காண்கிறான்" [ ]

ரத்தனைபோக்கி. நாட்டாரைப்போலே இந்த்ரியாதீ₄நப்ர வ்ருத்தியின்றியிலேயிருந்தீர் என்றுமாம். "दुर्ग्रहं मनसाप्यन्यै- रिन्द्रियैरपि दुर्जयं" (து₃ர்க்₃ரஹம் மநஸாப்யந்யைரிந்த்₃ரியைரபி து₃ர்ஜயம்) என்றும், "மனனுணர்வளவிலன் பொறியுணர் வவையிலன்" என்றும் சொல்லுகிறபடியே, நாட்டாருடைய பாஹ்யாந்தர கரணங்களுக்கு எட்டவொண்ணுதபடியா யிருந்தீர் என்னவுமாம்.

(த்வம் ஜிதேந்த்ரிய:) "अहल्यायै जारः सुरपतिरभूदात्मतनयां प्रजानाथोयासीदभजत गुरोरिन्दुरबलां" (அஹல்யாயை ஜாரஸ் ஸுரபதிரபூ₄தா₃த்மதநயாம் ப்ரஜாநாதோ₂யாஸீத₃ப₄ஜத கு₃ரோரிந்து₃ரப₃லாம்) இத்யாதிப்படியே எங்கள் மாமனரான இந்த்ரன் அஹல்யா ஜாரனுன். அவனுக்கு மேலான ப்ரஹ்மா ஸுதாபி₄லாஷம் பண்ணினுன். ப்ரகாசகனுன சந்த்ரன் குரு தாரத்ரோஹியானுன். ஆதித்ய புத்ரரான மஹாராஜரும்.

என்றும் மற்றுள்ளார்கருப்போலே இந்திரியங்களுண்டேயொழிய, மற்றுள்ளாரைப்போலே இந்திரியங்களாலேயே வருவன செயல்கள் என்னும் நிர்ப்பந்தமில்லாமலிருந்தீர் என்றும் கொள்ளலாம். (புலன்களை வென்றவன்) "மனத்தாலும் அறியவொண்ணுதவன்; மற்ற இந்திரியங்களாலும ஜயிக்க வொண்ணுதவன்" [ ] என்றும், "மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்" [திருவாய் 1-1-2] என்றும் சொல்லுகிறபடியே, உலகத்தாருடைய உள்ளிந்திரியமான மனத்துக்கும், வெளியிந்திரியங்களான மெய் வாய் கண் மூக்கு செவி முதலானவற்றுக்கும் அடையமுடியாதபடி அவற்றை வென்றிருப்பவன் என்றும் பொருள்கொள்ளலாம். [இங்கு இந்திரியங்கள் என்றது பிறருடைய இந்திரியங்கள்.]

(நீயே புலன்களை வென்றவன்) "தேவந்திரன் கௌதம பத்தினியான அகல்யைக்கு ஆசைநாயகனுன்; தன் பெண்ணையே இச்சித்தான் பிரமதேவன்; ஆசாரியனுன பிருஹஸ்பதியின் பத்தினியைச் சந்திரன் புணர்ந்தான்" [ப்ரபோதசந்த்ரோதய நாடகம்]என்கிறபடியே என்பதியின் பிதாவான் இந்திரன் ரிஷிபத்நியானஅகல்யைக்குஆசை நாயகனுன்,அவனுக்கும் மேலான பிரமன் தன்னுடையபெண்ணைப் புணர விரும்பினுன். உலகையெல்லாம் பிரகாசப்படுத்தும் சந்திரன் ஆசார்ய பத்தினியை அடைந்தான். சூரிய புத்திரனுன சுக்கிரீவனும்,

இந்த்₃ரபுத்ரரான வாலியும் என்னளவிலே பட்டபாடு இது. விச்வாமித்ரன்மேநகாசபலனுனன். இப்படியே நாடு இருந்ததே குடியாகஅகப்படாநிற்க, நீர் ஒருவருமேகாணும் விரக்தராயிருந்தீர். **"इन्द्रियैः कामवृत्तस्सन् कृष्यसे मनुजेश्वर"** (இந்த்₃ரியை: காமவ்ருத்த: ஸந் க்ருஷ்யஸே மநுஜேச்வர) என்கிறபடியே, ராஜ்யதாரங்களை விட்டிருக்கிற நீர், அந்த நசையாலே வந்தீரோ என்றிருந்தோம். (ஜிதேந்த்ரிய:) அவற்றில் நேராக நிஸ்ப்ருஹராயிருந்தீர்.

'இப்படி விரக்தராயிருக்கிறவர் நம்மை நலிவானேன்? அத₄ார்மிகரோ?' என்றிருந்தோம்; (உத்தம தார்மிக:) இந்த வ்யாபாரமெல்லாம் பரார்த்தமாக உபகரிக்கையாயிருந்தது. (உத்தம தார்மிக:) தனக்கென்று செய்யுமவன் அதமதார்மிகன்; தனக்கும் பிறர்க்குமென்று செய்யுமவன் மத்யமதார்மிகன்; பிறர்க்கென்று செய்யுமவன் உத்தமதார்மிகன்.

---

இந்திரன் பிள்ளையான வாலியும் எனக்காகப் படும்பாடு இது. உமக்கு ஆசாரியனுன விச்வாமித்திரனும் மேனகைக்குவசப்பட்டான். இம்மாதிரியாக உலகிலிருக்கும் எல்லோரும் "ஹரிணீ கு₃ரமாத்ரேண சர்மணு மோஹிதம் ஜக₃த்" [மான்குளம்பளவுள்ள தோலைக்கண்டு உலகமெல்லாம் மயங்குகிறது] என்கிறபடியே வசப்பட்டு நிற்க, நீர் ஒருவரே விஷய வைராக்கியமுள்ளவராயிருந்தீர்; "அரசனே! இஷ்டப்படி நடப்பவனுய், இந்திரியங்களாலே இழுக்கப்படுகிருய்" [ரா-கி 17-33] என்கிறபடியே ராஜ்யத்தையும் மனைவியையும் இழந்திருக்கும் நீர், பிறருடைய ராஜ்யத்திலும் மனைவியிடமும் ஆசையாலே வந்தீரோ என்று நினைத்தோம்; (புலன்களைவென்றவன்) அவற்றில் உண்மையாக ஆசையற்றவராயிருந்தீர்.

'இப்படி வைராக்யத்தோடு இருப்பவர் நம்மைத்துன்புறுத்துவானேன? பிறரைக் காரணமில்லாமல் ஹிம்ஸிக்கும் அதார்மிகரோ?' என்று நினைத்தோம்; (உயர்ந்த தார்மிகன்) வாலிவதத்திற்காகச் செய்த செயலெல்லாம் பிறர்க்கு உபகரிப்பதாயிருந்தது. (உயர்ந்த தார்மிகன்) தனக்கு நன்மைக்கு தருமம் செய்பவன் தாழ்ந்த தார்மிகன்; தனக்கும் பிறர்க்கும் நன்மைக்கு தருமம்செய்பவன் மத்யம தார்மிகன்; பிறர் நன்மைக்காகவே தருமம் செய்பவன் சிறந்ததார்

அன்றிக்கே, 'தார்மிக:', 'உத்தார்மிக:', 'உத்தரதார்மிக:', 'உத்தம தார்மிக:' தார்மிகராகிருர்,-தர்மஸம்பந்திகள். அதாவது:-"**वर्णाश्रमाचारवता-आराध्यते**" (**வர்ணுச்ரமாசாரவதா-ஆராத்$_4$யதே**) என்று வர்ணுச்ரமதர்மஸமாராத்யராகை. உச்$_3$த$_4$ார்மிகராகையாவது:-"**तमेवं विद्वानमृत इह भवति नान्यः पन्थाः**"(**தமேவம் வித்$_3$வாநம்ருத இஹ ப$_4$வதி நாந்ய: பந்த$_2$ா:**) என்கிறபடி பக்தி மார்க்கத்தாலே பஜநீயராயிருக்கை. உத்தரதார்மிகராகையாவது:-"**शरणमहं प्रपद्ये**" (**ஶரணமஹம் ப்ரபத்$_3$யே**) என்கிறபடியே ஸர்வலோகஶரண்யராகை. உத்தமதார்மிகராகையாவது:-"**तेनानुगृहीतो ब्रह्मलोकं गच्छति**" (**தேநாநுக்$_3$ருஹீதோ ப்$_3$ரஹ்மலோகம க$_3$ச்ச$_2$தி**) என்றும், "**उपायो गुरुरेव स्यात्**" (**உபாயோ கு$_3$ருரேவ ஸ்யாத்**) என்றும் புருஷகாரவசீகார்யராகை.

தார்மிகத்வமாவது-ஸாமாந்யதர்மநிஷ்டத்வம். உத்தம தார்மிகத்வமாவது-அஸாதாரண தர்மநிஷ்டத்வம். ஸாமாந்ய

---

மிகன். அனறிக்கே, 1. தார்மிகன், 2. சிறந்த தார்மிகன், 3. மிகச் சிறந்த தார்மிகன், 4. மிகமிகச் சிறந்த தார்மிகன் என்று நான்கு படிகளாக இங்கு கருத்துரைக்கலாம். கிரமேண ஒன்றுக்கொன்று உயர்ந்த இந்த நான்கு படிகளும் எம்பெருமானுக்குள்ளன என்கை. தார்மிகராவது:-தர்மத்தோடு (ஆராத்$_4$யத்வமாகிற) ஸம்பந்தம் பெற்றிருப்பார். அதாவது:—"வர்ணுச்ரம தர்மங்களை அனுஷ்டிப்பவனுலே பரமபுருஷனை விஷ்ணு ஆராதிக்கப்படுகிருன்" [வி-பு3-8-9] என்று (மிகக்கடினமான) வர்ணுச்ரமதர்மத்தால் ஆராதிக்கப்படுமவராகை. சிறந்த தார்மிகராகையாவது:— "அந்தப் பரமபுருஷனிடம் இப்படி பக்தி செய்பவன் இப்பிறவியிலேயே மோக்ஷமடைகிருன்; மோக்ஷமடைய வேறுவழியில்லை" [பு-ஸூ] என்கிறபடியே (கடினமான) பக்திவழியாலே அடையத்தகுந்தவராயிருககை; மிகச் சிறந்த தார்மிகராகையாவது:— "பரமாத்மாவை நான் சரணம் பற்றுகிறேன்" [ச்-வே 6-18] என்கிறபடியே எல்லாவுலகுக்கும் ஸுலபமான சரணுகதியால் அடையப்படுகை. மிகமிகச் சிறந்த தார்மிகராகையாவது:-- "அந்த ஆசார்யனுல் அனுகிரஹிக்கப்பட்டு பரமபதத்தை அடைகிருன்" [ ? ] "குருவே மோக்ஷோபாயமாகக் கடவன் [ ? ] என்று ஆசார்யனுகிற புருஷகாரத்தாலேயே அதிஸுலபமாக வசப்படுகை.

*தர்மமாவது*-"**आनृशंस्यं परो धर्मः**" (ஆந்ருஶம்ஸ்யம் பரோ த$_4$ர்ம:) *என்று நொந்தாரைக் கண்டால் 'ஐயோ!' என்று இருக்கை. அஸாதாரண தர்மமாவது* "**कुलोचितमिति क्षात्रं धर्मं स्वं वहुमन्यते**" (குலோசிதமிதி க்ஷாத்ரம் த$_4$ர்மம் ஸ்வம் ப$_3$ஹு மந்யதே) "**वधश्च धर्मयुद्धेन स्वराज्यपरिपन्थिनाम्। क्षत्रियाणामयं धर्मो यत्प्रजापरिपालनम्॥**" (வத$_4$ச்ச த$_4$ர்ம யுத்$_3$தே$_4$ந ஸ்வராஜ்யபரிபந்தி$_2$நாம்। க்ஷத்ரியாணாமயம் த$_4$ர்மோ யத் ப்ரஜா பரிபாலநம்॥) *என்று தன்னை அடைந்தவர்களுக்கு ஓராபத்து உண்டானால், மார்பிலே அம்பேற்(று)றிப் பரிஹரித்துக் கொடுக்கை. ஆகையாலே வாலியோடே பொருது மஹாராஜரை ரக்ஷிக்கையாலே தார்மிகரானவளவன்றிக்கே, உத்தம தார்மிகராயிருந்தீர் என்றுமாம். (உத்தமதார்மிக:) ஆர்த்தரான மஹாராஜரை ரக்ஷித்து,* "**राजभिर्धृतदण्डास्तु कृत्वा पापानि मानवाः। निर्मलाः स्वर्गमायान्ति सन्तस्सुकृतिनो यथा॥**" (ராஜ

---

*(சிறந்த தார்மிகர்) ஸாமாந்ய தர்மத்திலே ஊன்றிநிற்பவர் தார்மிகராகிறார். விஷேதர்மத்திலே ஊன்றிநிற்பவர் சிறந்த தார்மிகராகிறார். "இரக்கமே மேலான தர்மம்" [ரா-ஸு 38-14] என்கிற படியே, துன்புற்றவரைக் கண்டால் 'ஐயோ!' என்று நினைத்திருக்கும் பரதுஃக்கதுஃக்கித்வமாகிற இரககம் எல்லாரும் பொதுப்படையாகப் பின்பற்றவேண்டிய ஸாமாந்ய தர்மமாகும். ஸமயவிசேஷங்களிலே இதையும் கீழ்ப்படுத்திப் பின்பற்றவேணடிய விசேஷதர்மமொன்றும் உண்டு. அதாவது—"தன்னுடைய க்ஷத்ரியதருமத்தைத் தன் குலத்துக்குத் தகுந்ததென்னும் காரணத்தால் கனக்கமதித்திருக்கிறார் ராமபிரான்" [ரா-அ 1-16] "குடிகளை ரக்ஷிப்பதும், தன் அரசுக்கு விரோதிகளை தர்மயுத்தத்தால் கொல்லுவதும் க்ஷத்ரியதர்மமாகும்" [ ] என்று தன்னையடைந்தவர்களுக்கு ஓர் ஆபத்து உண்டானால், அவ்வாபத்தை விளைத்தவர்கள் விஷயத்திலே ஸாமாந்ய தர்மமான இரக்கத்தை விட்டு, அவர்கள் மார்பிலே அம்பேற்றி ஆபத்தை நீக்கிக்கொடுக்கை. ஆகையாலே ஸுக்ரீவவிரோதியான வாலி விஷயத்திலே (பொது) தர்மமான இரக்கத்தை விட்டு விசேஷ (தனி) தர்மமான யுத்தத்தை ஏறிட்டுக்கொண்டு வாலியோடு சண்டைசெய்து ஸுக்ரீவனை ரக்ஷிக்கையாலே, 'தார்மிகர்' என்னும் அளவோடு நில்லாமல், 'சிறந்த தார்மிகர்' என்னும்படியிருப்பவர் என்றும் பொருள் கொள்ளலாம். (சிறந்த தார்மிகர்) துன்புற்றவனை*

பி₄ர்த்₄ருத₃த₃ண்டா₃ஸ்து க்ருத்வா பாபாநி மாநவா:| நிர்மலா: ஸ்வர்க்க₃மாயாந்தி ஸந்தஸ் ஸுக்ருதிநோ யதா₂||) என்கிற படியே, அக்ருத்யகரணத்தாலே நாரகியான வாலியை, "तस्य दण्डो वधः स्मृतः" (தஸ்ய த₃ண்டோ₃ வத₄: ஸ்ம்ருத:) என்று வத₄த₃ண்டத்தாலே பூதனுக்கினபடியாலே உத்தம தார்மிகராயிருந்தீர் என்றுமாம்.

"ஒரு ச்ரேயஸ்ஸாதநமான தர்மமேயாய், பலபர்யந்த மன்றோ?" என்றிருந்தோம். (அக்ஷய்ய கீர்த்திச்ச) "तस्य नाम महद्यशः" (தஸ்யநாம மஹத்₃யஶ:) என்றும், "நிகரில் புகழாய்" என்றும் சொல்லுகிறபடியே, மன்னுபெரும் புகழாயிருந்தீர். (அக்ஷய்ய கீர்த்திச்ச) ஒருவராலும் அழிக்கவொண்ணாத புகழையுடையீராயிருந்தீர். அதாவது ப்ரபலனான வாலியைக்கொன்று தேடிப்படைத்த புகழுக்கு, மறைந்து நின்று கொன்றீர் என்றும், நிரபராத₄திர்யக்வத₄ம் பண்ணினீர்

---

ஸுக்ரீவனை ரக்ஷித்து, "பாவம்செய்த மனிதர்கள் ராஜாக்களாலே தண்டிக்கப்பட்ட வளவில், பாவம் நீங்கப்பெற்று, புண்ணியசாலிக ளான பெரியோர்களைப்போலே சுவர்க்கமடைகின்றனர்" [ரா-கி 18-32] என்கிறபடியே செய்யத்தகாத பரதாரகமனம் செய்து நரக மடைய வேண்டிய வாலியை "தம்பியின் தாரத்தை அடைந்த வனுக்கு வதமே தண்டனை" [ரா-கி 13-23] என்கிறபடியே வதமாகிற தண்டனையை அளித்துப் பரிசுத்தப்படுத்துகையாலே நண்பன் விரோதி ஆகிய இருவரிடத்தும நன்மை செய்த சிறந்த தார்மிகரா யிருந்தீர் என்றும் கொள்ளலாம்.

சிறப்புக்கு ஸாதனமான தர்மம் மாத்திரமே இவரிடம் உள்ள தாய் த₁ர்மப₂லமான புகழ் இல்லையோ? என்று நினைத்தோம். (அழி யாப் புகழாளர்) "அந்தப் புரமபுருஷனுக்கே பெரும்புகழ் உள்ளது" [தை-நா 1-9] என்றும, "நிகரில் புகழாய்" [திருவாய் 6-10-10] என்றும் சொல்லுகிறபடியே * மன்னுபெரும்புகழ் [நாச்-திரு 5-1] உடையவராயிருந்தீர். (அழியாப் புகழாளர்) ஒருவராலும் அழிக்க முடியாத புகழை உடையீராயிருந்தீர். அதாவது:— பலசாலியான வாலியைக் கொன்று தேடிப்படைத்த புகழை அழிப்பதற்கு, 'மறைந்து நின்று கொன்றீர்' என்றும், 'தோஷமற்ற மிருகத்தைக் கொன்றீர்'

என்றும், நிஷ்ப்ரயோஜந வ்யாபாத₃நம் பண்ணினீர் என்றும், இப்புடைகளிலே அநேகம் கண்ணழிவும் சொல்லி அழிக்கலாமோ என்று பார்த்தோம். ராஜாக்களுக்கு வேட்டையும், மறைந்து நின்று கொல்லுகையும் நீதியென்றும், ஸுஹ்ருத்துமாய், ஶரணாகதனானவன் பக்கலிலே குற்றஞ் செய்கையாலே ஸாபராதவதம் பண்ணினேனும் என்றும், ஜநபதஹிதார்த்தமாக துஷ்டம்ருகவதம் பண்ணுகையாலே ஸப்ரயோஜந வ்யாபாதநம் பண்ணினேனென்றும், இத்திக்குகளிலே நிருத்தரமாக உத்தரஞ்சொல்லிப் பரிஹரித்தபடியாலே எங்களாலும் அழிக்கவொண்ணாத புகழை உடையீராயிருந்தீர்.

இப்படி மாறாத புகழ்படைக்கைக்கு அடியென் என்றிருந்தோம். (விசக்ஷணச்ச) அதுக்கடியான கார்யங்களில் முன்னடிபார்த்துச் செய்யும்படியான நிரூபகருமாயிருந்தீர். (விசக்ஷணச்ச) "**यस्सर्वज्ञः सर्ववित्**" (யஸ் ஸர்வஜ்ஞ: ஸர்வவித்) "**स्वाभाविकी ज्ञानबलक्रिया च**" (ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாநப₃லக்ரியா ச)

---

என்றும் 'பலனற்ற கொலையைச் செய்தீர்' எனறும் இவ்வழிகளிலே பல தோஷங்களைச் சொல்லிப் புகழை அழிக்கலாமோ என்று ஆராய்ந்தோம், 'அரசர்களுக்கு மிருகவேட்டையும், மறைந்து நின்று பிராணிகளை அடிப்பதும் நியாயம்' என்றும், 'நல்ல நெஞ்சையுடைய தம்பியாய், சரணமடைந்தவனை சுக்கிரீவனுக்குத் தீங்கிழைக்கையாலே பாவியைக் கொன்றேன்' என்றும், 'குடிகளின் நன்மைக்காக துஷ்ட மிருகமான குரங்கைக் கொன்றேமாகையாலே பலனுள்ள வதத்தைச் கெய்தேன்' என்றும் இவ்வழிகளிலே, எதிரி பதிலுரைக்கமுடியாதபடி பதில் சொல்லி-தோஷாரோபணத்தைப் போக்கிக் கொண்டபடியாலே, விரோதிகளான எங்களாலும் அழிக்கமுடியாத புகழை உடையீராயிருந்தீர்.

'இப்படி மாறாத புகழ் பெற்றதற்குக் காரணமென்ன?' என்று ஆலோசித்தோம். (அதிஸமர்த்தர்) புகழைக்கொடுக்கும் காரியங்களைத் தொடங்குவதற்கு முன்பிலிருந்தே ஆராய்ந்து செய்யும்படியான ஆராய்ச்சியாளருமாயிருந்தீர்; (அதிஸமர்த்தர்) "எந்தப் பரமபுருஷன் எல்லாப் பொருள்களின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிவனோ" [முண்ட 1-1-10] "பரமபுருஷனுக்கு இயற்கையான அறிவு, பலம், செயல் ஆகியவையிருப்பதாகக் கேட்கப்படுகிறது" [ச்வே-6 ]

என்று ஸஹஜ ஸர்வஜ்ஞரான உமக்கு இது ஏற்றமோ? (விசக்ஷணச்ச) நீர் சொன்னவற்றுக்கு நாங்கள் குற்றம் சொன்னால், **"उत्तरोत्तरयुक्तौ च वक्ता वाचस्पतिर्यथा" (உத்தரோத்தர யுக்தெளச வக்தா வாசஸ்பதிர் யத₂ா)** என்கிறபடியே, அவையொழிய மேலே மேலே வார்த்தை சொல்லும்படியான பொறி(பேரறி?)வாளராயிருந்தீர். (விசக்ஷண:) ஸஹஜஸாத்₃ருச்யத்தாலே இலக்கு மாறுடி ஆச்ரிதவதம் பிறவாதபடி கழுத்திலே மாலைகட்டி விடுவதே! இதென்ன கூர்மைதான்! (விசக்ஷண): நீர்தாம் அப்ரமேயராய் அறியவொண்ணுதபடியிருந்தீராகிலும், நீர்தாம் எல்லாமறிவீராயிருந்தீர். (விசக்ஷண:) ஏகாரிமைத்ரியாகையாலே, மஹாராஜர் நமக்குத் துணையாவரென்றும், ராவணமைத்ரியாலே வாலி துணையாகானென்றும் நிச்சயித்து, இவரைக்கூட்டி அவனை அழித்தபடியினாலே, *நல்லாரறிவீர், தீயாரறிவீர் இவ்வுலகத்தெல்லாமறிவீராயிருந்தீர்.

---

என்கிறபடியே இயற்கையிலேயே எல்லாமறிந்த உமக்கு, வாலியின் தோஷாரோபணத்துக்கு பதிலுரைத்துப் புகழை நிலைநிறுத்திக் கொண்டது ஒரு அதிசயமோ? (அதிஸமர்த்தர்) நீர் சொன்ன பதிலுரைகளுக்கு நாங்கள் குற்றம் சொன்னால், "(வாதஸபைகளில்) பிருஹஸ்பதியைப் போலே மேலும் மேலும் (எதிர்வாதங்களை அடக்கும்) யுக்திகளைச் சொல்லுமவர் ராமபிரான்" [ரா-அ 1-17] என்கிறபடியே அவை அழியும்படியாக மேலே மேலே வார்த்தை சொல்லும்படியான பேரறிவாளராயிருந்தீர். (அதிஸமர்த்தர்) கூடப்பிறந்த ஒற்றுமையாலே, வாலியின் மேல் விடநினைத்த அம்பு குறிதவறி, சுக்கிரீவன் மேல் பாய்ந்து, அடியானை அவனைக்கொல்லாமலிருக்கைக்காக சுக்கிரீவனின் கழுத்திலே மாலைகட்டிவிடுவதே! இதென்ன புத்திகூர்மை! (அதிஸமர்த்தர்) 'அப்ரமேய:' என்று நான் சொன்னபடியே அறியவொண்ணுதவராயிக்கும் நீரே, எல்லாமறிந்தவராயிருந்தீர். தனக்குச் சத்துருவான ராவணனை சத்துருவாகக் கொண்ட சுக்கிரீவனோடு நட்பாகையாலே[1] சுக்ரீவன் நமக்குத் துணையாவானென்றும், ராவணனோடு நட்புக்கொண்டவனுகையாலே வாலி நமக்கு நண்பனுக மாட்டான் என்றும் நிச்சயித்து சுக்கிரீவனைக் கூட்டிக்கொண்டு, வாலியை அழித்தபடியாலே "நல்லாரறிவீர்

இப்படி விசக்ஷணரானால், "शत्रोः शेषं न शेषयेत्" (ஶத்ரோ: ஶேஷம் ந ஶேஷயேத்) என்றும், "सपुत्रपौत्रं समात्यं समित्रज्ञाति बान्धवम्। हत्वा" (ஸபுத்ரபௌத்ரம் ஸாமாத்யம் ஸமித்ரஜ்ஞாதி பா₃ந்த₄வம்|| ஹத்வா) என்றும் சொல்லுகிறபடி (படியே) வசநாநுரோத₄ம் பண்ணி, ஒட்டின அங்கதாதிகளையும்நிரந்வயமாக முடிப்பிக்கிறீரோ என்றிருந்தோம். (க்ஷிதிக்ஷமாவாந்) பொறுமையிலும் பூமியாயிருந்தீர். வாலியைக்கொன்ற சீற்றம் மாறாதே நிற்கிற நிலையிலே நானும் அங்கதனும் நெற்றியில் பேன்போலே முன்வந்து நின்றால் குடிக்கொலையாக அறுக்க ப்ராப்தமாயிருக்க, எங்களைப் பொறுப்பதே! (க்ஷிதிக்ஷமாவாந்) "क्षमया पृथिवीसमः" (க்ஷமயா ப்ருதி₂வீஸம:) என்கிறபடியே பஞ்சாசத் கோடிவிஸ்தீர்ணையான பூமிப்பரப்பிலுள்ள பொறையத்தனையும் உம்மொருவர் பக்கலிலும் ஆயிருந்தது. (க்ஷிதிக்ஷமாவாந்) முற்பட நெஞ்சிலே குற்றம்

---

தீயாரறிவீர் நமக்கு இவ்வுலகத்து எல்லாமறிவீர்" [பெரியதிரு 4-9-6] என்னும்படியிருந்தீர்.

இப்படி அதிஸமர்த்தரானால், "சத்துருகுலத்தைச் சிறிதளவும் விட்டுவைக்கக்கூடாது" [ ] என்றும், "புத்திர பௌத்திரர்களோடும், மந்திரிகளோடும், நண்பர், தாயாதிகள், பந்துக்கள் ஆகியவரோடும் ராவணனைக் கொன்று" [ரா-பா 15-27] என்றும் சொல்லுகிற வசனங்களைப் பின்பற்றி, வாலியோடு ஸம்பந்தமபெற்ற அங்கதன் முதலானுரையும் பூண்டோடு அழிக்கப்போகிறீரோ என்று பயந்தோம். (புவிப்பொறையாளர்) பொறுமையில் பூமியைப்போன்றவராயிருந்தீர். வாலியைக் கொன்ற சீற்றம் மாறாதே நிற்கிற நிலையிலும், வாலியின் உறவினரான நானும், அங்கதனும் நெற்றியில் ஸஞ்சரிக்கும் பேன்போலே முன்னே வந்து நிற்கையில் குலத்தோடு வேரறுக்கவேண்டியதே ராஜநீதிக்குத் தக்கதாயிருக்க, எங்களைப் பொறுப்பதே! (புவிப்பொறையாளர்) "பொறையில் பூமிமுழுவதற்கும் ஸமானமானவர்" [ரா-பா 1-18; ரா-ஸு 35-90] என்கிறபடியே, ஐம்பதுகோடி விஸ்தீரணமுள்ள பூமிப்பரப்பிலுள்ளபொறுமையெல்லாம் உம் ஒருவரிடத்திலேயாயிருந்தது. (புவிப்பொறையாளர்) முதலில் நெஞ்சிலே குற்றம் அறியப்பட்டுப்

கிடந்து, பின்பு பொறுத்ததாகையன்றிககே யிருந்தபடி. முதலிலே குற்றத்தில் அறிவின்றிக்கே, பொறுமையே நிரூபகையான பூமியின் பொறையாயிருந்தது. (க்ஷிதிக்ஷமாவாந்) பூமிப்பரப்புக்காகப் பண்ணக்கடவ பொறுமையை என்னொருத்தியளவிலும் பண்ணுவதே யென்றுமாம். (க்ஷிதிக்ஷமாவாந்) பூ₄மார்த்தத்திலே மதுப்பாய், என்னொருத்தியளவிலே பண்ணின பொறுமை பூமிக்காகப் போருமாயிருந்தது என்றாகவுமாம்.

'என்னளவில் இப்படி பொறுமை பண்ணுகைக்கு அடியென்?' என்றிருந்தோம். (க்ஷதஜோபமாக்ஷ:) "உயிர்க்கெல்லாம் தாயாய் அளிக்கின்ற தண்டாமரைக் கண்ணன்" என்று ஸர்வரக்ஷகத்வ ஸூசகமான இக்கண்ணின் வைலக்ஷண்யமிருந்தபடி என்தான்! (க்ஷதஜோபமாக்ஷ:) வாலியைக் கொன்றபோது சீற்றத்தால் பிறந்த சிவப்பு இன்னமும்

---

பிறகு கருணைக்கு விஷயமாகையன்றிக்கேயிருந்தபடி. முதன்முதலில் குற்றத்தையே அறியமாட்டாதபடி பொறுமையே நிருபகதர்மமாம்படியான பூமியின் பொறுமையாயிருந்தது உம் பொறுமையும். (புவிப்பொறையாளர்) பூமிமுழுவதற்கும் செய்யத்தக்க பெரும் பொறுமையை என் ஒருத்தி விஷயத்திலே காட்டுவதே! என்ன ஆச்சர்யம்! என்றும் பொருள்கொள்ளலாம். (புவிப்பொறையாளர்) 'க்ஷமாவாந்' என்றவிடத்தில் 'மதுப்' ப்ரத்யயம் "பூ₄மநிந்த₃ா ப்ரசம்ஸாஸு... ப₄வந்தி மதுபாத₃ய:"[ஆதிக்யம், இழிவு, புகழ்முதலானவற்றைக்குறிக்க 'மதுப்' முதலான ப்ரத்யயங்கள் வருகின்றன.] என்னும் இலக்கண விதிப்படி 'ஆதிக்யம்' என்னும் பொருளிலே வந்ததாகக் கொண்டால், என் ஒருத்தி விஷயத்திலே காட்டின பொறுமை பூமிமுழுவதற்கும் போதுமானதாயிருந்தது என்றும் பொருள் கொள்ளலாம்.

'என்னிடத்திலே இப்படிப் பொறுமைகாட்டுவதற்குக் காரணம் என்ன?' என்று ஆலோசித்தேன். (ரத்தநத்திற் சிவந்த கண்ணன்) "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" [பெரிய திரு 7-2-9] என்று, எல்லோரையும் காக்கையால் வந்த ஐச்வர்யத்தைக் காட்டும் இக்கண்ணின பெருமையிருந்தபடி என்ன ஆச்சரியம்! (குறுதியில் சிவந்த கண்ணன்) வாலியைக் கொன்றபோது

*மாருதேயிருக்க, என்னை முனியாதே பொறுப்பதே! என்கிருள்,* **"शरेणैकेन"** *(ஶரேணைகேந)என்று வாலியை ஓரம்பாலே கொன்றீர் என்று கேட்டோம். அங்ஙனன்றியிலே,* **"रामो रक्तान्तलोचनः"** (ராமோ ரக்தாந்த லோசந:) *என்ற கடைக்கண் சிவந்ததித்தனையாயிருந்தீர். (க்ஷதஜோபமாக்ஷ:)* **"रक्तास्यनेत्रपाणिः"** (ரக்தாஸ்யநேத்ரபாணி:) *என்றும்,* **"त्रिताम्रः"** (த்ரிதாம்ர:) *என்றும் கண்ணில் சிவப்பும் ஸாமுத்ரிக லக்ஷணமாயிருந்தபடியால், இன்னமும் மேல் ஸார்வபௌமராய் ஆள்வீர் என்று தோற்றியிரா நின்றது. (க்ஷதஜோபமாக்ஷ:) க்ஷதத்தாலே பிறந்ததிறே க்ஷதஜமாகிறது. அப்படியே,* **"यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी"** **(யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ)** *என்று ஸுப்ரஸந்நத₄வளமான உம்முடைய கண்ணுக்குச் சிவப்பு ஸ்வாப₄ாவிகமல்ல; கோபத்தாலே வந்தேறி என்று தோற்றியிருந்தது என்றுமாம். (க்ஷதஜோபமாக்ஷ:) இக்*

---

கோபத்தால் கண்ணில் பிறந்த சிவப்பு இன்னமும் மறையாதேயிருக்க, என்னைக்கோபிக்காமல் நீர் பொறுப்பதே! என்கிருள். "ஓரம்பாலே ராமன் வாலியைக் கொன்ருன்' [ரா-பா 1-69] என்று வாலியை ஓரம்பாலே கொன்றீரென்று பிறர் சொல்லக் கேட்டிருந்தோம். நேரில் பார்க்கும்போது அங்ஙனில்லாமல், "கடைக்கண் சிவந்த ராமபிரான்" [ரா-யு 21-13] என்று கடைக்கண் சிவந்த மாத்திரத்தால் வாலியைக் கொன்றீராய்த் தோற்றுகிறது. (குருதியிற் சிவந்த கண்ணன்) "வாய், கண், கை ஆகிய மூன்றும் சிவந்தவன்" [ ] என்றும், ('வாய், கண், கை ஆகிய) மூன்றும் சிவந்தவன்" [ரா-ஸு 35-17] என்றும் கண்ணில் சிவப்பும் உத்தமபுருஷனுக்கு ஸாமுத்ரிக சாஸ்திரத்திற் சொன்ன லக்ஷணமாயிருந்தபடியால், இன்னமும் மேலுள்ள நெடுங்காலம் சக்ரவர்த்தியாய் ஆளுவீர் என்று தோற்றியிருந்தது. (காயத்தில் பெருகும் குருதியிற் சிவந்த கண்ணன்) 'க்ஷதம்' என்று ஆயுதம் முதலானவற்ருலுண்டான காயதைதச் சொல்லுகிறது. அத்தால் பிறந்த இரத்தம் க்ஷதஜமாகும். ஒரு காரணத்தால் தோன்றும் அதுபோலே, அந்தப் பரமபுருஷனுக்கு ஸூர்யனுல் மலர்ந்த வெண்தாமரைகள் போல் இரு கண்கள் உள" [சாந் 1-7 ] என்று மிகமலர்ந்து வெளுத்திருக்கும் உம்முடைய கண்ணுக்குச் சிவப்பு இயற்கையன்று, கோபத்தாலே வந்

கண். பிராட்டி பிரிவாலே வந்தசோகாச்ருபதநத்தாலே சிவந்ததோ? வாலி பக்கல் சீற்றத்தாலே சிவந்ததோ? மஹாராஜர் பக்கல் வாத்ஸல்யத்தாலே சிவந்ததோ? இத்தனையாலும் சிவந்ததோ தெரிகிறதில்லை.

இதிலே, "அப்ரமேயச்ச—துராஸதச்ச—ஜிதேந்த்ரியச்ச" என்று தொடங்கிப் பதந்தோறும் சகாரமிட்டாள். அதென்னென்னில்: இவற்றில் ஓரொரு குணங்களே இவருடைய பெருமைக்குப் போந்திருக்க, இத்தனை குணங்களும் சேர்ந்திருந்தால் சொல்லவேணுமோ என்கைக்காக. அன்றிக்கே, இச்சகாரங்களால் புறம்பு ஓரொரு குணம் ஓராச்ரயம் தனக்குக் கிடையாதேயிருக்க, இத்தனை குணங்களும் இவ்வாச்ரயத்திலே சேரக்கிடப்பதே என்கிறாளாகவுமாம்.

ஆனால், அநேக பதங்களிலே சகாரமிட்டாள்; "க்ஷிதிக்ஷமாவாந்—க்ஷதஜோபமாக்ஷ:" என்கிற பதங்களிலும் சகார

---

தேறியாயிருப்பது என்று தோற்றியிருந்தது என்றுமாம். (குறுதியிற் சிவந்த கண்ணன்) "இக்கண, சீதாபிராட்டியின் பிரிவாலே வெளிவரும் துன்பக்கண்ணீர் விழுவதாலே சிவந்ததோ? வாலியிடம் கோபத்தால சிவந்ததோ? சுக்ரீவனிடம் அன்பாலே சிவந்ததோ? எல்லாவற்றாலும் சிவந்ததோ?' என்று அறியமுடியவில்லை.

இந்த சுலோகத்தில் "அப்ரமேயச்ச" "துராஸதச்ச" "ஜிதேந்த்ரியச்ச" என்று தொடங்கி ஒவ்வொரு பதத்திலும் சகாரமிட்டிருக்கிறாள். அதற்குக் காரணமென்னென்னில்; பல பெருமைகளும் படைதத ஒருவனைச் சொல்லும்போது, "தனவானும் இவனே; அறிவாளியும் இவனே; அழகுடையோனும் இவனே" என்று ஒவ்வொரு பதத்திலும் உம்மை சேர்த்துச் சொல்லுவதுபோலே இதுவும். இந்த குணங்களில் ஒவ்வொரு குணமே இவனுடைய பெருமைக்குப் போதுமாயிருக்க, இவ்வளவு குணங்களும் சேர்ந்திருந்தால் சொல்லவேணுமோ எனனும் கருத்தைத் தெரிவிப்பதற்காகவே இப்படிப் பதந்தோறும் சகாரமிடுவது. அன்றிக்கே, மற்றுள்ளாரிடத்தில் ஒவ்வொருவருக்கு இவற்றில் ஒவ்வொரு குணமே பூர்ணமாக இல்லாமலிருக்கும்போது, இத்தனை குணங்களும் இவர் ஒருவரிடத்திலே நிறைந்து கிடப்பதே! என்னும் ஆச்சரியத்தாலே பதந்தோறும் சகாரமிடுவதாகவும் கொள்ளலாம்.

யிட வேண்டாவோ? இடாதபோது ரீதி பங்கமென்று குற்ற மாகாதோவெனில்: ஆகாது. கீழ்ப்பதங்களிலே, அப்ரமேயத் வாதிகுண ததாச்ரய ஸம்பந்தமாத்ர விவக்ஷையாலே சொன் னுள். 'க்ஷிதிக்ஷமாவாந்'—என்கிற பதத்தில் பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமிப்பரப்பிலுள்ள க்ஷமாகுணமடைய இதொரு ஆச்ரயத்தில் அடங்கிற்றென்றும், மதுப்பில் பூமார்த் தத்தாலும் ஆச்ரயத்தில் அடங்காதபடியான குணப்ராசுர் யத்தை அநுஸந்தித்தபடியாலே, இனி இவ்வாச்ரயத்தில் குணாந்தரங்களுக்கும் இடமில்லையென்று அறுதியிட்டு, பூர் வோத்தர குணங்களை மறந்தபடியாலே ஸமுச்சயித்திலனென் றுகவுமாம். அன்றியிலே, 'க்ஷமாவாந்' என்று பெருமாளுடைய பொறையுடைமையை அநுஸந்தித்தவாறே, நாட்டார் பொறுப்பார்கள் என்று நிர்ப்பந்தியாதே போனுளாகவுமாம்.

---

ஆயினும், 'அப்ரமேயச்ச' என்று தொடங்கிப் பல பதங்களிலும் உம்மையிட்டவள், 'க்ஷிதிக்ஷமாவாந்' 'க்ஷுதஜோபமாக்ஷ' என்ற பதங்களுக்குச் சகாரமிடவில்லையே; இடாமையால் ரீதி பங்கம் என் னும் குற்றத்துக்கு இலக்காகாதோ? என்னில்; ஆகாது. முதல் ஆறு பதங்களிலும் அப்ரமேயத்வம் (அளவிடவொண்ணுமையி ருக்கை) முதலிய குணங்களுக்கும், அவற்றுக்கு இருப்பிடமான ஸ்வ ரூபத்துக்கும் உள்ள குணகுணிபாவமாகிற ஸம்பந்தத்தை மட்டும் நெஞ்சிற்கொண்டு சொன்னுள். "க்ஷிதிக்ஷமாவாந்—புவிப் பொறை யாளர்" என்கிற பதத்தில், பூமியிலுள்ள பொறுமையெல்லாம் இவ னொருவனிடம் குடிகொண்டது எனகிற அர்த்தபலத்தாலும், "பூம நிந்தாப்ரசம்ஸாஸு" என்கிறபடியே குணத்தின் பூமாவை—(ஆதிக் யத்தை)—காட்டும் 'மதுப்' ப்ரத்யயப்பொருளாலும், ஆச்ரயமான ஸ்வரூபமும் நிரம்பிவழியுமபடியான பொறுமைக்குணமிகுதியை அநுஸந்தித்தபடியாலே, இனி இந்த ஸ்வரூபத்திலே வேறொரு குணத்துக்கு இடமில்லை என்று நிச்சயித்து, முன்பின் குணங்களை மறந்தபடியாலே 'க்ஷிதிக்ஷமாவாந்' என்றவிடத்திலே சகாரமிட்டுக் கூட்டவில்லை என்றுமாம். அன்றிக்கே, "பொறையாளர்" என்று ஸ்ரீராமபிரானுடைய பொறுமையை அநுஸந்தித்தவுடன் இலக்கணத் தில் ஏதாவது பிழையிருந்தாலும் ஸ்ரீராமபிரான் பொறுத்தருளுவான்; ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீராமபிரான் பொறுத்தவுடன் உலகத்

இது அப்படியாகிறது; (க்ஷதஜோபமாக்ஷ:) இதில் சகார ஹானிகக்குச் செய்யும்படியென்னென்னில்: (க்ஷதஜோபமாக்ஷ:) என்று சரீரகுணமாய், பி₄ந்நாதி₄கரணமாகையாலே ஸமுச்சயிக்கவேண்டுவதில்லை என்று பரிஹாரமாகவுமாம். அன்றிக்கே, (த்வமப்ரமேயச்ச— துராஸதச்ச—ஜிதேந்த்ரியச்ச—உத்தம தார்மிகச்ச—அக்ஷய்யகீர்த்திச்ச — விசக்ஷணச்ச) என்று ப்ரதமா விபக்தியாய், பரோக்ஷநிர்த்தேசமாய், ஏகரீதியாகையாலே சகாராபேக்ஷை உண்டு; இங்கு, 'த்வம்' ஓபாதி - 'க்ஷதஜோபமாக்ஷ' என்று ஸம்புத்₃த்₄யந்தமாய் முன்னிலையாலே ரீத்யந்தரமாகையாலே, ஸமுச்சயாபேக்ஷையில்லையென்றாகவுமாம்.

(த்வமப்ரமேயச்சேத்யாதி) ஸ்ரீவால்மீகிபகவாந், **"ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषत:"**(ஜ்ஞாநசக்திப₃லைச்வர்யவீர்ய-

---

தவரும் பொறுத்தே தீருவார்கள் என்று இலக்கண நிர்ப்பந்தத்தைப் பின்பற்றாமல் வார்த்தை சொன்னாள் என்றுமாம்.

'க்ஷிதிக்ஷமாவாந்' என்ற விடத்தில் சகாரமிடாமைக்குப் பரிஹாரம் இப்படியே இருக்கட்டும். "க்ஷதஜோபமாக்ஷ:—குறுதியிற் சிவந்த கண்ணன்" என்ற விடத்தில் சகாரமில்லாமைக்கு என்ன பரிஹாரம் சொல்வது என்னில்: முன் சொன்னவை ஸ்வரூபகுணமாகவும், "க்ஷதஜோபமாக்ஷ:—குறுதியிற் சிவந்த கண்ணன்" என்கிற இது சரீரகுணமாகவும், ஆகவிப்படி வேறுபட்ட ஆச்ரயங்களை உடைய குணங்களாகையாலே, சகாரத்தாலே கூட்ட வேண்டியதில்லை என்று பரிஹாரம் சொல்லலாம். "க்ஷதஜோபமாக்ஷ:" என்று முதல் வேற்றுமையாகவே பாடங்கொண்டபோது இப்பரிஹாரம். அன்றிக்கே "க்ஷதஜோபமாக்ஷ—குறுதியிற் சிவந்த கண்ணா!" என்று ஸம்புத்தியாய் —(விளியாய்)— பாடங்கொண்டபோது பின் வருமாறு பரிஹாரம்,— "அப்ரமேயச்ச" என்று தொடங்கி, "விசக்ஷணச்ச" என்பதுவரை முதல் வேற்றுமையாய், படர்க்கையாய், ஒருபடிப்பட்டதாயிருக்கையாலே சகாரமிடவேண்டியது அவசியம். 'த்வம்' [நீ] என்ற பதத்தைப்போலே முன்னிலையாய், விளியாய் அப்பதங்களிலும் வேறு பட்டிருக்கையாலே இங்கு சகாரத்தாலே முன் பதங்களைக் கூட்டவேண்டியதில்லை என்று பரிஹாரம்.

தேஜாம்ஸ்யசேஷத:) என்று பரத்வாநுபந்தியான ஷாட் குண்யத்துக்கு எதிர்த்தட்டாகக் கீழே, "आनृशंस्यमनुक्रोशः श्रुतं शीलं दमः शमः। राघवं शोभयन्त्येते षड्गुणाः पुरुषोत्तमम्॥" (ஆந்ருமம்ஸ்யமநுக்ரோச: ச்ருதம் மீலம்த₃ம: மம:। ராக₄வம் மோப₄யந்த்யேதே ஷட்₃கு₃ணா: புருஷோத்தமம்॥) என்று ஸௌலப்₄யாநுபந்தி₄யாக ஒரு ஷாட்குண்யம் காட்டினன். இப்போது அபஹதபாப்மத்வாதி குணஷ்டகத்துக்கு எதிர்த்தட்டாக, அப்ரமேயத்வாதியாலே ஒரு குணஷ்டகம் காட்டுகிறுன்.

**கிஷ்கிந்தாகாண்டம் 3-வது ஸர்க்கம் 28-வது ச்லோகம்**

**नानृग्वेदविनीतस्य नायजुर्वेदधारिणः।**
**नासामवेदविदुषः शक्यमेवं प्रभाषितुम्॥**

**நாந்ருக்₃வேத₃விநீதஸ்ய நாயஜுர்வேத₃த₄ாரிண:।**
**நாஸாமவேத₃வித்₃ஷ: மக்யமேவம் ப்ரப₄ாஷிதும்॥**

**பதவுரை:-அந்ருக்₃வேத₃விநீதஸ்ய**-ருக்வேதத்தில் மிக்ஷிதனுகாதவனுக்கு, **ஏவம்**—இப்படி, **ப்ரப₄ாஷிதும்**—பேசுவதற்கு,

---

(அளத்தற்கரியவர்...) "ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு குணங்களும் பகவான் என்னும் சப்தத்தால் சொல்லப்படுகின்றன" [வி-பு 6-5-79] என்று ஸ்ரீபராசர பகவானுல் பரத்வத்துக்குச் சேரச்சொல்லப்பட்ட ஆறு குணங்களுக்கு எதிர்த்தட்டாக, "பிறரை ஹிம்ஸிக்காமை, இரக்கம், ஆர்த்த நாதம் கேட்கை, ஸௌசீல்யம், வெளியிந்திரியங்களையடக்குகை, மனத்தையடக்குகை என்னும் ஆறு குணங்களும் புருஷோத்தமனுன ராமபிரானை அலங்கரிக்கின்றன." [ரா-அ 33-12] என்று அயோத்யா காண்டத்தில் ஸௌலப்யத்துக்குச் சேர ஆறு குணங்களைக் காட்டினர் ஸ்ரீவால்மீகி மஹரிஷி. "அபஹதபாப்மா, விஜரோ, விம்ருத்யு:, விசோக:, விஜிக₄த்ஸ:, அபிபாஸ:, ஸத்யகாம:, ஸத்ய ஸங்கல்ப:" [சாந் 8-7-1] [பாபமற்றவன், கிழத்தனமற்றவன, சாவற்றவன், துன்பமற்றவன், பசியற்றவன்: தாகமற்றவன், வீணுகாத விருப்பங்களையுடையவன், வீணுகாத ஸங்கல்பங்களை உடையவன்] என்று வேதததிலே உத்கோஷிக்கப்பட்ட எட்டு குணங்களுக்கு எதிர்த்தட்டாக, அப்ரமேயத்வம் முதலான எட்டு குணங்களைக் காட்டுகிருர் இப்போது.

ந ஶக்யம் — முடியாது; அயஜுர்வேத$_3$ த$_4$ாரிண: — யஜுர் வேதத்தை தரித்து நில்லாதவனுக்கும், ந–முடியாது; அஸாம வேத$_3$ விது$_3$ஷ:—ஸாம வேதத்தை அறியாதவனுக்கும்; ந—(இப்படி பேச) முடியாது.

வ்யா:— (நாந்ருக்வேத விநீதஸ்ய) அநுஷ்டேயார்த்த ப்ரகாசகமான ருக்வேதம் ஶிக்ஷிதனானவனுக்கல்லது இப்படி வார்த்தை சொல்லவொண்ணாது. (நாயஜுர்வேததாரிண:) யஜுர்வேதம் பாடதாரணந்தானே அரிது; அத்தை அறிந்தவனுக்கல்லது இவ்வார்த்தை சொல்லவொண்ணாது. (நாஸாமவேதவிதுஷ:) ஸாமவேதம் காநவிஶேஷங்கள் அறியவரிது; அது அறிந்தவனுக்கல்லது இப்படி வார்த்தை சொல்ல முடியாது. (ஶக்யமேவம் ப்ரபாஷிதும்) இத்தை எல்லாவற்றையும் அதி$_4$கரித்தவனுக்கல்லது நம் முன்னே இப்படி வார்த்தை சொல்லல் ஆமோ? என்றாரிறே பெருமாள்.

கிஷ்கிந்தாகாண்ட தனிச்லோகம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அவதாரிகை:-சிறிய திருவடியை—(ஹனுமானை)—முதன் முதலில் சந்தித்தபோது, அவனுடைய வாக்கு வன்மையைக் கண்டு அதிசயித்து, ஸ்ரீராமபிரான் பேசும் பாசுரமிது.

வ்யா:—(ருக்வேதத்தினால் கற்பிக்கப்பட்ட அடக்கத்தையுடையவனுக்கல்லது) நல்லொழுக்கத்தை விரும்புமவன் அனுஷ்டிக்க வேண்டிய அர்த்தத்தைக் காட்டும் ருக்வேதத்தைக் கற்றவனைத்தவிர வேறொருவனால் இப்படிப் பேசவொண்ணாது. (யஜுர் வேதத்தை தரித்து நின்றவனாலல்லது) யஜுர் வேதம் மிகப்பெரிதாகையாலும் ஒவ்வொரு அனுவாகத்திலும் மற்ற அனுவாக மந்திரங்கள் கலசாமையாலும், யஜுர்வேதத்தைக்கற்று தரிப்பதே அரியசெயல். அத்தை தரிப்பதோடன்றியில் அர்த்தத்தை அறியவும் செய்தவனாலல்லது இவ்வார்த்தை சொல்லவொண்ணாது. (ஸாமவேதத்தை அறிந்தவனாலல்லது) ஸாமவேதத்தில், ஊஹம், ரஹஸ்யம் முதலியவற்றை உட்கொண்ட பற்பல கானவிசேஷங்களை அறிவது அரிது. அதை அறிந்தவனுக்கல்லது இப்படிப் பேசமுடியாது. (இப்படி பேச முடியாது) இம்

ஸுந்தரகாண்டம் 15-வது ஸர்க்கம் 23-வது ச்லோகம்

**दुष्करं कृतवान्रामो हीनो यदनया प्रभुः।**
**धारयत्यात्मनो देहं न शोकेनावसीदति॥**

**து₃ஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத₃நயா ப்ரபு₄:।**
**தா₄ரயத்யாத்மநோ தே₃ஹம் ந ஶோகேநாவஸீத₃தி॥**

பதவுரை:—ராம:—*ஸ்ரீராமபிரான்,* **து₃ஷ்கரம்**–*செயற்கரிய செயலை,* **க்ருதவாந்**—*செய்தார்;* **அநயா ஹீந:**—*இந்த ஸீதா தேவியைப் பிரிந்திருந்தபோதிலும்,* **ப்ரபு₄:**–*(பிறர் வருத்தமறியாத) பிரபுவாய்,* **ஆத்மந: தே₃ஹம்**–*தன் திருமேனியை,* **தா₄ரயதி யத்**–*தரிக்கிறார் என்பதுவும்,* **ஶோகேந**–*துன்பத்தால்,* **ந அவஸீத₃தி யத்**-*நசிக்கவில்லையென்பதும் (செயற்கரிய செயல்.)*

அவதாரிகை:–"**अन्यत्र भीष्माद्गाङ्गेयादन्यत्र च हनूमतः। हरिणीखुरमात्रेण चर्मणा मोहितं जगत्॥**" (**அந்யத்ர பீ₄ஷ்மாத்₃ கா₃ங்கே₃யா த₃ந்யத்ர ச ஹநூமத:। ஹரிணீ கு₂ரமாத்ரேண சர்மணா மோஹிதம் ஜக₃த்॥**) *என்று பீஷ்மனோடொக்க மான்குளப்படியோடொத்த ஸ்த்ரீயின் அவயவ விஶேஷத்தில் அகப்படாதே, அத்யந்த விரக்தனை திருவடியகப்படப் பிராட்டியைத் திருவடிதொழுது, பிராட்டி வைலக்ஷண்யத்தையும், இவள் எழுந்தருளியிருக்கிற தைந்யத்தையுங்கண்டு, 'இவளை இப்*

---

மூன்று வேதங்களையும் கற்றவனுக்கல்லது நமக்கு முன்னே இப்படி பேசமுடியுமோ என்றானன்றோ ஸ்ரீராமபிரான்.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதாஸ விரசிதமான தனிச்லோக தர்ப்பணத்தில் கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று.

அவதாரிகை :–"*கங்காபுத்திரனை பீஷ்மனையும், ஹனுமானையும் தவிர இவ்வுலகிலுள்ள மற்ற எல்லாரும், மான்குளம்பளவுள்ள (ஸ்த்ரீயின் உபஸ்தமாகிற) தோலினால் மயங்கி நிற்கின்றனர்" [?] என்கிறபடியே மான் குளம்புபோலுள்ள ஸ்த்ரீயின் அவயவமொன்றிலே ஈடுபடாமல், பீஷ்மனைப்போலே மிகவும் வைராக்யமுடையவனை ஹனுமானும் பிராட்டியை அடிவணங்கி பிராட்டியின் பெருமையையும், பிராட்டி எழுந்தருளியிருக்கும் வருந்தத்தக்க நிலையை*

படி இருத்துவதே!' என்று பெருமாளை சிஷ்டகர்ஹை பண்ணுகிறான்.

வ்யா:—(துஷ்கரம் க்ருதவாந் ராம:) நாம் பெரிய கடலைக் கடந்து அருந்தொழில் செய்தோமாக நினைத்திருந்தோம்: பெருமாள் நம்மிலும் அருந்தொழில் செய்தாராயிருந்தது. (ராம:) ஏகதாரவ்ரதராய். பிராட்டியையொழிய வர்த்தியாத பெருமாளுக்கு துஷ்கரம் ப்ரணயிகளாய்ப் பிறந்தாராகச் செய்யவரிதொன்றைச் செய்தார். (துஷ்கரம்) காட்டுக்குப் போகிறபோதகப்படக் கூடக்கொண்டுபோன பெருமாள் தமக்கும் இதுக்குமுன்பு செய்யவரிது. இஸ்ஸாஹஸத்தைச் செய்யக்கோலித் தவிர்ந்தாரோவென்னில்: (க்ருதவாந்) பத்தும் பத்தாக அனுஷ்டித்திலரோ?

இப்படி இவர் செய்ததுதான் ஏதென்னில்: (ராம:) பிராட்டியைப் பிரிந்து குறியசங்காமலிருந்தார். (ராம:)

---

யும் கண்டு ''இவளை இப்படி ராமபிரான் விட்டிருப்பதே'' என்று ராமபிரானை நிந்திக்கிறான்.

வ்யா:—(செய்யவரிதைச் செய்தார் ராமபிரான்) நான் பெரிய கடலைக் கடந்து அரிய காரியம் செய்ததாக நினைத்திருந்தேன்; ராமபிரான் என்னிலும் அரிய காரியத்தைச் செய்தாரென்று இப்போதே தெரிகிறது. (ராமபிரான்) ராமன் ஏகதாரவ்ரதன்—(சீதையாகிற ஒரே மனைவியைப் பற்றியிருப்பவன்)—என்று பிரஸித்திபெற்றவனை ராமபிரானுக்கு இவளைப் பிரிந்திருப்பது அரிய செயல். ''ரமதே இதி ராம:'' [(சீதையோடு) ரமிப்பவன் ராமன்] என்கிற வ்யுத்பத்தியாலே, பிறக்கும்போதே ப்ரணயரஸம் அறிந்தவராய்ப் பிறந்து ராமனென்று பேர்படைத்தவர் செய்யமுடியாத காரியமொன்றைச் செய்தார். (செய்யவரியதை) இதுக்கு முன்பு இவருக்கும் இக்காரியம் செய்யமுடியாது. அதனாலன்றோ காட்டுக்குப் போகும்போது கூட்டிக்கொண்டு போனார். இந்த ஸாஹஸகாரியத்தைக் செய்ய முயன்று கைவிட்டாரோ? என்னில் (செய்தார்) பூர்ணமாக அனுஷ்டித்தே விட்டாரே!

இப்படி இவர் செய்ததுதான் ஏதென்னில் (ராமபிரான்) ராமனாக—(அழகியவனாக)—இருந்ததே முதல் குற்றம். பிராட்டியைப்

பிராட்டியைப் பிரிந்தால் புகரழிந்து, எழில்குலைந்து, முகம் வெளுத்து, உடம்பிளைத்து, இட்டகாலிட்ட கைகளாயிருக்க வேண்டாவோ? இத்தைப்பற்றவிறே பிராட்டியும் "**कच्चिन्न तद्धेमसमानवर्णं तस्याननं पद्मसमानगन्धि**" (**கச்சிந்ந தத்$_3$தே$_4$ம ஸமாந வர்ணம் தஸ்யாநநம் பத்$_3$மஸமாந க$_3$ந்தி$_4$**) என்று 'அம்முகத்தில் ஒளியும் மணமும் மாருதே செல்லா நின்றதே?' என்று கேட்டது. (ராம:) பொடிமூடு தணலாயிருந்தார். வடிவில் ப(ச்)சையைக்காட்டித் துவக்கிக்கொண்டுபோய் நடுக்காட்டிலே தள்ளுவதே!

கர்மத்தாலே அபஹ்ருதையானாளல்லது இவர் தள்ளினாரோ? என்ன; இவளைக் கண்டுவைத்தால் அவர்தாம் அகலப் பெறுவரோ? (ஹீநோ யதநயா) இவர் இவளை விட்டு மான் பின்னே போகப்பட்டன்றோ இவ்வபஹாரந்தான் பிறந்தது. (அநயா ஹீந:) "இறையுமகலகில்லேன்" என்கிற இவளையோ

---

பிரிந்த பின்பும் ஒரு ரேகாமாத்ரமும் மாறுபடவில்லை. (ராமன்) பிராட்டியைப் பிரிந்தால் ஒளியழிந்து, அழகு குறைந்து, முகம் வெளுத்து, உடம்பு இளைத்து, "இட்டகால் இட்டகைகளாய்" [திருவாய் 7-2-4] என்கிறபடியே கை கால்களை அசைக்க முடியாமல் இருக்கவேண்டாமோ? அன்று கண்டமேனிக்கு அழிவில்லாமலிருந்தாரே! நிறத்தை யிழக்காமல் குணத்தையிழந்தாரே! இத்தை நினைத்தன்றோ பிராட்டியும், அவருடைய "திருமுகம் பொன்போலே ஒளி வீசுவதாய், தாமரைபோலே மணம் கமழ்வதாயுள்ளதா?" [ரா–ஸு 37-28] என்று முகத்தில் ஒளியும் மணமும் மாருதேயிருந்ததோ? என்று கேட்டது. (ராமன்) வடிவில் அழகியவராயிருந்தாரேயொழிய நெஞ்சில் ஈரமில்லை. நீறு பூத்த நெருப்பாயிருந்தார். வடிவழகைக் காட்டி ஈடுபடுத்திக் கொண்டு போய், நடுக்காட்டிலே தள்ளிவிடுவதே!

"மமைவ து$_3$ஷ்க்ருதம் கிஞ்சித் மஹத$_3$ஸ்தி ந ஸம்சய:" [ரா-ஸு 38-48] [என்னுடையதான பெரிய பாபம் ஒன்று இருக்கிறது; இதில் ஸந்தேகமில்லை] என்று பிராட்டியே அருளிச்செய்தபடி தன் கர்மத்தாலே ராவணனால் அபஹரிக்கப்பட்டாளேயொழிய இவர் தள்ளிவிட்டாரோ? என்ன;- இவளை அறிந்திருந்தால் அவர்தாம் அகன்று போகலாமோ? (இவளை விட்டுப்பிரிந்து) மான்பின்னே போனதினாலன்றோ ராவணன் அபஹரிக்க முடிந்தது. (இவளைப் பிரிந்து) "இறையும்

பிரிவது? (அநயா ஹீந:)மதுப்பினுடைய நித்யயோகத்தையும் குலைத்திலரோ? (அநயா ஹீந:) "**अनन्यभावामनुरक्तचेतनां त्वया विहीनां मरणाय निश्रितां**" (**அநந்யப₄ாவாமநுரக்தசேதநாம் த்வயா விஹீநாம் மரணாய நிச்சிதாம்**) என்று சொன்ன இவளை யன்றோ பிரிவது. (அநயா ஹீந:) "**श्रद्धया देवो देवत्वमश्नुते**" (**ச்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமச்நுதே**) என்றும், "**अप्रमेयं हि तत्तेजो यस्य सा जनकात्मजा**" (**அப்ரமேயம்ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா**) என்றும், "**अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा**" (**அநந்யா ராக₄வேணஹம் ப₄ாஸ்கரேண ப்ரப₄ா யதா₂**) என்றும் எல்லாப்படியாலும் தனக்கு மினுக்கமுண்டாக்கு கிற இவளையோ விடுவது?

(ப்ரபு:)ஒன்றும் அறியாதாராயிருந்தார். ப்ரபுத்வமாவது அறியாத்தனமிறே. (ப்ரபு:) மேன்மையுண்டித்தனைபோக்கி நீர்மை இல்லையாயிருந்தது. (ப்ரபு:) ஆனை குதிரைகட்ட வும், படையாளவும், கணக்குக்கேட்கவும் ஆயுதம் வஹிக்க

---

அகிலகில்லேன்" [திருவாய் 6-10-10] என்கிற இ வளையோ பிரிவது? (இவளைப்பிரிந்து) "ஸ்ரீமந்நாராயண" [த்வயம்] என்கிறவிடத்தில் 'மதுப்' ப்ரத்யயத்தினால் சொல்லப்படும் நித்யோகத்தையும் அழித்து விட்டாரே! (இவளைப்பிரிந்து)"வேறொன்றையும் நினையாதவளும்,உம் மிடமே ஈடுபட்டவளும், உம்மைப் பிரிந்தால் இறப்பதென்று உறுதி பூண்டவளுமான என்னை (காட்டுக்கு அழைத்துச் செல்வீர்)" [ரா-அ 27-22]என்று சொன்ன இவளையன்றோ பிரிந்துவிட்டார். (இவளைப் பிரிந்து) "ச்ரத்தை எனப்படும் ஸ்ரீதேவியாலே தேவனை நாரா யணன் தேவனுயிருக்கும் தன்மையை அடைகிறுன்" [யஜு-காட 3-3] என்றும், "ஜனகராஜன் திருமகளைத் தன்னுடையவளாகக்கொண்ட தத்துவத்தின் தேஜஸ் அளவிட வொண்ணுதது" [ரா-ஆ 37-18] என்றும், "சூரியனைவிட்டுப் பிரியமாட்டாத ஒளிபோல், ராமனை விட்டுப்பிரிய மாட்டாதவள் நான்" [ரா-ஸு 21-16] என்றும் எல்லாவிதத்திலும் தனக்குப் பெருமைதருகிற இவளையோ விடுவது?

(பிரபு) பிறர் காரியம் ஒன்றும் அறியாத பிரபுவாயிருந்தார். 'பிரபுக்களாயிருப்பார் பிறர் வருத்தமறியாதவர்களாகவேயிருப்பதை உலகில் காண்கிறோமன்றோ. (பிரபு) மேன்மையிருந்ததேயொழிய நீர்மை இல்லையாயிருந்தது. (பிரபு) ஆனை குதிரை ஏறவும், படை

வும் கற்றுரித்தனைபோக்கி, ப்ரணயித்வத்தில் புதியதுண்டில ராயிருந்தது. (ப்ரபு:)பெண்ணின் வருத்தமறியாதபெருமான். “बहुधा विजायते” (ப$_3$ஹுதா$_4$ விஜாயதே) என்றும், “बहूनि मे व्यतीतानि जन्मानि” (ப$_3$ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி) என்றும், “பல்பிறவிப்பெருமான்” என்றும் பிறக்கிற பிறவி வெள்ளத்தில் ஒரு பெண்பிறவி பிறந்தாளுகிலிறே, இவ்விளையாளுய் பெண் பிறந்தாரெய்தும் பெருந்துயரறிவது.

இப்படி ப்ரபுக்களாய் இவர் செய்ததென்னென்னில்: (*தாரயத்யாத்மநோ தேஹம்) பிராட்டியைப் பிரிந்த பெருமாள் கடலிலே புக்காராய் முடிந்தாரென்று பேர் படைக்க வேண்டாவோ? (தாரயதி) தரித்திருப்பதே! இத்தனை போது ஸத்தையழிய வேண்டாவோ? நித்யமான ஸ்வரூபத்தை அழிக்கப்போமோ? என்ன;– (ஆத்மநோ தேஹம்) நித்யமான ஸ்வரூபமிருகக. “इच्छागृहीताभिमतोरुदेहः” (இச்ச$_2$ாக்$_3$ருஹீதாபி$_4$மதோருதே$_3$ஹ:) என்று வந்தேறியான உடம்பை விடலாகாதோ?

---

யாளவும், வரவுசெலவுக் கணக்குக்கேட்கவும் ஆயுதம் தரிக்கவும் தெரிந்து கொண்டாரேயொழிய ப்ரணயித்துவத்திலே, அன்னப்ராசனமேயாகாதகுழந்தைபோலேயிருப்பவராய்த் தோற்றிற்று. (பிரபு) “பெண்ணின் வருத்தமறியாத பெருமான்”. [நாச்-திரு 13–1] “பல படியாகப் பிறக்கிறுன்” [பு–ஸ ௭] என்றும், “எனக்குப் பல பிறவிகள் கடந்தன” [கீதை 4-5] என்றும், “பிறப்பில் பல்பிறவிப் பெருமான்” [திருவாய் 2-9-5] என்றும் பிறக்கிற கணக்கற்ற பிறவிகளிலே ஒரு பெண்பிறவி பிறந்தாளுகிலன்றே நலிந்தும் மெலிந்தும்போய் *பெண் பிறந்தார் எய்தும் பெருந்துயர் அறிவது.

இப்படிப் பிரபுவாயிருந்துகொண்டு இவர் செய்ததென்னவெனில் (* தன் தேஹத்தை தரித்துநிற்கிருர்) பிராட்டியைப் பிரிந்த ராமபிரான் கடலிலே புகுந்து இறந்தார் என்று புகழ் படைத்திருக்க வேண்டாமோ? (தரித்து நிற்கிருர்) இன்னமும் தரித்து நிற்பதே! முன்னமே அழிந்திருக்கவேண்டாவோ? நித்யமான ஸ்வரூபத்தை அழிக்கமுடியுமோ? என்ன,— (தன் தேஹத்தை) நித்யமான ஸ்வரூபமிருக்கட்டும்; “இச்சையினுல் எடுக்கப்படுமதும் இஷ்டமானதும் பெரியதுமான திருமேனிகளை உடையவன்” [வி–பு 6–5–84] என்று

---

* தா$_4$ரயதி. என்று டிப்பணீகாரபாடம்.

**"नित्यं नित्याकृतिधरं"** (நித்யம் நித்யாக்ருதித₄ரம்) என்று ஸ்வரூபத்தோபாதி ரூபமும் நித்யமன்றோ என்ன;-(ராம ஆத்மநோ தேஹம்) அப்ராக்ருதமான சரீரத்தைச் சொன்னேனே? * ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்தபடியை விட்டாலாகாதோ? (ஆத்மநோ தேஹம்) தாம் ஒரு பிராட்டியாய், **"पराधीनाः स्त्रियः सर्वाः"** (பராதீ₄நா: ஸ்த்ரிய: ஸர்வா:) என்றும், "மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே" என்றும் பரத்₃ரவ்யமாய் நோக்கியிருக்கிறரோ? தம்மதான உடம்பைப் போகவிட்டாலாகாதோ? (ஆத்மநோ தேஹம்) தம்முடம்பு தம்மதோ? **"भक्तानां"** (ப₄க்தாநாம்) என்று பிறரதன்றோ? பிறருடம்பை என் செய்யச் சுமக்கிறர்? அவர் செய்வதென், முடிக்கைக்

---

ஒரு காலத்திலே வந்ததான உடம்பை விடக்கூடாதோ? அதையும் விடவில்லையே.

"நித்யமானவனும், நித்யமான திருமேனியை தரித்து நிற்பவனுமான பரமாத்மாவை" [ ஸாத்வதம் ] என்று ஸ்வரூபத்தைப் போலே ரூபமும் நித்யமன்றோ என்ன;—(ராமபிரான் தன் தேஹத்தை)ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள தேசத்தின் நாற்றமுமற்ற பரமபதத்திலேயுள்ள பரவாஸுதேவ ரூபத்தைச் சொனனேனே? "ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த" [திருவாய் 3-5-5] என்கிறபடியே ஆதியுள்ளதாகையாலே முடிவுள்ளதான இத்திருமேனியை விடக்கூடாதோ? (தன் தேஹத்தை) தாம் ஒரு ஸ்திரீயாய் "ஸ்திரீகளெல்லாம் பிறர்க்கு அடங்கியிருக்கவேண்டியவர்கள்" [ ] என்றும், "மாயும் வகையறியேன் வல் வினையேன் பெண் பிறந்தே" [திருவாய் 5-4-3] என்றும் தன்னை முடித்துக் கொள்ளவும் தனக்கு உரிமையில்லாதபடி நாயகனுக்கு வசப்பட்டிருப்பதாலே தம் தேஹத்தை தரித்து நிற்கிறரோ? ஸ்வதந்த்ராய் ஆண் பிள்ளையான தம் உடம்பை விடலாகாதோ? அன்றிக்கே (தன் தேஹத்தை)என்று விபரீதலக்ஷணையாய், தன்னதல்லாத தேஹத்தை என்று பொருளாகவுமாம். தம்முடம்பு தம்முடையதோ தம் இஷ்டப்படி தரித்து நிற்க? 'ந தே ரூபம்—ப₄க்தாநாம்" [ஜிதந்தே 1-5] [உன் ரூபம் உன்னுடையதல்ல; பக்தர்களுடையதே] என்று பிராட்டி முதலான பக்தவர்க்கத்தினுடையதன்றோ? பிராட்டியுடையதான உடம்பை, அவளுக்காகாதபின் எதற்காகச் சுமந்து திரிகிறர்?

குக் கருவியில்லையாகில்? என்ன;-(ந ஶோகேநாவஸீததி) ஶோகமிருக்க வேறு கருவி வேணுமோ? (நஶோகேநா வஸீததி) "**शोकाग्निः प्रधक्ष्यति**" (ஶோகாக்$_3$நி: ப்ரத$_4$க்ஷ்யதி) என்று ஶோகமாகிற பெருநெருப்பிருக்க, வேறு கேட்க வேணுமோ?

**ஸுந்தரகாண்டம் 16-வது ஸர்க்கம், 4-வது சுலோகம்**

**रामस्य व्यवसायज्ञा लक्ष्मणस्य च धीमतः।**
**नात्यर्थं क्षुभ्यते देवी गङ्गेव जलदागमे॥**

**ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீ$_4$மத:।**
**நாத்யர்த்த$_2$ம் க்ஷுப்$_4$யதே தே$_3$வீ க$_3$ங்கே$_3$வ ஜலத$_3$ாக$_3$மே॥**

பதவுரை:—**ராமஸ்ய**—*ராமபிரானுடையவும்,* **தீ$_4$மத:**—*புத்திமானான,* **லக்ஷ்மணஸ்ய ச**—*லக்ஷ்மணனுடையவும்,* **வ்யவஸாயஜ்ஞா**—*உறுதியை அறிந்தவளான,* **தே$_3$வீ**—*சீதாபிராட்டி,* **ஜலத$_3$ாக$_3$மே**-*மழைகாலத்தில்,* **க$_3$ங்க$_3$ா இவ**-*கங்காநதிபோலே,* **அத்யர்த்த$_2$ம்**—*மிகவும்,* **ந க்ஷுப்$_4$யதே**—*கலங்குகிறுளல்லள்.*

வ்யா:—(*ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா*) "**एतद्व्रतं मम**" (ஏதத்$_3$ வ்ரதம் மம) *என்றும்,* "**अवगाह्यार्णवं स्वप्स्ये**" (அவக$_3$ாஹ்யார்ண

---

அவர் என்ன செய்வார்? உடம்பைப் போக்கிக்கொள்ள ஸாதன மில்லையேஎனில் (சோகத்தால் அழியவில்லை) பிரிவினுலுண்டான சோகமிருக்க வேறுஸாதனம் வேணுமோ? (சோகத்தால் அழிய வில்லை) "சோகநெருப்பானது சுட்டெரிக்கும்" [ ] என்று சோகமாகிற பெருநெருப்பிருக்கும்போது சரீரத்தைவிட வேறு ஸாதனம் வேண்டுமோ?

அவதாரிகை:—ஹனுமான், அசோகவனத்திலே சீதாபிராட்டி யின் தீனமான நிலையைக்கண்டு வருந்திப் பேசும் பாசுரமிது.

வ்யா:—(ராமபிரானுடைய உறுதியை அறிந்தவள்) "என்னைப் பற்றினவனுக்கு எல்லா பூதங்களினின்றும் அபயமளிக்கிறேன்; இது என் விரதம்" [ரா-யு18-33] என்றும், "லக்ஷ்மணு! (சீதையைப் பிரிந்து உடம்பெரியும்) நான் கடலிலே படுத்துத்தூங்கப்போகி

**வம் ஸ்வப்ஸயே**) என்றும் சொல்லுகிறபடியை அறிந்திருக்கு மவளாகையாலே தரித்திருந்தாள். ஆஶாலேஶமுடையாரை ஒருநாளும் விடேனென்றும். அவர்களை விடவேண்டிற்றாகில் நான் உளேனாகேனென்றுமிறே அவர் சொல்லிவைப்பது. "**अप्यहं जीवितं जह्यां**" (**அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்**) என்றிருக்கு மவரிறே. (லக்ஷ்மணஸ்ய ச தீமத:) அவர் தம்முடைய ஏவலாலே மாயாம்ருகத்தின் பின்னே, அது மாயையென்று அறியாதே பிடிக்க ஒருப்பட்டபோதும், இது மாயாம்ருகம் என்று சொல்லும்படி அவ்வளவிலும் தெளிந்திருக்கும் இளையபெருமாள் படியை அறிந்திருக்கையாலும். (நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ) அவர் தலையாலே சுமக்கும்படி வல்லபையாய்ப் போந்தவளாகையாலே, க்ஷோபஹேதுக்கள்

---

றேன்" [ரா-யு5-9] என்றும் சொல்லுகிற ராமபிரானுடைய தன்மையை அறிந்திருக்குமவளாகையாலே தரித்திருந்தாள். "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" [ரா-யு 18-3] [மித்ரபாவத்தோடு வந்தடைந்தவனை ஒருபோதும் விடேன்] என்று சிறிது ஆசையுடையாரையும் ஒருநாளும் விடமாட்டேனென்றும், அப்படி விடவேண்டியவந்ததாகில், "ந ஜீவேயம் க்ஷணமபி" [ரா-ஸு 66-10] [(பிராட்டியைப் பிரிந்து) கணநேரமும் வாழமாட்டேன்] என்கிறபடியே நான் உயிர் வாழமாட்டேன் என்றுமன்றோ ஸ்ரீராமபிரான் சொல்லிவைப்பது. "**அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம், ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத.**" [ரா-ஆ 10-19] [சீதே! நான் என் உயிரையும், லக்ஷ்மணனோடு கூட உன்னையும் விடுவேனேயொழிய, (அடியாரின் விரோதியைக் கொல்வதாக) ப்ரதிஜ்ஞை செய்துவிட்டு –அதிலும் ப்ராஹ்மணர்க்குச் செய்துவிட்டு– அதைக் கைவிடமாட்டேன்] என்று பிராட்டியிடமே அருளிச்செய்தாரன்றோ. (புத்திமானான லக்ஷ்மணனின் உறுதியையும் அறிந்தவள்) ராமபிரான், தேவியாகிய தம்முடைய நியமனத்தின் பேரில் மாயமானின் பின்னால் அது மாயை என்றறியாமல் போய் பிடிக்க முயற்சித்தபோதும், "இது மாயமான்" என்று சொல்லும்படி அந்த ஸமயத்திலும் தெளிந்திருக்கும் லக்ஷ்மணனுடைய தன்மையை அறிந்திருக்கையாலும். (தேவியானவள் மிகவும் கலங்கவில்லை) அவர் தாமும தலையாலே சுமக்குமபடி பிரிய

*உண்டாயிருக்கச் செய்தேயும் க்ஷுபிதையாயிற்றிலள்; ஸத்தாநாசம் பிறக்குமளவாயிருக்கச்செய்தேயும் தரித்திருந் தாள். (கங்கேவ ஜலதாகமே) நிரந்தரமாக வர்ஷதாரை விழாநிற்கச் செய்தேயும் கங்கை தெளிந்திருக்குமாபோலே.*

ஸுந்தரகாண்டம் 16-வது ஸர்க்கம் 30-வது ச்லோகம்

**हिमहतनलिनीव नष्टशोभा व्यसनपरंपरयातिपीड्यमाना।**
**सहचररहितेव चक्रवाकी जनकसुता कृपणां दशां प्रपन्ना॥**

ஹிமஹதநளிநீவ நஷ்டசோபா
வ்யஸநபரம்பரயாதிபீட்யமாநா ।
ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ
ஜநகஸுதா க்ருபணாம் தசாம் ப்ரபந்நா ॥

பதவுரை:—ஜநகஸுதா—*ஜனகராஜன் திருமகளான பிராட்டி,* ஹிமஹதநளிநீ இவ—*பனியினால் வாடிய தாமரை போலே,* நஷ்டசோபா—*அழகிழந்தவளாய்,* வ்யஸநபரம்பரயா—*அடுத்தடுத்து வரும் துன்பத்தொடர்களாலே,* அதிபீட்யமாநா—*மிகவும் துன்புறுத்தப்பெற்றவளாய்,* ஸஹசரரஹிதா சக்ரவாகீ இவ—*ஆண்துணையை இழந்த சக்ரவாகப்பக்ஷியைப் போலே,* க்ருபணாம் தசாம் ப்ரபந்நா—*வருந்தத்தக்க நிலையை அடைந்தாள்.*

**அவதாரிகை:**—*பெருமாளைப் பிரிந்த ஆற்றாமை தோற்ற எழுந்தருளியிருந்த பிராட்டிக்குப் போலி சொல்லுகிறார்(ன்?).*

---

மஹிஷியாய்ப் போந்தவளாகையாலே, கலங்குவதற்குக் காரணங்களுண்டானபோதும் கலங்கவில்லை. உயிருக்கே ஆபத்து நேரவிருந்த சமயத்திலும் தரித்திருந்தாள். (மழைகாலத்தில் கங்கைபோலே) இடைவிடாமல் மழை தாரைதாரையாக விழும்போதும் கங்கையானது கலங்காமலிருப்பதுபோலே பிராட்டியும் கலங்காமலிருந்தாள்.

அவதாரிகை:—முந்திய ச்லோகம்போலவே இதுவும் திருவடியின் பாசுரம். ஸ்ரீராமபிரானைப் பிரிந்த ஆற்றாமை தோற்ற எழுந்தருளியிருந்த பிராட்டிக்கு இரண்டு உதாஹரணங்கள் சொல்லுகிறான் இப்பாசுரத்தில்.

வ்யா:—(ஹிமஹததநளிநீவ நஷ்டஶோபா) நாற்றம், தே(ெ)மன்மை, குளிர்த்தி, செம்மை, செவ்வி, விகாஸம் என்கிற ஸ்வபாவங்களையுடைத்தாய், வைத்தகண் வாங்காதபடி தர்ஶநீயமாய், முன்பழகியதாயிருந்த தாமரைப்பூவானது பனியிலே நோவுபட்டிருக்கிறுப்போலே இவளும் நோவுபட்டிருக்கிறபடி. (வ்யஸந பரம்பரயாதிபீட்யமாநா) இதுதான் ப்ரக்ருதியாக மேல்வரும் வ்யஸநபரம்பரைகள் ஆச்ரயித்த வளவன்றிக்கே நோவுபடுத்தாநின்றது. (ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ) "நின்னஞ்சிறைய சேவலுமாய்" என்கிறபடியே பிரிவுபொருத ப்ரக்ருதியைக்கொண்டு தனியே இருந்தாள். (ஜநகஸுதா) துக்கங்களுக்கு ஈடுபடாத பிறப்பையுடையவள் கிடீர் இப்படி நோவுபடுகிருள். (ஜநகஸுதா) பெருமாளைக் கைப்பிடித்த செல்வமன்று; பிறப்பினுடைய செல்வம்.

---

வ்யா:—(பனியினால் வாட்டப்பெற்ற தாமரைபோலே அழகிழந்தவளாய்) நறுமணம், தே(ெ)மன்மை, குளிர்த்தி, செந்நிறம், அழகு, மலர்ச்சி என்கிற தன்மைகளை இயற்கையிலேயே உடையதாய், வைத்த கண்ணை எடுக்க முடியாதபடி கண் குளிரக் காணத்தக்கதாய், பனியில் அடிபடுவதற்கு முன்பு மிகவழகியதாயிருந்த தாமரைப் பூவானது பனியிலே அடிபட்டு வாடியிருப்பதுபோலே இப்பிராட்டியும் வாடியிருககிறபடி. (அடுத்தடுத்து வரும் துன்பத்தொடர்களாலே மிகவும் வருந்துமவளாய்) இப்பிரிவையே காரணமாகக் கொணடு மேலே வரும் துன்பத்தொடர்கள் (தாமரைபோலே மென்மை மிக்கவளான) பிராட்டியை வந்தடைந்ததோடனறியில் துன்புறுத்தவும் செய்தன. (ஆண் துணையைப் பிரிந்த சகரவாகப் பேடையைப்போல்) "நின்னஞ்சிறைய சேவலுமாய்" [திருவாய் 1–4–1] என்கிறபடியே சக்ரவாகப்பேடையைப்போலே நாயகனைப் பிரிந்தால் பொறுக்கமாட்டாத ஸ்வபாவத்தைக் கொண்டு தனியே எழுந்தருளியிருந்தாள். (ஜனகராஜன் திருமகள்) "ப்ரதீ₃ப்தாயாம் மிதி₂லாயாம் நமே கிஞ்சித் ப்ரத₃ஹ்யதே' [பற்றியெரியும் மிதிலைமா நகரத்தில் என்னுடையது ஒன்றும் எரியவில்லை] என்கிறபடியே துன்பங்கள் வந்தாலும் அவற்றை மதிக்காத ஜனகராஜனுடைய திருமகள் கிடீர் இப்படித் துன்புற்ருள். (ஜனகராஜன் திருமகள்) பகவானைப் பிரிந்தால் நோவுபடுகையாகிற இச்செல்வம் ஸ்ரீராம பிரானைக் கைப்பிடித்ததால் ஏற்பட்ட செல்வமன்று. மஹாஜ்ஞானி

(க்ருபணும் தஶாம் ப்ரபந்நா) படக்கடவதில் ஒன்றும் குறை யாமல் பட்டாள்.

ஸுந்தரகாண்டம் 21-வது ஸர்க்கம் 3-வது ச்லோகம்

**तृणमन्तरतः कृत्वा प्रत्युवाच शुचिस्मिता।**
**निवर्तय मनो मत्तः स्वजने प्रीयतां मनः॥**

**த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச ஶுசிஸ்மிதா।**
**நிவர்த்தய மநோ மத்த: ஸ்வஜநே ப்ரீயதாம் மந:॥**

பதவுரை:—**த்ருணம்**—*புல்லை,* **அந்தரத:**—*(தனக்கும் ராவணனுக்கும்) இடையில்,* **க்ருத்வா**-*(இருக்கும்படி)செய்து,* **ஶுசிஸ்மிதா**—*பரிசுத்தமான புன்சிரிப்பையுடையவளாய்,* **ப்ரத்யுவாச**—*(பிராட்டி) பதில் சொன்னாள்;* **மத்த:**—*என்னிடத்திலிருந்து,* **மந:**-*மனஸ்ஸை,* **நிவர்த்தய**—*திருப்பிக்கொள்;* **ஸ்வஜநே**—*உன் மனைவியரிடத்தில்,* **மந:**—*உன் நெஞ்சு,* **ப்ரீயதாம்**—*பிரீதி பண்ணட்டும்.*

அவதாரிகை:— “**स्रस्तमाल्यांबरधरो वैदेहीमनुचिन्तयन्। भृशं-नियुक्तस्तस्याञ्च मदनेन मदोत्कटः**” (**ஸ்ரஸ்தமால்யாம்பரதரோ வைதேஹீமநுசிந்தயந்। ப்ருஶம் நியுக்தஸ் தஸ்யாஞ்ச மதநேந மதோத்கட:॥**) *என்று உறங்கி உணர்ந்து எழுந்திருந்த*

---

*யான ஜனகனின் குலத்திலே பிறந்து படைத்தசெல்வமிது. (வருந்தத்தக்க நிலையை அடைந்தாள்) ஒருத்தி அநுபவிககக்கூடிய துன்பங்களில் ஒரு துன்பமும் குறையாமல் அனுபவித்தாள். அன்றிக்கே, கீழே தாமரையும், சக்ரவாகப்பேடையும் படும் துன்பங்களை உபமானமாக எடுத்தது ஒருகோடி காட்டுவதற்காகவித்தனை. உலகத்திலேயுள்ள பதார்த்தங்கள் எல்லாம் படக்கூடிய துன்பங்களில் ஒரு துன்பமும் குறையாதபடி அனுபவித்தாள் என்றுமாம்.*

*அவதாரிகை:—“நழுவும் மாலைகளையும் வஸ்திரங்களையும் தரித்தவனாய், மதத்தினால் கொழுத்தவனாய், வைதேஹியை நினைத்திருப்பவனாய், மன்மதனாலே அப்பிராட்டியிடம் ஈடுபடும்படி மிகவும் நியமிக்கப்பெற்றவனாய்” [ரா-ஸு 18-4] என்று உறங்கி விழித்து*

ராவணன், மதனபரவசனுய், "दीपिकाः काञ्चनीः काश्चित्" (தீ₃பிகா: காஞ்சநீ: காச்சித்) என்று கநகதீபிகா களாசீ வாலவ்யஜன தாளவ்ருந்த ப்ருங்காரசாமர ரமணீயத்வஜ சத்ராதிபரிப₃ர் ஹங்களைக்கொண்டு அங்கநா ஶதம் ஸேவிக்க. "रावणस्योत्तमाः स्त्रियः" (ராவணஸ்யோத்தமா: ஸ்த்ரிய:)என்று ப்ரதாந மஹிஷி களிலே சிலர் பின்செல்ல,நித்ராஶேஷமந்தகதியாய்க்கொண்டு அஶோகவனிகையில் செல்ல. "ततो दृष्ट्वैव वैदेही रावणं राक्षसाधिपं"

---

எழுந்திருந்த ராவணன், காமவசப்பட்டவனுய், "அங்க₃நா: சதமாத்ரம் து தம் வ்ராஜந்தமநுவ்ரஜந், மஹேந்த்₃ரமிவ பௌலஸ்த்யம் தே₃வக₃ந்த₄ர்வ யோஷித:, தீ₃பிகா: காஞ்சநீ: காச்சித் ஜக்₃ருஹுஸ் தத்ர யோஷித:, வால வ்யஜநஹஸ்தாச்ச தாலவ்ருந்தாநி சாபரா:, காஞ்சநைரபி ப்₄ருங்கா₃ரைர் ஜஹ்ருஸ ஸலிலமக்₃ரத:,மண்ட₃லாக்₃ரா ப்₃ருஸீச்சைவ க்₃ருஹ்யாந்யா:ப்ருஷ் ட₂தோ யயு:,காசித் ரத்நமயீம் ஸ்த₂ாலீம் பூர்ணாம் பாநஸ்ய ப₄ாமிநீ, த₃க்ஷிணு த₃க்ஷிணேநைவ தத₂ா ஜக்₃ராஹ பாணிநா, ராஜஹம்ஸப்ரதீகாசம் ச₂த்ரம் பூர்ணசசிப்ரப₄ம், ஸௌவர்ணத₃ண்ட₃மபரா க்₃ருஹீத்வா ப்ருஷ்ட₂தோ யயௌ" [ரா-ஸு 18-10, 11,12,13, 14] [மஹேந்திரனை தேவகந்தர்வ ஸ்த்ரீகள் பின்தொடருவதுபோலே, நடந்து செல்லும் ராவணனை நூறு ஸ்த்ரீகள் பின் தொடர்ந்தனர். சில பெண்கள் பொன் விளக்குகளை ஏந்திச்சென்றனர்; சிலர் சாமரங்களையும், பனை விசிறி களையும் எடுத்துச்சென்றனர். பொன் பிருங்கார பாத்திரங்களிலே நீரேந்தி முன்சென்றனர் சிலர். மண்டலாக்ரங்கள் எனப்படும் கத்தி களையும், ப்ருஸீ எனப்படும் விரிப்பையும் கொண்டு பின்சென் றனர் சிலர்; தாக்ஷிண்யம் நிரம்பிய ஓரழகி தன் வலது கையாலே பானம் நிரம்பிய பொற்பாத்திரத்தை ஏந்திச்சென்ருள். ராஜ ஹம்ஸம் போன்றதும், பூர்ணசந்திரனைப்போல் ஒளியுள்ளதும் பொற்பிடியுடையதுமான குடையை ஏந்திக்கொண்டு மற்ருெருத்தி பின்சென்ருள்.] என்கிறபடியே, பொன்விளக்கு, களாசீ, சாமரம், பனைவிசிறி, பிருங்காரமெனும் ஜலபாத்திரம், அழகிய கொடி, குடை முதலான ராஜசின்னங்களைக்கொண்டு நூறு பெண்கள் கைங்கரியம் செய்ய, "நித்₃ராமத₃ பரீதாக்ஷ்யோ ராவணஸ்யோத்தமா: ஸ்த்ரிய:, அநு ஜக்₃மு: பதிம் வீரம் க₄நம் வித்₃யுல்லதா இவ" [ரா-ஸு 18-15] [தூக்கத் திலுல் மதங்கொண்ட கண்ணையுடையராய் ராவணனுடையப்ரதான மஹிஷிகள், வீரனை தங்கள் கணவனை, மேகத்தை மின்னற் கொடிகள் பின்தொடர்வதுபோல் தொடர்ந்தனர்.] என்று முக்கிய மஹிஷிகளிலே சிலர் பின்செல்ல, அரைத்தூக்கத்தால் மந்தமாக

க்ருபாளுவான பெருமாளுக்கு, **"रामस्य व्यवसायज्ञा"** (ராமஸ்ய **வ்யவஸாயஜ்ஞா**) என்று கருத்தறிந்த மஹிஷியாகையாலும், **"त्वं माता सर्वलोकानां"** (த்வம் மாதா ஸர்வலோகாநாம) என்றும், **"अखिलजगन्मातरं"** (அகி₂லஜக₃ந்மாதரம்) என்றும், **"उपायभूतस्य वल्लभा प्राप्तियोगिनी"** (உபாயபூ₄தஸ்ய வல்லப₄ா ப்ராப்தி யோகி₃நீ) என்றும், **"लक्ष्मीः पुरुषकारत्वे निर्दिष्टा परमर्षिभिः"** (லக்ஷ்மீ: புருஷ காரத்வே நிர்தி₃ஷ்டா பரமர்ஷிபி₄:) என்றும், விசேஷித்துப் புருஷகாரமாகிற ஸம்பந்தத்தாலும், தன் பரிபவங்கள் கிடக்க இவ்வநர்த்தத்தைத்தைக் கண்டு, பிராட்டியும் இவன் சொன்னவற்றுக்கு ப்ரதிவசனமும் ஹிதமும் சொல்லுகிருள் இஸ்ஸர்க்கத்தாலே.

**"कामये त्वां विशालाक्षि"** (காமயே த்வாம் விஶாலாக்ஷி) என்றும் **"यद्यत्पश्यामि ते गात्रं शीतांशुसदृशानने। तस्मिन् तस्मिन् पृथुश्रोणि चक्षुर्मम निबध्यते॥"** (யத₃யத் பச்யாமி தே கா₃தரம ஶீதாம் ஶுஸத்₃ருஶாநநே। தஸ்மிந் தஸ்மிந் ப்ருது₂ச்ரோணி சக்ஷுர் மம நிப₃த்₄யதே॥) என்றும் ஸ்வசாபலம் சொன்னவற்றுக்கு,

---

ஞன்" [ரா-ஸு 38-35] என்று பெரிய கருணையை உடைய ஸ்ரீராம பிரானுக்கு "ராமபிரானுடைய உறுதியை அறிந்தவள்" [ரா-ஸு 16-4] என்று கருத்தறிந்த மஹிஷியாகையாலும், "எல்லாவுலகங்கட்கும் தேவரீர் தாயாவீர்" [வி-பு 1-9-126] என்றும், "எல்லாவுலகங் கட்கும் தாயை" [சரணுகதிகத்யம்-1] என்றும், "உபாயமாயிருக்கும் பகவானுககு இனியவளாய், (பகவானை) அடைவதற்குப் புருஷகார பூதையாயிருப்பவளை" [பாஞ்சராத்ரம] என்றும, "பரமரிஷிகளாலே லக்ஷ்மீதேவியானவள் புருஷகாரத்வத்திலேயே நிலைநிறுத்தப்பட்டி ருக்கிருள்" [பாஞ்சராத்ரம்] எனறும் விசேஷித்துப் புருஷகாரமாகிற ஸம்பந்தத்தாலும், தன துன்பங்கள கிடக்க, இவன் துன்பத்தைக் கண்டு பிராட்டியும் இவன சொன்னவற்றுக்கு பதிலும் நன்மையும் சொல்லுகிருள் இஸ்ஸர்க்கத்தாலே.

"தடங்கண்ணியே! உன்னை நான ஆசைப்படுகிறேன்" [ரா-ஸு 20-3] என்றும், "பருத்த இடையை உடையவளே! சந்திரன் போல் திருமுகமுடையாளே! உன் திருமேனியில் எந்தெந்த அவயவங் களைக் காண்கின்றேனோ, அந்தந்த அங்கங்களிலெல்லாம் என் கண் ஈடுபடுகின்றது" [ரா-ஸு 20-15] என்றும் தன் ஆசையை வெளிப்

"**निवर्तय मनो मत्तः**" (நிவர்த்தய மநோ மத்த:) என்றும், "**साधुधर्ममवेक्षस्व साधु साधुव्रतं चर**" (ஸாது₄த₄ர்மமவேக்ஷஸ்வ ஸாது₄ ஸாது₄வ்ரதம சர) என்றும், "**यथा तव तथान्येषां दारा रक्ष्या निशाचर**" (யதா₂ தவ ததா₂ந்யேஷாம் தா₃ரா ரக்ஷ்யா நிஶாசர) என்றும், 'பொல்லாங்குகளைத் தவிர்த்து நன்மைகளை ஆசரி' என்று உத்தரம் சொல்லியும், "**भुङ्क्ष्व भोगान् यथासुखं**" (பு₄ங்க்ஷ்வ போ₄கா₃ந் யதா₂ஸுக₂ம்) என்றும், "**एकवेणी धराशय्या ध्यानं मलिनमम्बरं। अस्थानेप्युपवासश्च नैतान्यौपयिकानि ते॥**" (ஏகவேணீ த₄ராஶய்யா த்₄யாநம் மலிநமம்ப₃ரம் அஸ்தா₂நேப்யுபவாஸச்ச நைதாந்யௌபயிகாநி தே ॥) என்றும் சொன்னதற்கு, "**अकार्यं न मया कार्यमेकपत्न्या विगर्हितम्। कुलं संप्राप्तया पुण्यं कुले महति जातया**" (அகார்யம் ந மயா கார்யமேகபத்ந்யா விக₃ர்ஹிதம்। குலம் ஸம்ப்ராப்தயா புண்யம் குலே மஹதி ஜாதயா ॥) என்றும், "**नाहमौपयिकी भार्या परभार्या सती तव**" (நாஹமௌபயிகீ பா₄ர்யா பரபா₄ர்யா ஸதீ தவ) என்றும் உத்தரம் சொல்லியும், "**असकृत्संयुगे भग्ना मया विमृदितध्वजाः। अशक्ताः प्रत्यनीकेषु स्थातुं**

---

படுத்திச் சொன்ன வார்த்தைகளுக்கு, "என்னிடமிருந்து உன் நெஞ்சைத் திருப்புவாயாக" [ரா-ஸு 21-3] என்றும், "நல்லோர்களின் தர்மத்தை கவனிப்பாயாக; நல்விரதங்களை நன்றாக அனுஷ்டிப்பாயாக; அரக்கனே! உன் மனைவியரைப் போலவே பிறர் மனைவியரும் ரக்ஷிக்கத்தக்கவரன்றோ." [ரா-ஸு 21-7] என்றும், 'தீமைகளைத்தவிர்த்து, நல்வழி நடப்பாயாக' என்று பதில் சொல்லியும், "இஷ்டப்படி போகங்களை அனுபவிப்பாயாக" [ரா-ஸு 20-35] என்றும், "பின்னலிடாத மயிர்முடி, தரையில் படுக்கை, தியானித்துக் கொண்டிருத்தல், கிழிந்த புடவை, காரணமில்லாத உபவாஸம் ஆகிய இச்செயல்கள் உனக்குத் தகுந்தவையல்ல" [ரா-ஸு 20-8] என்றும் சொன்ன வார்த்தைகளுக்கு, "நற்குலத்தில் பிறந்து, நற்குலத்தில் புகுந்தவளாய் ஒருவருக்கே மனைவியான என்னால் இகழத்தக்க தீச்செயல் செய்யத்தகாதது." [ரா-ஸு 21-4] என்றும், "பிறன் மனைவியான நான் உனக்கு மனைவியாயிருக்கத் தகுந்தவளல்ல" [ரா-ஸு 21-6] என்றும் பதில் சொல்லியும், "தேவாசுரர்கள் அனைவ்ரும் பலதடவை யுத்தகளத்தில் நேர் நிற்கமுடியாமல், என்னால்

मम सुरासुराः॥" (அஸக்ருத் ஸம்யுகே$_3$ ப$_4$க்$_3$நா மயாவிமருதி$_3$ தத$_4$வஜா:। அஶக்தா: ப்ரத்யநீகேஷு ஸ்த$_2$ாதும் மம ஸுராஸுரா:॥) என்று தன் ஆண்பிள்ளைத்தனம் சொன்னதற்கு, "जनस्थाने हतस्थाने निहते रक्षसां बले। अशक्तेन त्वया रक्षः कृतमेतदसाधु वै॥ आश्रमं तु तयोः शून्यं प्रविश्य नरसिंहयोः। गोचरं गतयोर्भ्रात्रोरपनीता त्वयाधम॥ नहि गन्धमुपाघ्राय रामलक्ष्मणयोस्त्वया। शक्यं सन्दर्शने स्थातुं शुना शार्दूलयोरिव॥" (ஜநஸ்த$_2$ாநே ஹதஸ்த$_2$ாநே நிஹதே ரக்ஷஸாம் ப$_3$லே। அஶக்தேந த்வயா ரக்ஷ: கருதமேதத$_3$ஸாது$_4$வை॥ ஆச்ரமம து தயோ: ஶூந்யம் ப்ரவிச்ய நரஸிம்ஹயோ:। கோ$_3$சரம க$_3$தயோர் ப்$_4$ராதரோ ரபநீதா த்வயாத$_4$ம॥ நஹி க$_4$ந்த$_4$முபாக்$_4$ராய ராமலக்ஷ்மணயோஸ் த்வயா। ஶக்யம் ஸந்த$_3$ர்ஶநே ஸ்த$_2$ாதும ஶுநா ஶார்தூ$_3$லயோரிவ॥) என்றும், "பெருமாள் கண் வட்டத்திலே நிற்கும் நீ தப்புவையோ, புலி முன்னே நிற்கும் நாய்போலே? பதினாலாயிரம் பேரைத் தனியே நின்று கொன்று கூ(சூ?)றையாடின தனி வீரத்துக்கு ப்ரதிகிரியையாக மாரீசனைக்கொண்டு நீ பண்ணின க்ருத்ரிமத்திலே கண்டிலோமே? அவ்வாண்பிள்ளைகள் நாற்றம்

---

கொடியறுபட்டுத் தோல்வியுற்றனர்" [ரா-ஸு 20-20] என்று தன் வீரம் சொன்ன வார்த்தைக்கு, "அரக்கனே! அதமனே! ஜனஸ்தானம் குடியிருப்பழிந்து, ராக்ஷஸஸைந்யம் கொல்லப்பட்டவுடன், சக்தியற்ற உன்னால் இத்தீச்செயல் செய்யப்பட்டதன்றோ. நரச்ரேஷ்டர்களான அந்த ராமலக்ஷ்மணர்கள் இலலாமலிருக்கப்பெற்ற ஆச்ரமத்தினுள் நுழைந்து, ஸஹோதரர்களான அவர்கள் வெகு தூரம் சென்றிருந்தபோது நான் உன்னால் கொண்டுவரப்பட்டேன். புலியின் முனனே நாய் நிற்கமாட்டாததுபோலே ராமலக்ஷ்மணர்களின் வாஸனையை நுகர்ந்துகொண்டு, அவர்கள் கண்ணெதிரிலே நிற்கவும முடியாதவன் நீ" [ரா—ஸு 21—29, 30, 31] என்று,— 'புலி முன்னே நிற்கும் நாய்போலே ஸ்ரீராமபிரான் கண்ணெதிரில் நின்று நீ தப்பமுடியுமோ? ஸ்ரீராமபிரான் பதினாலாயிரம் பேரைத் தனியே நின்று கொன்று துண்டுதுண்டாக்கின தனி வீரத்துக்குப் பழிவாங்குவதற்காக மாரீசனைக்கொண்டு நீ பண்ணின வஞ்சனையிலே காணவில்லையோ உன் கோழைத்தனத்தை? முதன் முதலில் ஆண்புலிகளான அவர்களுடைய வாஸனையை மோந்து மயங்கி

கேட்டு நின்றல் பின்பன்றோ உன்னுடைய வெற்றியும் ஆண் பிள்ளைத்தனமும் காணலாம்'' என்று பெருமாளுடைய ஆண் பிள்ளைத்தனமும பேசி உத்தரம் சொல்லியும், **"लोकेभ्यो यानि रत्नानि संप्रमथ्याहृतानि मे। तानि ते भीरु सर्वाणि राज्यं चैतदहञ्च ते"** (லோகேப்$_4$யோ யாநி ரத்நாநி ஸம்ப்ரமத்$_2$யாஹ்ருதாநி மே। தாநி தே பீ$_4$ரு ஸர்வாணி ராஜ்யம் சைததத$_3$ஹஞ்ச தே॥)என்றும், **"इमाञ्च पृथिवीं सर्वां नानानगरमालिनीं। जनकाय प्रदास्यामि"** (இமாஞ்ச ப்ருதி$_2$வீம் ஸர்வாம் நாநாநகரமாலிநீம்। ஜநகாய ப்ரத$_3$ாஸ்யாமி) என்றும், **"यानि वैश्रवणे सुभ्रु रत्नानि च धनानि च"** (யாநி வைச்ரவணே ஸுப்$_4$ரு ரத்நாநி ச த$_4$நாநி ச) என்றும் ராஜ்ய ரத்ன தநதாந்ய நகரபத்தநாதிகளைத் தருகிறேன் என்று ப்ரலோபி$_4$த்ததற்கு, **"शक्या लोभयितुं नाहमैश्वर्येण धनेन वा। अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा'** (ஶக்யா லோப$_4$யிதும் நாஹமைச்வர்யேண த$_4$நேந வா। அநந்யா ராக$_4$வேணாஹம் பா$_4$ஸ்கரேண ப்ரப$_4$ா யத$_2$ா॥) என்றும், **"यं त्वं देवि निरीक्षसे। सः श्लाघ्यः स गुणी धन्यः स कुलीनः स बुद्धिमान्॥"** (யம் த்வம் தே$_3$வி நிரீக்ஷஸே। ஸ: ச்லாக்ய: ஸ கு$_3$ணீ த$_4$ந்ய: ஸ குலீந: ஸ பு$_3$த்$_3$தி$_4$மாந்)

---

விழாமல் நின்றபிறகல்லவோ உன் வெற்றியையும் வீரத்தையும் உலகத்தார் காணலாம்'' என்று ஸ்ரீராமபிரானுடைய வீரத்தைப் பேசி பதில் சொல்லியும், "பயந்தவளே! இவ்வுலகெங்குமிருந்து என்னால் பலாத்காரமாகப் பறித்துவரப்பெற்ற ரத்தினங்களெல்லாமும், இந்த ராஜ்யமும், நானும் உன்னுடைய உடைமைப்பொருள்கள்'' [ரா-ஸு 20-17] என்றும், "பல நகரங்களாகிய மாலைகளையுடைய இந்த பூமி முழுவதையும், உனக்காக ஜனகனுக்குக் கொடுத்து விடுகிறேன்'' [ரா-ஸு 20-18] என்றும், "அழகிய புருவமுடையாளே! குபேரனிடமுள்ள ரத்தினங்களையும் தனங்களையும் அனுபவிப்பாயாக" [ரா-ஸு 20-33] என்றும் 'ராஜ்யம், ரத்தினம், தனம், தானியம், நகரம், பட்டணம் முதலியவற்றைத் தருகிறேன்' என்று மயக்கினதற்கு "செல்வத்தினாலோ, பணத்தினாலோ மயக்கத்தகாதவள் நான். சூரியனை விட்டுப் பிரியமாட்டாத ஒளிபோலே, ஸ்ரீராமபிரானைவிட்டுப் பிரியமாட்டாதவள் நான்'' [ராஸு 21-15] என்றும், "தேவி! எவனை தேவரீர் கடாக்ஷிக்கிறீரோ, அவனே சிறந்தவன்; அவனே குணவான்; அவனே பாக்யசாலி; அவனே

என்றும் 'மஹாதனத்தைப் பிரியாதேயிருக்கிற என்னையோ நாலு காசிட்டு வசீகரிக்கத்தேடுதி?' என்று உத்தரம் சொல்லியும், "**बहुमन्यस्व मां**" (ப₃ஹுமந்யஸ்வமாம்) என்றும், "**माञ्च भुङ्क्ष्व यथासुखं**" (மாஞ்ச பு₄ங்க்ஷ்வ யத₂ாஸுக₂ம்) என்றும் என்னையும் ஆதரித்துக்கொண்டு அணையவேணுங்காண்!' என்றதற்கு, "**उपधाय भुजं तस्य लोकनाथस्य सत्कृतम्। कथं नामोपधास्यामि भुजमन्यस्य कस्यचित्**" (உபத₄ாய பு₄ஜம் தஸ்ய லோகநாத₂ஸ்ய ஸத்க்ருதம்। கத₂ம் நாமோபத₄ாஸ்யாமி பு₄ஜமந்யஸ்ய கஸ்யசித் ||) என்று, "'அணிமிகு தாமரைக்கையையந்தோ அடிச்சியோம் தலைமிசை நீ யணியாய்' என்று எல்லாரும் தலையாலே சுமக்கும்படியான உலகுடைய பெருமாள் தோளிலே தலைவைத்த நான் வேறொரு க்ஷுத்ரனைத் தீண்டுவதோ?" என்று உத்தரம் சொல்லியும், "**बहुमन्यस्व मां**" (ப₃ஹுமந்யஸ்வ மாம்) என்றும், "**नहि वैदेहि रामस्त्वां द्रष्टुं वाप्युपलप्स्यते**" (நஹி வைதே₃ஹி ராமஸ் த்வாம் த்₃ரஷ்டும் வாப்யுபலப்ஸ்யதே) என்றும், "**न चापि मम हस्तात्त्वां प्राप्तुमर्हति राघवः**" (ந சாபி மம

---

நற்குலத்துதித்தோன்; அவனே புத்திமான்" [வி–பு 1–9–131] என்றும் "*வானோர்க்கும் மண்ணோர்க்கும் நிதியாயிருக்கிற ஸர்வேச்வரனையும், மற்றுள்ள செல்வங்களையும் விட்டுப்பிரியாமலிருகக்கும் என்னையோ நாலுகாசைக்கொண்டு வசப்படுத்தப் பார்க்கிறாய்!" என்று பதில் சொல்லியும், "என்னை கௌரவிப்பாயாக" [ரா—ஸு 20-3] என்றும், "என்னையும் இஷ்டப்படி அனுபவிப்பாயாக' [ரா-ஸு 20-33] என்றும் 'என்னையும் அன்போடு அணையவேணும்' என்று சொன்னதற்கு, "ஸர்வலோகஸ்வாமியான அவனுடைய ஸர்வ ஜனபூஜிதமான தோளிலே தலையைவைத்த நான், ஒரு பொருளல்லாத வேறொருவனுடைய தோளிலே எப்படித் தலைவைப்பேன்?" [ரா-ஸு 21-16] என்று. "'அணிமிகுதாமரைக் கையையந்தோ அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்' [திருவாய் 10-3-5] என்று எல்லாரும் தலையாலே சுமக்கும்படியான *உலகுடைய பெருமாள்-(லோகநாதன்)-தோளிலே தலைவைத்த நான் வேறொரு நீசனைத் தொடுவேனோ?" என்று பதில்சொல்லியும், "என்னை கௌரவிப்பாயாக" [ரா-ஸு 20-3] "வைதேகி! ராமன் உன்னைக்காணவும் பெறமாட்டான்" [ரா-ஸு 20-27] என்றும், "என் கையிலிருந்து உன்னை

ஹஸ்தாத் த்வாம் ப்ராப்துமர்ஹதி ராக₄வ:) என்றும், 'என் கையிலே அகப்பட்ட உன்னைப்பெருமாள் காணவும் கிட்டவும் வல்லரோ?' என்றதற்கு, **"अपनेष्यति मां भर्ता त्वत्तः शीघ्रमरिन्दमः। असुरेभ्यः श्रियं दीप्तां विष्णुस्त्रिभिरिव क्रमैः"** (அபநேஷ்யதி மாம் ப₄ர்த்தா த்வத்த: சீக்₄ரமரிந்த₃ம:। அஸுரேப்₄ய ஶ்ரியம் தீ₃ப்தாம் விஷ்ணுஸ் த்ரிபி₄ரிவ க்ரமை:॥) என்று, 'அஸுராபஹ்ருத ஸ்ரீயை மீட்டாற்போலே உன்னெதிரே என்னையும் மீட்கப்புகுகிற படி பார்' என்று உத்தரம் சொல்லியும், **"ऋद्धिं ममानुपश्य त्वं श्रियं भद्रे यशश्च मे"** (ருத்₃தி₄ம் மமாநுபச்ய த்வம் ஶ்ரியம் ப₄த்₃ரே யஶச்ச மே) என்று, 'என் ஐச்வர்ய ஸம்பத் கீர்த்திகளைப் பாராய்' என்றதற்கு, **"समृद्धानि विनश्यन्ति राष्ट्राणि नगराणि च। तथेयं त्वां समासाद्य लङ्का रत्नौघसङ्कुला॥ अपराधात्तवैकस्य नचिराद्विनशिष्यति॥"** (ஸம்ருத்₃த₄நி விநச்யந்தி ராஷ்ட்ராணி நக₃ராணி ச। ததே₂யம த்வாம் ஸமாஸாத்₃ய லங்கா ரத்நௌக₄ஸங்குலா॥ அபராத₄ாத் தவைகஸ்ய நசிராத விநஶிஷ்யதி॥) என்று, "நசியாத இவையடைய நசிக்கப்புகுகிறபடி பார்" என்று உத்தரம் சொல்லியும் **"निक्षिप्तविजयो रामो गतश्रीर्वनगोचरः। व्रती**

---

ராமன் அடையமாட்டான்" [ரா-ஸு 20-28] என்றும் 'என்கையிலே அகப்பட்ட உன்னை ராமன் காணவும அணுகவும் முடியுமோ' என்று சொன்ன வார்த்தைக்கு, "எதிரிகளை அடக்கவல்ல என் பதி, மாவலி முதலான அசுரர்களால் அபஹரிக்கபபட்ட மூவுலகச் செல்வத்தை மூன்றடிகளாலே அளந்து விஷ்ணுபகவான் மீட்டதுபோலே, என்னை உன்னிடமிருந்து விரைவிலேயே மீட்கப்போகிறார்" [ரா-ஸு 21-28] என்று, 'அசுரர் அபஹரித்த செல்வததை மீட்டாப்போலே உன்னெதிரே என்னையும் மீட்கப்போகிறபடியைப் பார்ப்பாயாக" என்று பதில சொல்லியும், "மங்களகரமானவளே! என் ஐச்வர்யத்தையும், தனத்தையும் புகழையும் காண்பாயாக" [ரா-ஸு 20-25]என்று 'என் ஐச்வர்ய ஸம்பத்கீர்த்திகளைக் காண்பாயாக' என்று சொன்ன வார்த்தைக்கு, "செல்வமகொழிக்கும் ராஜ்யங்களும், நகரங்களும் அழிவது போலே உயர்ந்த வஸ்துக்கள் பல நிறைந்த இந்த லங்கையும் உன்னை அரசனாகப்பெற்று உன் ஒருவனுடைய குற்றத்தாலே விரைவிலேயே அழியப்போகிறது"[ரா-ஸு21-12]என்று 'அழியாத இவையெல்லாம் இனிமேல் அழியப்போகிறபடியை உன் கண்ணாலேயே காண்பாய்'

स्थण्डिलशायी च शङ्के जीवति वा न वा॥" (நிக்ஷிப்தவிஜயோ ராமோ க₃தஸ்ரீர் வநகோ₃சர:। வ்ரதீ ஸ்த₂ண்டி₃லஶாயீ ச ஶங்கே ஜீவதி வா ந வா) என்று, 'ப்ரஷ்டைச்வர்யராய் ஸத்தை தன்னிலே யகப்பட ஸந்தேஹிக்கும்படியிருக்கிறார்' என்று சொன்ன தற்கு "क्षिप्र तव स नाथो मे रामः सौमित्रिणा सह। तोयमल्पमिवादित्यः प्राणानादास्यते शरैः॥" (க்ஷிப்ரம் தவ ஸ நாதோ₂ மே ராம: ஸௌமித்ரிணா ஸஹ। தோயமல்பமிவாதி₃த்ய: ப்ராணாநா தா₃ஸ்யதே ஶரை:॥) என்று, 'அவர் தம்பியும் தாமுமாக உன் தலையை அறுத்து ஸுகமாயிருக்கப்புகுகிறபடி பார்' என்று உத்தரம் சொல்லியும், "न रामस्तपसा देवि न बलेन न विक्रमैः। न धनेन मया तुल्यस्तेजसा यशसापि वा॥" (ந ராமஸ் தபஸா தே₃வி ந ப₃லேந ந விக்ரமை:। ந த₄நேந மயாதுல்யஸ் தேஜஸா யஶஸாபி வா॥) என்று, 'புஜபலவிக்ரமதநதேஜ: கீர்த்தி களாலே நமக்கு ஒரு தரம் போராது' என்று சொன்னதற்கு, "वर्जयेद्वज्रमुत्सृष्टं वर्जयेदन्तकश्चिरं। त्वद्विधं न तु सङ्क्रुद्धो लोकनाथस्स राघवः। रामस्य धनुषः शब्दं श्रोष्यसि त्वं महास्वनम्। इषवो निपतिष्यन्ति

---

என்று பதில் சொல்லியும், "வெற்றியில்லாதவனாய், செல்வமற்ற வனாய், காட்டில் திரியுமவனாய், விரதங்களை அனுஷ்டிப்பவனாய், பூமியில் படுப்பவனாயிருக்கும் ராமன் உயிரோடிருக்கிறானோ இல்லை யோ?" [ரா-ஸு 20-26] என்று, 'செல்வமிழந்து, உயிர்வாழவதி லேயே ஸந்தேஹிக்குமபடியிருக்கிறான் ராமன்' எனறு சொன்ன வார்த்தைக்கு, "லக்ஷமணனோடுகூடிய என் நாதனை ராமபிரான், சூரியன் சிறிய நீர்த்தேக்கத்தை (கிரணங்களால்) குடிப்பதுபோலே, உன் பிராணனை அம்புகளாலே விரைவில் வாங்கப்போகிறார்" [ரா-ஸு 21-33] என்று, 'அவர் தம்பியும் அவருமாக உன் தலையை அறுத்து ஸுகமாய் வாழப்போவதைக் காண்பாய்' என்று பதில் சொல்லியும், "தேவி! தவத்தினாலும், பலத்தினாலும், பராக்ரமத்தாலும் தனத்தாலும், தேஜஸ்ஸாலும், யசஸ்ஸினாலும் ராமன் எனகு ஒப்பான வனன்று' [ரா-ஸு 20-34] என்று 'பாஹுபலத்தாலும், பராக்ரமம், பணம், தேஜஸ், புகழ் ஆகியவற்றாலும் நமக்கு ராமன் ஒப்பாக மாட்டான்' என்று சொன்ன வார்த்தைக்கு, "இந்திரன் விட்ட வஜ்ராயுதம் ஒருவனை விடலாம்; யமன் ஒருவனை நெடுங்காலம் விட்டு வைக்கலாம; ஆனால், உன்னைப்போன்ற ஒருவனை ஸர்வலோக

ராமலக்ஷ்மணலக்ஷணா: ||" (வர்ஜயேத்₃ வஜ்ர முத்ஸ்ருஷ்டம் வர்ஜயே த₃ந்தகச் சிரம் | த்வத்₃வித₄ம் ந து ஸங்க்ருத்₃தே₄ா லோகநா த₂ஸ்ஸ ராக₄வ: || ராமஸ்ய த₄நுஷ: சப்₃த₃ம ச்ரோஷ்யஸி த்வம் மஹாஸ்வநம | இஷவோ நிபதிஷ்யந்தி ராமலக்ஷ்மணலக்ஷணா:||) என்று, 'பெருமாள் ஆண்மைக்கு நீ தோற்றினால் உன்னை உயிரோடே விடுவரோ? அவர்தாம வேணுமோ? அவருடைய வில்லில் சிறு நாணொலியைக் கேட்டுப் பொறுத்தாலன்றோ? திருநாமம் சாத்தின அம்புகளன்றோ 'காட்டு, காட்டு' என்று சொல்லுகின்றன' என்று உத்தரம் சொல்லியும். இப்படி இவனை மீட்கலாமோ என்றுபார்க்கிருள் இஸ்ஸர்க்கத்தாலே.

முதல் ச்லோகத்திலே, 'கொடியனுன பையல் வார்த் தையைக் கேட்டுத்தான் சில வார்த்தை சொன்னுள்' என்

---

ஸவாமியாய், சிற்றமடைந்தவரான ராமபிரான் விடமாட்டார்; பேரொலிசெய்யும் ராமபிரானுடைய "சார்ங்கவில் நாணொலியை நீ கேட்கப்போகிருய்;... ராமலக்ஷ்மணர்களுடைய பெயர் பொறித்த அம்புகள் (உன்மேல்) விழப்போகின்றன" [ரா-ஸு 21-23, 24, 26] என்று, 'அவருடைய வீரத்துக்கு ஒப்பிடும்போது நீ கொண்ட வீரம் எவ்வளவு? அவர்கள் பார்வையிலே நீ பட்டால் உயிரோடே விடு வரோ? அவரும் வரவேண்டாவே. பேரொலியுடைய அவருடைய வில்லிலிருந்து புறப்படும் ஒரு சிறு சப்தத்தைக் கேட்டுப் பொறுக்கக் கூடியவனே நீ. அவர்கள் திருநாமம் பொறிக்கப் பெற்ற அம்பு களன்றோ 'ராவணனைக்காட்டு, சீதாபஹாரியைக்காட்டு' என்று கேட்கின்றன" என்று பதில் சொல்லியும், இப்படி நயத்தாலும் பயத் தாலும் இவனைத் தவருன வழியிலிருந்து திருப்பலாமோ என்று பார்க்கிருள் இஸ்ஸர்க்கத்தாலே

"தஸ்ய தத₃ வசநம ச்ருத்வா ஸீதா ரௌத்₃ரஸ்ய ரக்ஷஸ: ஆர்த்தா தீ₃நஸ்வரா தீ₃நம ப்ரத்யுவாச சனைர் வச:" [ரா-ஸு 21-1] [கோபங் கொண்ட அவ்வரக்கனின் வார்த்தையைக்கேட்டு வருந்தியவளாய், மெலலிய குரலையுடையவளான சீதாதேவி மெல்லிய குரலிலே மெது வாக (பின்வருமாறு) பதிலுரைத்தாள்] என்னும் முதல் சுலோகத்திலே 'கொடிய அரக்கன் வார்த்தையைக் கேட்டுத்தான் சில வார்த்தை சொன்னுள்' என்கிறது. "து₃:க்க₂ார்த்தா ருத₃தீ ஸீதா வேபமாநா

கிறது. இரண்டாம் ச்லோகத்திலே, அவள் சொன்ன வார்தையாகிறது.— "पतिरेको गतिस्सदा" (பதிரேகோ க₃திஸ் ஸதா₃) என்றும், 'கதியென்றும் தானுவான்' என்றும், எல்லா அவஸ்தையிலும் ரக்ஷகர் பெருமாளாகையாலே, நீ இப்படி படாதபடி ரக்ஷித்துக்கொள்ளீ—என்றுள். இந்த ச்லோகத் தாலே.— 'அவர் தூரஸ்தர்; வந்து ரக்ஷிக்குந்தனையும் இவ னுக்கு ஹிதஞ்சொல்லி மீட்கலாமோ?' என்னும் நினைவாலே, கிடந்த துரும்பை முன்னே பொகட்டு, 'என் பக்கல் நின்றும் உன் நெஞ்சை மீட்டு, வகுத்த உன் பெண்களோடே பொருந்தி வர்த்திக்கப்பார்' என்கிறுள்.

வ்யா:-(த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச)வார்த்தை சொல்லுகிற விடதத்தில் துரும்பை முன்னே பொகட்டுச் சொன்னுள். வார்த்தை சொல்லுவார்க்கெல்லாம் அங்க மன்றே துரும்பு போடுகை. இதுக்கு வாஸனையென்னென்

தபஸ்விநீ, சிந்தயந்தீ வராரோஹா பதிமேவ பதிவ்ரதா" [ரா-ஸு 21-2] [அழகியவளாய், பதிவிரதையான சீதை பதியை நினைத்துககொண்டு துன்பத்தால் வருந்தியவளாய், நடுங்குமவளாய், வருந்தத் தக்கவளாய் (சில சொல்லி) அழுதாள்] என்கிற இரண்டாவது சுலோகத்தாலே, "'பெண்களுக்கு எப்போதும் பதியே கதியாவான்' என்றும், [ ] 'கதியென்றும் தானுவான்' [நாச்-திரு 8-9] என்றும் எல்லா நிலைகளிலும் ராமபிரான் ரக்ஷகனு கையாலே நீ இப்படி படாதபடி ரக்ஷித்துக்கொள்வாய்" என்றுள். "த்ருணமந்தரத:" என்னும் இந்த மூன்ருவது சுலோகத்திலே, 'ராம பிரான் தூரத்திலுள்ளார்; அவர் வந்து ரக்ஷிக்கும் வரையில் இவனுக்கு நன்மை சொல்லித் தீவழியிலிருந்து திருப்பமுடியுமோ?' என்னும் நினைவாலே அருகில் கிடந்த துரும்பை முன்னே போட்டு, 'என்னிடமிருந்து உன் நெஞ்சைத்திருப்பி, உனக்கெனவிருக்கும் உன் மனைவியரோடே கூடி வாழப்பார்ப்பாயாக' என்று உப தேசிக்கிருள்.

வ்யா:- 1. (புல்லை நடுவில் போட்டு பதில் சொன்னுள்) பதில் வார்தைதை சொல்லுவதற்கு முன் துரும்பைத் தனக்கும் ராவண னுக்கும் நடுவில் போட்டு விட்டு பதில் சொன்னுள். "இதுவென்? பதில் வார்த்தை சொல்லுவார்க்கெல்லாம் துரும்பை முன்னே

னில்: "आसनमन्नमुदकं देयं" (ஆஸநமந்நமுத₃கம் தே₃யம்) என்று ராஜாக்களுக்கு ஆஸநமிடுகை விஹிதமாகையாலும், 'உபசரித்தால், தான் ப்ரஸந்நனாய் மீளுமோ?' என்கிற ஶங்கையாலும், "अभावे भूमिरुदकं तृणानि" (அபா₄வே பூ₄மிருத₃கம் த்ருணாநி) என்கிற மர்யாதையாலே ஆஸநமிட்டாளாகவுமாம்.

(த்ருணமந்தரத: க்ருத்வா) "ऋजुप्रणामक्रिययैव तन्वी प्रत्यादिदेश" (ருஜுப்ரணாமக்ரியயைவ தந்வீ ப்ரத்யாதி₃தே₃ஶ) என்று நெஞ்சிலிருக்கிறதற்கு அந்யவது₃பசரித்தால், இவள் விரக்தையென்று நிராஶனாமோ என்கிற நினைவாலே ஆகிலுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, "समीपमुपसङ्क्रान्तं" (ஸமீபமுபஸங்க்ராந்தம்) என்று அணுகவிடாதே, ராவணன் ஆஸந்நனாகப் புகுந்தபடியாலே வ்யவதா₄நம் வேண்டி, "स्तम्बेन सलिलेन वा पङ्क्तिभेदोऽभिजायते" (ஸ்தம்பே₃ந

---

போடுவது அங்கமல்லவே; இதற்குக் காரணமென்?" என்னில்: "அரசர்களுக்கு ஆஸநமும், அன்னமும் நீரும் அளிக்கவேண்டும்" [ஆபஸ்தம்ப 2-4-1] என்று ராஜாக்களுக்கு ஆஸநமிடவேண்டுமென்று சாஸ்திரம் விதிக்கிறபடியாலும், உபசாரம் செய்தால் மனமுகந்து மீள்வனோ என்கிற ஸந்தேஹத்தாலும், "ஆஸநமில்லாவிடில் பூமியையோ நீரையோ, புற்களையோ ஆஸனமாக இடலாம்" [ஆபஸ்தம்ப 2-4-14] என்கிற வசனவரம்பின்படி புல்லை ஆஸனமாக இட்டாள் என்றும் கொள்ளலாம்.

2. (புல்லை நடுவிலே இட்டு) "நேரான நமஸ்காரத்தினாலேயே அழகியவளான அவள் பதில் சொன்னாள்" [ரகு 6-25] என்கிறபடியே, அவன் நெஞ்சிலிருக்கிற ஆசைக்குஓவ்வாதபடி, பரபுருஷனை உபசரிப்பதுபோலே ஆஸநமிட்டு உபசரித்தால், 'இவள் நம்மிடம் ஆசையில்லாதவள்' என்று ஆசையற்றுப் போவனோ என்கிற நினைவாலே புல்லையிட்டாள் என்றுமாம்.

3. (புல்லை நடுவிலே இட்டு) "பிராட்டிக்கு அருகில் வந்தவனை ராவணனை (ஹனுமான் பார்த்தான்)" [ரா-ஸு 18-25] என்று ராவணன் அருகில் வந்தபடியாலே, அவனை அணுகவிடாமல் தடுப்பதற்காக, "புல்லினாலோ, நீரினாலோ, கோஷ்டி வேறுபாடு உண்

ஸலிலேந வா பங்க்திபே₄தே₃ாऽபி₄ஜாயதே) என்கிற ந்யாயத்தாலே, துரும்பை நடுவே பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று **"न परमुखनिरीक्षणं नापि संभाषणं"** (ந பரமுக₂நிரீக்ஷணம் நாபி ஸம்பா₄ஷணம) என்று, ஸ்தரீகளுக்குப் பரபுருஷநிரீக்ஷணம் பண்ணுதல், வார்த்தை சொல்லுதல் செய்யலாகாது; ஆகையாலே, த்ருணத்தை முன்னே பொகட்டு, அத்தை வ்யாஜீகரித்து அவன் உபச்ரோதாவாகைக்காகிலுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா)என்று **"पथ्यमुक्तं विचक्षणैः। राक्षसानामभावाय त्वं वा न प्रतिपद्यसे"** (பத்₂யமுக்தம் விசக்ஷணை:। ராக்ஷஸாநாமப₄ாவாய த்வம் வா ந ப்ரதிபத்₃யஸே||) என்று, 'பண்டும் ஹிதபரரான அகம்பந மாரீச மால்யவத்ப்ரமுகர் சொன்ன வார்த்தையும் கேட்டிலே; இப்போது இத்துரும்பு ப்ரதிபத்தி பண்ணிலிறே நீ ப்ரதிபத்திபண்ணுவது' என்று, **"निदर्शनमसाराणां लघुर्बहुतृणं नरः"** (நித₃ர்ஶநமஸாராணும் லகு₄ர் ப₃ஹு த்ருணம் நர:) என்று த்ருஷ்டாந்தீகரித்துப் பொகட்டாளாகவுமாம்.

---

டாகிறது" [ ] எனகிற நியாயத்தாலே துரும்பை நடுவே போட்டாள் என்றும் கொள்ளலாம்

4. (புல்லை நடுவில் இட்டு) "பெண்களுக்குப் பரபுருஷனை உற்றுப் பார்ப்பது, பேசுவது ஆகியவை செய்யத்தகாதவை" [ ] என்று, ஸ்திரீகளுக்குப் பரபுருஷர்களைப் பார்ப்பதும், அவர்களோடு பேசுவதும செய்யத்தகாததாகையாலே, புல்லை முன்னே போட்டு அதை வ்யாஜமாக வைத்து, அவனைக் கேட்பிப்பதற்காகப் புல்லிட்டாள் என்றும் கொள்ளலாம்.

5. (புல்லை நடுவிலிட்டு) "நல்லோர்களால் நவிலப்பட்ட நல்வார்த்தைகளை ராக்ஷஸர்களுக்கு அழிவு வந்துவிட்டதாகையாலே நீ கணிசிககிருயல்லை" [ரா-ஸு 21-10] என்று, 'உன் நன்மையை விரும்பும் அகம்பனன், மாரீசன் மால்யவான் முதலானுர் முன்பே சொன்ன நல்வார்த்தைகளையும் கேட்க வில்லை; இப்போது இத்துரும்பு நான் சொல்லுவதைக கேட்டாலன்றே நீ கேட்கப்போகிருய்' என்று நினைத்து, "பலமற்றவர்களுக்கு உபமானமாய், எளியவனுய்,

அன்றிக்கே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று அருமந்த அர்த்தத்துக்கு ப்ரதிபத்தாவாகவேணுமென்று, **"स कुलीनः स बुद्धिमान्"** (ஸ குலீந: ஸ $பு_3த்_3தி_4$மாந்) என்று தான் பார்த்தவை $பு_3த_3தி_4$யுக்தங்களாகையாலே, ப்ரதிகூலியாத த்ருணத்தைச் சேதநமாக்குவோம் என்னும் நினைவாலேயாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று த்ருணத்தைச் சேதநமாக்கி ஸ்வஶக்தியையிட்டு, இந்த வைபவத தாலே பீதனுய் மீளுமோ என்கிற நினைவாலேயாகிலுமாம.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று அஜ்ஞனுயிருக்கிற உன்னை, **"तृणमिव लघु मेने"** (த்ருணமிவ $லகு_4$ மேநே) என்று இத்ருணத்தோபாதியாக நினைத்திருப்பது என்று பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, **"हृदये कृत्वा"** (ஹ்ருத$_3$யே க்ருத்வா) என்ருயிற்ருவது. ப்ரதிகூலாசர

---

புல்லைப்போன்றவனை மனிதன' [$மாக_4$ம் 2-50] என்று ராவணனுக்கு உபமானமாக்கிப் புலலைப் போட்டாள் என்றும் கொள்ளலாம்.

6. (புல்லை நடுவிலிட்டு) அருமருந்துபோனற இவ்வர்த்தத்தைக் கேட்பார் ஒருவர் இருக்கவேண்டுமென்று நினைத்து, "தேவி! தேவரீர் எவனைக் கடாக்ஷிக்கிறீரோ அவனே நற்குலத்திலுதித்தோன்; அவனே புத்திசாலி' [வி-பு 1-9-131] என்று தன்னல் கடாக்ஷிக்கப்பட்ட அசேதனப்பொருள்களும புத்தியுடையவையாகுமாகையாலே, ராவணனைப்போலே தீங்கு செய்யாத புல்லை அறிவுடையதாக்கி, இவ்வார்த்தையைக் கேட்கச் செய்வோம் என்கிற நினைவாலே புல்லையிட்டதாகவும் கொள்ளலாம்.

7. (புல்லை நடுவிலிட்டு) புல்லைத் தன் சக்தியாலே அறிவுடையதாக்கி, இந்த சக்திப் பெருமையைக்கண்டு ராவணன் பயந்து மீளவனே என்கிற நினைவாலே புல்லையிட்டதாகவும் கொள்ளலாம்.

8. (புல்லை நடுவிலிட்டு) அறிவற்றவனுயிருககிற உன்னை "புல்லைப்போலே தாழ்ந்த பொருளாக நினைத்தாள்" [ ] என்று புல்லைப்போலே நினைத்திருக்கிறேன் என்று புல்லையிட்டாள் என்றும் கொள்ளலாம்.

ணம் பண்ணுதே இவ்வளவாலே த்ருணத்தைக் குவாலாக நெஞ்சிற்கொண்டு. **"न त्वा तृणत्वं मन्ये"** (ந த்வா த்ருணத்வம் மந்யே), **"न त्वा तृणाय मन्ये"** (ந த்வா த்ருணாய மந்யே) என்னுமாபோலே. 'உன்னை இத்துரும்போபாதியாகவும் நினைத்திரேன் காண்' என்றாகவுமாம்.

அன்றியிலே. (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று அஜ்ஞனாயிருக்கிற நீ. **"ज्ञानेन हीनः पशुभिः समानः"** (ஜ்ஞாநேந ஹீந: பஶுபி$_4$: ஸமாந:) என்று இப்புல்லைத்தின்கிற பசுவன்றோ என்று பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே. (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று **"त्वं नीच शशवत्स्मृतः"** (த்வம நீச ஶஶவத்ஸ்மருத:) என்றும். **"यदन्तरं सिंहशृगालयोर्वने'** (யத$_3$ந்தரம் ஸிம்ஹஸ்ருக$_3$ாலயோர் வநே) என்றும், திர்யக்ஜாதீயனை உனக்கு போக்யம் புல்லன்றோ? **"नाहमौपयिकी भार्या परभार्या सती तव"** (நாஹமௌபயிகீ ப$_4$ார்யா

---

9. (புல்லை மனத்திற்கொண்டு) அந்தரசப்தம் நெஞ்சைக் குறிக்குமாகையாலே, "அந்தரத; க்ருத்வா" என்றதற்கு "நெஞ்சிற் கொண்டு" என்றும் பொருள் கொள்ளலாம். தீங்கு செய்யாத இக் காரணத்தாலேயே புல்லைப் பெரிதாகக் திருவுள்ளத்திலே மதித்து. "உன்னைப் புல்லாகவும் நினைக்கவில்லை" [மஹாபாஷ்யம் ஸு 2-13-17] "உன்னைப் புல்லோடொத்தவனாகவும் கருதேன்" [மஹா பாஷ்யம் ஸு 2-13-17] என்று சொல்வதுபோலே 'உன்னை இத் துரும்புபோலும் நினைத்திருக்கமாட்டேன் காண்!' என்று உணர்த்துவதற்காகப் புல்லையிட்டாள் எனறும் கொள்ளலாம்.

10. (புல்லை நடுவிலிட்டு) அறிவற்றவனை நீ "அறிவற்றவன் பசுவுக்கு ஸமானமானவன்" [நரஸிம்ஹ 16-13] என்று இப்புல்லைத் தின்கிறபசுவன்றோ; இத்தைத் தின்பாயாக என்று புல்லையிட்டதாகவும் கொள்ளலாம்.

11. (புல்லை நடுவிலிட்டு) "நீசனே! நீ முயலைப்போன்றவன்" [ராஸு 22-16] என்றும், "காட்டிலுள்ள சிங்கத்துக்கும் நரிக்குமுள்ள வித்தியாசம் உனக்கும் ராமபிரானுக்குமுண்டு" [ரா-ஆ 47-45] என்றும் மிருகஜாதியைச் சேர்ந்த நீ புல்லையுண்டே இன்

பரப$_1$ார்யா ஸதீ தவ) என்கிற நாளுமோ? என்று போகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று "**विचित्राणि च माल्यानि चन्दनान्यगरूणि च। विविधानि च वासांसि दिव्यान्याभरणानि च॥**" (விசித்ராணி ச மால்யாநி சந்த$_3$நாந்யக$_3$ருணி ச। விவித$_4$ாநி ச வாஸாம்ஸி தி$_3$வ்யாந்யாப$_4$ரணாநி ச॥) என்றும், "**यानि वैश्रवणे सुभ्रु रत्नानि च धनानि च**" (யாநி வைச்ரவணே ஸுப்$_4$ரு ரத்நாநி ச த$_4$நாநி ச) என்றும் நீ அடுக்கினவற்றை இத்ருணத்தோபாதியாகக்காண் நினைத்திருப்பது என்று போகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று "**धारयत्यात्मनो देहं तत्समागमकाङ्क्षिणी**" (த$_4$ாரயத்யாத்மநோ தே$_3$ஹம் தத் ஸமாக$_3$மகாங்க்ஷிணீ) என்று அவர் வருவரோ என்கிற நசையாலே இருந்தேனத்தனை; "**उद्बध्य वेण्युद्ग्रथनेन शीघ्रमहं गमिष्यामि यमस्य मूलं**" (உத்$_3$ப$_3$த்$_4$ய வேண்யுத்$_3$க்$_3$ரத$_2$நேந ஶீக்$_4$ரமஹம்

புறலாம்: "பிறன் மனைவியாயிருக்கும் நான் உனக்கு தகுந்த மனைவியல்லள்" [ரா–ஸு 2-16] என்கிற என்னாலே இன்புறமுடியாது என்று புல்லையிட்டாளாகவுமாம்.

12. (புல்லை நடுவிலேயிட்டு) "விசித்திரமான மாலைகள், சந்தனக்கட்டைகள், அகிற்கட்டைகள், விதவிதமான வஸதிரங்களை, தேவலோகத்தைச் சேர்ந்த ஆபரணங்கள் ஆகியவற்றை அடைவாயாக" [ரா-ஸு 20–33] என்றும் "அழகிய புருவமுடையாளே! குபேரனிடமுள்ள ரத்தினங்களையும் தனங்களையும் நீ அடைவாயாக" [ரா–ஸு 20–33] என்றும், நீ வாயாலே அடுக்கினவைகளை இப்புல்லைப் போலன்றோ நான் நினைத்திருப்பது என்னும் கருத்தாலே புல்லைப் போட்டதாகவும் கொள்ளலாம்.

13. (புல்லை நடுவிலேயிட்டு) "ராமபிரானை அடைய விரும்பித் தன் தேஹத்தை தரிக்கிறாள்" [ரா–ஸு 16-24] என்று ராமபிரான் வருவாரோ என்ற ஆசையாலே உயிர்தரித்திருந்தேன்; "மயிர்முடியைக் கழுத்திலே முடிந்து கொண்டு விரைவிலேயே யமனுலகு செல்

க₃மிஷ்யாமி யமஸ்ய மூலம்) என்றும், **"तृणं शूरस्य जीवितं"** (த்ருணம் ஶூரஸ்ய ஜீவிதம்) என்றும் "த்ருணத்தோபாதி உயிரில் சரக்கில்லைகாண்! முடியக்காண் புகுகிறேன்" என்று போகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று **"लङ्का रत्नौघसङ्कुला। अपराधात्तवैकस्य नचिराद्विनशिष्यति"** (லங்கா ரத்நௌக₄ஸங்குலா। அபராத₄ாத் தவைகஸ்ய நசிராத்₃ விநஶிஷ்யதி ||) என்று, 'உன் குற்றத்தாலே லங்கை நசிக்கப்புகுகிறது; அப்போதைக்கு இத்துராலைத்திரட்டி ஒருகுடிலைப்பண்ணிக் கொள்ளவல்லீ' என்று போகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, த்ருணோலப ந்யாயத்தாலே, ஸாமாந்ய விஶேஷரூபமான கார்யங்களை உபதேசிக்கிறேன் காண் என்றுமாம்.

---

கின்றேன்" [ரா-ஸு 28–17] என்றும், "சூரனுக்கு உயிர் திருணமாகும்" [ ] "என்றும் இப்புல்லைப்போலே உயிர் எனக்கொரு பொருளில்லைகாண்! நான் அழியவன்றோ போகிறேன்" என்று புல்லையிட்டதாகவும் கொள்ளலாம்.

14. (புல்லை நடுவிலிட்டு) "ரத்தின சமூகங்கள் நிறைந்த இலங்கை உன் ஒருவனுடைய தவறாலே விரைவிலேயே அழியப்போகிறது-" [ரா-ஸு–21–12] என்று 'உன் குற்றத்தாலே லங்கை அழியப் போகிறது; அந்த சமயத்தில் இத்துரும்பைக கொண்டு ஒரு குடிசை கட்டிக்கொள்வாயாக' என்று பரிஹாஸ புத்தியாலே புலலை யிட்டாள் என்றும் கொள்ளலாம்.

15. (புல்லை நடுவிலிட்டு) ஒருசிறு திருணமாகத்தோன்றும் ஒரு ஸ்தாவரம், கப்பும் கிளையுமுள்ள 'உலபம்' என்னும் கொடியாகப் படரும் நியாயத்தாலே, த்ருணஸ்தாநீயமான இந்த ச்லோகத்திலே 'என்னிடமிருந்து நெஞ்சை உன் மனைவியரிடம் திருப்பு' என்று ஸாமாந்யமாக நீ செய்யவேண்டிய கார்யத்தைச் சொல்லி, ராகவரை சரணமடைதல் முதலிய விசேஷகார்யங்களை உபலஸ்தாநீயமான மேல் சுலோகங்களில் உபதேசிக்கிறேன் என்று உணர்த்துவதற்காகப் புல்லையிட்டாள் என்றும் கொள்ளலாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, 'நீ உபதேசிப்பது அவர் என் குற்றங்களைப் பொறுக்கிலன்றோ?' என்று நினைக்கிறாளாகக்கருதி. "கடலிலே இத்துரும்பைப் பொகட்டால் இது நடுக்கிடவாதாப்போலே அவர் திருவுள்ளத்திலே கிடவாது காண்! "**न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया**" (**ந ஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா**) என்று பிழையறியாத பெருமாள்காண்!" என்கிற நினைவாலேயாகிலுமாம்.

அன்றியிலே, (தருணமந்தரத: க்ருத்வா) என்று, நடுக்கிடந்த துரும்பை எடுத்துப் பொகட்டு, இப்படியே, "**ईर्ष्यारोषौ बहिष्कृत्य**" (**ஈர்ஷ்யா ரோஷௌ ப₃ஹிஷ்க்ருத்ய**) என்று நெஞ்சில் ரோஷாதிகளைப் பொகட்டு, அவரைப்பற்று என்றாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, "**मित्रमौपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता। वधञ्चानिच्छता घोरं**" (மித்ர

16. (புல்லை நடுவிலிட்டு) "'ராமனோடு நட்புக் கொள்ளவேண்டும்' என்று நீ உபதேசிப்பது ராமபிரான் என் குற்றத்தைப் பொறுத்தாலன்றோ பயன்பெறும்" என்று நினைப்பதாகக் கருதி, "கடலிலே இத்துரும்பைப் போட்டால் அது கடல் நடுவே கிடக்காமல் கரையிலே அடித்துத் தள்ளப்படுவதுபோலே, ராமபிரான் திருவுள்ளத்திலே உன் குற்றம் கிடக்காது; 'நெஞ்சையடக்கினவராகையாலே நூறு குற்றம் செய்தாலும் நினைக்கமாட்டான் ராமன்' [ரா—அ1-4] என்று பிழையறியாத பெருமாளன்றோ அவர்" என்னும் நினைவாலே துரும்பையிட்டதாகவும் கொள்ளலாம்.

17. (புல்லை நடுவிலிருந்து [வெளியே] இட்டு) "அந்தரத: (ஆதாயபஹி:) கருத்வா" [நடுவிலிந்து (எடுத்து வெளியே) போட்டு] என்றபடி. எனக்குமுனக்கும் நடுவில் கிடந்த துரும்பை நான் எடுத்துப் போட்டதுபோல் "பொறுமையையும் கோபத்தையும் வெளித்தள்ளி" [ரா—அ27-7] என்றாப்போலே, தாய் தந்தையாகிய எங்களை அணுகுவதற்கு இடையூறாய் உன் நெஞ்சிலுள்ள காமக்ரோதங்களைத் தள்ளி அவரைப் பற்றுவாயாக என்கிறாள் என்றும் கொள்ளலாம.

18. (புல்லை நடுவிலேயிட்டு) "குடியிருப்பை விரும்பினாயாகில், கோரமான வதத்தை விரும்பாமலிருந்தாயாகில் நீ ராமபிரானை நண்

**மௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்த₂ாநம் பரீப்ஸதா। வத₄ஞ்சாநிச் ச₂தா கே₂ாரம்)** *என்று, 'உன் குடியிருப்பும் உன் உயிரும் வேண்டியிருப்பதாகில் இப்புல்லைக்கவ்வி, அவ்வாண்பிள்ளை காலிலே விழாய்' என்று பொகட்டாளாகவுமாம்.*

*அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) துரும்பைத் தூணாக்கி, அத் தூணிலே ராகவஸிம்ஹத்தை புறப்பட விட்டுப் பொல்லாங்கு நினைத்த நெஞ்சைப் பிளப்பிக்கும் நினைவாலேயாகிலுமாம்.*

*அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று த்ருண லோஷ்டாதிகளை முன்னே முடியெறிந்து ப்ரதிஜ்ஞை பண்ணக்கடவதிறே. அந்த மர்யாதையாலே துரும்பை முன்னே எறிந்து.* **"क्षिप्रं तव स नाथो मे रामः सौमित्रिणा सह। तोयमल्पमिवादित्यः प्राणानादास्यते शरैः"** **(க்ஷிப்ரம் தவ ஸ நாதே₂ா மே ராம: ஸௌமித்ரிணா ஸஹ। தோயமல்பமிவாதி₃த்ய: ப்ராணாநாத₃ாஸ்யதே ஶரை: ||)** *என்று 'உன் உயிரைத் திண்*

---

பனகக் கொள்வது தக்கது'' [ரா–ஸு-21–19] என்று உன் குடியிருப்பும் உன் உயிரும் வேண்டியிருந்தாயாகில், இப்புல்லைக் கவ்வி–(கீழே விழுந்து)–ஆண்பிள்ளையான ராமபிரானை சரணாகதி செய் என்னும் நினைவாலே புல்லையிட்டதாகவும் கொள்ளலாம்.

19. (துரும்பை நடுவிலேயிட்டு) துரும்பிலுமிருப்பானாய், தூணிலுமிருப்பானை ஒருவனுகையாலே, துரும்பைத் தூணாக்கி, அந்தத் தூணிலிருந்து ராகவசிஙகத்தை வரச்செய்து, ''சிந்தையினால் இகழ்ந்த இரணியன் அகல்மார்வங்கீண்ட என் முன்னைக் கோளரியே!'' [திருவாய்2–6–6] என்று இரணியனைப் பிளந்தாப்போலே, தீங்கு நினைத்த நெஞ்சைப் பிளக்கச் செய்ய வேண்டும் என்னும் நினைவாலே துரும்பையிட்டாள் என்றும் கொள்ளலாம்.

20. (புல்லை நடுவிலேயிட்டு) புல், மண்ணாங்கட்டி முதலியவற்றை முன்னேயெறிந்து ப்ரதிஜ்ஞை செய்வது உலகவழக்கன்றோ. அந்த வழக்கத்தையொட்டித் துரும்பை முன்னே எறிந்து, ''சிறு நீரை சூரியன் குடிப்பது போலே, லக்ஷ்மணனோடு கூடிய என் நாதனை ராமபிரான் விரைவிலேயே உன் அம்புகளாலே உயிரை

டார்: கோலிட்டுக் குத்தியெடுத்துப் போகப்புகுகிற படியைப் பார்' என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிருளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று **"न चापि मम हस्तात्त्वां प्राप्तुमर्हति राघवः"** (ந சாபி மம ஹஸ்தாத் த்வாம் ப்ராப்துமர்ஹதி ராக$_4$வ:) என்ற உன்முன்னே, **"अपनेष्यति मां भर्ता त्वत्तः शीघ्रमरिन्दमः"** (அபநேஷ்யதி மாம் ப$_4$ர்த்தா த்வத்த: ஶீக்$_4$ரமரிந்த$_3$ம:) என்று உன்னைத் தலையறுத்துக்கொண்டு போகப் புகுகிறபடி பாராய் என்ருகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று **"विप्रपीडाकरं छेद्यं अङ्गमब्राह्मणस्य तु"** (விப்ரபீடா$_3$கரம் சே$_2$த்$_3$யமங்க$_3$மப்$_3$ராஹ்மணஸ்யது) என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே **"भृङ्गारधारारोद्धुश्च शुक्रस्याक्षि स दक्षिणं। पवित्रस्य शिरोग्रेण क्षोभयामास वामनः"** (ப்$_4$ருங்கா$_3$ரதா$_4$ராரோத்$_3$து$_4$ச்ச ஶுக்ரஸ்யாக்ஷி ஸ த$_3$க்ஷிணம்। பவித்ரஸ்ய ஶிரோக்$_3$ரேண க்ஷோப$_4$யாமாஸ வாமந:॥)

---

வாங்கப்போகிருர்" [ரா-ஸு 21-83] என்று மிகத்தாழ்ந்த உன் உயிரைக்கையாலே தொடமாட்டார்; அம்புகளையிட்டுக் குத்தி யெடுத்துப் போகப் போகிறபடியைப் பார்ப்பாயாக என்று சபதம் செய்வதாகவும் கொள்ளலாம்.

21. (புல்லை நடுவிலே கிள்ளி) "க்ருதி சே$_2$த$_3$நே" என்று தாது வாகையாலே "க்ருத்வா" என்றது "கிள்ளி" என்றபடி. "என் கையி லிருந்து உன்னை ராமபிரான் அடையமாட்டான்" [ரா-ஸு 20-28] என்ற உன் கண்ணெதிரிலே, "எதிரிகளை அடக்கும் என் கணவர் உன்னிடமிருந்து விரைவிலேயே என்னை மீட்டுச் செல்வார்" [ரா-ஸு 21-28] என்று, இத்துரும்பை நான் கிள்ளியது போலே உன்னைத் தலையறுத்து என்னைக் கொண்டுபோகப் போகிறபடியைப் பார்ப்பாயாக என்று உணர்த்துவதாகவும் கொள்ளலாம்,

22. (புல்லை நடுவிலேயிட்டு) "ப்ராஹ்மணனை- (உயர்ந்தவனை)- துன்புறுத்தும் ப்ராஹ்மணனல்லாதானுடைய - (தாழ்ந்தவனுடைய) - அங்கம் அழிக்கத்தக்கது" [ ] என்று சாஸ்த்ரம் சொல்லு கையாலே, "ஜல பாத்திரத்தின் வாயை அடைத்த சுக்கிரனின் வலது கண்ணை பவித்திரத்தின் நுனியாலே அந்த வாமனன் கலக்கினன்"

என்றும், "சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய" என்றும் துரும்பாலே சுக்கிரன் கண்ணைக் கலக்கினாப்போலே, **"यद्यत्पश्यामि ते गात्रं शीतांशुसदृशानने। तस्मिन् तस्मिन् पृथुश्रोणि चक्षुर्मम निबध्यते॥"** (யத்3 யத் பச்யாமி தே கா3த்ரம் ஶீதாம்ஶுஸத்3ருஶாநநே। தஸ்மிந் தஸ்மிந் ப்ருது2ச்ரோணி சக்ஷுர் மம நிப3த்4யதே॥) என்று பரதாரதர்ஶநம் பண்ணின உன் கண்ணைத் துரும்பையிட்டுக் கலக்குகிறேன் என்றாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்த்ரத: க்ருத்வா) என்று, **"स दर्भं संस्तराद्गृह्य"** (ஸ த3ர்ப்ப4ம் ஸம்ஸ்தராத்3 க்3ருஹ்ய) **"हिनस्ति स्म स दक्षिणं"** (ஹிநஸ்தி ஸ்ம ஸ த3க்ஷிணம்) என்று தர்ப்பத்தையிட்டுக் கண்ணறையனான காகத்தைக் கண்ணரையாக்கினாப்போலே, இத்துரும்பையிட்டு உன்கண்ணைக் கலக்குவிக்கிறேன் என்று பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்த்ரத: க்ருத்வா) என்று, நர நாராயணர்களில் நாராயணன், இஷீகத்தைக்கொண்டு டம்3

---

[ ] என்றும், "சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய" [பெரியாழ்திரு 1-8-7] என்றும் துரும்பாலே சுக்கிரன் கண்ணைக் கலக்கினாப்போலே, "சந்திரன் போன்ற திருமுகமுடையவளே! பெரிய இடையை உடையவளே! உன்னுடைய திருமேனியின் எந்த எந்த அவயவங்களைக் காண்கின்றேனோ அந்த அந்த அவயவங்களிலே என் கண் ஈடுபடுகின்றது" [ரா·ஸு20-15] என்று பிறர் மனைவியைக் கண்ட உன் கண்ணை, இத்துரும்பாலே கலக்குகிறேன் என்னும் கருத்தாலே துரும்பையிட்டதாகவும் கொள்ளலாம.

23. (புல்லை நடுவிலிட்டு) "ராமபிரான் படுக்கையிலிருந்து ஒரு தர்ப்பப் புல்லையெடுத்து ப்ரஹ்மாஸ்த்ரமந்திரத்தை உச்சரித்தார்" [ரா-ஸு38-30] "அந்தக் காகாஸுரனின் வலது கண்ணை அந்த ப்ரஹ்மாஸ்த்ரம் அழித்தது" [ரா-ஸு38-37] என்று தர்ப்பப்புல்லாலே கண்ணற்றவனை-இரக்கமற்றவனை-காகாசுரனை அரைக் கண்ணாக்கினதுபோலே, இத்துரும்பையிட்டு ராமபிரான் உன் கண்ணைக் கலக்கும்படி செய்கிறேன் என்று துரும்பையிட்டாளென்றும் கொள்ளலாம்.

பே₄ாத்₃ப₄வனைக் கொன்றாற்போலே இத்துரும்பையிட்டு உன்னைக்கொல்லுகிறேன் என்று பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) என்று, **"सीतायास्तेजसा दग्धां"** (ஸீதாயாஸ் தேஜஸா த₃க்₃த₄ாம்) என்றும், **"न त्वा कुर्मि दशग्रीव भस्म भस्मार्ह तेजसा"** (ந த்வா குர்மி த₃சக்₃ரீவ ப₄ஸ்ம ப₄ஸ்மார்ஹ தேஜஸா) என்றும் என் பாதிவ்ரத்ய தேஜஸ்ஸிலே இத்துராலேயிட்டு மூட்டி உன்னைச்சுடுகிறேன் என்று பொகட்டாளாகவுமாம்.

அன்றியிலே, (த்ருணமந்தரத: க்ருத்வா) "க்ருதி சே₂த₃நே" என்கிற தாதுவிலேயாய்,கிடந்த துரும்பை நடுவே கிள்ளிப்பொகட்டு, இப்படியே **"अङ्गुल्यग्रेण तान् हन्यां"** (**அங்குளயக்₃ரேண தாந் ஹந்யாம்**)என்றும், "பொல்லா அரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்றும் சொல்லுகிறபடியே, 'உன்

---

24. (புல்லை நடுவிலிட்டு) நரநாராயணர்களில் நாராயணன் புல்லைக்கொண்டு, எனக்கு எதிரில்லையென்று திரிந்தடம்போத்பவன் என்னும் அரசனைக் கொன்றப்போலே, இத்துரும்பாலே, உன்னைக் கொல்லுகிறேன் என்று துரும்பைப் போட்டதாகவும் கொள்ளலாம் [இந்த விருத்தாந்தம் மஹாபாரதம் உத்யோகபர்வம் 96-வது அத்யாயத்தில் சிறிது மாறுபாடுகளுடன் காணப்படுகிறது.]

25. (புல்லை நடுவிலிட்டு) "சீதையின் பாதிவ்ரத்ய தேஜஸ்ஸாலே எரிந்துபோன இந்த லங்கையைப் பார்" [ரா-ஸு 51-36] என்றும், "சாம்பலாக்கத்தக்க பத்துத்தலையனே! (ராமபிரானுடைய ஆஜ்ஞையில்லாமையால்) நான் உன்னை என் பதிவிரதாக்னியாலே சாம்பலாக்காமலிருக்கிறேன்" [ரா-ஸு 22-20] என்றும் என் கற்பு நெருப்பிலே இத்துரும்பைப் போட்டு மூட்டி உன்னைச் சுடுகிறேன் என்று துரும்பைப் போட்டாள் என்றுமாம்.

26. (புல்லை நடுவிலே கிள்ளி)"க்ருதி-சே₂த₃நே' என்கிற தாதுவிலிருந்து, "க்ருத்வா" என்னும் பதம் ஏற்பட்டதாகக் கொண்டால், "புல்லை நடுவிலே கிள்ளி" என்று பொருளாகிறது. அருகிலிருந்த துரும்பை நடுவில் கிள்ளிப் போட்டு, இதுபோலவே, "விரல்நுனியாலே அவர்களை ஒழிப்பேன்" [ரா-யு18-24] என்றும், "பொல்லா

*தலையைக் கிள்ளிப் போக்குவிக்கிறேன்' என்று பொகட்டாளாகவுமாம்.*

*ஆக, இப்படி துரும்பைப் பொகட்டு மேல் செய்ததென்னென்னில்: (ப்ரதயுவாச) ப்ரதிவசநம் பண்ணினாள். (ப்ரத்யுவாச) கேட்ட வார்த்தைக்கு உத்தரம் சொன்னாள்; அவன் சொன்னவற்றுக்கிசைந்து ஓமென்றாலும் உத்தரமாமிறே. அப்படியோவென்னில்: (ப்ரத்யுவாச) ப்ரத்யாக்$_2$யாநம் பண்ணினாள். மறுவார்த்தை. அதாவது* **"नाहमौपयिकी भार्या"** **(நாஹமௌபயிகீ ப$_4$ார்யா)***என்றும்,* **"न मां प्रार्थयितुं युक्तं सुसिद्धिमिव पापकृत्। अकार्यं न मया कार्यं"** **(ந மாம ப்ரார்த்த$_2$யிதும் யுக்தம் ஸுஸித்$_4$தி$_3$மிவ பாபக்ருத்। அகார்யம் ந மயா கார்யம்)** *என்றும் ப்ரதிஷேதித்துச் சொன்னாள். (ப்ரத்யுவாச) நிஷேதித்தவளவன்றிக்கே, ப்ரதிகூலமாகவே சொன்னாள். அதாவது:—* **"प्राणानादास्यते शरैः"** **(ப்ராணநாத$_3$ாஸ்யதே ஶரை:)**

---

*வரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" [திருப்பாவை13] என்றும் சொல்லுகிறபடியே உன் தலையைக் கிள்ளி உயிரைப் போக்குவிக்கிறேன் என்னும் கருத்தாலே துரும்பைப் போட்டதாகவும் கொள்ளலாம்.*

*ஆக இப்படித் துரும்பை நடுவிலிட்டு மேலே என்ன செய்தாள்? எனில்: (பதில் சொன்னாள்) பதில் வார்த்தை சொன்னாள். (பதில் சொன்னாள்) அவன் சொல்லக் கேட்ட வார்த்தைகளுக்கு பதிலுரைத்தாள். அவன் சொன்ன வார்த்தைகளை அங்கீகரித்து 'அப்படியே' என்றாலும் அதுவும் பதில்சொன்னதாகத்தானே ஆகும். அப்படியோ இவள் 'பதில் சொன்னது? என்னில்: (மறுப்புரைததாள்) 'ப்ரதி' என்னும் சப்தஸ்வாரஸ்யத்தாலே மறுப்புரைத்தாள் என்று பொருள்படுகிறது. அதாவது:-' நீ என் மனைவியாகவேணும்' என்று அவன் சொனனதற்கு "நான் உனக்கு மனைவியாகத்தகாதவள்" [ரா—ஸு 21–6] என்றும், "பாவியானவன் நல்ல ஸித்தியை அடைய விரும்புவதுபோல, என்னை அடையவிரும்புவது தகாது. என்னாலும் தீச்செயல் செய்யலாகாது" [ரா—ஸு 21-4] என்றும் மறுத்துச் சொன்னாள் என்கை. (பிரதிகூலமாகச் சொன்னாள்) 'ப்ரதி' என்னும் சப்தம் ப்ராதிகூல்யத்தைச் சொல்லுகிறது. மறுப்புரைத்ததோடன்றியில், அவனுக்கு நெஞ்செரியும்படி பிரதிகூலமாகச் சொன்னான்.*

என்றும், **"राक्षसेन्द्रमहासर्पान् स रामगरुडो महान्। उद्धरिष्यति वेगेन"** **(ராக்ஷஸேந்த்$_3$ர மஹாஸர்ப்பாந் ஸ ராமக$_3$ருடோ$_3$ மஹாந்। உத்$_3$த$_4$ரிஷ்யதி வேகே$_3$ந)** *என்றும் அவனுக்குப் பருஷமாகவே சொன்னாள். (உவாச) "வசபரிபாஷணே" இறே. ஒரு வார்த்தை சொன்னாளாகையன்றிக்கே (பரித:) பரக்கவிட்டு வார்த்தை சொன்னாள். அதாவது-* **"साधु धर्ममवेक्षस्व साधु साधुव्रतं चर"** **(ஸாது$_4$ த$_4$ர்மமவேக்ஷஸ்வ ஸாது$_4$ ஸாது$_4$வ்ரதம் சர)** *என்றும்,* **"यथा तव तथान्येषां दारा रक्ष्या निशाचर"** **(யதா$_2$ தவ ததா$_2$ந்யேஷாம் தா$_3$ரா ரக்ஷ்யா நிசாசர)** *என்றும் பொறுமை சொல்லியும்* **एवं त्वां पापकर्माणं वक्ष्यन्ति निकृता जनाः। दिष्ट्यैतद्व्यसनं प्राप्तो रौद्र इत्येव हर्षिताः॥" (ஏவம் த்வாம் பாபகர்மாணம் வக்ஷ்யந்தி நிக்ருதா ஜநா:। தி$_3$ஷ்ட்யைதத் வ்யஸநம் ப்ராப்தோ ரௌத்$_3$ர இத்யேவ ஹர்ஷிதா:)** *என்று ஹ்ருதயபே$_4$த$_3$ம் பிறக்கும்படி சொல்லியும்,* **"माञ्चास्मै प्रयतो भूत्वा निर्यातयितुमर्हसि"** *(மாஞ்சாஸ்மை ப்ரயதோ*

---

*அதாவது:-"ராமதிவாகரன் உன் உயிரை அம்புக்கிரணங்களாலே குடிக்கப் போகிறார்" [ரா-ஸு 21-33] என்றும், "ராமபிரானாகிய பெரிய கருடபக்ஷி ராக்ஷஸச்ரேஷ்டர்களான பெரும்பாம்புகளை, வைநதேயனான கருடன் பாம்புகளைத் தூக்கிச்செல்வது போலே விரைவில் தூக்கிச் செலலப் போகிறார்" [ரா–ஸு 21-27] என்று அவனுக்குப் பொறுக்க வொண்ணாதபடி வார்த்தை சொன்னாள். (உவாச-பரக்கச் சொன்னாள்) "வச பரிபாஷணே" என்று தாதுவாகையாலே, "உவாச" என்று 'பரிப$_4$ாஷணம செய்தாள்' என்கிறது; பரக்க வார்த்தை சொன்னாள் என்றபடி. ஒருவார்த்தை இரண்டு வார்த்தை சொல்லுகையன்றிக்கே, விஸ்தாரமாக வார்த்தை சொன்னாள் எனகை. அதாவது:- "நல்லோர்களின் தருமத்தை கவனிப்பாயாக; நல்விரதங்களை நன்றாக அநுஷ்டிப்பாயாக. அரக்கனே! உன் மனைவியரைப்போலவே பிறர் மனைவியரும் ரக்ஷிக்கத்தக்கவர்களன்றோ" [ரா-ஸு 21-7] என்று 'ஸாமம்' என்னும் உபாயத்தைப் பற்றிநின்று பொறுமையான வார்த்தைகளைச்சொல்லியும், "உன்னால் வஞ்சிக்கப்பட்ட ஜனங்கள், தெய்வச்செயலாலே இக்கொடியவன் இத்துன்பத்தை அடைந்தான் என்று ஆநந்தமடைந்து, உன்னை இப்படியே பாவியென்று சொல்லப் போகிறார்கள்" [ரா-ஸு 21-14] என்று மனமாறுபாடு பிறக்கும்படி பேதவார்த்தைகளைச் சொல்லியும், "இந்திரியங்களை*

பூ₄த்வா நிர்யாதயிதுமர்ஹஸி) "**विदितः सहि धर्मज्ञः शरणागतवत्सलः। तेन मैत्री भवतु**" (விதி₃த: ஸஹி த₄ர்மஜ்ஞ: ஶரணாக₃தவத்ஸல:। தேநமைத்ரீ ப₄வது) என்று ஜ்ஞாநதானம் பண்ணியும், "**अन्यथा त्वं हि कुर्वाणो वधं प्राप्स्यसि**" (அந்யதா₂ த்வம் ஹி குர்வாணோ வத₄ம் ப்ராப்ஸ்யஸி) என்றும். "**प्राणानादास्यते शरैः**" (ப்ராணா நாதா₃ஸ்யதே ஶரை:) என்றும் தண்டம் சொல்லியும். இப்புடைகளிலே ஸாமபேத தாந தண்டரூபமான சதுருபாயங்களையும் சொன்னாளே.

இப்படிக்கன்றி. சொல்லுகிறபோது முகவிகாஸமிருந்தபடியென்னென்னில்: (ஶுசிஸ்மிதா) எதிரி கனவியனாகிலிறே ஸம்ரம்ப₄ம் பண்ணவேண்டுவது; 'அநீதியாலே தன்னடையே நசிக்கப்புகுகிற இவனிறே இப்படி சொல்லுகிறான்' என்று சிரித்தாள். (ஶுசிஸ்மிதா) "**हसन्निव नृपो हन्ति**" (ஹஸந்நிவ ந்ருபோ ஹந்தி) என்று ராஜாக்கள் குற்றவாளரை வெட்டி வைக்கச்சொல்லும்போதும் சிரித்திறே சொல்லுவது. இவள்

---

அடக்கியவனாய், என்னை ராமபிரானிடம் சேர்க்கக்கடவாய்" [ரா-ஸு 21-22] "அந்த ராமபிரான் தருமமறிந்தவர்; சரணாகதரிடம் வாத்ஸல்யமுடையவர்; அவரோடு உனக்கு நட்புண்டாகட்டும்' [ரா-ஸு 21-20] என்று ஞானதானம் செய்தும், "வேறுவிதமாகச் செய்தாயாகில் மரணமடைவாய்" [ரா-ஸு 21-23] என்றும், "உன் உயிரை அம்புகளாலே எடுககப் போகிறார்" [ரா-ஸு 21-33] என்று தண்ட வார்த்தைகளைச் சொல்லியும், இம்மாதிரி ஸாமபேத தாந தண்டமெனும் நாலு உபாயங்களையும் பின்பற்றி வார்த்தை சொன்னாளன்றோ.

இத்தோடலலாமல், சொல்லுகிறபோது முகமலர்த்தியிருந்தபடியென்? என்னில். 1. (பரிசுத்தப் புன்னகையுடையாள்) எதிரி தருமம், வீரியம், பலம் முதலானவற்றில் கனத்தவனாக இருந்தாலன்றோ கோபம் முதலானவற்றைக் காட்டவேண்டியது. அப்படியல்லாதவனாகையாலே, 'தன் அநியாயத்தாலே தானாகவே அழியப்போகிற க்ஷுத்ரனன்றோ இப்படிப் பேசுகிறான்' என்று சிரித்தாள். 2- (பரிசுத்தப் புன்னகையுடையாள) "சிரித்துக்கொண்டிருந்தே அரசன் கொல்லுகிறான்" [ ] என்று அரசர்கள் குற்றவாளிகளை

தானும், **"अभिज्ञा राजधर्माणां"** (அபி₄ஜ்ஞா ராஜத₄ர்மாணும்)என்று ராஜமர்யாதை அறியுமவளாய், ராஜபுத்ரியுமாய், ராஜமஹிஷியுமாயிறேயிருப்பது. 'அவன் தருகிறேனென்ற தநதாந்யரத்நாதிகளைக்கேட்டு ஸ்த்ரீசாபல்யத்தாலே உகந்து சிரித்தாளோ?' என்னில்: (ஶுசிஸ்மிதா) அர்த்த₂சாபலநிப₃ந்த₄நமல்ல; வைராக்ய நிபந்தனமென்கிற ப₄ாவசுத்தி சிரிப்பின் படியிலே காணலாயிருந்தது. (ஶுசிஸ்மிதா) **"आश्रमं तु तयोः शून्यं प्रविश्य नरसिंहयोः। गोचरं गतयोर्भ्रात्रोरपनीता त्वयाधम॥"** **(ஆச்ரமம் து தயோ: ஶூந்யம் ப்ரவிச்ய நரஸிம்ஹயோ:। கோ₃சரம் க₃தயோர் ப்₄ராத்ரோரபநீதா த்வயாத₄ம॥)** என்று அவ்வாண்பிள்ளை முன்னேறித் தோற்பித்து என்னைச் சிறைகோலமாட்டாத அபலன்தான் கிடீர். **"न रामस्तपसा देवि न बलेन न विक्रमैः। न धनेन मया तुल्यः"** **(ந ராமஸ் தபஸா தே₃வி ந ப₃லேந ந விக்ரமை:। ந த₄நேந மயா துல்ய:)** என்று பெருமாளைத்தரமல்லரென்கிறுன்! என்று சிரித்தாள். (ஶுசிஸ்மிதா) **"व्यं**

---

வெட்டி வைக்கச்சொல்லும்போதும் சிரித்துக்கொண்டல்லவோ சொல்லுவது. இப்பிராட்டியும் "ராஜதர்மமறிந்த சீதை" [ரா-அ 26-4] என்று ராஜதர்மங்களில் வரம்பறியுமவளாய், ஜனகராஜ புத்ரியுமாய், ராஜமஹிஷியுமாயன்றோ இருப்பது. 'ராவணன் தருகிறேனென்ற தநம், தான்யம், ரத்தினம முதலானவைகளைக்கேட்டு ஸ்திரீகளுக்கு இயற்கையாகவே அவற்றிலுள்ள ஆசையாலே பிரியத்துடன் சிரித்தாளோ?' என்னில் 3. (பரிசுத்தமான புன்னகையுடையாள்) 'இப்புன்னகை பொருளாசையால் ஏற்பட்டதன்று; வைராக்யத்தால் ஏற்பட்ட பரிசுத்தமான புன்னகையிது' என்பது சிரிப்பின் தன்மையிலே காணும்படியிருந்தது, 4. (பரிசுத்தமான புன்னகையுடையாள்) "அதமனே! நரச்ரேஷ்டர்களான அவ்விரு ஸஹோதரரும் வெகு தூரம் சென்றிருக்கையில், அவர்களில்லாத ஆச்ரமத்திலிருந்து உன்னால நான் அழைத்து வரப்பட்டேன்" [ரா-ஸு 21-30] என்று, அவ்வீரர்கள் முன் அவர்களை வென்று என்னைக் காவலில் வைக்க மாட்டாத பலமற்றவனன்றோ "தவத்தாலும், பலத்தாலும், வீரத்தாலும், தனத்தாலும் ராமன் என்னை யொத்தவனன்று' [ரா-ஸு 20-33] என்று ராமபிரானை பலம் முதலானவை இல்லாதவர் என்கிறுன் என்று நினைத்துச் சிரித்தாள். 5. (பரிசுத்தமான புன்னகை

**प्राप्स्यसि**" (வத₄ம் ப்ராப்ஸ்யஸி) என்று கழுகும் பருந்தும் கவ்வக்கிடக்கிறவன்தான் கிடீர் "**शङ्के जीवति वा न वा**" (ஶங்கே ஜீவதி வா ந வா) என்று பெருமாள் திருமேனிக்குத் தீங்கு சொல்லுகிறுன் என்று சிரித்தாள். (ஶுசிஸ்மிதா) "**विभीषण विधेयं हि लङ्कैश्वर्यमिदं कृतम्**" (விபீ₄ஷண விதே₄யம் ஹி லங்கைச்வர்யமித₃ம் க்ருதம்) "**श्रीमता राजराजेन लङ्कायामभिषेचितः**" (ஶ்ரீமதா ராஜராஜேந லங்காயாமபி₄ஷேசித:) என்று விபீஷணனுக்குப் பெருமாள் கொடுத்த ஐச்வர்யத்தையிறே. "**ऋद्धिं ममानुपश्य त्वं श्रियं भद्रे**" (ருத்₃தி₄ம் மமாநுபச்ய த்வம் ஶ்ரியம் ப₄த்₃ரே)என்று தன்னதாக ப்ரமித்துப் பிதற்றுகிறுன் என்று சிரித்தாளாகவுமாம். (ஶுசிஸ்மிதா) "**उपधाय भुजं तस्य लोकनाथस्य सत्कृतं। कथं नामोपधास्यामि**"(உபதா₄ய பு₄ஜம் தஸ்ய லோகநாத₂ஸ்ய ஸதக்ருதம்| கத₂ம் நாமோபதா₄ஸ்யாமி) என்றிருக்கிற என்னையிறே இப்பையல் "**मां च भुङ्क्ष्व**" (மாஞ்ச பு₄ங்க்ஷ்வ) என்று பிதற்றுதல் என்று சிரித்தாளாகவுமாம். (ஶுசிஸ்மிதா) "**कुशली यदि**

---

யுடையாள்) ''மரணமடைவாய்'' [ரா·ஸு 21-23] என்கிறபடியே கழுகும் பருந்தும் கவ்வும்படியாகக் கிடக்கப்போகிறவனன்றோ "ராமன் உயிரோடிருக்கிருனே இலலேயோ'' [ரா-ஸு 20-26] என்று ராமபிரானுடைய திருமேனிக்குத் தீங்கு சொல்லுகிறுன என்று சிரித்தாள். 6. (பரிசுத்தமான புனனகையுடையாள்) ''இந்த இலங்கைச் செல்வம் விபீஷணனுக்கு உரித்தானதாகச் செய்யப்பட்டது'' [ரா-யு 116-13] ''திருவுடைய அரசர்க்கரசனுன ராமபிரானுலே இலங்கையரசுக்கு முடிசூட்டப்பட்ட விபீஷணன'' [ரா-யு 28-27] என்று ராமபிரானுல் விபீஷணனுக்குக் கொடுக்கப்பட்ட செல்வத்தை ''மங்களமானவளே! என் ஐச்வர்ய தனங்களையும் புகழையும் காண்பாயாக'' [ரா–ஸு 20-25] என்று தன்னுடையதாக மயங்கிப் பிதற்றுகிறுனன்றோ என்று சிரித்ததாகவும் கொள்ளலாம். 7. (பரிசுத்தப் புன்னகையுடையாள்) ''ஸர்வலோக நாதரான அவருடைய ஸர்வலோக பூஜிதமான திருத்தோளிலே சாய்ந்த நான் வேறொருவனுடைய தோளிலேசாய்வேனே?' [ரா-ஸு 21-16]என்றிருக்கிறஎன்னையன்றோ இந்தப் பையல் ''என்னையும் அனுபவிப்பாயாக'' [ரா-ஸு 20.33] என்று பிதற்றுகிறுன் என்று நினைத்துச் சிரித்ததாகவும் கொள்ளலாம். 8. (பரிசுத்தப் புன்னகையுடையாள்) ''காகுத்தன் க்ஷேமமா

**काकुत्स्थः किन्नु सागरमेखलां। महीं दहति"** (குபலீ யதி₃ காகுத்ஸ்த₂: கிந்நு(ந) ஸாக₃ரமேக₂லாம் । மஹீம் த₃ஹதி) என்று பெருமாள் குறியசங்காதேயிருக்க, நானே இவ்விருப்பு இருப்பேன் என்று, **"ततः सा ह्रीमती"** (தத: ஸா ஹ்ரீமதீ) போலே வ்ரீளா ஸ்மிதம் பண்ணினளாகவுமாம். அன்றியிலே, (ஸுசிஸ்மிதா) என்று, **"ततो मलिनसंवीतां"** (ததோ மலிநஸம்வீதாம்) என்றும் "மாசுடையுடம்பொடு தலையுலறி வாய்ப்புறம் வெளுத்து" என்றும் விரஹவிஷண்ணையாய் இலையமுது செய்யாமை யாலே, ஸ்மிதம் பண்ணினபோது வெளுத்த திருமுத் தொளியை உடையளாயிருந்தாள் என்றுமாம். (ஸுசிஸ்மிதா) என்று பிராட்டியை அபஹரித்தானென்று கேட்டபோது, **"कृतं कार्यमिति श्रीमान् व्याजहार पितामहः"** (க்ருதம் கார்யமிதி ஸ்ரீமாந் வ்யாஜஹார பிதாமஹ:) என்று, 'இனி ராவணன் பட்டான்' என்று ப்ரஹ்மா ப்ரியப்பட்டாற்போலே, இவளும் இவன் அபராதம் பண்ணினபோதே பட்டானென்று ப்ரீதிஸ்மிதம் பண்ணினளாகவுமாம்.

---

யிருந்தாராகில் கடல் சூழ்ந்த இவ்வுலகத்தையே ஏன் கோபத்தால் எரிக்கவில்லை?" [ரா-ஸு36-13] என்று ராமபிரான் க்ஷேமமாயிருக்க, நானே இச்சிறையிலே இந்நிலையிலிருப்பது என்று, "வெட்கமுற் றிருந்த அப்பிராட்டியானவள், நாயகனின் செய்திகேட்டு இன்புற் றுள்" [ரா-ஸு 36-6] என்றவிடத்திற்போலே புன்சிரிப்புச் சிரித் தாள் என்றும் கொள்ளலாம். 9. (வெளுத்த புன்னகையுடையாள) "ஜீர்ணமான வஸ்திரத்தை தரித்தவளான பிராட்டியைத் திருவடி பார்த்தான்" [ரா-ஸு15-18] என்றும், "மாசுடையுடம்பொடு தலை யுலறி வாய்ப்புறம் வெளுத்து" [நாச்-திரு1-8] என்றும் பிரிவாற்று மையால் துன்புற்று, வெற்றிலை அமுது செய்யாமையாலே புன்சிரிப் புச் சிரித்தபோது வெளுத்த திருப்பற்களின் ஒளியை உடையவளா யிருந்தாள் என்றும் கொள்ளலாம். 'சுசி' என்று பற்களின் வெண்மை யைக் காட்டுகிறது. 10. அன்றிக்கே, (பரிசுத்தப் புன்னகையாள்) என்று, பிராட்டியை ராவணன் அபஹரித்தான் என்று கேட்டபோது "பிரீதிச் செல்வம் நிறையப் பெற்ற பிரமன் 'நம் காரியம் முடிந்தது' என்று உரைத்தான்" [ரா-ஆ52-13] என்று, 'இனி ராவணன் அழிந்

இப்படி ஸ்மிதம்பண்ணிச் சொன்ன பாசுரமென்னென்னில்: (நிவர்த்தயேத்யாதி) 'அக்ருத்யங்களைத் தவிர்த்து க்ருத்யங்களை அநுஷ்டி' என்கிறாள். (நிவர்த்தய மந:) மநோவ்யாபாரம் ஆத்மாதீநமன்றோ? ஆனபின்பு நெஞ்சை மீளென்கிறாள். (மநோ நிவர்த்தய) நல்ல குதிரையாட்கள் குதிரையைக் கசைதாங்குமாபோலே, மந:ப்ரவாஹத்தை மீட்கப்பார். (மநோ நிவர்த்தய) **"मनो हि हेतुः सर्वेषामिन्द्रियाणां प्रवर्तने"** (மநோ **ஹி ஹேது: ஸர்வேஷாமிந்த்ரியாணாம் ப்ரவர்த்தநே**) என்கிறபடியே கொத்துமுதலியான மநஸ்ஸை மீட்கவே பாஹ்யேந்த்ரியங்களும் மீளுங்காண். (நிவர்த்தய மந:) உன் நெஞ்சை மீட்டு ப்ராணன்களை மீட்டுக் கொள்ளாய்.

---

தான்' என்று நான்முகன் பிரீதியடைந்தது போலே, இவளும் 'இவ் வார்த்தைகளைச் சொல்லி நம்மிடம் அபராதம் செய்தபோதே இவன் ஒழிந்தான' என்று பிரீதியினாலே புன் சிரிப்புச் சிரிததாள் என்றும் கொளளலாம்.

இப்படிப் புன்சிரிப்புச் சிரித்துச்சொன்ன வார்த்தை என்னென்னில்; (என்னிடமிருந்து மனத்தைத் திருப்பு; உன் மனைவியிரிடம் நெஞ்சு பிரீதியடையட்டும்) செய்யத்தகாததை விட்டு, செய்யவேண்டியதை அனுஷ்டிப்பாயாக என்கிறாள். (நெஞ்சை மீட்பாயாக) நெஞ்சின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமான செயல்கள் ஆத்மாவுக்கு அதீனமன்றோ? ஆகையாலே நீயே நெஞ்சை மீட்பாயாக என்கிறாள். (நெஞ்சை மீட்பாயாக) நல்ல குதிரைக் காசாரிகள், குதிரையைச் சாட்டையால் அடித்துத் திருப்புவதுபோலே, மனக் குதிரையை மீட்கப்பார். (நெஞ்சை மீட்பாயாக) "எல்லா இந்திரியங்களின் ப்ரவ்ருத்தி (நிவ்ருத்தி) களுக்கு மனமே காரணமாகிறது" [ ] என்கிறபடியே இந்திரியஸமூஹத்துக்கு ஸ்வாமியான நெஞ்சை மீட்டவுடன வெளியிந்திரியங்களும் மீளுமன்றோ. "மந: ப்ரக்₃ரஹமேவ ச இந்த்₃ரியாணி ஹயாநாஹு:" [கட 1-3] [மனத்தைக் கடிவாளமாகவும் இந்திரியங்களைக் குதிரைகளாகவும் சொல்லுகிறார்கள்] என்று இந்திரியக் குதிரைகளைத் திருப்பும் கடிவாளமாகச் சொல்லப்பட்டதன்றோ மனம். (நெஞ்சைத் திருப்பு) உன் நெஞ்சை மீட்டால்தான், 'ப்ராணநாத₃₂ாஸ்யதே சரை:" [ரா-ஸு 21-33] [ராமபிரான் உன் பிராணனை அம்புகளாலே எடுக்கப்போகிறார்] என்று உன் உயிரை ராமபாணத்துக்கு இரையாக்காமல் மீட்கலாம். அதைச்செய்,

(நிவர்த்தய மந:) "**आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः**" (ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்து₄ராத்மைவ ரிபுராத்மந:) என்று நித்ய ஶத்ருவை ஜயிக்கப்பாராய். (மநோ நிவர்த்தய) நாட்டில் வேகவத்பதார்த்தங்களுக்கு மநோஜவமென்று த்ருஷ்டாந்தம் சொல்லலாம்படிக்குக் கடுவிசையாய் ஆயிற்று இருப்பது. கைகழிந்தால் மீட்கவொண்ணாது. கரணாதி₄பனை நீ மீட்கப் பார். "**मम त्वश्वा निवृत्तस्य न प्रावर्तन्त वर्त्मनि**" (மம த்வச்வா நிவ்ருத்தஸ்ய ந ப்ராவர்த்தந்தவர்த்மநி) என்று அச்வ ஹ்ருதயமறியும் ஸுமந்த்ரன் தப்பச்சொன்னானிறே.

கிடக்கிற ராஜகார்ய மேடுபள்ளமும் மந:ப்ரவ்ருத்தியைத்தவிரப்போகுமோ? என்ன; (மத்தோ நிவர்த்தய) புறம்புள்ளவற்றைத்தவிரச் சொன்னேனோ? என் பக்கல் நின்றும் மீள். (மத்தோ நிவர்த்தய) "**पञ्चास्यामिव पन्नगीं**" (பஞ்சாஸ்

---

(நெஞ்சைத் திருப்பு) "(அநுகூலமான) நெஞ்சே ஆத்மாவுக்கு உறவினன்; (பிரதிகூலமான) நெஞ்சே ஆத்மாவுக்கு எதிரி" [கீதை 6-5] என்று என்றும் சத்துருவாயிருக்கும் உன் நெஞ்சை ஜயிக்கப் பார்ப்பாயாக. (நெஞ்சைத் திருப்பு) உலகத்தில் அதிகவேகமுள்ள பொருள்களுக்கு மநோவேகம் என்று உபமானம் சொல்லலாம்படி மிகவேகமுடைதாயிருக்கும் நெஞ்சு. கையைவிட்டுப்போனால் மீட்க முடியாது. "கரணாதி₄பாதி₄ப:" [ச்வே-6] [இந்திரியங்களுக்கு அதிபனை ஜீவனுக்கு ஸ்வாமி பரமபுருஷன்] என்கிறபடியே இந்திரியங்களுக்கு ஸ்வாமியான நீ நெஞ்சைத்திருப்பப்பார். "ராமனை விட்டுத் திரும்பிவரும் என்னுடைய குதிரைகள் வழியில் செல்லவில்லை" ரா—அ 59–1] என்று குதிரையின் கருத்தறியும் ஸுமந்திரன் தவறாகச் சொன்னானன்றோ,

ராஜ்யகார்யங்களாகிற மேடுபள்ளம் நிறைந்த பாதையிலே திரியும் மனக்குதிரையைத் திரியாமலிருக்கச் செய்யமுடியுமோ? என்ன; (என்னிடமிருந்து திருப்பு) மற்ற விஷயங்களாகிற நேர்ப்பாதையிலே திரியாமலிருக்கச் சொன்னேனோ? அவற்றில் இஷ்டப்படி மனக்குதிரையைத் திரியவிடு. மரணப்பாதையான என்னிடத்தில் திரியாமல் திருப்பு. (என்னிடமிருந்து திருப்பு) "ஐந்து தலை நாகம்போன்றவளான பிராட்டியை" [ரா-ஸு 51-23] என்று விஷங்கொண்ட

யாமிவ பந்நகீ₃ம்) என்று விஷவத் பதார்த்தங்கள் போலே உனக்கு விநாஶஹேதுவான என்பக்கல் நின்றும் மீள். (மத்தோ நிவர்த்தய) "नयन्ति निकृतिप्रज्ञं परदाराः पराभवम्" (நயந்தி நிக்ருதிப்ரஜ்ஞம் பரதா₃ரா: பராப₄வம்)என்று எப்படியும் பரிப₄வஶீலைகளாயாயிற்று பரதாரமிருப்பது. ஆனபின்பு, என்பக்கல் நின்றும் மடைமாறுய்.

உன் பக்கல் நின்றும் மாறினுல் மநஸ்ஸு நிர்விஷய மாயிருக்குமோ என்னில்: (ஸ்வஜநே ப்ரீயதாம்) வகுத்த விஷயத்திலே உகக்கும்படி பாராய். (ஸ்வஜநே ப்ரீயதாம்) "स्वेषु दारेषु रतिं नोपलभाम्यहम्" (ஸ்வேஷு தா₃ரேஷு ரதிம் நோபலப₄ாம்யஹம்)என்கிற நினைவை மாறி "स्वेषु दारेषु रम्यताम्" (ஸ்வேஷு தா₃ரேஷு ரம்யதாம்) என்கிறபடியே. அக்நி ஸாக்ஷிகமாகக் கையைப்பிடித்த த₄ர்மதா₃ரங்களை ரமிக்கப் பார். (ஸ்வஜநே ப்ரீயதாம்) விஜாதீயரான மனிதரை விட்டு, ஸஜாதீயர்களான ராக்ஷஸஸ்த்ரீகளோடே புஜிக்கப்பார். "ப்ரீயதாம்" என்று ராக₃ப்ராப்தமாக வருமத்தை. பூ₃லத்

---

பாம்பு போலே உன் அழிவுக்குக் காரணமான என்னிடமிருந்து நெஞ்சைத்திருப்பு. (என்னிடமிருந்து திருப்பு) "அறிவுகெட்டவனை அயலான் மனைவியர் அவமானமடையச் செய்கின்றனர்" [ரா-ஸு 21-9] என்று எல்லாவிதத்திலும் தாழ்வடையச் செய்பவர்களா யன்றோ பிறர்மனைவியரிருப்பது. ஆகையால் என்னிடம் பாயும் உன் மந:ப்ரவாஹத்தை மடையடைத்துவிடு.

உன்னிடத்தில் செல்லாதபடி மந:ப்ரவாஹத்தை மடையடைத் தால், அது அநுப₄ாவ்ய விஷயமில்லாமல் இருக்காதே; இதற்கென் செய்வது என்னில்; (உன் மனைவியரிடம் பிரீதியடையட்டும்) உனக் கென ஏற்பட்ட உன் மனைவியரிடம் இன்புறப் பார்ப்பாயாக. "உன் னைப் பார்த்தபின்பு என் மனைவியரிடம் நான் இன்பம் காணவில்லை" [ரா-ஸு 20-30]என்கிற நினைவை மாற்றிக்கொண்டு, "உன் மனைவி யரிடம் இன்புறுவாயாக' [ரா-ஸு 21-8] என்கிறபடியே அக்னியின் முன்னிலையில் கைப்பிடித்த உன் தர்மபத்தினிகளிடம் இன்புறப்பார். (உன் மனைவியரிடம் பிரீதியடையட்டும்) வேறு ஜாதியைச் சேர்ந்த மனிதரை விட்டு, உன் ஜாதியைச்சேர்ந்த ராக்ஷஸ ஸ்திரீகளோடே

திலேஸ்நேஹிப்பிக்கலாமோ? என்னில்: (ப்ரீயதாம்) என்று ப்ரஸாதிக்கிருள். (மந: ப்ரீயதாம்) நீ ப்ரியப்பட்டாயாகில் மநஸ்ஸு தான் ப்ரியப்படுவதாக. (ஸ்வஜநே) என்று விஷய ஸப்தமியாகையன்றிக்கே. அதி₄கரணஸப்தமியாக்கி, ஸ்வ ஜநத்தில் வர்த்திக்கிற மநஸ்ஸு ப்ரியப்படுவதாக என்று பொருளாம். அதாவது:– **"तास्त्वां परिचरिष्यन्ति" (தாஸ்த்வாம் பரிசரிஷ்யந்தி)** என்றும், **"यावत्यो मम सर्वासामैश्वर्यं कुरु जानकि" (யாவத்யோ மம ஸர்வாஸாமைச்வர்யம் குரு ஜாநகி)** என்றும். என்னை அவர்கள் ஸேவிக்கும்படி சொன்னபடியாலே. அவர் கள் வெறுத்தாயிற்று இருப்பது. அது தவிர்ந்து உன்னளவிலே அவர்கள் நெஞ்சு குளிரும்படி பண்ணு என்றுமாம். (ஸ்வஜநே மந: ப்ரீயதாம்)ஸ்வஜநத்தில் மநஸ்ஸு ப்ரியப்படுவ

---

அநுபவிக்கப்பார். ஸ்திரீ புருஷர்களுக்குள் பரஸ்பரம் ஆசையினுலே ஏற்படும் இன்பத்தை "பிரீதியடையட்டும்' என்று பலாத்கரித்து உண்டாககமுடியுமோ? என்னில்: (பிரீதியடையட்டும்) என்று அநுக்ரஹிக்கிருள்; ஆஜ்ஞையிடுகிறளல்லள், 'நான் பிரீதியடைந் தாலும் என் நெஞ்சு பிரீதியடைய மாட்டேனென்கிறதே' என்னில்- (மனம் பிரீதியடையட்டும்) நீ பிரீதியடைந்தாயாகில் உன் மனமும் பிரீதியடைவதாருக என்று அநுக்ரஹிக்கிருள். 'ஸ்வஜநே' என்ற விடத்தில் ஸப்தமியை –(ஏழாம் வேற்றுமையை)- விஷய ஸப்தமி யாகக கொண்டு, 'உன் மனைவியர் விஷயத்தில் உன்மனம் பிரீதி யடையட்டும்' என்று கீழே பொருள் கொள்ளப்பட்டது. அப் படியல்லாமல், 'பூ₄தலே க₄ட:' [பூமியில் குடம்] என்றவிடத்திற் போலே அதி₄கரணஸப்தமியாகக் கொண்டு 'உன் மனைவியரிட முள்ள (அவர்களுடைய) நெஞ்சு பிரீதியடையட்டும்' என்றும் பொருள் கொள்ளலாம். அதாவது:- "மூவுலகிலும் சிறந்த அந்த என்னுடைய ஸ்திரீகள் உனக்கு ஸேவை செய்வார்கள்" [ரா-ஸு. 20-32] என்றும், "ஜானகி! என் அந்தப்புர ஸ்திரீகள் அனைவர்க் கும் நீ ஈச்வரியாயிருப்பாயாக" [ரா–ஸு.20–31] என்றும் என்னை உன் அந்தப்புரஸ்திரீகள் ஸேவிப்பார்கள் என்று சொன்னபடி யாலே, அவர்கள் மனம் வெறுத்திருக்கிருர்கள். அந்த வெறுப்பு நீங்கி உன் விஷயத்திலே அவர்களுடைய நெஞ்சு குளிரும்படி பண்ணு என்றும் கொள்ளலாம். (உன் மனைவியர் நெஞ்சு பிரீதி யடையட்டும்) 'ஸ்வஜனத்தில் மநஸ்ஸு' என்றது 'ஸ்வஜனங்களு

தாக. 'ஸ்வஜநத்தினுடைய மநஸ்ஸு' என்றபடியாய், "**परिभूता विषण्णा चेत् भार्या भर्ता विनश्यति**" (பரிபூ₄தா விஷண்ணு சேத்₃ ப₄ார்யா ப₄ர்த்தா விநச்யதி) என்று நீ பண்ணின பாராமையாலும் உபேக்ஷையாலும் அவர்கள் வெறுத்தால் உனக்கு அநர்த்தம் வரும்; அது வாராதபடி அவர்கள் நெஞ்சு குளிரும்படி 'நிவர்த்தய' என்றுகிலுமாம்.

(மத்தோ மநோ நிவர்த்தய)"**ध्येयो नारायणस्सदा**" (த்₄யேயோ நாராயணஸ் ஸதா₃) என்றும், "**ध्येयस्सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणः**" (த்₄யேயஸ் ஸதா₃ ஸவித்ருமண்ட₃லமத்₄யவர்த்தீ நாராயண:) என்றும், "**स्मृतो यच्छति शोभनं**" (ஸ்ம்ருதோ யச்ச₂தி ஶோப₄நம்) என்றும், "**रामेति रामेति सदैव बुद्ध्या विचिन्त्य**" (ராமேதி ராமேதி ஸதை₃வ பு₃த்₃த்₄யாவிசிந்த்ய) என்றும், "**जगाम मनसा रामम्**" (ஜகா₃ம மநஸா ராமம்) என்றும், "நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன்" என்றும், "அடிகள் தம் அடியேனையும் அடியவர்" என்றும் உஜ்ஜீவநமான விஷயத்தை அநவரத ப₄ாவநை பண்ண ப்ராப்தமத்தனைபோக்கி, அநர்த்த₂ஹேது

---

டைய மநஸ்ஸு' என்றபடி, "மனைவியானவள் அவமதிக்கப்பட்டு வருந்தினளாகில், கணவன் அழிவான்" [ ] என்று உன்னுடைய அலக்ஷயபுத்தியாலும், உபேக்ஷையாலும் அவர்கள் நெஞ்சு புண்ணுயிற்றென்றால் உனக்கு அழிவு வரும், அது வராத படி அவர்கள் நெஞ்சு குளிரும்படி எனனிடமிருந்து நெஞ்சைத் திருப்பு என்றும் கொள்ளலாம்.

(என்னிடமிருந்து நெஞ்சைத் திருப்பு) "நாராயணன் எப்போதும் தியானிக்கத் தக்கவன்" [பாரதம்-ஆநு] "சூரியமண்டலத்தின் நடுவிலிருக்கும் நாரயணன் எப்போதும் தியானிக்கத்தக்கவன" [நாரஸிம்ஹபுராணம] என்றும் "பகவான் நினைக்கப்பட்டானுகில் நன்மையைத் தருவான்" [வி.பு1-17-78] என்றும், "ராம ராம! என்று எப்போதும் தன் புத்தியாலே நினைந்து" [ரா-ஸு33-11] என்றும், "மனத்தாலே ராமபிரானை நினைத்தான் திருவடி" [ரா-ஸு15-54] என்றும், "நினைந்திருந்தே சிரமம்தீர்ந்தேன்" [பெரியாழ்-திரு 5-4-8] என்றும், "அடிகள் தம்மடியே நினையுமடியவர்" [பெரியதிரு2-6-10] என்றும் உய்விக்கும் பகவத்விஷயத்தை எப்

வாக என்னை நினையாதேகாண்..(நிவர்த்தய)ப்ரவ்ருத்திதர்மம் ஒருகாலும் ஆகாது. நிவ்ருத்திதர்மமே உத்தாரகங்காண். (மநோ நிவர்த்தய) நிவ்ருத்திக்கு விஷயம் நிஷித்தம். ப்ரவ்ருத்திக்கு விஷயம் ஸம்ஸாரம். ஆனபின்பு, நிஷித்தங்களை விட்டு விஹிதங்களிலே ப்ரவர்த்திக்கப்பார்.

ஆக, இந்த ச்லோகத்தால், ஸ்வாநர்த்தமும் கிடக்கப் பராநர்த்தமும் பொறுக்கமாட்டாத பிராட்டியுடைய நீர்மையும், க்ருபையும் சொல்லுகிறது.

**ஸுந்தரகாண்டம் 21-வது ஸர்க்கம் 19-வது சுலோகம்**

**मित्रमौपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता।**
**वधं चानिच्छता घोरं त्वयासौ पुरुषर्षभः॥**

**மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்தாநம் பரீப்ஸதா।**
**வதம் சாநிச்சதா கோரம் த்வயாஸௌ புருஷர்ஷப:॥**

**பதவுரை:**—**அஸௌ**—இந்த, **புருஷர்ஷப:**—புருஷச்ரேஷ்டரான, **ராம:**—ஸ்ரீராமபிரான், **ஸ்தாநம் பரீப்ஸதா**—உன் குடியிருப்பை விரும்புகிறவனாயும், **கோரம் வதம் அநிச்சதா**-பயங்கரமான சாவை விரும்பாதவனாயுமிருக்கிற, **த்வயா**—உன்னாலே, **மித்ரம் கர்த்தும் ஔபயிகம்**— நண்பனாகச் செய்து கொள்ளத் தகுந்தவர்.

---

போதும் தியானம் செய்வதே தகுந்ததேயொழிய அழிவின்பொருட்டு என்னை நினையாமலிருப்பாயாக. (திருப்புவாயாக) இதரவிஷயங்களோடு, பகவானை அடைவதோடு வாசியற ப்ரவ்ருத்திதர்மம் ஒரு போதும் ஆகாது. நிவ்ருத்திதாமமே உய்விப்பதன்றோ. (மனத்தைத் திருப்பு) நிஷித்தங்களிலிருந்து நீங்கவேண்டும். ஸம்ஸாரத்திலுள்ள வகுத்த போகங்களில் ப்ரவர்த்திக்கவேண்டும். ஆகையால் நிஷித்தமான பரதாரங்களிடமிருந்து நீங்கி, வகுத்ததான உன் மனைவியரிடம் இன்புறப்பார்.

ஆக, இந்த சுலோகத்தால், தன்துன்பமிருக்கும்போதும் பிறர் துன்பம் பொறுக்கமாட்டாத பிராட்டியுடைய ஸௌலப்யமும், கருணை குணமும் சொல்லுகிறது.

**அவதாரிகை:—** அஶோகவநிகையிலே எழுந்தருளி யிருக்கிற பிராட்டி ஸந்நிதியிலே ராவணன் சென்று (தன்னுடைய) அபிஜந வித்யாவிநோதங்களில் நாட்டாரிற்காட்டில் தனக்குள்ள மினுக்கத்தைச் சொல்லியும், பஹுவிதமான க்ஷேத்ரதநதாந்யரத்நவஸ்த்ரபூஷண பரிகரபரிபர்ஹ தாஸ தாஸிகளைத் தருகிறேன் என்றும், பிராட்டியை நிலை பேர்க்கலாமோவென்று ஏற்றிவார்த்தை சொல்ல, பிராட்டியும் இவன் சொல்லுகிறவை ஒன்றையும் பாராதே, இவனுடைய அநர்த்தத்தையே பார்த்து, 'இவனுக்கு ஒரு நல்வார்த்தை சொல்லுவாரில்லாமையிறே இவனிப்படி பிதற்றுகிறது, என்று ஆசார்யபரம்பராவதியாய், பரமாசார்யபூதையாகையாலே, இவனுக்கு ஹிதஞ்சொல்லுகிறுள், சொல்லுகிற விடத்தில், **"तृणमन्तरतः कृत्वा" (த்ருணமந்தரத: க்ருத்வா)** என்று, பரபுருஷமுகம் பார்த்து வார்த்தை சொல்லக்கடவதல்ல என்னும் மர்யாதையாலேயாதல், த்ருணத்தோபாதியும் அவனை மதியாமையாலேயாதல், அசேதனமான இந்

---

அவதாரிகை:—அசோகவனத்திலே எழுந்தருளியிருக்கிற பிராட்டியின் முன் ராவணன் சென்று, நற்குடிப்பிறப்பு, கல்வி, கேளிக்கை ஆகியவற்றில் உலகத்தாரைக் காட்டிலும் தனக்குள்ள பெருமையைச் சொல்லியும், 'பலவிதமான வயல், பணம், தானியம், ரத்தினம், வஸ்திரம், ஆபரணம், தோழிகள், சத்ரசாமராதிகள், வேலைக்காரர்கள், வேலைக்காரிகள் ஆகியவற்றைத் தருகிறேன்' என்று சொல்லியும், பிராட்டியின் கற்புநிலையை அசைக்கலாமோ என்று தூக்கிவைத்து வார்த்தை சொல்ல, பிராட்டியும் இவன் பிதற்றுகிற வார்த்தைகள் ஒன்றையும் நினையாமல், இவனுக்கு நேரவிருக்கிற தீங்கையே நினைத்து, 'இவனுக்கு ஒரு நல்லவார்த்தை சொல்லுவார் இல்லாமையாலன்றோ இவன் இப்படிப் பிதற்றுகிருன்' என்று எண்ணி, பகவானை அடைவிக்கும் ஆசார்ய பரம்பரைக்கு மேலெல்லையாய், பரமாசார்ய பூதையாகையாலே இவனுக்கு நன்மை சொல்லுகிருள் இந்த ஸர்க்கத்தாலே. அப்படி நன்மை சொல்லும்போது, "புல்லை நடுவிலிட்டு" [ரா-ஸு21-3] என்கிறபடியே, 1. பரபுருஷனை முகம் பார்த்து வார்த்தைசொல்லக் கூடாது என்னும் வரம்பாலேயோ, 2. புல்லைப் போலும் அவனை நினையாமையாலேயோ, 3 அசேதந

துரும்பு ப்ரதிபத்திபண்ணிலன்றே நான் சொன்ன வார்த்தையை இவன் ப்ரதிபத்திபண்ணுவது என்னும் நினைவாலேயாதல், **"यं त्वं देवि निरीक्षसे-स कुलीनः स बुद्धिमान्"** (யம் த்வம தே$_3$வி நிரீக்ஷஸே-ஸ குலீந: ஸ பு$_3$த்$_3$தி$_4$மாந்) என்று, தான் பார்த்தவர்கள் புத்தியுக்தராவார்கள் என்னும் நினைவாலேயாதல், பெருமாள் துரும்பைக்கொண்டு காகத்தை ஓட்டினாற்போலே, இவனும் இத்துரும்பைக்கொண்டு இவனை ஓட்ட வேணும் என்னும் நினைவாலேயாதல், ஸ்ருகாலஶஶம்போலே பசுப்ராயனான உனக்குபோக்யம் இதுவன்றோ என்னும் நினைவாலேயாதல், **"शीतो भव हनूमतः"** (ஶீதோ ப$_4$வ ஹநூமத:) என்று த$_3$ாஹகமான அக்னியை ஶீதளமாகப் பண்ணப்புகுகிறாப்போலே, அசேதநமான துரும்பைச் சேதநமாகப் பண்ணுவோம் என்னும் ஸங்கல்பத்தாலேயாதல், ஆஸந்நமாயிருக்கிற இவனுக்கும் நமக்கும் ஒரு வ்யவத$_4$ாநம் வேணும் என்னும் நினைவாலேயாதல், துரும்பைத் தூணாக்கி அத்தூணில்நின்றும் ராகவஸிம்ஹத்தைப் புறப்படுவிக்கவேணும்

---

மான இத்துரும்பு நான் சொல்லுவதைக் கேட்டாலன்றோ · நான் சொன்ன வார்த்தையை இவன் கேட்பது என்னும் நினைவாலேயோ, 4.'எவனை தேவரீர் கடாக்ஷிக்கிறீரோ அவனே நற்குலத்துதித்தோன்; அவனே புத்திமான்' [வி-பு1-9] என்று தன்னால் கடாக்ஷிக்கப் பெற்றவர்கள் துரும்பாயினும் புத்திசாலிகளாவர் என்னும் நினைவாலேயோ, 5. ராமபிரான் துரும்பைக்கொண்டு காகத்தை ஓட்டினாற்போலே, இவளும் இத்துரும்பைக்கொண்டு இவனைத்துரத்த வேணும என்னும் நினைவாலேயோ,6.நரியையும்முயலையும்போலேபிராணியை ஒத்த உனக்கு இனியது இதுவன்றோ என்னும் நினைவாலேயோ, 7. "அக்னியே! ஹனுமானுக்குக் குளிர்ந்தவனாவாயாக" [ரா-ஸு 53-29...32] என்று எரிக்கும் நெருப்பைக் குளிர்ந்ததாகப் பண்ணப் போகிறாப்போலே, அசேதநமான துரும்பைச் சேதநமாகப் பண்ணுவோமெனும் ஸங்கல்பத்தாலேயோ, 8. அருகிலிருக்கும் இவனுக்கும் நமக்கும் நடுவில் ஒரு தடைவேண்டுமென்றோ, 9. துரும்பைத் தூணின் ஸ்தானத்திலே வைத்து அதிலிருந்து ராகவசிங்கத்தைப் புறப்படச்செய்யவேண்டுமென்றோ, 10. "கோரமான வதத்தை

என்னும் நினைவாலேயாதல், **"मित्रमौपयिकं-अनिच्छता"** (**மித்ர மௌபயிகம்-அநிச்சதா**) என்று சொல்லப்புகுகிற இவள் வீர பத்நியாகையாலே இப்புல்லைக்கவ்வி அவ்வாண்பிள்ளை காலிலேவிழ என்னும் நினைவாலேயாதல். என்னைப் போரப் பொலியச் சொன்ன உன்னையும். நீ அடுக்கின தநதாந்ய ரத்ந வஸ்த்ராதிகளையும் இத்துரும்போபாதிகாண் நினைத்திருப்பது என்னும் நினைவாலேயாதல் துரும்பை முன்னே பொகட்டு, **"नाहमौपयिकी भार्या परभार्या सती तव"** (**நாஹமௌபயிகீ பார்யா பர பார்யா ஸதீ தவ**) என்று, "இந்த துர்புத்தி உனக்கு ஆகாது காண்! **"स्वेषु दारेषु रम्यतां"** (**ஸ்வேஷு தாரேஷு ரம்யதாம்**) உனக்கு வகுத்த பெண்டுகள் வயிறெரியாதபடி அவர்களோடு பொருந்தி வர்த்திக்கப்பாராய்" என்று சொல்லி, **"इह सन्तो न वा सन्ति"** (**இஹ ஸந்தோ நவா ஸந்தி**) பள்ளரும் பறையருமாய் பெரும் பரப்பான இத்தேசத்துக்குள்ளே ஒருவன் அநர்த்தப் பட்டால் இங்ஙனே செய்யலாகாதுகாண் என்று ஹிதஞ் சொல்லி மீட்கைக்கு ஒரு நன்மனிதரில்லையாகாதே? **"वा सन्ति"**

---

விரும்பவில்லையாகில், நீ ராமபிரானை நண்பனகச் செய்துகொள் வதுதக்கது" [ரா-ஸு 21-19] என்று சொல்லப்போகிற இப்பிராட்டி மஹாவீரனுடைய மனைவியாகையாலே, 'இப்புல்லைக் கவ்வி அவ் வீரன் காலிலே விழுவாயாக' என்னும் நினைவாலேயோ, 11. 'என்னை மிகப் புகழ்ந்து பேசின உன்னையும், நீ வாயாலே அடுக் கின தனம், தானியம், ரத்தினம், வஸ்திரம் முதலியவற்றையும் இத் துரும்பைப் போலன்றோ நான் நினைக்கிறேன்' என்னும் நினைவா லேயோ துரும்பை முன்னே இட்டு, " 'பிறன் மனைவியான நான் உனக்கு மனைவியாயிருக்கத் தகாதவள்' [ரா-ஸு 21-6] என்று 'இந்தக்கெட்ட எண்ணம் உனக்கு ஆகாது: (உன் மனைவியரோடு இன்புறுவாயாக) [ரா-ஸு 21-8] உனக்கு ஏற்பட்ட மனைவிமார்கள் வயிறெரியாதபடி அவர்களோடு கூடி வாழப்பார்ப்பாயாக" என்று சொல்லி, "(இங்கு நல்லார் ஒருவருமிலரோ?) [ரா-ஸு 21-9] பள்ள ரும் பறையரும்போலே தாழ்ந்தவர்கள் வாழப்பெற்றதாய் பெரிய பரப்பையுடையதான இந்த தேசத்துக்குள்ளே ஒருவன் அக்ரமத் தாலே அழிந்தால், 'இப்படி அநீதி செய்யாதே' என்று சொல்லித் திருப்புவதற்கு நல்லான் ஒருவனும் இல்லையோ? (அன்று; இருக்

**(வாஸந்தி)** *ஸ்ரீவிபீஷணுழ்வான் தொடக்கமான பரமதார் மிகர் உண்டாகையாலே ஸத்துக்கள் இல்லை யென்னவொண் ணுது;உண்டு.* **"सतो वा नानुवर्तसे" (ஸதோ வா நாநுவர்த்தஸே) "प्रणिपातेन परिप्रश्नेन सेवया । उपदेक्ष्यन्ति" (ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா । உபதே₃க்ஷ்யந்தி)** *என்று தங்கள் காலிலே குனிந்து அநுவர்த்தித்தவர்களுக்கிறே அவர்கள் நல்லது சொல்லு வது; அப்படிக்கு அவர்கள் காலிலே குனிந்தறியாயோ? 'அடியே தொடங்கி நீ இவ்வூரிலிருந்தவளல்ல; நேற்று வந்த நீ குனியேனென்று அறிந்தபடியென்' என்ன;-* **"तथा हि विपरीता ते बुद्धिः" (தத₂ா ஹி விபரீதா தே பு₃த்₃தி₄:)** *'உன் புத்தியின் பொல்லாங்குதானே அதைச் சொல்லுகிறதுகாண்!' என்ன. புத்தியின் பொல்லாங்கு அறிகைக்கு நீ அந்தர்யாமியன்றே என்ன* **"आचारवर्जिता" (ஆசாரவர்ஜிதா)** *உன்னுடைய அநுஷ் டானத்தாலே அநுமித்தேன்காண்" என்று ஹிதஞ்சொல்லு மவர்கள் சொல்லாதபடியான இவனுடைய துராசாரத்தைக் கண்டு வெறுத்து, "இனி ஒருவரையும் அநுவர்த்திக்க*

---

கிறுர்கள்.—ரா-ஸு 21-9) விபீஷணுழ்வாள் முதலான சிறந்த தர்மிஷ் டர்கள் இருக்கையாலே நல்லார் இல்லை என்று சொல்லவும் முடி யாது. நல்லார் உண்டு. (நல்லோர்களுக்கு நீ சுச்ரூஷை செய்வ தில்லையோ) 'காலில் விழுவது, கேட்பது, கைங்கரியம் செய்வது முத லிய சுச்ரூஷைகளைச் செய்தால் ஞானிகள் உனக்கு அறிவை உபதே சிப்பார்கள்' [கீதை 4-84] என்று தங்கள காலிலே குனிந்து சுச்ருஷை செய்யுமவர்களுக்கன்ரே அந்த ஞானிகள் நன்மை சொல் லுவது, அம்மாதிரி இவர்கள்காலிலே குனிந்தறியாயோ? 'முதலி லிருந்து நீ இவ்வூரில் இருந்தவளன்று; நேற்று வந்த நீ நல்லோர் கள் காலில் குனியமாட்டேன் என்று எப்படி அறிந்தாய்?' என்ன'— (ஏனெனில்: உன் புத்தி விபரீதமாயிருக்கிறது) "உன் அறிவுகேடே நீ நல்லார் காலிலே குனியாதவனென்று கோட்சொல்லித் தருகிற தன்ரே' என்ன, 'என் அறிவுகேட்டை அறிவதற்கு நீ அந்தர்யாமி யல்லவே' என்ன,— (உன் புத்தி ஆசாரமற்றதாயிருக்கிறது) உன்னுடைய கெட்ட நடத்தையாலே உன் அறிவுகேட்டை அனுமானம் செய்தேன்" என்று, நன்மை சொல்லும் விபீஷணன் முதலானுர் சொல்லாதபடியான இவனுடைய கெட்ட நடத்தையைக் கண்டு வெறுத்து வார்த்தை சொல்லி, "இனி நீ ஒருவரிடமும்

வேண்டா; அநுவர்த்தநநிரபேக்ஷமாக நான் உனக்கு ஹிதம் சொல்லுகிறேன். நான் சொன்னபடியே அநுஷ்டிக்கப் பாராய்'' என்கிருள்.

வ்யா:—'ஆமாகில் அநுஷ்டிக்கிறேன்; அந்த ஹிதந் தன்னைச் சொல்லலாகாதோ?' என்ன—(மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம:) 'பெருமாளோடே உனக்கு விரோதம் பண்ணிஞல் பலியாது; அவரோடே உறவுபண்ணக்காண் அடுப்பது' என்கிருள். (மித்ரம் கர்த்து மௌபயிகம்) தீரக்கழிய அபராதம் பண்ணின உனக்கு அவர் திருவடிகளிலே ஶரணம் புகவேணுங்காண்! 'மித்ரம்' என்று நிற்கச்செய்தே 'ஶரணம' என்பானென்? என்னில் மேல் ச்லோகத்திலே. **"विदितः सहि धर्मज्ञः शरणागतवत्सलः। तेन मैत्री भवतु ते"** (விதி₃த: ஸஹி த₄ர்மஜ்ஞ: ஶரணுக₃தவத்ஸல:। தேந மைத்ரீ ப₄வது தே) என்று, 'அவர்-ஶரணுகதவத்ஸலர்காண்! ஆனபின்பு நீயும் ஶரணம் புகாய்' என்ற அர்த்தத்திலே மைத்ரீ ஶப்த ப்ர

---

குனிந்து கேட்கவேண்டியதில்லை; சுச்ரூஷையை எதிர்பாராமலே நான் உனக்கு நன்மை சொல்லுகிறேன்; நான் சொன்னபடியே அனுஷடிக்கப் பார்ப்பாயாக" என்கிருள் இந்த ச்லோகத்தாலே.

வ்யா:—'முடிந்தால் நீ சொல்லுவதைப் பின்பற்றுகிறேன்; அந்த நன்மையைச் சொல்லலாமே' என்று ராவணனுக்குக் கருத்தாக,- (ராமபிரான் நண்பராகக் கொள்ளத் தக்கவர்) 'ராமபிரானேடு நீ விரோதம் செய்துகொண்டாயாகில் ஒருநன்மையுமில்லை. அவரோடு உறவு செய்துகொள்வதே தக்கது' என்கிருள். (நண்பனைச் செய்து கொள்வது தக்கது) பரிபூர்ணமாக அபசாரப்பட்ட நீ அவருடைய திருவடிகளிலே சரணம் புகுந்தே தீரவேணும். 'மித்ரம் கர்த்தும்' என்று நண்பனைச் செய்துகொள்ளச் சொல்லியிருக்க, 'சரணம் புகவேணும்' என்று பொருள் கூறுவானென்? என்னில். அடுத்த ச்லோகத்தில், "அவர் தருமமறிந்தவராகவும், சரணமடைந்தாரிடம் அன்புடையவராகவும் பிரஸித்திபெற்றவர்; அவரோடு உனக்கு நட்பு உணடாகட்டும்" [ரா-ஸு-21-20] என்று 'அப்பெருமான் சரணுகதரிடம் வாத்ஸல்யமுடையவர்; நீயும் அவரை சரணமடை' என்கிற அர்த்தத்திலே நட்பைக் குறிக்கும் 'மைத்ரீ' சப்தப்ரயோகம் செய்

யோகம் பண்ணுகையாலே. ஶரணஶப்தபர்யாயமாகக் கடவது. "अर्चनं वन्दनं दास्यं सख्यमात्मनिवेदनम्" (அர்ச்சநம் வந்த₃நம் தா₃ஸ்யம் ஸக்₂ய மாத்மநிவேத₃நம்) என்று ஸக்யத்தை பக்திப்ரகாரமாகவும் சொல்லிற்றிறே-ஆகையாலே, அவரை ஶரணம் புகாய் என்கிறாள். "तमेव शरणं गच्छ सर्वभावेन भारत" (தமேவ ஶரணம் க₃ச்ச₂ ஸர்வ பா₄வேந பா₄ரத) என்று பிராட்டியைப்போலே தார்மிகராயிருப்பார் வேறே சிலரும் இப்பாசுரம் சொன்னார்களிறே. ஆனால், நேர்கொடு நேரே ஶரணமென்னாதே, 'மித்ரம்' என்பானென்? என்னில்: க்ஷுத்ரரைப்போலே தந்தாமை உயரவைத்துப் பிறரைத் தண்ணியராகச் சொல்லும்படியான புன்மையில்லாத பிராட்டி, நீர்மையாலே சொல்லுகிறாள். இவளன்றே இப்படி சொன்னாள். பெருமாள் தாமும், ராக்ஷஸனை "मित्रभावेन" (மித்ரபா₄வேந) என்றும், ஒரு குரங்கை "सखा च मे" (ஸகா₂ ச

---

கையாலே இந்த 'மைத்ரீ' சரணசப்தத்தோடு ஒரே பொருளுடையதாகக்கடவது. 'அர்ச்சனைசெய்வது, வந்தனம், தாஸ்யம், நட்பு, தன்னை ஸமர்ப்பிப்பது" [பாகவத 7-5-23] என்று நட்பை பக்தியின் வகையாகச் சொல்லிற்றுகையாலே ஸாத்யபக்தியாகிற ப்ரபத்தியிலும் அடங்குமன்றோ நட்பு. ஆகையால், 'அவரை சரணம் புகுவாய்' என்கிறாள் என்றே பொருள் கொள்ளவேணும். "பரதகுலத்துதித்தவனே! அந்தப் பரமபுருஷனையே எல்லாவிதத்திலும் சரணமடைவாயாக" [கீதை 18-62] என்று பிராட்டியைப் போலே பரம தார்மிகனை பகவானும் இப்படி சரணம் புகவேணுமென்று உபதேசித்தானன்றோ, ஆனால் கீழ்ச்சொன்ன கீதாவாக்யத்தில் கிருஷ்ணனைப்போலே இவளும் வெளிப்படையாக 'சரணம் புகு' என்னாமல் 'நட்புக்கொள்' என்பானேன்? என்னில்: நீசர்களைப் போலே தம்மை உயர்த்தியும், பிறரைத் தாழ்த்தியும் வார்த்தை சொல்லும்படியான கெட்டகுணமில்லாத பிராட்டி தன் குணத்துக்கேற்ப 'சரணம்' என்னவேண்டிய இடத்தில் 'நட்பு' என்கிறாள். இவள்மாத்திரமன்றே இப்படி சொன்னது; ராமபிரானும் ராக்ஷஸஜாதியைச் சேர்ந்த விபீஷணன் சரணம்புக வந்தபோது 'நட்புடன் வந்தவனை ஒருபோதும் விடமாட்டேன்" [ரா-யு18-3] என்றும், குரங்குக்குலத்தில் பிறந்த ஸுக்ரீவனை–" என் நண்பன்" [ ] என்றும்

மே) என்றும், ஓர் ஓட்டையோடக்காரனை "आत्मसमः सखा" (ஆத்ம ஸம: ஸகா₂) என்றும் "†உகந்த தோழன் நீ" என்றும் அருளிச்செய்தாரிறே. இன்னமொரு ஆகாரத்தாலே மித்ர ஶப்தம் சொல்லுகிறாள். அது என்னென்னில்: "न नमेयं" (ந நமேயம்) என்று வணங்கவிலரக்கனாய், துர்மானியான இவனை ஶரணம் புகாய் என்றால் இசையான் என்னுமத்தாலே தோழமை கொள்ளாய் என்கிறாள். (மித்ரம் கர்த்துமௌபயிகம்) "மிதாத் த்ராயத இதி மித்ரம்" என்று §"ञिमिदा-स्नेहने" (ஞிமிதா₃ ஸ்நேஹநே) என்கிற தாதுவிலேயாய், பெருமாளுக்கு த்வேஷ விஷயமாகாதே ஸ்நேஹவிஷயமாகை அழகிதுகாண்! "நேராக இவருக்கு ஶத்ருவுமாய், ப்ரபலனுமாயிருக்கிற நான், ஸாபேக்ஷனாய், பெருமாளுக்கு த்வேஷ விஷயமாகாதே இவர் பக்கல் உறவுகொண்டாடப் புகுகிறேனோ?' என்ன,- (மித்ரம் கர்த்துமௌபயிகம்) இப்படி

---

ஓர் ஓட்டையோடக்காரனை "என் உயிரையொத்த நண்பன" [ரா-யு-128-4]என்றும், "†உகந்த தோழன் நீ" [பெரியதிரு–5-8-1] என்றும் அருளிச்செய்தாரன்றோ. வேறொரு கருத்தாலும் நண்பன் என்கிறாள். அதாவது,–"நான் ஒருவருக்கும் வணங்கேன்" [ரா-யு36-13] என்று *வணங்கலில் அரக்கனாய் அஹங்காரியான இவனை சரணம் புகுவாய் என்றால் ஒப்பமாட்டான் என்னும் எண்ணத்தாலே நட்புக்கொள் என்கிறாள். (நண்பராகச் செய்துகொள்வது தக்கது) "ஆபத்திலிருந்து ரக்ஷிக்கிறுனுகையாலே மித்ரனெனப்படுகிறான்" எனறு மித்ரசப்தவ்யுத்பத்தியாகையாலே ஆபத்திலிருந்து ரக்ஷிக்கும் தன்மையுடைய இவரை நண்பராகக் கொள்வது தக்கது என்கை. (நண்பராகச் செய்துகொள்வது தக்கது) "ஞிமிதா₃ஸ்நேஹநே" என்கிற தாதுவிலிருந்து மித்ரசப்தம் தோன்றியதாகக கொண்டால் 'நீ ராமபிரானுடைய த்வேஷத்துக்குப் பாத்திரமாகாமல் ஸ்நேஹத்துக்குப் பாத்திரமாவாயாக' என்று பொருளாகிறது. 'நேரே இவருக்கு எதிரியுமாய், அவரைக்காட்டிலும் பலசாலியாயிருக்கிற நான் அவருடைய த்வேஷத்துக்கு விஷயமாகாமல், அவரை அடைக்கலமாக அபேக்ஷித்து அவரோடு உறவுகொண்டாடப்போகிறேனோ?' என்ன,–(நண்பராகச் செய்துகொள்வது தககது) பார்யா

---

§ இங்கு சில பங்க்திகள் விடுபட்டுள்ளன. † (பா) உகந்து

ப்ராதிகூல்யம் பண்ணின உனக்குப் பத்தும் பத்தாக உறவு செய்தறவேணுங்காண்! இது பண்ணினுல் ப்ரயோஜநமென்? என்ன,– (மித்ரம் கர்த்தும் ஔபயிகம்) உன் ப்ராணரக்ஷணத்தில் விநியோகம் கொள்ளலாம் **ஔபயிகம்**—உபாய: இம்மித்ரகரணம் உன்னுடைய உஜ்ஜீவனத்துக்கு உபாயம்; "உபாயாத் ஹ்ரஸ்வத்வஞ்ச" என்று உபாயஶப்தம் உபயஶப்தமாய், ஸ்வார்த்தே$_2$ட$_4$க்காய், இக$_3$ாதே$_3$ஶமாய், ஆதி$_3$வ்ருத்$_3$தி$_4$யாய், அகாரலோபமாய், 'ஔபயிகம்" என்று பதமாகிறது. இப்படிக்கு இது உபாயமென்னுமிடம், "ஸ்தாநம் பரீப்ஸதா வதஞ்சாநிச்சதா" என்று மேலே பலஞ்சொல்லுகையாலே ஸ்பஷ்டமிறே.

'ஆனுல், நான் உறவுக்கு இசையக்கொள்ள, முகந்தாராதே ப்ரதாபிகளாய் உதறிலோ?' என்ன,– (ராம:) வரையாதே பொருந்தும்படியான நீர்மையுடையவர்காண்! (ராம:) கைவர்த்தரோடும், காகத்தோடும், குரங்கோடும் உறவு

---

பஹாரம்செய்து எதிரிட்ட நீ பரிபூர்ணமாக அவரோடு உறவு கொண்டாடியேதீரவேணும், 'இப்படி நட்புக்கொண்டால் பலனென்?' என்ன,–(நண்பராகச்செய்துகொள்வது (உயிர்வாழ) உபாயம்) உன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதே பலன். ஔபயிகம்– உபாயம். இலக்கணவிதிகளின்படி உபாயசப்தமே பல மாறுபாடுகளை அடைந்து 'ஔபயிகம்' என்ருகிறது. இப்படி நட்புக்கொள்வது உயிர்வாழ உபாயமென்பது, "குடியிருப்பை விரும்புமவனுய், கொடிய சாவை விரும்பாமலிருக்கிற" என்று மேலே உயிர் வாழ்வதைப் பலமாகச் சொல்லுகையாலே தெளிவாக விளங்குகிறது.

'ஆனுல், நான் நட்புக்கு இசைந்தவுடன், தான் முகங்கொடுத்துப்பேசாமல், அணுகவொட்டாமல் என்னை உதறிவிட்டாராகில் என் செய்வது' என்னில். (ராமபிரான்) "ரமயதீதிராம:" ரமிக்கச் செய்பவன் ராமன். வரம்பில்லாமல் ஜனங்களோடு ஒருவனுய்க் கலந்து பரிமாறும் தன் ஸௌசீல்யகுணத்தாலே அனைவரையும் ரமிக்கச் செய்து ராமனென்று பெயர்பெற்றவரன்ருே அவர். (ராமபிரான்) ராமன்–ரமிப்பவன். ஓடக்காரரோடும், காக்கையோடும், குரங்கோடும் ரமித்து நட்புறவு கொள்ளுமவர், விச்ரவஸ்ஸின் பிள்ளை

செய்கிறவர் இத்தனை யோக்யத்தையுடைய உன்னை விடு கிறரோ? (ராம:) நீ அல்லேன் என்னிலும், "यदि वा रावणः स्वयं-आनयैनम्" (யதி$_3$ வா ராவண: ஸ்வயம்-ஆநயைநம்) என்று அழைத்துவிடுவது, ஆபத்து முடுகினவாறே "गच्छ"(க$_3$ச்ச$_2$) என்று விட்டடிப்பதாகிற பெருமாள், இத்தனை நீ இசை வாயுமாறல் விடுகிறரோ? (ராமோ மித்ரம் கர்த்தும் ஔப யிகம்) துர்ஹ்ருதயராய், துருபதேஷ்டாக்களுமான ப்ரஹஸ் தாதிகளைவிட்டு, "सुहृदं सर्वभूतानां"(ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம்) என்றும், "निवासः शरणं सुहृत्" (நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்) என்றும் சொல்லுகிற ஸர்வபூதஸுஹ்ருத்தான பெருமா ளோடே உறவு செய்யப்பார். (ராம:) "ரமயதீதி ராம:" "नेयमस्ति पुरी लङ्का न यूयं न च रावणः" (நேயமஸ்தி புரீ லங்கா ந யூயம் ந ச ராவண:) என்று உன்னை விட்டகன்று நிற்கிற

---

யாய், வேதமோதியவனும், ஜ்ஞாநபலசக்திகள் மிகுந்தவனும் இவ் வளவு தகுதியுடைய உன்னை விடுவரோ? (ராமபிரான்) நீ 'வணங்க மாட்டேன்' என்றாலும், "ராவணன்தானேயாயிருந்தாலும் அழைத்துவா" [ரா-யு18-35] என்று உன்னை அழைத்துவர ஆள் விடுவது, உனக்கு ப்ராணபத்துவந்தவுடன் உன்னைக் கொல்லாமல், 'இனிமேலாவது திருந்துவானே' என்னும் நப்பாசையாலே "போய்வா; அனுமதிக்கிறேன்" [ரா-யு59-143] என்று விட்டுவிடு வது ஆகிய செயல்களைச் செய்யும் அவர் நீ நட்புக்கொள்ளுமள வுக்கு இசைந்துவிட்டால் பிறகு விட்டுவிடுவாரோ? (ராமபிரான் நண்பராகச்செய்து கொள்ளத்தக்கவர்) கெட்ட நெஞ்சையுடையவ ராய், கெட்ட உபதேசம் செய்பவரான, ப்ரஹஸ்தன் முதலானோரை விட்டு, "எல்லா ஜீவராசிகளுக்கும் நண்பனான என்னை" [கீதை 5-29] என்றும், "தங்குமிடமாயும, உபாயமாயும், நண்பனுமிருப் பவன நாராயணன்" [ஸுபால] என்றும் சொல்லப்படுகிற அனைத் துயிர்க்கும் நண்பனான ராமபிரானோடே நட்புக்கொள்ளப்பார். (ராம பிரான்) 'பிறரை ரமிக்கச் செய்பவன் ராமன்" என்று வ்யுத்பத்தி யாகையாலே "இந்த லங்காபுரியும், ராக்ஷஸர்களான நீங்களும், ராவணனும் அழிந்து விட்டீர்கள்" [ரா.ஸு 43-25] என்று அவ ரோடு விரோதிக்கும் நீ இறப்பது திண்ணமாகையாலே உன்னை விட்டுப் பிரிந்து நிற்கும் உன்னுடைய ஊரையும் உறவினரையும்

*உன்னுடைய ஊரும் உறவுமுறையும் உன்னுயிரும் உன்பக்க லிலே பழையபடியே பொருந்தும்படி பண்ணவல்லர்காண்!*

*'பண்டே என்னதாயிருக்கிறவற்றை இவர் பொருந்தும் படி தரிக்கப் பண்ணவேணுமோ?' என்ன,—(ஸ்தாநம் பரீப் ஸதா வதஞ்சாநிச்சதா) இதுக்கு முன்பு உன்னதேயாகிலும். உன் குடியிருப்பும் ப்ராணனும் மேலும் வேண்டியிருந்தா யாகில் அவரைப்பற்ற அடுக்கும்.*

*(ஸ்தாநம் பரீப்ஸதா)* **ஸ்தாநம்**—*ஆவாஸ:.* **"अभिषिच्य च लङ्कायां राक्षसेन्द्रं विभीषणं"** *(அபி₄ஷிச்ய ச லங்காயாம் ராக்ஷ* **ஸேந்த்₃ரம் விபீ₄ஷணம்**) *என்று உன் தம்பிக்கு இப்படை வீடு கொடுக்க வாயிற்றுப் புகு(போ)கிறுர்; அது செய்யாத படி. நீயே இப்படைவீடு ஆளவேண்டியிருந்தாயாகில என்றுமாம். (ஸ்தாநம் பரீப்ஸதா)* **ஸ்தாநம்**—*ஸ்திதி:* **"स्थान**

உன் உயிரையும் உன்னிடமேயிருக்கும்படி செய்து உன்னை ரமிக்கச் செய்யக்கூடியவரன்றோ அவர்.

'முன்னமே என்னுடையதாயிருக்கிற இவற்றை இவர் என்னோடு கூடியிருக்கும்படி தரிக்கச் செய்யவேணுமோ?' என்ன,–(இருப் பிடத்தை வேண்டியிருப்பவனுய்,–மரணத்தையும் வேண்டாதிருப்ப வனை) இதற்கு முன் இவை உன்னுடையதாயினும், அவரோடு எதிரிட்டுக்கொண்ட பின்பு உன் இருப்பிடமும் உயிரும் உன்னுடை யவையல்ல; இனிமேலும் அவை நிலைநிற்க வேண்டியிருந்தாயாகில அவரைப் பற்றுவதே தக்கது.

1. (இருப்பிடத்தை வேண்டியிருப்பவனுய்) ஸ்தானமாவது இருப்பிடம். "இலங்கையிலே விபீஷணனை ராக்ஷஸராஜாவாக அபி ஷேகம் செய்வித்து" [ரா-பா 1-85] என்று உன் தம்பி விபீஷண னுக்கு இந்த ராஜ்யத்தைக் கொடுக்கத்தான்போகிறுர். அப்படி செய்யாதபடி நீயே இவ்விராச்சியத்தை ஆளவிரும்பியிருந்தாயாகில் என்று ஒரு பொருள். 2. (நிலைநிற்பதை வேண்டியிருப்பவனுய்) "அவகாச ஸ்தி₂தௌ ஸ்தா₂நம்" என்கிற அமரகோசத்தின்படியே ஸ்தானசப்தம் ஸ்திதியையும்–(நிலைநிற்பதையும்)–குறிக்கும். "மூவுல

लोकान् संपरिक्रम्य'' (த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய) என்று காக்கை போலே கண்டவிடமெங்கும் பரந்துதிரியாதே நிலைகொள்ள வேண்டியிருந்தாயாகில் என்றுமாம். (ஸ்தாநம் பரீப்ஸதா) ஸ்த₂ாநம—ஸமஸ்தாநம். அதாவது:— சதுரங்கமான பரிகரமும் நீயும் கோப்புக்குலையாமல் இருக்கவேண்டியிருந்தாயாகில் என்றுமாம். (ஸ்தாநம் பரீப்ஸதா) ஸ்தாநம்—அதி₄ஷ்ட₂ாந மாய், ஸ்வாம்யமாத்யஸுஹ்ருத்கோஶாதியாகிற ப்ரஹஸ் தாதி மந்த்ரிவர்க்கமும், கும்பகர்ணேந்த்ரஜித் ப்ரமுகரான ப்ராத்ருபுத்ராதிவர்க்கமும், தேடிப்படைத்த அர்த்தமும், இது நெடுங்காலம் குடியாக்கின படைவீடுமாகிற இவ்வதி₄ஷ் ட₂ாநம் குலையாமலிருக்க வேண்டியிருந்தாயாகில் என்றுமாம். 'படைவீடும் அதிஷ்டாநமும் பார்த்திருக்கிறேனே; வேறே

---

கிலும் நன்ருகச் சுற்றிப்பார்த்துவிட்டு ராமனையே சரணடைந்தான்'' [ரா·ஸு38-33] என்று காகாசுரனைப்போலே கண்டகண்ட இட மெல்லாம் பறந்து திரியாமல் நிலைநிற்க வேண்டியிருந்தாயாகில் என்பது இரண்டாவது பொருள், 3. (கட்டுக்கோப்பை வேண்டி யிருப்பவனுய்) ஸ்தாநமென்று ஸம்ஸ்தானத்தையும் குறிக்கும். ரதகஜ துரகபதாதி(தேர் யானை குதிரை காலாள்) களாகிற நாலு அங்க முடைய உன் ஸேனையும் நீயும் இப்போதுள்ளபடியே கட்டுக் கோப் புக் குலையாமல் இருககவேண்டியிருந்தாயாகில் என்று மூன்ருவது பொருள். 4. (அதிஷ்டானத்தை வேண்டியிருந்தாயாகில்) ஸ்தான மென்று அதிஷடானத்தையும்-(ஆச்ரயத்தையும்)-குறிக்கும. 'ஸ்த₂ா நம் ஸ்யாத₃ாச்ரயே ஸ்தி₂தௌ'' என்று வைஜயந்தி. ஆச்ரயமாவது· இவனுடைய ராஜ்யம். ஸ்வாம்யமாத்ய ஸுஹ்ருத்கோச ராஷ்ட்ர து₃ர்கக₃ப₃லாநி ச ராஜ்யாங்க₃ாநி'' [அமர 2-8-17] [அரசன் மந்திரி, நண்பர்கள, பொக்கிஷம், அரண்கள், ஸேனைகள் ஆகியவை ராஜ்யத் தின் அங்கங்கள்] என்கிறபடியே உனக்கு ஆச்ரயமான ராஜ்யத்தின் அங்கங்களான ப்ரஹஸ்தன் முதலான மந்திரிமார் குழுவும், தம்பி கும்பகர்ணன், பிள்ளை இந்திரஜித் முதலானுரடங்கிய ஸுஹ் ருத்வர்க்கமும், நீ தேடிச்சேர்த்த பொருள்களைக் கொண்ட பொக்கி ஷமும, இவ்வளவு காலம் ஆண்டுவந்த தேசமும், அரண்களும், ஸேனையுமாகிற அதிஷ்டாநம் அழியாமலிருக்க வேண்டியிருந்தா யாகில் என்று நாலாவது பொருள். ''ராஜதானியும் அதிஷ்டானமும் வேருேரிடத்தில் பார்த்து வைத்திருக்கிறேன்; இது அழிந்தால்

ஓரிடத்தில் போயிருக்கிறேன்' என்ன,—(ஸ்தாநம் பரீப்ஸதா) **பரித: ஸ்த₂ாநமீப்ஸதா. "रसातलं वा प्रविशेत्पातालं वापि रावणः। पितामहसकाशं वा न मे जीवन् हि मोक्ष्यते ॥" (ரஸாதலம் வா ப்ரவிஶேத பாதாளம் வாபி ராவண: | பிதாமஹஸகாஶம் வா ந மே ஜீவந் ஹி மோக்ஷ்யதே ||)**என்று பூமிதன்னிலும் மலைமுழை(ஞ்)சுகளிலே போகவுமாம்; உனக்கு ஜந்மபூமியான பாதாளத்திலே போகிலுமாம். உன்னை இப்படி வரம்தந்து வாழ்வித்த ப்ரஹ்மலோகத்திலே போகிலுமாம்; அவ்வோ இடங்களில் உனக்கு உயிர்கொண்டு நிற்கவொண்ணாது; சுற்றிலேபோய் இருக்கப் பார்த்தாயாகிலும் அவர் உறவாக வேணுங்காண்!

'ப்ரஸித்த ஸ்தலங்களிலே போயிருக்கிற போதன்றோ அவர் வேண்டுவது; அஜ்ஞாதவாஸமாக ஓரிடத்திலே மறைய விருக்கிறேன்' என்ன,—(வதமநிச்சதா) உன்னை உயிரோடே விடிலன்றோ நீ ஒளித்திருப்பது; அப்படி சாகாமலிருக்கைக்கு வேண்டியிருந்தாயாகிலும் அவரைப்பற்றவேணும்; (வத

---

அங்கு போயிருக்கிறேன்" என்ன,—(எவ்விடத்திலும் ஸ்தானத்தை வேண்டியிருப்பவனாய்) 'பரி' என்னும் உபஸர்க்க ஸ்வாரஸ்யத்தாலே நாற்புறத்திலும் நீ எங்கு ஸ்தானத்தை வேண்டியிருந்தாயாகிலும் என்று பொருள்படுகிறது. "ராவணன் ரஸாதலத்துக்கோ, பாதாளத்துக்கோ, பிரமனிடமோ சென்றபோதிலும், என்னால் உயிரோடு விடப்படமாட்டான்" [ரா–யு 19–20] என்கிறபடியே, பூமியிலே மலைக்குகைகளிலே போய் ஒளிந்து கொண்டாலும், உனக்குப் பிறப்பிடமான பாதாளமடைந்தாலும், இப்படி வரந்தந்து உன்னை வாழவைத்த பிரமனுடைய உலகு சென்றாலும் அந்தந்த இடங்களில் உன்னால் உயிரோடு நிற்கமுடியாது. நாற்புறமும் போய் வாழ நினைத்தாலும் அவரோடு நட்புக்கொண்டே தீரவேண்டும்.

"பலருமறிந்த இடங்களிலே போய் வாழ்ந்தாலன்றோ அவரோடு நட்புக்கொள்ளவேண்டும், ஒருவருமறியாமல் ஓரிடத்திலே மறைந்து வாழ்ந்துகொள்கிறேன்" என்ன,—(சாவை விரும்பாமலிப்பவனை) உன்னை உயிரோடுவிட்டாலன்றோ நீ ஒளிந்துகொண்டு இருப்பது- அவ்விதம் உயிரோடுவாழவேண்டுமென்றாலும் அவரை சரணமடையவேண்டும். (கொலைச்சாவை விரும்பாமலிருந்தாயாகில்)

மநிச்சதா) ஒரு வ்யாத்₄யாதி₃களால் பிறக்கிற மரணமொழிய, ஒரு ஶத்ருபலத்திலே புகுந்து தலையறுப்புண்டாய் என்கிற பரிபவம் வாராதேயொழிய வேண்டியிருந்தாயாகில் என்றுமாம். 'வீரனுக்கு ஶத்ருவின் கையில் படுகையன்றோ தரம்' என்கிறாயாகில்,—(கோரம் வதமநிச்சதா) நாட்டாரைப் போலே சாமாறு சாம்போதும் அவரைப் பற்றவேணுங்காண்! (கோரம் வதம்) உன்னைக் கொல்லும்போதும் எளிதாக விடுவரோ? ஆளை வரவிட்டு நிலைநாட்டி, அந்த தூதனைக் கொண்டு தறைக்கிடாகத் தோப்பை முறித்து, உன் பசலைத் திருகி, உன் ஓலக்கத்திலே மதியாதே புகுந்து, தன் நாயன் பெருமையையும் உன் தாழ்மையையும் சொல்லி, உன் படை வீடு பொறியும் புகையுமெழும்படி சுட்டுக்கரிக்கூடாக்கி, மீண்டு வந்து விஶேஷம் சொல்லும்படி பண்ணி, அநந்த பரிகரத்தையுடைத்து, காண்பாரைக் காண்பித்துக்கொண்டு, உன் ஆழிய நெஞ்சிலே கல்லிட்டாற்போலே, உனக்கு நீர்ச்

---

வியாதி முதலானவற்றால் ஏற்படும் மரணத்தைத் தவிர, 'ஓர் எதிரி பலாத்காரமாக உன்னூரில் புகுந்து, அவனாலே தலையறுப்புண்டாய்' எனகிற அவமானம் வராமலிருக்கவேண்டியிருந்தாயாகில் என்றும் பொருள் கொள்ளலாம். 'வீரனுக்கு, எதிரியை சரணமடைவதைவிட அவன்கையால் இறப்பதே மேலன்றோ' என்று சொன்னாயாகில்,—(கோரமான கொலைச்சாவை விரும்பாதவனான) உலகத்தவரைப் போலே சாகுங்காலத்தில் சாகவேண்டியிருந்தாயாகிலும் அவரை சரணம் பற்றவேணும். (கோரமான கொலைச்சாவை) உன்னைக் கொல்லும்போது எளிதில் கொன்றுவிடுவரோ? தன் தூதனை உன் ஊருக்கு வரச்செய்து நிலைநிறுத்தி, அந்த தூதனைக் கொண்டு உன் அசோக வனத்தோப்பைத் தரைமட்டமாகச் சாய்த்து, உன் பிள்ளை அக்ஷயகுமாரனைக் கொன்று, உன் ஸபையிலே உன்னைப் பொருட்படுத்தாமல் புகுந்து, தன் ஸ்வாமியான ராமபிரான் பெருமையையும் உன் சிறுமையையும் சொல்லி, உன் நகரம் தீப்பொறியும் புகையும் எழும்படி அதைச் சுட்டுக் கரியாக்கி, அந்த தூதன் திரும்பித் தன்னிடம் வந்து சேதிசொல்லும்படி செய்து, அளவற்ற வாநர ஸேனையை உடையவனாய், 'ராமபிரானைக் காணவேணும்' என்னும் ஆசையுடைய உன் தம்பிக்குத் தன்னைக்காட்டிக்கொண்டு, ஆழமான

சிறையான கடலிலே கல்லிட்டடைத்துப் பெருவழி யாக்கி, குரங்குகளைக் கால்நடையே அக்கரைப்படுத்தி, உன் படைவீட்டை அடைமதிள் படுத்தி. நீ ஆண்ட பரி கரமடைய வெறுந்தறையாக்கி. உன் உறவு முறையாரை மூக்கையறுப்பது தோளைத்துணிப்பது காலைத்தறிப்பது தலையையறுப்பதாய், பனங்கனி உதிர்த்தாற்போலே உன் தலைகளை உதிர்ப்பது தோள்களைக் கழிப்பது உடலைத் துளைப்பது இவ்வுதிரக்கு(கூ)றையை உன் பெண்டுகளுக்குக் காட்டுவதாக "गच्छ" (கூச்ச) என்று விட்டடிப்பதாய், இப்படி சித்ரவதம் பண்ணிக்காண் உன்னை அவர் கொல்லுவது. இப்படிக்குக் கொடுங்கொலை வேண்டிற்றிலையாகில் அவரைப் பற்று என்றாகவுமாம்.

இவர் வெறுத்த மனிதர் இதற்கு முன் இப்படிப்பட்டா ருண்டோ என்ன,—(த்வயா) இப்படி வேறொருவர் இத்தனை அபராதம் பண்ணினாருமில்லை; இப்படி பட்டவர்களுமில்லை;

---

உன் நெஞ்சிலே கல்லை இட்டதுபோலே உனக்கு நீராலான அரணான கடலிலே கல்லையிட்டு அணைகட்டிப் பெரியவழியை ஏற் படுத்தி, குரங்குகளைக் கால்நடையாக நடந்துவரச்செய்து, உன்னு டைய இலங்கைமாநகரத்தின் மதிட் கதவுகளை மூடும்படி செய்து, நீ ஆண்ட செல்வத்தையெல்லாம் தறைமட்டமாக்கி, உன் உறவி னரை மூகக்கையறுத்து, தோளைவெட்டி, காலைத்துண்டாக்கி, தலையை அறுத்து, பனங்கனியை உதிர்ப்பதுபோலே உன் தலைகளை உதிர்த்து, தோள்களை வெட்டி, உடலைத்துளைத்து, உன் ரக்த சேஷத்தை (ரத்தம் தோய்ந்த வஸ்திரத்தை) உன் மனைவிகளுக்குக் காட்டுவதற்காக "போ; அனுமதிக்கிறேன்" [ரா-யு 59–143] என்று விட்டுவிடுவதும் செய்து இம்மாதிரியாகச் சித்திரவதை செய் தன்றோ உன்னை அவர் கொல்லப்போகிறார். இப்படி கொடிய கொலைச்சாவை விரும்பாமலிருந்தாயாகில் அவரை சரணம் பற்று என்றும் பொருள் கொள்ளலாம்.

'ராமபிரானால், வெறுக்கப்பெற்ற மனிதன் இதற்கு முன் இப் படிப்பாடுபட்டதுண்டோ?' என்ன,— (உன்னால்) இப்படி வேறொ ருவர் உன்னைப்போலே இவ்வளவு அபசாரப்பட்டதுமில்லை; அதனா

ஆததாயியாய், அஸஹ்யாபசாரம் பண்ணிச் சித்ரவதப்ராப்த னை உனக்கு இத்தனையும் வேணும். (ஸ்தாநம் பரீப்ஸதா வதஞ்சாநிச்சதா த்வயா) நீ இருக்குமாறு இருக்கும்போதும் அவர்வேணும்; நீ சாமாறு சாம்போதும் அவர் வேணும்.

அவர்தாம் இங்கே ஸந்நிஹிதராகவேண்டாவோ?– என்ன. (அஸௌ) இந்தா இங்கே (இத்தால் இங்கே) நிற்கிறார் என்கிறாள். (அஸௌ) **"राममेवानुपश्यति"** (**ராமமேவாநுபச்யதி**) என்றும், **"रामेति रामेति सदैव बुद्ध्या विचिन्त्य"** (**ராமேதி ராமேதி ஸதை₃வ பு₃த்₃த்₄யா விசிந்த்ய**) என்றும் எப்போதும் பெருமாளையே பா₄விக்கையாலே உருவெளிப்பாடாய்த் தனக்கு எப்பொழும் ஸந்நிஹிதராயிருக்கையாலே 'இவர்' என்று காட்டுகிறாள். இவனுக்கு இதுக்குமுன் அவரோடு வாஸனையில்லாமையாலும், ஸ்நேஹபூர்வாநுத்₄யாநமில்லாமையாலும், அந்யபரனாகையாலும் தோற்றுகிறதிறே. ப்ரதிகூல

---

லேயே இப்படிப் பாடுபட்டவருமில்லை. மஹாபாபியாய், பொறுக்கவொண்ணாத அபசாரம் செய்து, சித்திரவதை செய்யத்தகுந்தவனான உனக்கே இவ்வளவும் தகும். (இருப்பிடத்தை வேண்டியிருப்பவனாய், சாவை விரும்பாதவனான உன்னால்) நீ இப்போதிருப்பதுபோல் இருக்கவேண்டுமென்றாலும் அவரைப் பற்றவேணும்; உலகத்தார் சாவதுபோல் சாகவேண்டுமென்றாலும் அவரைப் பற்றவேணும்.

'நான் அவரைப் பற்றுவதற்கு அவர் அருகிலிருக்கவேண்டாமோ?' என்று கருத்தாகக்கொண்டு சொல்லுகிறாள்,–(இவர்) 'இதோ! இங்கே நிற்கிறார்' என்கிறாள். (இவர்)"ராமனையேபார்த்துக் கொண்டிருக்கிறாள் பிராட்டி" [ரா-ஸு 16-25] என்றும், "ராம ராம! என்று எப்போதும் புத்தியினாலே நினைத்து" [ரா-ஸு 32-11] என்றும் எப்போதும் ராமபிரானையே தியானிக்கையாலே பா₄வநாப்ரகர்ஷத்தாலே உருவெளித்தோற்றமுண்டாகித் தனக்கு எப்போதும் அருகிலேயே இருக்கையாலே 'இவர்' என்று கையாலே காட்டுகிறாள். ராவணனுக்கு இதுவரையில் அவரோடு பழக்கமில்லாமையாலும், "ஸ்நேஹபூர்வமநுத்₄யாநம்ப₄க்திரித்யபி₄தீ₄யதே" [லைங்கம்] [அன்போடு தியானிப்பதே பக்தியெனப்படுகிறது] என்கிற பக்தியில்லாமையாலும், இதரவிஷயங்களில் ஈடுபட்டிருப்பவனாகையாலும்

ஞன மாரீசனுக்குட்பட வாஸனையுண்டாகையாலே, **“वृक्षे वृक्षे हि पश्यामि”** (வ்ருக்ஷே வ்ருக்ஷே ஹி பச்யாமி) என்று பார்த்த பார்த்த இடமெங்கும் பெருமாளாய்த் தோற்றிற்றிறே. ராவணன் தானும் பூசலிலே வாஸனைபண்ணின பின்பு திருச்சரங்கள் நெஞ்சிலே பட்டு, **“स्मरन् राघवबाणानां”** (**ஸ்மரந் ராக₄வபா₃ணாநாம்**) என்று நினைத்துக்கொண்டு பட்டானிறே. (அ வெ ஸ ள) ஸந்நிஹிததே₃ஶவர்த்தமாந காலஸம்ப₃ந்தி₄யையிறே "அயம்" என்பது. இங்கு புத்தியில் அதூ₃ரத்வத்தாலும், தேசகாலவிப்ரகர்ஷத்தாலும், அதூரவிப்ரகர்ஷவாசியான அத₃ (अद्) ச்சப்தத்தாலே சொல்லுகிருள். (அஸௌ) **“अस्या देव्या मनस्तस्मिन् तस्य चास्यां प्रतिष्ठितम्”** (**அஸ்யா தே₃வ்யா மநஸ்தஸ்மிந் தஸ்யசாஸ்யாம் ப்ரதிஷ்டி₂தம்**) என்றும், “உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன் என்னையும் உன்னிலிட்டேன்” என்றும் சொல்லுகிறபடியே இருவர் திருவுள்ளமும் இருவர்பக்கலிலே தட்டுமாறிக்கிடக்கையாலே, பிராட்டிக்கு ஒருபோகியாகத் தோற்றக் குறையில்லையிறே.

---

தோற்றுதன்றோ. எதிரியான மாரீசனுக்குங்கூட ராமபிரானோடு பழக்கமிருந்தபடியாலே "மரங்கள்தோறும் ராமனைப் பார்க்கிறேன்" [ரா-ஆ39-14] என்று பார்த்த பார்த்தவிடமெல்லாம். ராமபிரானுய்த் தோற்றிற்றன்றோ. இந்த ராவணனும் சண்டையிலே ராமபிரானோடு பழக்கமேற்பட்டபின்பு அவருடைய அம்புகள் நெஞ்சிலேபட்டு, "ராகவனுடைய பாணங்களை நினைத்துவருந்தினை ராவணன்" [ரா-யு60-3] என்று நினைத்து நினைதுப் பாடுபட்டானன்றோ. (உவர்) அருகிலிருக்கும் தேசத்திலும், நிகழ்காலத்திலுமுள்ளவரை 'இவர்' என்னலாம். இங்கு பிராட்டியின் நினைவுக்கு அருகிலிருப்பவராகையாலும், தேசகாலங்களில் மிகவும் தூரஸ்தராயிருககையாலும் மிகவும் தூரமுமில்லாமல், மிகவும் அருகிலுமில்லாமலிருப்பவரைச் சொல்லும் 'உவர்' என்ற சொல்போன்ற அத₃ச்சப்தத்தாலே ராமபிரானைச் சொல்லுகிருள் பிராட்டி. (இவர்) "இந்த தேவியின் மனம் அவரிடமும், அவருடைய மனம் இவளிடமும் நிலைநிற்கிறது" [ரா-ஸு 15-52] என்றும், "உன்னைக்கொண்டென்னுள் வைத்தேன் என்னையும் உன்னிலிட்டேன்" [பெரியாழ் திரு 5-4-8] என்றும் சொல்லுகிறபடியே இருவர் திருவுள்ளமும் மற்றவர் பக்கம் பரஸ்பரம்

'ஆஸந்நராக்கி அவரைப் பெறும்போது நான் பண்ணின விரோதங்களை நினைத்து விக்ருதராயிருக்கிறவர் என்னைக் கைக்கொள்ளுவரோ?' என்ன,-(புருஷர்ஷப:) செய்தார் செய்த குற்றங்களை நினைத்திருக்குமவரல்லர்; பிழையறியாத பெருமாள் காண்! (புருஷர்ஷப:) **"अविज्ञाता" (அவிஜ்ஞாதா)** என்றும், **"न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया" (ந ஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா)** என்றும், **"अपराधानभिज्ञस्सन् सदैव कुरुते दयां" (அபராத$_4$ாநபி$_4$ஜ்ஞ: ஸந் ஸதை$_3$வ குருதே த$_3$யாம்)** என்றும் கவிபாட்டுக்கொண்டவர்காண்! (புருஷர்ஷப:) பிழையறியாதவளவேயல்ல; **"दोषो यद्यपि तस्य स्यात्" (தே$_3$ாஷோ யத்$_3$யபி தஸ்ய ஸ்யாத்)** என்றும், "குன்றனைய குற்றஞ்செயினும்" என்றும் *செய்த குற்றம் நற்றமாகவே கொள்ளும்படியான உத்தம புருஷர்காண்! (புருஷர்ஷப:) **"यदि वा रावणः स्वयम्" (யதி$_3$ வா**

---

மாறிக்கிடக்கையாலே பிராட்டி ஏகபோகமாக ராமபிரானைக் காணக்குறையில்லையன்றோ.

'அவரை அருகில் வரச்செய்து, நட்பைப்பெற முயலும்போதும், நான் செய்த ப$_4$ார்யாபஹாரம் முதலிய விரோதங்களை எண்ணிக் கோபங்கொண்டிருக்கும்ராமபிரான்என்னைஅங்கீகரிப்பரோ'என்ன,-(புருஷர்தலைவர்) தீங்குபுரிந்தவர்கள் செய்த தீங்குகளை நினைத்துக் கொண்டிருக்கும் ஸாமாந்ய புருஷனன்றுகாண்! பிழையறியாதபெருமாளாகையாலே புருஷர்தலைவர்காண்! (புருஷர்தலைவர்) "(குற்றங்களை) அறியாதவர்" [விஷ்ணுஸஹஸ்ரநாமம்] என்றும், "நெஞ்சையடக்கினவராகையாலே நூற்றுக்கணக்கான அபகாரங்களையும் நினைக்கமாட்டார் ராமபிரான்"[ரா-அ 1-11]என்றும், "குற்றங்களைக் காணுதவராயிருந்துகொண்டு எப்போதும் கருணைபுரிகிறுர்"[ ] என்றும் கவிபாடும்படியிருப்பவர்காண்! (புருஷோத்தமர்) பிழைகளை அறியாமலிருப்பது மாத்திரமன்று; "அவனுக்கு தோஷமிருந்தாலும் மிக நன்று" [ரா-யு 18-3] என்றும். "குன்றனைய குற்றம் செயினும் குணங்கொள்ளும்" [முதல்திருவ-11] என்றும்,"செய்தகுற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே" [திருச்சந்த-111] என்றும் சொல்லுகிறபடியே செய்த குற்றங்களையும் நன்மைகளாகவே கொள்ளும்படியான உத்தமபுருஷர்காண்! பிழையறிவுமவன் அதமன்; பிழையறியாதவன் மத்யமன்; பிழையை நன்மையாகக் கொள்ளுமவன், புருஷர்

ராவண: ஸ்வயம்)என்றும், "गच्छानुजानामि" (க$_3$ச்ச$_2$ா நுஜாநாமி) என்றும், ப்ரதிகூலதசையிலேயகப்பட உன்னை ரக்ஷிக்கைக்கு அழைத்துவிடுவது போகவிடுவதாகப் புகுகிறவர். நீயும் அனுகூலித்தால் விடுவரோ? (புருஷர்ஷப:) நீ புருஷர்களில் அத$_4$மனுயிருக்குமாபோலேகாண் அவரும் புருஷர்களில் உத்தமராயிருக்கும்படி. (புருஷர்ஷப:) "புருஷோத்தம:" என்றபடி; அதமனுகிறுன், செய்த குற்றத்தை நினைத்திருக்குமவன்; மத்யமனுகிறுன் குற்றத்தை நாளோட்டத்தோடே பொறுக்குமவன்; உத்தமனுகிறுன், குற்றங்காண்பானேன் மறப்பானேன் என்று முதலுக்குக் காணுதவன். (புருஷர்ஷப:) இப்படி அநுகூலியாதபக்ஷத்தில் அவருடைய ஶார்ங்க வ்யாபாரத்தாலே உனக்கு வ்யாபாதநம் என்று நினைத்திரு. (புருஷர்ஷப:) அவருடைய கொம்பாலே உனக்குக் கொலையென்று நினைத்திரு.

---

கள் அனைவரைக்காட்டிலும் உத்தமனுயிருப்பவன். (புருஷர்தலைவர்) "ராவணன் தானேயாயிருந்தாலும் அழைத்துவா" [ரா-யு 18-35] என்றும், "போய்வா; அனுமதிக்கிறேன்" [ரா-யு 59-143] என்றும், நீ எதிரியாயிருக்கும்போதும் உன்னை ரக்ஷிப்பதற்கு ஆள் விட்டு அழைத்துவரச்சொல்லுவது, 'இனியேனும் திருந்துவானே' என்னும் நோயாசையாலே போகவிடுவது முதலியன செய்யப்போகிறவர் நீயும் அநுகூலனுனல் விட்டுவிடுவரோ? (புருஷோத்தமன்) நீ புருஷர்களில் தாழ்ந்தவனுயிருப்பதுபோலேகாண் அவர் புருஷர்களில் சிறந்தவராயிருக்கும்படி. (புருஷர்தலைவர்) புருஷோத்தமர் என்றபடி. செய்த குற்றத்தை நினைத்திருப்பவன் அதமனுகிறுன்; குற்றத்தை நாள் செல்லச்செல்லப் பொறுக்குமவன் மத்யமன்; 'குற்றமிருப்பதைக் கண்டுவிட்டுப் பிறகு அதை மறப்பதில் என்ன பெருமை?'என்று நினைத்துக்குற்றத்தையே காணுமலிருப்பவன் உத்தமன். (புருடரேறு)புருஷரில் காளைபோன்றவர்; இப்படி நீ அவருக்கு அநுகூலனுகாவிடில் காளையான அவருடைய சார்ங்கவ்யாபாரத்தாலே-(1. சார்ங்கவில்லின் செயல் திறமையாலே. 2. சிருங்கமெனப்படும் கொம்பின் செயல் திறமையாலே) உனக்குச் சாவு ஏற்படும் என்று நினைத்திரு. (புருடரேறு) அவருடைய கொம்பாலே-(1.மாட்டுக் கொம்பு; 2. வில்)-உனக்கு மரணமேற்படும் என்று நினைத்திரு.

*இத்தால், இவனுக்கு இப்படி உபதேசம்பண்ணும் படியான பிராட்டியினுடைய நீர்மையின் ஏற்றமும், இப் படிப்பட்ட இந்த நீர்மையையகப்படக் கைதப்பும்படியான ராவணனுடைய பாபப்ராசுர்யமும் சொல்லிற்றாயிற்று.*

**ஸுந்தரகாண்டம் 21-வது ஸர்க்கம் 9-வது ச்லோகம்**

**इह सन्तो न वा सन्ति सतो वा नानुवर्तसे।**
**तथाहि विपरीता ते बुद्धिराचारवर्जिता॥**

**இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே।**
**தத₂ாஹி விபரீதா தே பு₃த்₃தி₄ராசாரவர்ஜிதா॥**

**பதவுரை:—இஹ**—*இந்த இலங்கையில்,* **ஸந்த:**—*நல்லோர்கள்,* **ந**—*இல்லையோ?,* **வா**—*அல்லது,* **ஸந்தி**—*இருக்கிறார்களோ?* **ஸதோ வா ந அநுவர்த்தஸே**—*இருக்கும் நல்லோர்களைத்தான் நீ அநுவர்த்திப்பதில்லையோ?* **தத₂ாஹி**—*ஏனெனில்,* **தே**—*உன்னுடைய,* **பு₃த்₃தி₄:**—*அறிவு,* **விபரீதா**—*சாஸ்திரமுறைக்கு மாறுபட்டதாகவும்,* **ஆசாரவர்ஜிதா**—*நன்னடத்தையோடு கூடியிராததாயும் இருக்கிறது.*

**அவதாரிகை:**—*பிராட்டி, ராவணன் தன்னை நோக்கிப் பிதற்றின பரப்பைக்கேட்டு, கோபக்ருபைகள் பிறந்து, ஹிதஞ்சொன்னால் மீண்டானாகில் "அங்கில் ஆகாதென்று விலக்குவாரில்லையோ? அவர்கள் இரங்கும்படி அநுவர்த்தி*

---

இந்த சுலோகத்தால் இவனுக்கு இப்படி உபதேசம் செய்யும்படியான பிராட்டியின் கருணைப்பெருமையும், இப்படிப்பட்ட இக்கருணையாலும் கரையேற்றமுடியாதபடி கைதவறிப்போம்படியான ராவணனுடைய பாவமிகுதியும் சொல்லிற்றாயிற்று

அவதாரிகை:—சீதாபிராட்டியார், ராவணன் தன்னைக் குறித்துப் பிதற்றின பெரும்பிதற்றலைக்கேட்டுக் கோபமும் கருணையும் பிறந்து, இவனுக்கு நன்மை சொன்னால் மீளுவனோ' என்று நினைத்து, "உன் ஊரில நீ செய்யும் தீச்செயலைத் தவறென்று தடுப்பாரில்லையோ? அல்லது நீதான் அவர்கள் உன்மேல் கிருபைபுரியும்படி அவர்

*யாயோ! அப்படியிருந்ததுகாண் உன் புத்தியும் அநுஷ்டாநமும்" என்கிருள்.*

**வ்யா:**—*(இஹ) நல்லமனிதர் நடையாடாதபடி ராக்ஷஸ பூ$_4$யிஷ்ட$_2$மான இந்த தேசத்திலே. (இஹ) பள்ளரும் பறையருமாய்ப் பத்துக்கோடி ப்ரஜாவர்க்கம் நடையாடுகிற இத்தேசத்தில். (இஹ) உட்படை வீடும், புறப்படைவீடும் படங்கும் பாளையமுமாய்ப் பெரும் பரப்பான இத்தேசத்தில். (இஹ) உண்பாரும் உடுப்பாரும் பூசுவாரும் முடிப்பாரும் நல்லது தீயது அறிந்திருக்கிற இத்தேசத்தில். (இஹ)* **"अग्निहोत्राश्च वेदाश्च राक्षसानां गृहे गृहे" (அக்$_3$நிஹோத்ராச்ச வேத$_3$ாச்ச ராக்ஷஸாநாம் க்$_3$ருஹே க்$_3$ருஹே)** *என்றும்,* **"शुश्राव ब्रह्मघोषांश्च विरात्रे ब्रह्मरक्षसाम्" (சுச்ராவ ப்$_3$ரஹ்மகோ$_4$ஷாம்ச்ச விராத்ரே ப்$_3$ரஹ்மரக்ஷஸாம்)** *என்றும் ஓதுவார் ஓத்துச்சொல்லுவாராய் வேதவைதிகமர்யாதை நடத்துகிறதாக பாவிக்கிற*

---

களுக்கு சுச்ரூஷை செய்வதில்லையோ? அப்படியன்றோ இருந்தது உன் அறிவும் ஆசாரமும்" என்கிருள்,

வ்யா—(இங்கு) நல்லமனிதர் வாழமுடியாதபடி அரக்கர் மிகுந்த இந்த தேசத்தில். (இங்கு) பள்ளரும் பறையரும்போலே மிகத்தாழ்ந்தவர் பத்து கோடி குடிகள் வாழ்கிற இந்த தேசத்தில. (இங்கு) நகரத்தின் உள்ளிருக்கும் ஆயுதசாலைகளும், வெளியிலிருக்கும் ஆயுத சாலைகளும், சேனைக் கூடாரமும், சேனையுமாய்ப் பெரிய பரப்பையுடைய இந்த தேசத்தில். [கீழ் மூன்று பொருள்களும் இஹ ஸந்தோ ந' (இங்கு நல்லார் இல்லையா?)என்ற கேள்விக்கு அனுகுணமானவை. மேல் நான்கு பொருள்களும் 'வாஸந்தி' (அல்லது இருக்கிருர்களா) என்றதற்கு அனுகுணமானவை.] (இங்கு) உணவு உண்பவரும், உடை உடுப்பவரும், பூச்சுப் பூசுவாரும், பூமுடிபபாருமாக நன்மை தீமை அறிந்திருக்கிற இந்த தேசத்தில். (இங்கு) "அரக்கர்களின் வீடுதோறும் அக்னிஹோத்ராநுஷ்டானமும வேத கோஷமும் காணப்பட்டது"[ ] என்றும், "அரக்கர்களில் அந்தணராயிருப்பவருடைய வேதகோஷங்களையும் ஹனுமான் கேட்டான்" [ரா-ஸு 18-2] என்றும் வேதம் ஓதுவாரும் ஓதுவிப்பாருமாய் வேதவைதிகவரம்பு தவருமலிருப்பதாக வெளிக்காட்டுகிற இந்த

இத்தேசத்தில். (இஹ) "तपस्सन्तापलब्धस्ते सोयं धर्मपरिग्रहः" (தபஸ்ஸந்தாபலப்$_3$த$_4$ஸ்தே ஸோயம் த$_4$ர்மபரிக்$_3$ரஹ:) என்றும். "प्राप्तं धर्मफलं तावद्भवता" (ப்ராப்தம் த$_4$ர்மப$_2$லம் தாவத்$_3$ப$_4$வதா) என்றும் தபஸ்ஸந்தப்தபலமும் அறிந்து நடத்துகிற இத்தேசத்தில். (இஹ) ராஜாக்களும் மந்த்ரிகளும், புரோஹிதரும் சடங்கிகளும், பட்டர்களும் ஶிஷ்டர்களுமாய்ப் பாரிப்புண்டான இத்தேசத்திலே.

இப்பாரிப்புக்கு இப்போது வந்த குறையென்? என்னில்: (ஸந்தோ ந) பதர்க்கூடு உண்டத்தனைபோக்கி, ஸாரபூதரைக் கண்டிலோமே. (ஸந்தோ ந) பராநர்த்தபரரான ப்ரஹஸ்த தூ$_4$ம்ராக்ஷ வஜ்ரத$_3$ம்ஷ்ட்ர ப்ரமுக$_2$ரான அஸத்துக்களைக் கண்டோமித்தனை. பரஹிதபரராய், ஸத்தையையுண்டாக்குகிற ஸத்துக்களைக் கண்டிலோம். (ஸந்தோ ந ஸந்தி) "अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः" (அஸ்தி ப்$_3$ரஹ்மேதி சேத்$_3$வேத$_3$ ஸந்தமேநம் ததோ வித$_3$:) என்று பகவத்ஜ்ஞானத்தாலே தாங்களும் உளராய் பிறரையும் உண்டாக்குமவர்கள்

---

தேசத்தில். (இங்கு) "தர்மபலம் நீ தவம்புரிந்ததால் கிடைத்தது" [ரா-ஸு 51-25] என்றும், "தர்மத்தின் பலனே (இந்த லங்காராஜ்யரூபத்தில்) உன்னால் அடையப்பட்டிருக்கிறது" [ரா-ஸு 51-29] என்றும் தவம்புரிவதின் பலனறிந்து அநுஷ்டிக்கிற இந்த தேசத்தில். (இங்கு) அரசர்களும், மந்திரிகளும், புரோஹிதரும், கர்மாநுஷ்டானபரரும், பூஜகர்களும், ஆசாரசீலருமாய்ப் பெருமைபெற்றிருக்கும் இந்த தேசத்தில்.

'இந்தப் பெருமைக்கு இப்போது என்னகுறை வந்தது?' என்னில்: (நல்லோர் இல்லையா?) பதர்க்கூட்டம்போலே ஸாரமில்லாத அறிவிலிகளைக் கண்டோமேயொழிய அறிவுடையாரைக் காணவில்லையே. (நல்லோர் இல்லை) பிறர்க்கு இடர் விளைக்கும் பிரஹஸ்தன், தூம்ராக்ஷன், வஜ்ரதம்ஷ்ட்ரன் முதலான தீயவர்களைக் கண்டோமேயொழியப் பிறர்க்கு நன்மை விளைப்பாராய் உய்வளிக்கின்ற உயர்ந்தோரைக் காணவில்லை. (உள்ளவர் இல்லை) "ப்ரஹ்மஜ்ஞானம் இருந்ததாகில் அவனை நல்லோன் [இருப்பவன்] என்று அறிகிறார்கள்" [தை-ஆந-6] என்று பரம்பொருளறிவாலே தாங்

*இல்லையாயிருந்தது.* (ஸந்தோ ந) *ஒரு ஸத்து உண்டானல்.* **"त्वां तु धिक्कुलपांसनम्"** (**த்வாம் து தி$_4$க் குலபாம்ஸநம்**) *என் றெண்ணித் தள்ளிக் கதவையடைப்பார்களோ? பலருண் டாகிலிறே ஈடேறலாவது; அப்படிக்குப் பலர் இல்லையா யிருந்தது.* **"तं सन्तः श्रोतुमर्हन्ति सदसद्व्यक्तिहेतवः" (தம் ஸந்த: ச்ரோதுமர்ஹந்தி ஸத$_3$ஸத்$_3$ வ்யக்தி ஹேதவ:)** *ஸாராஸார விவேகிகள் இல்லையோ?*

*சிறிது நிரூபியா "வா" என்று பூர்வபக்ஷத்தை வ்யா வர்த்திப்பிக்கிருள். (வா) இல்லையென்னவொண்ணுது.*

*இல்லையென்னவொண்ணுதாகில் சொல்லும்படியென்? என்னில் (ஸந்தி) உண்டே. (ஸந்தி) இப்படைவீட்டிலே இத்தனை விஜயஸம்பத் புத்ராதி ஸம்ருத்தியுண்டாகையாலே இதுக்கடியான தர்மாநுஷ்டாநமும். அதுக்கு உபதேஷ்*

---

களும் வாழ்வுபெற்றுப் பிறரையும் வாழவைக்குமவர்கள் இல்லையா யிருந்தது. (நல்லோர் இல்லையோ) விபீஷணனைப்போல் நல்லானை ஒருவனிருந்தால், "குலத்தைக் கெடுக்கும் கோடரிக்காம்பான நீ ஒழிந்துபோ" [ரா-யு 16-15] என்று நினைத்து அவனை வெளியே தள்ளிக் கதவை மூடிவிடுவார்களோ இங்குள்ளார்? (இருக்கிருர்க ளல்லவோ) 'ந ஸந்தி' என்கிற பன்மையாலே, 'நல்லோர் பலர் இருந்தாலன்றோ ஈடேறலாம்; அப்படி பலர் இலராயிருந்தது' என் னும் கருத்து தோற்றுகிறது. "அந்த ரகுவம்ச காவியத்தை குண தோஷங்களை வெளிப்படுத்தும் ஸத்துக்கள் கேட்கவேணும்" [ரகு வம்சம் 1-10] என்கிறவிடத்திலும் 'ஸத்துக்கள்' என்று பன்மையாக வன்றோ சொல்லப்பட்டது. நன்மை தீமையறிவார் பலர் இலரோ என்கை.

'நல்லோர்கள் இல்லையா' என்றபின் சிறிது ஆலோசித்தவுடன் 'வா' (அல்லது) என்னும் பதத்தாலே முன்சொன்ன பூர்வபக்ஷார்த் தத்தைத் தள்ளுகிருள். (வா) நல்லோர் இல்லையென்பது இல்லை. இல்லையென்பது இல்லையென்ருல் கருத்தென்ன? என்னில்: (இருக் கிருர்கள்) இருக்கிருர்களே. (இருக்கிருர்கள்) இவ்விலங்கையில் இவ்வளவு வெற்றிகளும், செல்வமும், பிள்ளைகளும் முதலிய பெரு மைகள் இருக்கிறபடியாலே இதற்குக் காரணமான தர்மாநுஷ்டா

டாக்களான ஸத்துக்களும் உண்டாகவேணும். அப்படி யாகாதபோது அகாரண கார்யோத்பத்தி ப்ரஸங்கம் வரும். (ஸங்தி) ஸத்துக்களென்று சில ஜாதியன்றே. அநீதியைச் சொல்லுதல் செய்தல் செயலிற்போந்திறே அஸத்துக்க ளாவது. ஸதூ₃ர்த்தே₂ாபதேஶம் பண்ணினபோது ஸத்துக் களிறே. ஆகையாலே, அவனுச்கு நல் வார்த்தை சொன்ன அகம்பந மாரீச மால்யவத் கும்பகர்ண விபீஷண ப்ரப்ருதிகள் உண்டாகையாலே ஸத்துக்கள் உண்டே. (ஸங்தி) ஸத்தா மாத்ரமே உள்ளது. கார்யகரத்வமில்லை.

'ஸத்தையுண்டாகில் உபதேசியார்களோ?' என்ன, (ஸதோ வா நாநுவர்த்தஸே) உண்டானுலும், "**नापृष्टः कस्य-चिद्ब्रूयात्**" (நாப்ருஷ்ட: கஸ்யசித்₃ ப்₃ருயாத்) என்றும் "**प्रणिपातेन परिप्रश्नेन सेवया उपदेक्ष्यन्ति**" (ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா உபதே₃க்ஷ்யந்தி) என்றும், ப்ரணிபாத ப்ரச்நாத்₃யநுவர்த்த

---

னமும், அந்த தர்மத்தை உபதேசிக்கும் நல்லோர்களும் இருக்க வேணும். அப்படியில்லாவிடில் காரணமில்லாமல் காரியம் உண் டாகவேண்டிவரும். (இருக்கிருர்கள்) நல்லோர்களென்று தனியே ஒரு ஜாதியில்லையே! அநியாயத்தைச் சொல்லுவதோ செய்வதோ செய்தால் தீயவர்களாகிருர்கள். அப்படியே நல்லுபதேசம் பண்ணும் போது அரக்கஜாதியினரும் நல்லோர்களாகின்றனரன்ரு. ஆகை யாலே, ராவணனுக்கு நல்ல வார்த்தை சொன்ன அகம்பனன், மாரீ சன், மால்யவான், கும்பகர்ணன், விபீஷணன் முதலானுர் உண்டா கையாலே நல்லோர் இருக்கிருர்களே. (இருக்கிருர்கள்) இருக்கிருர் களேயொழிய, அவர்களிருப்பு ராவணனைத் திருத்துவதில் பயன் பெறவில்லை.

நல்லோர் இருந்தனராகில் நல்லுபதேசம் செய்யாமலிருப்பார் களா? என்னில்,–(நல்லோர்க்கு சுச்ரூஷை செய்வதில்லையா) நல் லோர் இருந்தாலும், "கேட்காமலிருக்கும்போது எவனுக்கும் நற் பொருளைச் சொல்லக்கூடாது" [மநு 2-110] என்றும், "காலில் விழுவது, கேட்பது, கைங்கரியம செய்வது ஆகிய செயல்களாலே ப்ரீதியடைந்து ஞானிகள் நல்லறிவை உபதேசிக்கிருர்கள்" [கீதை 4-34] என்றும் நமஸ்கார ப்ரச்ந சுச்ரூஷைகள் பண்ணிக்கேட்டா

நம் பண்ணிக்கேட்டாலிறே அவர்கள் சொல்லுவது. அப்படிக்கு அநுவர்த்தியாயாகாதே? (ஸதோ வா நாநுவர்த்தஸே) "त्रिवर्षपूर्वः श्रोत्रियोऽभिवादनमर्हति" (த்ரிவர்ஷபூர்வ: ச்ரோத்ரியோऽபி₄வாத₃நமர்ஹதி) என்றும், "ज्ञानविज्ञानसंपन्ना भक्तिमन्तो जनार्दने । प्रणन्तव्या विशेषेण सात्त्विकैर्धर्मचारिभिः॥" (ஜ்ஞாநவிஜ்ஞாந ஸம்பந்நா ப₄க்திமந்தோ ஜநார்த்த₃நே। ப்ரணந்தவ்யா விஶேஷேண ஸாத்விகைர் த₄ர்மசாரிபி₄:॥) என்றும், 'தண்சேறை யெம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என் தலைமேலாரே" என்றும் யோக்₃யாநுவர்த்தநம் விஹிதமாயிருக்க, அது செய்யாயாகாதே? என்கிறாள். (ஸதோ வா நாநுவர்த்தஸே) "अप्रियस्य तु पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः" (அப்ரியஸ்ய து பத்₂யஸ்ய வக்தா ச்ரோதா ச து₃ர்லப₄:) என்றும், "दुर्लभो मानुषो-मन्ये वैकुण्ठप्रियदर्शनम्" (துர்லபே₄ா மாநு₃ஷோ-மந்யே வைகுண்ட₂ ப்ரியத₃ர்ஶநம்) என்றும் அப்படிக்கொத்த மஹாநுபாவரைக் கிட்டுகையாவது, பெற்று வைத்து அழைக்கிறுயாவது

---

லன்றோ அவர்கள் உபதேசிப்பது; அப்படிச் கேட்டதில்லையோ நீ? (நல்லோர்க்கு சுச்ரூஷை செய்வதில்லையோ) "மூன்று வருஷம் மூத்தவனை ச்ரோத்ரியன் (வேதமறிந்தவன்) வணங்கத்தக்கவன்" [ஆபஸ்தம்ப 1-14-13] என்றும், "அறிவையும் பேரறிவையும் உடையவர்களாய் பகவானிடம் பக்தியுடையவர்கள் தர்மவழி நடக்கும் ஸாத்விகர்களாலே மிகவும் நமஸ்கரிக்கத்தக்கவர்கள்" [ ] என்றும், "தண்சேறையெம்பெருமான் தாள் தொழுவார் காண்மின என் தலைமேலாரே" [பெரிய திருமொழி 7-4-1] என்றும் நல்லோர்களை அநுவர்த்திப்பது சாஸ்திரங்களில் விதிக்கப் பட்டிருக்க, அது செய்யவில்லையோ எனகிருள். (நல்லோர்க்கு சுச்ரூஷை செய்யாயோ) "இனியதலலாவிடினும் நன்மை பயக்கும் வார்த்தையைச் சொல்லுவாரும் கேட்பாரும் கிடைத்தற்கரியர்" [ரா-யு26-21] என்றும் "துர்லபே₃ா மாநுஷோ தே₃ஹ: தே₃ஹிநாம் க்ஷணப₄ங்கு₃ர:, தத்ராபி துர்லப₄ம் மந்யே வைகுண்ட₂ப்ரிய த₃ர்சநம்" [பாகவதம் 11-2-29] [கணத்திலழியும் மனிததேஹமே கிடைத்தற்கரியது; வைகுண்டநாதனடியாரைக் காண்பது அதிலும் கிடைத்தற்கரியதென நினைக்கிறேன்.] என்றும் அப்படிப்பட்ட மஹாநுபாவரை அணுகுவதாவது, அவர்களை அருகிலேயே பெற்றுவைத்தும் அழைப்

ஆகாதோ? (ஸதோ வா நாநுவர்த்தஸே) பூர்வாவஸ்தையில் இரங்கும்படி, **"प्रणिपत्याभिवाद्य च"** (ப்ரணிபத்யாபி₄வாத்₃ய ச) என்று அநுவர்த்திக்கவேணும். உத்தராவஸ்தையில் க்ருதஜ்ஞனைகையாலே, **"त्वत्तो हि वेदाध्ययनमधीतमखिलम्"** (த்வத்தோ ஹி வேத₃ாத்₄யயநமதீ₄தமகி₂லம்) என்றும், "என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேன்" என்றும் அநுவர்த்திக்க ப்ராப்தம். அது செய்யாயாகாதே? (நாநுவர்த்தஸே) **"प्रत्यक्षे गुरवः स्तुत्याः"** (ப்ரத்யக்ஷே கு₃ரவ: ஸ்துத்யா:) என்று ஸ்தோத்ரம் பண்ணவேண்டியிருக்க, **"सोऽहं परुषितस्तेन दासवच्चावमानितः"** (ஸோஹம் பருஷிதஸ் தேந த₃ாஸவச்சாவமாநித:) என்று நிந்திப்பாயாகாதே. அன்றியிலே, (நாநுவர்த்தஸே) என்று ப்ரணிபாதாதிகளையொழிய, **"यथा ते तेषु वर्तेरन् तथा तेषु वर्तेथाः"** (யத₂ாதே தேஷு வர்த்தேரந் தத₂ா தேஷு வர்த்தேத₂ா:) **"यद्यदाचरति श्रेष्ठः तत्तदेवेतरे जनाः"** (யத்₃ யத₃ாசரதி ச்ரேஷ்ட₂ஸ் தத் ததே₃வேதரே ஜநா:) என்றும், "பேசிற்றே பேசலல்லால்" என்றும் கௌரவ்யர் சொன்ன வார்த்தையுஞ்

---

பதாவது செய்வதில்லையோ? (நல்லோர்க்கு சுச்ரூஷை செய்யாயோ) ஆச்ரயிப்பதற்குமுன் அவர்கள் கிருபை புரியும்படி "முனிச்ரேஷ்டரான பராசரரை வணங்கி அபிவாதனம் செய்து மைத்ரேயர் கேட்டார்" [வி-பு1-1-1] என்று சுச்ரூஷை செய்யவேணும். ஆச்ரயித்த பின்பு நன்றியறிபவனுகையாலே, "வேதம் முழுவதும் உம்மிடமே என்னுல் ஓதப்பட்டது" [வி–பு 1–1–2] என்றும், "என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென்செய்கேன்?" [திருவாய் 2-7-8] என்றும் சுச்ரூஷை செய்வது தக்கது. அதுசெய்வதில்லையோ? (சுச்ரூஷை செய்வதில்லையோ) "ஜ்ஞாநோபதேசம் செய்பவர்கள் நேரிலேயே துதிக்கத்தக்கவர்கள்" [ ] என்று துதிக்கவேண்டியிருக்க, "நான் அவ்விராவணனுல் கடுஞ்சொல் பேசப்பட்டேன். வேலையாளைப்போலே அவமதிக்கப்பட்டேன்" [ரா-யு 17-16] என்கிறபடியே நிந்தித்திடுவாயோ? (அநுஸரிப்பதில்லையோ) என்கையாலே காலில் விழுவது முதலிய சுச்ருஷைகள் நிற்க, "ஞானிகள் அவ்விஷயங்களில் எப்படி நடக்கிருர்களோ, அப்படியே அவ்விஷயங்களில் நடப்பாயாக" [தைத்சீக்ஷா-11] என்றும், "உயர்ந்தவன் அநுஷ்டிப்பதையே மற்றவர்கள் அநுஷ்டிக்கிருர்கள்" [கீதை 3-21]

*செய் (அஞ்செய்?) என்று நாடி அப்படிக்கே செய்யா யாகாதே என்றுமாம். (ஸதோ வா நாநுவர்த்தஸே) அவர்கள் ஸத்தையுண்டானபோது சொல்லியல்லது நில்லார்கள்; நீ அநுஷ்டியாததாயிருந்தது.*

*'நேற்று வந்து நின்றாள்; அநுவர்த்திப்பனோ, அநுவர்த்தியானோ என்று அறிந்தபடியென்?' என்ன,-(ததா ஹி) அப்படியிருந்ததுகாண்! (ததா ஹி) ஸம்ப்ரதிபத்தியிலேயாய், இவ்வர்த்தத்தில் விப்ரதிபத்தியுண்டோ? ஸர்வலோகப்ரதிபந்நமன்றோ? அன்றியிலே, (ததா ஹி) என்று "ஹி ஹேதௌவா"-'ததாத்வாத்' என்று அநுவர்த்தியாய் என்கிற ஸாத்₄யத்துக்கு ஹேது சொல்லுகிறாளாகவுமாம். (ததாத்வாத்) அப்படியாகையால். 'ததாத்வாத்' என்று, தச்சப்தம்*

---

என்றும்,"பேசிற்றே பேசலல்லால்" [திருமாலை-22] என்றும் கௌரவிக்கத்தக்க பெரியோர்கள் சொன்ன வார்த்தை அழகியதென்று நினைத்துஅப்படியே அதை அநுஸரிப்பதில்லையோஎன்றும் கொள்ளலாம. (நல்லோர்களை அநுஸரிப்பதில்லையோ) அவர்கள் உளராகையாலே சொல்லாமல விடார்கள்; நீ அநுஷ்டிக்காமலிருப்பதே குறை.

"இவள் இலங்கைக்கு ஸமீபகாலத்தில் வந்தவள்; அப்படியிருக்க ராவணன் நல்லோர்களை அநுவர்த்திப்பானோ மாட்டானோ என்று எப்படி அறிந்தாள்?" எனனில: (அப்படியேயன்றோ) அப்படியேயன்றோ இருக்கிறது. நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லையென்று ஸுப்ரஸித்தமாயன்றோ இருப்பது. 'ஹி-ப்ரஸித்₃தௌ' (அப்படியேயன்றோ) 'ஹி' என்னும் பதம் 'இவ்வர்த்தம் அனைவர்க்கும் உடன்பாடு' என்று காட்டுகிறது. இவ்வர்த்தத்தில் கருத்து வேறுபாடு உண்டோ? உலகிலுள்ள அனைவரும் அங்கீகரித்ததன்றோ இது என்கை. அன்றிக்கே (ஏனெனில) "ஹி ஹேதௌவா" ['ஹி' என்னும் பதம் ஹேதுவெனும் பொருளிலும் பிரயோகிக்கப்படுகிறது.] 'அப்படியிருக்கையாலே' என்று 'நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லை' என்கிற ஸாத்யத்திற்கு ஹேது சொல்லுகிறாள் பிராட்டி என்றும் கொள்ளலாம். (அப்படியிருக்கையாலே) "அப்படி" (அதுபோலே) என்ற சப்தத்தில் உள்ளடங்கியிருக்கும் 'அது' என்னும

ப்ரக்ருதபராமர்சியாகையாலே கீழ்ச்சொன்ன ஸாத்யத்தைப் பராமர்சித்து, அநுவர்த்தியாமையால் என்றபடியிறே. அப்போது, 'அநுவர்த்தியாமையால்' என்ற ஹேது ஸாத்₄யாவிஶிஷ்டமாகாதோ? என்னில். ஆகாது; ப்ரக்ருத பராமர்ஶத்துக்குக் குறையில்லை; ப்ரக்ருதந்தான் உக்தமென்றும், புத்திஸ்தமென்றும் இரண்டு; (விபரீதாதே புத்தி:) என்று வக்ஷ்யமாணமாயே புத்திஸ்திதையாய், ப்ரக்ருதத்தைப் பராமர்ஶிக்கையால் ஒரு குறையில்லை. எங்ஙனேயென்னில்: அநுவர்த்தநாபா₄வஸாத்₄யமாயும், புத்திவைபரீத்யஹேதுவாயும் இருக்கையாலே ஸாத்₄யாவிஶிஷ்டமாகாது. 'ததாத்வாத்' தனக்குப் பொருளாய்வைத்தது என்? என்னில்; உன்னுடைய அநுவர்த்தனத்துக்கு ஸாதநமாயிருப்பதொரு ஹேதுவை உடைத்தாகையால் என்றபடி.

---

சப்தம் ப்ரகரணத்தில் வந்த மற்றொரு சப்தத்தைக் காட்டுமாகையால், கீழ்ச்சொன்ன ஸாதயமாகிற 'நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லை' என்னும் சொலதொடரையே காட்டுகிறது; ஆக. 'நீ நல்லோர்களை அநுவர்த்தியாமையால்' எனறு இதற்குப் பொருளாகிறது; அப்போது ஹேதுவும் நீர் ஸாத்யமாகச் சொன்னதும் ஒன்றாகவே ஆகிவிடாதோ?'' எனனில்,— 'அப்படி' என்னும சப்தத்திலுள்ள 'அது' என்னும் சப்தம் ப்ரகரணத்தில வநததான ப்ரக்ருத சப்தத்தையே காட்டினாலும் இந்த தோஷம் வாராது. ப்ரக்ருதமாவது—'முன் சொன்னது' என்றும், 'முன் புத்தியிலிருந்தது' எனறும் இருவகைபபடும். இங்கு 'அது' என்னும் பதம், பின சொல்லப்படுவதாய், புத்தியில் ஓடுவதான 'உன் புத்தி விபரீதமாயிராநின்றது' என்னும் சொல்தொடரைக் காட்டுகையால் ஒரு குறையுமில்லை. குறையில்லாமலிருப்பது எப்படி யெனில்: ''நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லை; ஏனெனில் உன் புத்தி விபரீதமாயிருக்கிறபடியால்'' என்னும் அநுமானம் அநுவர்த்தன மின்மையை ஸாத்யமாகவும், அறிவுகேட்டை ஹேதுவாகவும் கொண்டிருக்கிறபடியால் ஹேதுவும் ஸாத்யமும ஒன்றாகாது. ''ததாஹி'' (அப்படியிருக்கையால்) என்ற சப்தத்துககுத் திரணட பொருள் எனனவெனில்: 'நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லை என்பதை ஸாதித்துத் தரும் ஒரு ஹேது இருக்கிறபடியால்' என்பதேயாகும்.

''ததஹாத்வாத்'' என்று புத்திஸ்தஹத்தை அருளிச்செய்ததித் தனையன்றே. அந்த ஹேதுவேதென்னில்: (விபரீதாதே புத்தி:) உன்னுடைய புத்தி விபரீதையாயிராநின்றதே. நதீபூரத்தைக் கண்டு பர்வதபரிஸரத்தில் வ்ருஷ்டியை அநுமிக்குமாபோலே, 'தவ புத்திவைபரீத்யாத்' என்று காவ்யலிங்காநுமாநம் சொல்லுகிறாள். (விபரீதா புத்தி:) ஶாஸ்த்ரவிஹிதப்ரகாரத்துக்கு விருத்தமாயிராநின்றது.(விபரீதா)பரதாரபரத்ரவ்ய பரஹிம்ஸாதிகள் நிஷித்தமாயிருக்க, அவை கர்த்தவ்யங்களென்று நினைவு நடவாநின்றதே. (விபரீதா புத்தி:) **''बुद्ध्या ह्यष्टाङ्गया युक्तः''** (புத்த்யா ஹ்யஷ்டாங்கயா யுக்த:) என்றும்,

---

'அப்படியேயிருக்கையால்' என்று புத்தியிலுள்ள ஒரு ஹேதுவை அருளிச்செய்வதாகவனறே சொன்னது; அந்த ஹேது என்ன? எனில: (உன் அறிவு கெட்டுப்போயிருந்தது) உன் அறிவு கெட்டுப் போயிருப்பதான இதுவே ஹேது என்கை. நதியில் வெள்ளம வருவதைககண்டு, அநத நதிக்கு மூலஸ்தானமான மலைத்தாழ்வரையில் மழைபெய்திருககிறது என்று அநுமிப்பதுபோலே, 'உன அறிவு கெட்டிருப்பதால் நீ நல்லோர்களை அநுவர்த்திப்பதில்லை என்று தெரிகிறது' என்று காவ்யலிங்காநுமாநம் சொல்லுகிறாள். ['ஸமர்த்தநீயஸ்யார்த்தஸ்ய காவ்யலிஙகம் ஸமர்த்தநம்' (குவலயாநநதம்) (நிரூபிக்கவேண்டிய அர்த்தத்தை ஹேது சொல்லி நிரூபிப்பது காவ்யலிங்கமென்னும அலங்காரமாகிறது) என்பது காவ்யலிஙகத்தின் லக்ஷணம்.] (விருத்தமான அறிவு) உன் அறிவு, சாஸ்திரஙகளில் சொல்லப்பட்ட முறைக்கு மாறுபட்டு இருக்கிறது. (விருத்தமானது) பிறர்மனைவி, பிறர்பொருள், பிறரைஹிம்ஸிப்பது ஆகியவை தாழ்ந்தவையாயிருக்க, அவைகளில் விருப்பமிருக்கின்றதே உனககு என்கிறாள். (புத்தி மாறுபட்டிருந்தது) ''புத்த்யா ஹ்யஷ்டாங்கயா யுக்தம்'' [ரா-கி54-2] [''சுச்ரூஷா ச்ரவணம சைவ க்ரஹணம் தாரணம் ததா ஊஹாபோஹார்த்த விஜ்ஞாநம தத்வஜ்ஞாநம் ச தீகுண''] (1. (விஷயங்களைக்) கேட்க நினைப்பது, 2. கேட்பது 3. அறிவது, 4. தரிப்பது 5. இப்படியிருக்கும என்று ஊகிப்பது, 6. 'இப்படியிராது' என்று தளளுவது, 7. வார்த்தைகளுக்குப் பொருளறிவது, 8. உண்மையை அறிவது) ஆகிய எட்டும் அறிவின் குணங்கள்) எனகிற எட்டு அங்கங்களையுடைய புத்தியோடு கூடியவன் அங்கதன்] என்றும், ''ராமபிரான் நல்ல

"बुद्धिमान् मधुरभाषी" (பு₃த்₃தி₄மாந் மது₄ராப₄ாஷீ) என்றும் உத்தாரக ஶுச்ரூஷாதிகளால் ஸம்பந்நையன்றிக்கேயிருந்ததே! (விபரீதா) "बुद्धिनाशात्प्रणश्यति" (பு₃த்₃தி₄நாஶாத் ப்ரணச்யதி) என்று அநர்த்தஹேதுவாயே இருந்தது. (விபரீதா) "परीतन्तु दिनं प्रोक्तं" (பரீதம து தி₃நம் ப்ரோக்தம்) என்று நாளாய், விஹதமான தினத்தையுடையதாயிருந்தது. அதாவது:— ஆயுர்ஹாநியை உடைத்தாயிருந்தது என்கை. (தே புத்தி:) அறிவுடையாரை அநுவர்த்தியாதேயிருக்கிற உன்னுடைய புத்தி. "नीतिमान् बुद्धिसंपन्नो धीरो दक्षः शुचिर्नृपः" (நீதிமாந் பு₃த்₃தி₄ஸம்பந்நோ தீ₄ரோ த₃க்ஷ: ஶுசிர் ந்ருப:) என்று ராஜாக்களாகில் ஏவங்குணயுத்தராய்(க?) ப்ராப்தராயிருக்க. அவையில்லாத புதநி. (தே புந்தி: விபரீதா) "प्रकृत्या राक्षसो ह्येष:" (ப்ரக்ருதயா ராக்ஷஸோ ஹ்யேஷ:) என்றும், "विपरीतस्तथासुरः" (விபரீதஸ் தத₂ாஸுர:) என்றும் இந்த புக்திவைபரீத்யத்துக்குத் தகுதியான ஜந்மமுடைய உன்னுடைய புத்தி.

---

புத்தியுடையவர்; இனிமையாகப் பேசுமவர்" [ரா-அ 1-13] எனறும் கடைத்தேற்றும் சுச்ரூஷை முதலான புத்திகுணங்கள் இல்லாமலிருந்ததே உன் புத்தி. (விபரீதமாயிருந்தது) "அறிவுகேட்டாலே அழிந்து விடுகிறுன" [கீதை 2-63] என்கிறபடியே அழிவுக்குக்காரணமாகவேயிருந்தது. (விபரீதமாயிருந்தது) "பரீதம் என்னும் சொல் நாளைச் சொலலுகிறது" [ ] எனறு பரீதசப்தம் நாளைச் சொல்லுகிறதாகையாலே, விபரீத சப்தம் 'வீணுன நாளையுடையதாயிற்று' என்றுபொருளாகிறது. அதாவது:-உன் ஆயுளை அழிப்பதாயிருந்தது என்றபடி. (உன அறிவு) அறிவுள்ளவர்களை அநுவர்த்தியாமலிருக்கும்உன்புத்தி,"அரசனுயிருப்பவன் நீதி நிறைந்தவனுகவும்,புத்தியுள்ளவனுகவும, தைரியமுள்ளவனுகவும், ஸமாத்தனுகவும், பரிசுததனுகவுமிருக்க வேண்டும்" [ ] என்று அரசர்கள் இப்படிப் பட்ட குணஙகளோடு கூடியிருக்க வேண்டியிருக்க, அவையில்லாமலிருப்பது உன் அறிவு. (உன் அறிவு விபரீதமாயிருந்தது) "இவன் இயற்கையில் அரக்கர் குலத்தைச் சேர்ந்தவன்" [ரா-யு 17-25] என்றும், "தவிவிதே₄ா பூ₄தஸாக்க₃ஸ்து தை₃வ ஆஸுர ஏவச, விஷ்ணு ப₄க்திபரோ தே₃வோ விபரீதஸ் தத₂ாஸுர." [விஷ்ணுதர்மம் 109-74] [(இவ்வுலகில்) தேவ ஸருஷடியெனறும ஆஸுரஸ்ருஷ்டியென்றுமஇரண்டு வகையான படைப்புகளா உள்ளன. விஷ்ணுபக்தியில் ஈடுபட்டவன்

'என்னுடைய புத்தி விபரீதையென்று அறிந்தபடியென்? அந்தர்யாமியன்றே அறிவதற்கு?' என்ன—(ஆசாரவர்ஜிதா) அதுவும் கார்யகல்ப்யமன்றோ என்கிறான். (ஆசாரவர்ஜிதா) ஆசாரமாவது-ச்ருதி ஸம்ருதிவிஹித வர்ணாச்ரமநிஷ்டாநுஷ்டாநம். அது உனபக்கல் கண்டிலோமே. (ஆசாரவர்ஜிதா) இதுமுற்பட இல்லையென்ன வொண்ணாது; பரதார பரதேவதா த்ரோஹாத்யநாசாரம் ப்ரத்யக்ஷஸித்தமே. 'புத்திராசாரவர்ஜிதா' என்றாநின்றாய். புத்தியாவது ஆந்தரவ்யாபாரம்; ஆசாரமாவது பாஹ்யகாயிகவ்யாபாரம். ஆனால் ஸாமாநாதி$_4$கரண்யம் கூடுமோ? என்னில் **"यद्धि मनसा ध्यायति तत्कर्मणा करोति"** (யத$_3$தி$_4$ மநஸா த்$_4$யாயதி தத்கர்மணா கரோதி) என்றும்,

---

தேவஸ்ருஷ்டியைச் சேர்ந்தவன்; (விஷ்ணுபக்திக்கு) விபரீதமாயிருப்பவன் அசுரனாவான்.] என்றும் இந்த அறிவு கேட்டுக்குத் தகுந்த தான பிறப்பையுடைய உன்னுடைய அறிவு.

'என்னுடைய அறிவு கெட்டிருக்கிறது என்று நீ எப்படி அறிந்தாய்? நீ அந்தர்யாமியன்றே அதை அறிவதற்கு' என்னில். (ஆசாரமற்றதாயிருந்தது) அநுவர்த்தநமின்மையை அறிவுகேடாகிற ஹேதுவைக்கொண்டு அநுமித்ததுபோலே, இவ்வறிவுகேடும், ஆசாரமின்மையாகிற காரியத்தைககொண்டு அநுமிக்கத்தக்கதன்றோ எனகிறான். (ஆசாரமற்றதாயிருந்தது) ஆசாரமாவது –சுருதியிலும், ஸ்மிருதியிலும் விதிக்கப்பட்டிருக்கும் வர்ணங்களிலும். ஆச்ரமங்களிலும் நிலை நிற்பவருடைய அநுஷ்டானம். அதை உன்னிடம் காணவில்லையே.(ஆசாரமற்றதாயிருந்தது) கண்ணாலகாணமுடியாத அறிவுகேட்டை இல்லை செய்தாலும் இவ்வாசாரமினமையை முதலில் இல்லையென்னமுடியாது. பிறன் மனைவிக்குத்திங்கிழைப்பது, பரதேவதைக்கு துரோகம்செய்வது முதலியஅநாசாரம் ப்ரத்யக்ஷமாக அறியத்தக்கதாயிருக்கிறதன்றோ. "'அறிவானது ஆசாரமற்றதாயிருக்கிறது' என்று சொன்னாய். புத்தியென்பது தேஹத்தினுள்ளிருக்கும் பரவ்ருத்தி; ஆசாரமாவது வெளியிலிருக்கும் சரீரத்தின் தொழில 'புத்தி ஆசாரமற்றதாயுள்ளது' என்றால் சேர்ந்திருக்கவேண்டிய இவையிரண்டும் சேர்ந்தில்லை என்றதாகிறது. உள்வெளி ப்ரவ்ருத்திகளான இவையிரண்டும் சேர்ந்திருக்குமோ?" எனனில். "எதை மனத்தால் தியானிக்கிறானோ அதைச் செயலில செய்கிறான்" [ ]

**"ज्ञाते ह्रीच्छा इष्टे हि प्रवृत्तिः"** (ஜ்ஞாதே ஹீச்ச₂ா இஷ்டே ஹி ப்ரவ்ருத்தி) என்றும், புத்தியையொழியக் கர்மம் கூடாமை யாலும், புத்தி பிறந்தல்லது நில்லாமையாலும், இவ்வவினா பாவஸம்பந்தத்தை நினைத்து, ஸம்பந்த ஹானியை 'வர்ஜிதா, என்கிறது. (புத்திராசாரவர்ஜிதா) பரதாராபஹாரம் காண்கையாலே இதுக்கடியான புத்தி கண்டோமித்தனை. உன் புத்தியில் ஸதாசாரமில்லை என்கிறாள் ஆக, இத்தால் துராசாரங்கொண்டு துர்ப்புத்தியை அநுமித்தேன். புத்தியைக்கொண்டு ஸத்புத்திஜநகரான ஸத்துக்களை அநு வர்த்தியாய் என்னுமிடம் அநுமித்தேன் என்கிறாள். (ஆசார வர்ஜிதா) **"नैनं सूर्यः प्रतपति पार्श्वे वाति न मारुतः। चलोर्मिमाली तं दृष्ट्वा समुद्रोऽपि न कम्पते"** (**நைநம் ஸூர்ய: ப்ரதபதி பார்ச்வே வாதி ந மாருத:। ஜலோர்மிமாலீ தம த்₃ருஷ்ட்வா ஸமுத்₃ரோபி ந கம்பதே**) என்றும், **"त्रस्यत्यपि पुरन्दरः"** (**த்ரஸ்யதயபி புரந் த₃ர:**) என்றும், பிறந்தவன்று தொடங்கி ஸகலதேவதை

---

என்றும், "அறிந்தால் விருப்பமுண்டாகிறது; விரும்பினதில் ப்ரவ் ருத்தியுண்டாகிறது" [ ] என்றும் புத்தியுண்டானாலொழிய ஆசாரம் முதலான கர்மம் உண்டாகாதாகையாலும், அறிவு பிறந்தா லல்லாது அநுஷ்டானம நிலைநிற்காதாகையாலும், ஒன்றுக்கொன்று விட்டுப்பிரியமாட்டாத இந்த ஸம்பந்தத்தை நினைத்து, அறிவிக்கும ஆசாரத்துக்கும் இருக்கவேண்டிய இந்த ஸம்பந்தமில்லாமையை (அறிவு ஆசாரமற்றதாயிருந்தது) என்கிறாள. (ஆசாரமற்றதான அறிவு) பிறன் மனைவியை அபஹரிப்பதைக் காண்கையாலே அதுக் குக் காரணமான துர்ப்புத்தியைக் கண்டோமேயொழிய நல்லறிவைக் காணவில்லை. உன் அறிவில் நலலொழுக்கமில்லை எனகிறாள். ஆக இவ்வளவால் உன் துர்நடத்தையைக் கொண்டு துர்புத்தியை அநு மானம செய்தேன்; அந்தத்துர்புத்தியைக் கொண்டு நல்லறிவூட்டும் நல்லோரை நீ அநுவர்த்திப்பதில்லை என்று அறிந்துகொண்டேன் என்கிறாள் பிராட்டி. (ஒழுககமற்றது) "இந்த ராவணனை சூரியன் தபிப்பதிலலை. காற்று இவனருகில் அடிப்பதில்லை; நீரலைமாலைகளை யுடைய சமுத்திரராஜனும் அவனைப் பார்த்தால் அசைவதில்லை" [ரா-பா 15-10] என்றும், "(ராவணனைக் கண்டு) இந்திரனும பயப் படுகிறான்" [ரா-யு 14-3] என்றும் பிறந்த அன்றிலிருந்து எல்லா

களும் (நிலே) குலேயும்படியிருக்கையாலே முதலுக்கு இவ் வாச்ரயத்தில் ஆசாரம் புகுந்தமையுமில்லே. என்றும் ப்ராக$_3$ ப$_4$ாவமே இருந்தது. (ஆசாரவர்ஜிதா) ப்ராக$_3$ப$_4$ாவமென்றால் மேலொருகாலாகிலும் வரக்கூடுமிறே. அங்ஙனன்றியிலே, ஆசாராத்யந்தப$_4$ாவமேயாயிருந்தது. "அத்யந்தாப$_4$ாவமாம் படியென்? ப்ரஹ்மாவை நோக்கித் தபஸ்ஸைப்பண்ணுவது ருத்ரனை நோக்கித் தபஸ்ஸைப் பண்ணுவதாய் ஸதாசாரம் பண்ணிற்றிலனோ?" என்னில்: (புத்திராசாரவர்ஜிதா) "शैत्यं हि यत्सा प्रकृतिर्जलस्य" (ஶைத்யம் ஹியத ஸா ப்ரக்ருதிர் ஜலஸ்ய) என்று ஜலதத்வத்துக்கு ஶைத்யம் ஸ்வபாவமாயிருக்கச் செய்தே, உஷ்ணஜலம் என்று அக்நிஸ்பர்சத்தாலே ஔஷ்ண்யம் ஔபாதி$_4$கமாமாப்போலே இவனுக்கும் ஐச்வர்யாவத்$_4$யத்வாயுத$_4$ாத்$_3$யபேக்ஷயா ஔபாதி$_4$கமாகஸத$_3$ாசாரம்வந்தேறியித்தனை; இவன் புத்திக்கு ஸத$_3$ாசாரஹாநி ஸ்வத:ப்ராப்தமே

---

தேவதைகளும் நிலேகுலேயும்படியிருக்கையாலே முதன்முதலில் இந்த ராவணனிடத்தில் நல்லொழுக்கம் புகுந்ததேயில்லே. என்றும ஆசாரத்தின் பராகபாவமாகவே இருந்தது. [ஒரு பொருளின ப்ராகபாவமாவது–அது தோன்றுவதற்கு முன்னுள்ள இலலாமை] (ஒழுக்கமற்றிருந்தது) ப்ராகபாவம என்றாலும் ஒருகாலத்தில் அவ்வபாவம் மறைந்து ஒழுக்கம் உண்டாக வேண்டுமே. அதுவுமில்லாமையாலே உன்னிடம் ஒழுக்கத்தின் அத்யந்தாப$_4$ாவமே இருந்தது. [அத்யந்தாபாவமாவது— ஒரு வஸ்து அடியோடில்லாமலிருப்பது.] ஒழுக்கம் அடியோடு இல்லேயென்று சொல்லலாமோ? ப்ரஹ்மருத்ரர்களைக் குறித்துத் தவம் புரிந்ததன் மூலம் நல்லொழுக்கத்தை நடத்திக்காட்டவிலலேயோ ராவணன்? என்னில்: (அறிவு ஆசாரமற்றதாயிருந்தது) "உஷ்ணத்வமக்$_3$ந்யாதபஸம்ப்ரயோகத்$_3$ாச்சை$_2$த்யம் ஹி யத் ஸா ப்ரக்ருதிர் ஜலஸ்ய" [ரகுவம்சம் 5-54] [ஜலம் சுடுவது, நெருப்பு சூரியன் ஆகியவற்றின் ஸம்பந்தத்தாலேயே; குளிர்ச்சியே நீருக்கு இயற்கையாகும்.] என்று ஜலத்துக்கு குளிர்த்தி இயற்கையாயிருந்த போதிலும் வெந்நீர் என்னும் வழக்கு நெருப்பின ஸம்பந்தத்தாலேயாய், சூடு ஒரு காரணத்தாலே வந்ததாவதுபோல் இவனுக்கும் செல்வம், சாகாமை, ஆயுதங்கள் ஆகியவற்றில் விருப்பமாகிற காரணத்தை முன்னிட்டு நல்லொழுக்கம் ஓரொரு காலத்திலே வந்

*என்கிறது.* **"सन्दष्टे तिसृणां पुरामति रिपौ कण्डूलदोर्मण्डलक्रीडाकृत्त-पुनःप्ररूढशिरसो वीरस्य लिप्सोर्वरम्। याच्ञादैन्यपराञ्चि यस्य कलहायन्ते मिथस्त्वं वृणु त्वं वृणिवत्यभितो मुखानि स दशग्रीवः कथं कथ्यते॥"** (ஸந்த்$_3$ருஷ்டே திஸ்ருணும் புராமபி ரிபெள கண்டூ$_3$லதோ$_3$ர் மண்ட$_3$ல க்ரீட$_3$ா க்ருத்த புந:ப்ரரூட$_4$ ஸிரஸோ வீரஸ்ய லிப்ஸோர் வரம் | யாச்ஞா தைந்$_3$ய பராஞ்சி யஸ்ய கலஹாயந்தே மித$_2$ஸ் த்வம் வ்ருணு த்வம் வ்ருண்விதயபி$_4$தோ முக$_2$ாநி ஸ த$_3$ஸக்$_3$ரீவ: கத$_2$ம் கத்$_2$யதே) *என்று தடஸ்ஸ்பண்ணி ஸாந்தனுயிருக்கிற போதகப்பட. பராபேக்ஷாதஸையில் ஒரு முகத்துககு ஒரு முகம் தோஷகலுஷிதமாய் விப்ரதிபத்தி பண்ணிற்றிறே.*

**ஸுந்தரகாண்டம் 31-வது ஸர்க்கம் 19-வது சுலோகம்**

**सा तिर्यगूर्ध्वं च तथाप्यधस्तान्निरीक्षमाणा तमचिन्त्यबुद्धिम्।**
**ददर्श पिङ्गाधिपतेरमात्यं वातात्मजं सूर्यमिवोदयस्थम्॥**

**ஸா திர்யகூ$_3$ர்த்$_4$வஞ்ச தத$_2$ாப்யத$_4$ஸ்தாத்**
**நிரீக்ஷமாணு தமசிந்த்யபு$_3$த்$_3$தி$_4$ம ||**
**த$_3$த$_3$ர்ஸ பிங்க$_3$ாதி$_4$பதேரமாத்யம்**
**வாதாத்மஜம் ஸூர்யமிவோத$_3$யஸ்த$_2$ம் ||**

பதவுரை:—**ஸா**—*அந்த சீதாபிராட்டி,* **திர்யக்**—*பக்கங்களிலும்.* **ஊர்த்$_4$வம்**—*மேலும்.* **தத$_2$ா அத$_4$ஸ்தாத் அபி**—*அப்*

---

*தேறியேயாகும்; இவனுடைய அறிவுக்கு நல்லொழுக்கமின்மை இயற்கையிலேயே இருப்பதொன்று என்கிறது. "முப்புரங்களையும் எரித்த சிவனைக் கண்டவளவில், தினவுகொண்ட கைகளாலே விளையாட்டாகக் கிள்ளப்பெற்று மறுபடி முளைக்கப்பெற்ற தலைகளை உடையவனும், வீரனும், வரத்தை விரும்புமவனுன எந்த ராவணனுடைய, கீழான யாசகத்தைவெறுக்கும், 'தலைகள் நீ வரங்கேள்; நீ வரங்கேள்' என்று ஒன்றுக்கொன்று மூட்டிவிடுகின்றனவோ, அப்பேர்ப்பட்ட ராவணனை எப்படிச் சொல்லுவது?" [அநர்க்கராவம் 3-41] என்று தவம்புரிந்து சாந்தியுடையவனுயிருக்கும் நிலையிலும் முகங்கள் யாசக தோஷத்தாலே கலங்கி, இருக்கும் விஷயத்தில் ஒன்றுக்கொன்று கருத்து மாறுபட்டனவன்றே.*

படியே கீழும், **நிரீக்ஷமாணு**—பார்ப்பவளாயிருந்துகொண்டு, **அசிந்த்யபு₃த்₃தி₄ம**-மனத்தால் எண்ணத்தகாத புத்தியுடையவனையும், **பிங்க₃ாதி₄பதே:**—வானரவரசனுடைய, **அமாத்யம்**—மந்திரியாயும், **தம வாதாத்மஜம்**—வாயுவின் புத்திரனையுமுள்ள அந்த அனுமானை, **உத₃யஸ்த₂ம் ஸூர்யம் இவ**-உதயகிரியிலுள்ள சூரியனைப்போலே, **த₃த₃ர்ஶ**—பார்த்தாள்.

**அவதாரிகை:**—அஶோகவநிகாமத்₄யக₃தையான பிராட்டி, ராவணப்ரேரிதைகளான ராக்ஷஸிகளுடைய தர்ஜநபூ₄ர்த் ஸநாத்₃யஸஹதையாலும், ராமவிரஹவ்யஸநாதிஶயத்தாலும் ப்ராணத்யாக₃வ்யவஸித மநஸ்கையாய், ஶிம்ஶுபாஶாகி₂ சாக₂ாவலம்பி₃நியாய் எழுந்தருளிநின்ற ஸமயத்திலே திருவடி கண்டு, முன்பு பெருமாள் அருளிச்செய்த வைலக்ஷண்ய ஜாதங்களை முழுக்கத் திருமேனியிலே காண்கையாலே பிராட்டி என்று அறுதியிட்டு, 'அர்த்தகதி ஸம்பாஷிக்கில் பீத்யா ஸத்தாநாஶம் பிறக்கும்; ஸம்பாஷியாதே மீண்டிடில் அவிதிதவ்ருத்தாந்தையாகையாலே ஶரீரவிச்லேஷம் பண்ணக்கூடும்' என்று, ஐந்த்ர வ்யாகரணபண்டிதனாகையாலே தன் நெஞ்சாலே தர்க்கித்து, க்ரமஶ: பொறுப்பிப்போம்

---

அவதாரிகை:—அசோகவனத்தின் நடுவிலிருக்கும் பிராட்டி ராவணனால் தூண்டப்பட்ட ராக்ஷஸிகளுடைய அதட்டல் மிரட்டல் முதலானவை பொறுக்கமாட்டாமையாலும், ராமனைப் பிரிந்த துன்பத்தின் மிகுதியாலும் பிராணனை விடவேண்டுமென்னும் உறுதி கொண்ட நெஞ்சையுடையவளாய், ஒரு சிம்சுபா விருக்ஷத்தின் கிளையைப் பற்றிக்கொண்டு எழுந்தருளியிருந்த ஸமயத்திலே ஹனுமான் பிராட்டியைக்கண்டு, முன்பு ராமபிரான் அருளிச்செய்த பெருமைகள் அனைத்தையும் பிராட்டியின் திருமேனியிலே பார்க்கையாலே, 'இவளே சீதா பிராட்டி' என்று நிச்சயித்து, 'நடந்த விஷயத்தைச் சொன்னால் பயத்தாலே பிராட்டி பிராணனையும் விடக்கூடும்; சொல்லாமல் திரும்பினால், ராமபிரான் இலங்கைக்கு வரும் விஷயத்தை அறியாமையாலே உயிர்விடக்கூடும்' என்று ஐந்த்ரவ்யாகரணசாஸ்திரத்திலும் வல்லவனாகையாலே தன் நெஞ்சாலே தர்க்கம் செய்து

என்று நிர்ணயித்து, வாதோபஹதனைக் கீழே வைத்து, தான் உந்நதப்ரதேசத்திலேயிருந்து த₄ாரை பொழியுமாப் போலே, ஶிம்ஶுபாவ்ருக்ஷத்தின் மேலேயிருந்து, **"राजा दशरथो नाम"** (ராஜா த₃ஶரதோ₂ நாம) என்று தொடங்கி, கதா ஶரீரத்தை அம்ருதத₄ாரையாக வர்ஷிக்க, சிரகாலம் அவநதியாலே ஸ்தப்₃த₄மான திருக்கழுத்தை மஹாப்ரயாஸேந உந்நமித்து, பிராட்டி திருவடியைத் திருக்கண் சாத்தின படியைச் சொல்லுகிறது இச்லோகம்.

ச்லோகத்துக்கு வாக்யார்த்தம்:- அவள் திருக்கழுத்தை இருமருங்கும் புரட்டி, மேலுங்கீழும் பார்த்து மீண்டு மேலே நோக்கிப் பாராநின்றுகொண்டு உத₃யகி₃ரிசிகரஸ்தனான ஸூர்யனைப்போலே ஸுக்ரீவ ஸசிவனான மாருதாத்மஜனைக் கண்டாள் என்கிறது.

**வ்யா:**— (ஸா) பூர்வக்ஷணத்திலே ஶரீரவியோகா₃த்₄யவஸாயம் பண்ணினவள். (ஸா) மாரீசபரிப்₄ரமம் தொடங்கி

---

அறிந்து, கிரமமாகப் பிராட்டியைத் துன்பம் போம்படி செய்வோம் என்று நிச்சயித்து, வாயு பிடித்துக்கொண்டவனைக் கீழேவைத்து, அவனைச் சிகித்ஸை செய்பவன்தான் மேலேயிருந்து திரவதாரையைப் பொழிவதுபோலே, தான் சிம்சுபா விருக்ஷத்தின் மேலேயிருந்து "தசரதன என்று ஓரரசன் இருந்தான்' [ரா-ஸு 31-2] என்று தொடங்கி, ராமகதை முழுவதையும் அம்ருததாரையாகப்பொழிய, நெடுங்காலம் குனிந்திருந்தமையாலே செயலற்றிருந்த திருக்கழுத்தைப் பெருமுயற்சியாலே தூக்கி, பிராட்டி ஹனுமானைத் திருக்கண்ணால் கண்டபடியைச் சொல்லுகிறது இந்த சுலோகம்.

சுலோகத்தின் பொருளாவது.—"பிராட்டி திருக்கழுத்தை இருபக்கங்களிலும் புரட்டி மேலும் கீழும் பார்த்து மறுபடி மேல்நோக்கிப் பார்க்கையில், உதயகிரியுச்சியிலுள்ள சூரியனைப்போலே ஸுக்ரீவனின் மந்திரியான வாயு புத்திரனைக் கண்டாள்" என்கிறது.

**வ்யா:**—(அவள்) முன் கணத்திலே உடம்பை விடுவது என்று உறுதி பூண்டவள். (அவள்) மாரீசன் மாயமானாகி மயக்கியதற்குப்

உபரிதநவ்ருத்தாந்தாநபி₄ஜ்ஞையாகையாலே அத்யந்தம் விஷண்ணையாயுள்ளவள். (ஸா) அருகே ஒரு சருகிலே ஓசைப் படிலும் ஹ்ருதயங்குலைந்து பறையறையா நிற்குமவள். (ஸா) ராவண கரக்₃ருஹீதையான அன்று துடங்கி செம்பளித்த கண்விழிக்க அறியாதவள்.

(திர்யக்) திருக்கழுத்தை இருமருங்கும் புரட்டிப் பார்த்தாள். சிரகாலம் சேஷ்டியாத கழுத்தாகையாலே இப்போது இருமருங்கும் விதே₄யமாக்கினாள். நம்முடைய அத்₄யவஸாயத்தைக் கண்டு முலையெழுந்தார் வ்யஸநம் முலையெழுந்தார்க்குப் பொறுக்க வொண்ணாமையாலே தி₃க₃ங்க₃நைகள் சொன்ன வார்த்தையோ என்று இருமருங்கும் புரிந்து பார்த்தாள்.

(ஊர்த்வம்) ஶசிப்ரப்ருதிகளும் நம்மைப்போலேயகப் பட்டு, ப்ராண த்யாகாத்யவஸாயம் பண்ணி, மீண்டும் ஸ்வ ஸ்வபர்த்தாக்களை ப்ராபித்தவர்களாகையாலே, இப்போது

---

பிறகு மேல் நடந்த விருத்தாந்தங்கள் அறியாதவளாகையாலே மிகவும் வருந்துமவள். (அவள்) அருகில் ஒரு சருகிலே சரசரவென்று அசைந்து ஒலிப்பதைக் கேட்கும்போதும் 'ராவணன் வருகிறானே' என்று மனங்குலைந்து, 'படக்படக்' என்று அடித்துக்கொள்ளும் நெஞ்சையுடையவள். (அவள்) ராவணன் கையிலகப்பட்ட அன்றிலிருந்து தொடங்கி மூடின கண் விழிக்க அறியாதவள்

(சுற்றிலும்) திருக்கழுத்தை இரண்டுபக்கங்களிலும் திருப்பிப் பார்த்தாள். நெடுங்காலம் அசையாதேயிருந்த கழுத்தாகையாலே இப்போதுஇருபுறங்களிலும்அசையும்படிவசப்படுத்திக்கொண்டாள். (சுற்றிலும்) பெண்களுடைய துன்பம் பெணகளுக்குத்தான் பொறுக்காமலிருக்குமாகையாலே, நம்முடைய மரணவுறுதியைக்கண்டு திசைகளாகிற பெண்கள் சொன்ன வார்த்தையோ நம்செவியில விழுந்தது என்று இருபுறமும் விரும்பிப்பார்த்தாள்.

(மேலே) இந்திராணி முதலியவர்களும் நம்மைப்போலே ராவணனிடம் அகப்பட்டு உயிர்விடுவதென உறுதிகொண்டு, மறுபடியும் தங்கள் தங்கள் பர்த்தாக்களை அடைந்தவர்களாகையாலே,

நம்முடைய அத்யவஸாயம் தவிர்க்கைக்காக அவர்கள் சொன்ன வார்த்தையோ? என்று மேலே பார்த்தாள். (ஊர்த்வம்) எழுந்த ஶப்த்தினுடைய முழக்கத்தாலே, "ஆகாஶகு₃ண: ஶப்₃த₃:" என்கிறபடியே ஶப்தகுணகமான ஆகாஶம் செவிக்கினிதாகப் பழுத்துக்கொடுத்த பழமோ என்று பார்த்தாள்.

சகாரம் ஸமுச்சயார்த்தமாம்போது வக்ஷ்யமாணமான தி₃க₃ந்தரங்கள் சேரச்சொல்லவேண்டாவாகையாலே பூர்வம் நிரீக்ஷித்த பாகங்களைப் புநர்நிரீக்ஷணம் பண்ணினாள் ஸம்ப₄ரமத்தாலே.

(ததாப்யதஸ்தாத்) அப்படியே கீழும் பார்த்தாள். தன் காலடியிலேயிருந்து சிலர் ஒருவார்த்தைசொல்ல ஸம்பாவனை யின்றிக்கேயிருக்க கீழே பார்க்கைக்கு உபபத்தி சொல்லு

---

இப்போது நம்முடைய மரணவுறுதியைத் தவிர்ப்பதற்காக அவர்கள் சொன்ன சொல்லோ நம் செவியில் விழுந்தது என்று மேலே பார்த்தாள். (மேலே) எழுந்த சப்தத்தினுடைய கோஷத்தாலே "சப்தம் ஆகாசத்தின குணமாகும்" என்கிறபடியே சப்தத்தை குணமாகக் கொண்ட ஆகாசமாகிற மரம் செவிக்கினியதாகப் பழுத்துக் கொடுதத சப்தரூபமான பழமோ நம் காதில் விழுந்தது எனறு பார்த்தாள்.

'ச' என்னும் எழுத்து, அநுக்தஸமுச்சயப்பொருளை — (ப்ரகரணத்தில் இல்லாததைக்கூட்டுவது என்னும் பொருளை)— உடைய தாம்போது, மேல் சொல்லப்போகிற கீழாகிற திசைய் இங்கு சொல்லவேண்டிய ஆவச்யகதை இல்லாமையாலே, முன் கண்ட திசைகளாகிற பக்கங்கள், மேல் என்னும் திசைகளை, தன் பரபரப்பாலே மறுபடியும் பார்த்தாள் என்கிறது.

(அப்படியே கீழும்) அப்படியே கீழேயும் பார்த்தாள். தன் காலடியிலேயிருந்து சிலர் வார்த்தைசொல்ல இடமில்லாமலிருக்கையில், கீழே பார்த்ததற்குப் பொருத்தத்தைக் காட்டுகிறது 'அப்படியே' என்னும் சப்தம். அதாவது- ராவணன் பிராட்டியைக் கவர்ந்து ஆகாயத்தில் சென்றபோது "அவேக்ஷமாணும் ப₃ஹுஶோ வைதே₃ஹீம் த₄ரணீதலம்" [ரா-ஆ 52-45] [பலதடவை பூமியைப் பார்க்கும்

*கிறது த்ருதாஸப்தம். க்$_3$ருத்$_4$ரரும் மஹாபூதங்களும் சொல்லக் கடவதாக முற்படவே கற்பித்தார்கள். அந்த வாஸனையாலே பார்த்தாள். (அதஸ்தாத்) தன்னுடைய க்லேசாதிசயத்தைக் கண்டு ஆச்சி தன் வயிற்றெரிச்சலாலே சொன்னளோ என்று பார்த்தாள்.*

*(அபி) மீண்டு மேலே பார்த்தாள். கீழே சொன்னவற்றுக்கு ஸமுச்சயமாருலோ? என்னில்: 'நிரீக்ஷமாணு' என்கிற மேலோடு க$_4$டியாது. கண்டது கீழேயல்லாமையாலே.*

*(நிரீக்ஷமாணு) என்கிற வர்த்தமானத்தாலே ஸாதராதிஶயமாக வைத்தகண் வாங்கிற்றிலள் என்கிறது. ''நிரீக்ஷமாணு ததர்ஶ'' இத்யந்வய:*

---

வைதேகியை] என்கிறபடியே பிராட்டி கீழ்நோக்கியிருந்தபோது, கீழேயிருந்தவர்களான ஜடாயுவும் மஹாபூதங்களும் ''க$_2$கே$_3$ாத்தம:, வநஸ்பதிக$_3$த: ஸ்ரீமாந் வ்யாஜஹார சுப$_4$ாம் கி$_3$ரம்'' [ரா-ஆ 50-2] [மரத்தின் மேலிருந்த செல்வனுன கழுகரசன் ஜடாயு மங்களமான வார்த்தையைச் சொன்னன்.] என்றும், ''இதி ஸர்வாணி பூ$_4$தாநி க$_3$ணச: பர்யதே$_3$வயந்'' [ரா-ஆ52-42] [இம்மாதிரியாக எல்லா பூதங்களும கூட்டங்கூட்டமாக வார்த்தைசொல்லி அழுதன.] என்றும் தாங்கள் வார்த்தைசொல்லி அழுது ஆறுதல் சொல்லக்கூடியவர்களென்று முனனமே பிராட்டிக்குக் காட்டிக்கொண்டார்களன்ரே. அந்த நினைவாலே கீழே பார்த்தாள். (கீழே) தன்னுடைய துன்பமிகுதியைக் கண்டு, தன் தாயாகிய பூமிப்பிராட்டி தன் வயிற்றெரிச்சலாலே சொன்ன சொல்லோ செவியில விழுந்தது? என்று கீழே பார்த்தாள் என்றுமாம்.

(உம்) மறுபடியும் மேலே பார்த்தாள். அபியென்பது அநுக்தஸமுச்சயம். கீழேயும் என்ற விடத்திலுள்ள இந்த உம்மை உக்தசமுச்சயமாய், கீழேசொன்ன பக்கங்கள், மேல் என்னும் திசைகளைக் கூட்டுவதாகக் கொள்ளலாகாதோ? என்னில் : 'சிம்சுபாமரத்தின மேலிருந்த அனுமனைப் பார்த்தாள்' என்று அடுத்தபடி சொல்லுவது கீழ்நோக்கியிருந்த பிராட்டி மறுபடி மேல் நோக்கிப் பார்த்திருந்தாலொழியப் பொருந்தாது. அனுமனைக்கண்டது மரத்தின் மேலேயேயொழியக் கீழே பூமியிலன்றே. ஆகையால் அபிசப்தம் அநுக்த ஸமுச்சயமாய். 'மறுபடி மேலேபார்த்தாள்' என்று பொருள்படுகிறது.

(தம்) என்கிற பதம் திருவடியினுடைய ஸர்வாநுபவத்தையும் சொல்லுகிறது.

(அசிந்த்யபுத்திம்) திருவுள்ளத்தில் இடமுடைமை திருமேனியிலே நிழலெழுகை

(ததர்ஶ)ஸமுத்ரலங்க₄நாத்₃யாயாஸமெல்லாம் போம்படி ஸ்ரீமத் கடாக்ஷத்தாலே பூர்ணமாகப் பார்த்தாள்.

(பிங்காதிபதேரமாத்யம்) ஒரு மஹாராஜாவினுடைய ஆணைக் கீழேயிருந்தானொரு மந்த்ரி என்னுமிடத்தை அவன் தானுயிருந்த இருப்பு கோட்சொல்லிக் கொடுத்தது. யாவனொருவனாலே மஹாராஜாவினுடைய பிங்கா₃தி₄பத்யமும் தன்னுடைய அமாத்யத்வமும், பெருமாளுடைய ப்ரதம கடாக்ஷத்தினாலே உண்டாக்கப்பட்டது, அவனை.

---

(பார்க்கிறவளாய்) என கிற நிகழ்காலத்தாலே 'பாலைவனத்திலே தண்ணீர்ப்பந்தல் வைத்ததுபோலே இங்கு இப்படியொருவன் வார்த்தை சொல்லுவதே!' என்று அனபின் மிகுதியாலே அனுமனைப் பார்த்த கண்ணைத் திருப்ப மாட்டாமலிருந்தாள் என்கிறது. 'மேலே மறுபடியும் பார்க்கிறவளாய் அனுமனைக்கண்டாள்' என்று அந்வயம்.

(அவனை) என்கிற பதம் பிராட்டி அனுமனின் திருமேனி முழுவதையும் கண்டமையைச் சொல்லுகிறது.

(நினைத்தற்கரிய புத்தியுடையவனை) "ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே" [இவன் உருவமே இவனுடைய பெருமையை விவரித்துத்தருகிறது.] என்கிற வேதவாக்கியத்தின்படியே, இவனுடைய பரந்த திருவுள்ளத்தின் பெருமை திருமேனியிலே ஒளிவீசுகின்றது.

(கண்டாள்) கடல் கடந்தது முதலான களைப்பெல்லாம தீரும்படி திரு நிரம்பிய திருக்கண்ணோக்கினாலே பரிபூர்ணமாகப் பார்த்தாள்.

(குரக்கரசனின் மந்திரியை)ஒரு பேரரசனின் ஆணைக்கு வசப்பட்டிருக்கும் மந்திரியென்பதை அனுமன் இருந்த இருப்பே வெளிக்காட்டிற்று. எவனொருவன் ராமபிரானுடன் ஸுக்ரீவனைச் சேர்ப்பித்து வைத்ததாலே ஸுக்ரீவனுடைய குரங்கரசனாயிருக்கும் தன்மையும், தனனுடைய மந்திரியாயிருக்கும் தன்மையும் ராமபிரானுடைய முதற் கடாக்ஷத்தாலே உண்டாக்கப்பட்டனவோ அவனை என்று கருத்து.

(வாதாத்மஜம்) கண்டகூதப்ராணையான பிராட்டிக்குத் திருவடி திருமேனி பொறுப்பித்தபடியாலே, ரிஷி, தென்றற்கன்றென்கிறன்.

(ஸூர்யமிவ) ப்ரதிபக்ஷங்கண்டு வெருவும்படி வீர்யம் புறப்பட்டுப் பரம்புகையாலே, அந்தகாரத்தில் ஆதித்யனைப் போல் என்கிறன்.

(வாதாத்மஜம்) மகனென்று சட்டையிட்டு வாராதே காற்றுதானே வந்ததாகில் கண்வைக்கவொண்ணுதே.

(உதயஸ்தம்) அபூதோபமை. பழைய ஆதித்யனைப் போலன்றியிலே உதயகிரியிலே உதித்து ராவணனுக்கு அஞ்சிச் செல்லாநில்லாதே உதயகிரியிலே காலூன்றவல்லா னொரு ஆதித்யனைப்போலே த்ருஷ்டாந்தம் சொல்லலாம்.

---

(வாயுபுத்திரனை) உயிர்போகும் தருவாயிலிருந்த பிராட்டியை ஆச்வாஸம் செய்வித்து உயிர் கொடுக்கையாலே, வால்மீகிமஹரிஷி உயிர்கொடுக்கும் தென்றற்காற்ருகிற காமதேனுவின் கன்று என்று அனுமனைச் சொல்லுகிருர்.

(சூரியனைப்போலே) எதிரிகள் கண்டு பயப்படும்படி அனும னின் வீர்யம் புறப்பட்டுப் பரவுகையாலே, இருளில் தோன்றிய இரவியைப் போலேயிருந்தான் அனுமன் என்கிருர்.

(வாயுபுத்திரனை) "ஆத்மா வை புத்ரநாமாஸி" [புத்திரன் என னும் பெயர்கொண்ட நானகவேயிருக்கிருய்] என்கிற வேதவாக் கின்படி மகன் என்னும் வேஷத்தைப் போட்டுக்கொண்டு வராமல் நேரே வந்ததாகில் (ரூபமற்றதாகையாலும், விரஹிகளுக்குப் பொறுக்கவொண்ணுததாகையாலும்) கண்வைக்கமுடியாதன்றே. ஆகையாலே பிள்ளையென்னும சட்டையிட்டுக்கொண்டு உயிர் கொடுக்கும் காற்று வந்தது என்று கருத்து.

(உதயகிரியில் நிற்பவனை) இல்பொருளுவமை பழையவனான சூரி யனைப்போல் உதயகிரியில் உதித்தவுடன் ராவணனிடம பயத்தாலே மேலே செல்லாமல், உதயகிரியிலே காலூன்றவல்லவனான ஓர் சூரி யனையே அனுமனுக்கு உபமானமாகச் சொல்லலாம் என்று கருத்து.

ஸுந்தரகாண்டம் 34-வது ஸர்க்கம் 23-வது சுலோகம்.

**स्वप्नेपि यद्यहं वीरं राघवं सहलक्ष्मणम् ।**
**पश्येयं यदि जीवेयं स्वप्नोऽपि मम मत्सरी ॥**

**ஸ்வப்நேபி யத₃யஹம வீரம் ராக₄வம் ஸஹலக்ஷ்மணம் ।**
**பச்யேயம யதி₃ ஜீவேயம ஸ்வப்நோபி மம மத்ஸரீ ॥**

**பதவுரை:—** **அஹம்**—*நான்,* **ஸஹ்லக்ஷ்மணம**—*லக்ஷ்மணனோடு கூடிய,* **வீரம்**—*வீரரான,* **ராக₄வம்**—*ஸ்ரீராமபிரானை,* **ஸ்வப்நே அபி**-*கனவிலேயாவது,* **பச்யேயம் யதி**-*காண்பேனேயானால்,* **ஜீவேயம்**—*பிழைத்திருப்பேன்;* **ஸ்வப்ந: அபி**—*கனவு கூட,* **மம**—*எனக்கு,* **மத்ஸரீ**—*எதிரியாயிருந்தது.*

**வ்யா:—** *(ஸ்வப்நேபி யத்யஹம் வீரம்) ஸ்வப்நத்திலே கண்டாலும் து:க்க நிவர்த்தகராகவல்லராயிற்று. (ராகவம் ஸஹலக்ஷ்மணம்) பிரிகிறபோது இருவரையும் கூடப்பிரிகையாலே காணுமிடத்திலும் இருவரையும் கூடக்காணவேணும் என்றிறே ஆசைப்படுவது. அப்போது இருவரும் பிரிகையாலே தங்களில் கூடினார்களோ இல்லையோ என்றும் அதிசங்கைபண்ணியிருக்குமே. (பச்யேயம் யதி ஜீவேயம் ஸ்வப்நோபி மம மத்ஸரீ) என் அவஸ்தையறிந்து முகங்காட்டா*

---

அவதாரிகை:— அனுமனைக்கண்டதும் 'இது கனவோ?' என்று சங்கித்துப் பிராட்டி பேசும் பாசுரமிது.

வ்யா:— *(கனவிலும் வீரரை) கனவிலே கண்டாலும் துன்பத்தைப் போக்கடிக்கும் வீரராயிருப்பவர் என்கை. (லக்ஷ்மணனோடு கூடிய ராமபிரானை) பிரிகிறபோது இருவரையும் சேர்ந்து பிரிகையாலே, காணும்போதும் இருவரையும் சேர்ந்து காணவன்றோ ஆசைப்படுகிறாள். மேலும், மாயமானைத்துரத்திச்சென்ற அப்போது ராமலக்ஷ்மணர் இருவரும் பரஸ்பரம் பிரிந்து போகையாலே 'அவர்கள் ஒருவருகொருவர் மறுபடி கூடினார்களோ?' என்றும் ஸந்தேஹித்திருப்பளன்றோ. அதனாலும் இருவரையும் சேர்ந்துகாண ஆசைப்படுகிறாள். (கண்டேனாகில் உயிர் வாழ்வேன்; கனவும் எனக்கு எதிரியாயிருக்கிறதே) என் துன்பமறிந்து முகங்காட்டாதவர் அவர்மாத்திர*

மைக்கு அவரேயன்றிக்கே, இதுவும் என்னை நலிய வேணுமோ என்றுளிறே.

ஸுந்தரகாண்டம் 38-வது ஸர்க்கம் 33-வது சுலோகம்

**स पित्रा च परित्यक्तः सुरैश्च समहर्षिभिः।**
**त्रीन् लोकान् संपरिक्रम्य तमेव शरणं गतः॥**

**ஸ பித்ரா ச பரித்யக்த: ஸுரைச்ச ஸமஹர்ஷிபி$_4$:।**
**த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் க$_3$த:॥**

**பதவுரை:—ஸ:**–அந்தக் காகாஸுரன், **பித்ரா ச**—தந்தையாலும் (தாயாலும்), **ஸமஹர்ஷிபி$_4$:**—மஹர்ஷிகளோடு கூடியிருக்கிற, **ஸுரை: ச**—தேவர்களாலும், **பரித்யக்த:**–நன்கு கைவிடப்பட்டவனாய், **த்ரீந் லோகாந்** — மூவுலகங்களையும், **ஸம்பரிக்ரம்ய**—நன்றாகச் சுற்றித்திரிந்து, **தம் ஏவ**—அந்த ஸ்ரீராமனையே, **ஶரணம் க$_3$த:**—உபாயமாகப் பற்றினன்.

**அவதாரிகை:**–"சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட அத்திரமேகொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி வித்தகனேயிராமாவோ நின்னபயம் என்றழைப்ப" என்கிற படியே பிராட்டி திறத்திலே தீரக்கழிய அபராதத்தைப் பண்ணி ஸாபராதனான காகத்தைக் குறித்துப் பெருமாள் ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகித்தருள, அவனும் அதுக்கஞ்சித் தனக்குப் புகலாமிடமெல்லாம்போய்த் தட்டித்திரிந்து

---

மல்லாமல் இக்கனவும் என்னையடையாமல் துன்புறுத்தவேண்டுமோ என்கிருள் பிராட்டி.

**அவதாரிகை:**—"சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி, வித்தகனே இராமாவோ நின்னபயமென்றழைப்ப" [பெரியாழ்திரு 3–10–6] என்கிறபடியே பிராட்டி விஷயத்தில் பரிபூர்ணமாக அபசாரம் செய்து, குற்றவாளியாய் நின்ற காகாசுரனைக் குறித்து ராமபிரான் ப்ரஹ்மாஸ்திரத்தை விட்டருள, அவனும் அவ்வம்புக்கு பயப்பட்டுப் போகக்கூடிய இடமெல்லாம் போய்த் தடைபட்டுத் திரிந்து போக்கிட

போக்கற்று, *எங்கும்போய்க் கரைகாணுதெறிகடல்வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறு மாப்பறவையாய், *விஷ்ணுபோதமான பெருமாள் திருவடிகளிலேவந்து விழுந்தபடியைச் சொல்லுகிறது.

வ்யா:–(ஸ:)ஸாபராத₄ர் பிழைகளைப் பொறுப்பிக்கைக்குப் புருஷகாரபூ₄தையான பிராட்டி திறத்திலே அபராதம்பண்ணி நேராகவத்₄யனுயிருககிறவன். (ஸ:)பாகவதாபசாரம்பண்ணி, **"न क्षमामि"** (ந க்ஷமாமி)க்கு இலக்காயிருக்கிறவன்; (ஸ:) பரம புருஷார்த்தத்தைவிட்டு, **"भक्ष्यार्थी बलिभोजनः"** (ப₄க்ஷ்யார்த்தீ₂

மில்லாமல், "எங்கும்போய்க் கரைகாணுது எறிகடல்வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை" [பெருமாள் திரு 5-5] போன்ற வனுய், "ஸம்ஸாராரணவமக்₃நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம், விஷ்ணு போதம் விநா நாந்யத் கிஞ்சித₃ஸதி பராயணம்" [விஷ்ணுதர்மம் 1-59] [ஸம்ஸாரக்கடலிலே விழுந்து விஷயங்களாகிற முதலைகளின் வாயில் அகப்பட்ட நெஞ்சையுடையவர்களுக்கு, எஙகும் பரந்த விஷணு வாகிற ஓடத்தைத்தவிர வேறு கரைகாணவழியிலலை] எனகிறபடியே எங்கும் பரந்த ஓடமான ராமபிரான் திருவடிகளிலே வந்து விழுந்த படியைச் சொல்லுகிறது இந்த ச்லோகம்.

வ்யா:— (அவன்) குற்றவாளிகள் குற்றங்களைப் பரமபுருஷன் பொறுக்கச் செய்வதற்குப் புருஷகாரபூதையான பிராட்டி விஷயத் திலே குற்றம் புரிந்து நேரே கொல்லத்தக்கவனுயிருக்கிற காகாசுரன். (அவன) பாகவதர் தலைவியான பிராட்டி விஷயத்தில் அபசாரம் செய்கையாலே. "மத்₃ப₄க்தம் ச்வபசம் வாபி நிந்த₃ாம் குர்வந்தி யே நரா:, பத்₃மகோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே" [வராஹபுராணம்] [பூமிப்பிராட்டி! சண்டாளனுயினும் என் பக்தன் விஷயத்தில் எவ னெருவன் நிந்திப்பது முதலிய அபசாரங்களைச் செய்கின்ருனே அவனை நூறுகோடி பத்மகாலமானுலும் பொறுக்கமாட்டேன்] என் கிற பகவானுடைய கோபத்திற்கு லக்ஷ்யமாயிருப்பவன். (அவன்) இருவருமான சேர்த்தியிலே கைங்கர்யம் செய்வதாகிற மேலான பயனை விட்டு, "த₄ாரயந் ஸ ச மாம் காகஸ் தத்ரைவ பரிலீயதே, ந சாப்யுபரமந் மாம்ஸாத்₃ ப₄க்ஷ்யார்த்தீ₂ ப₃லிபே₄ாஜந:" [ரா-ஸு 38-16] [எனனைக் குத்திக்கொண்டே அக்காகம்அவ்விடத்திலேயே சுற்றிலும் பதுங்கித்திரிந்தது; பலியை உண்டுவாழும் அக்காகம் மாம்ஸ

ப₃லிபே₄ாஜந:) என்று க்ஷுத்ரபுருஷார்த்தத்தைப்பற்றி *அருநரகத்தழுந்தும் பயன் படைத்திருக்கிறவன். (ஸ:) அபராதம்பண்ண ஸங்கல்பித்தபோதே தேவத்வம்போய். காகமாய் ஸ்வரூபஹாநி பிறந்திருக்கிறவன். (ஸ:) **"नखैस्सरुधिरैः"** (**நகை₂ஸ்ஸருதி₄ரை:**) என்கிறபடியே ஆர்த்₃ராபராத₄னாய் உதிரக்கையனாயிருக்கிறவன். (ஸ:) **"धरान्तरचरः"** (**த₄ராந்தரசர:**) என்று இதுக்கு முன்பெல்லாம் பொதும்புகளிலே அடங்கி வாழ்ந்து, இப்போது அபராதம் பண்ணினபடியாலே, **"पवनस्य गतौ समः"** (**பவநஸ்ய க₃தௌ ஸம:**) என்று ஆகாசத்திலே காற்றுப்போலே திரிகிறவன். (ஸ:) **"बन्धुश्च पिता च मम राघवः"** (**ப₃ந்து₄ச்ச பிதா ச மம ராக₄வ:**) என்று நிருபாதி₄க பந்துவாயிருக்கிற பெருமாள் கைவிட்டபடியாலே ஸோபாதி₄க பந்துக்களும் கைவிடும்படியிருக்கிறவன்.

---

போஜனத்தில் ஆசையாலே என் மாம்ஸத்தைச் சிறிது உண்ட பிறகும் கைவிடவில்லை.] என்று மாம்ஸத்திலே ஆசையுடையவனாய் பிராட்டிக்குத் தீங்குசெய்து "அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன்" [பெரியதிரு 6-3-4] என்கிறபடியே கொடிய நரகமாகிற பலனைப் பெற்றிருப்பவன. (அவன்)குற்றம்புரிய எண்ணியபோதே இநதிரன் பிள்ளையாயிருப்பதால் வந்த தேவத்தன்மைபோய் 'காகாசுரன்' என்னும்படி அசுரனாகிக் காக்கையேயாகி ஸ்வரூபத்தை இழந்திருப்பவன். (அவன்) "இரத்தம் தோய்ந்த நகங்களோடு கூடிய காகாசுரனைக் கண்டான் ராமன்" [ரா-ஸு 38-28] என்கிறபடியே கையுங் களவுமாகப் பிடிபட்டவனாய் இரத்தக்கையனாயிருப்பவன். (அவன்) "பூமியினுள் பதுங்கி வாழ்பவன்" [ரா-ஸு 38-29] என்று இப்படி குற்றம் புரிவதற்கு முன் பூமியில் பொந்துகளிலே பதுங்கி வாழ்ந்து இப்போது குற்றம் புரிகையாலே "வேகத்தில் காற்றைப்போன்றவன்" [ரா-ஸு 38-29] என்று ஆகாயத்தில் காற்றைப்போலே திரிகிறவன். [முந்திய பொருள்களும் அடுத்தபொருளும், ஒரு கௌரவமுமில்லாமல் தாழ்ச்சி தோற்ற 'அவன்' என்னும் பதத்தைப் பிரயோகித்ததின் பா₄வங்கள்; இப்பொருள் தூரத்திலிருப்பவனைக் குறிக்கும் 'அவன்' என்னும் சப்தத்தாலே குறித்தமைக்குக்கருத்து] (அவன்) "உறவினரும் தந்தையும் எனக்கு ராகவரேயாவர்" [ரா-அ 58-31] என்று உலகுக்கெல்லாம் இயற்கையிலேயே உறவினராயிருக்கும்

ஸோபாதிகபந்துக்கள் கைவிட்டபடி எங்ஙனேயென்னில்: (பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைச்ச ஸமஹர்ஷிபி:) கொண்டான் விளிவைக் கண்டார் விளித்து அடையக் கைவிட்டார்கள்.

உள்மனிதர் புறமனிதர் என்னும் வாசியுண்டோ? என்னில்: (பித்ரா ச பரிதயக்த:) முற்பட உள்மனிதர் கைவிட்டார்கள் என்கிறது. (பித்ரா ச பரித்யக்த:) ப்ரஹ்மாஸ்த்ரம் துடர்ந்து முடு(க்)கினபடியாலே பெற்ற தகப்பன் ரக்ஷிக்குமோ வென்று அங்கேறப்போனான்; அவனும் கைவிட்டான்; த்ரைலோக்யாதிபதியாயிருக்கிற அவன் கைவிடுகைக்கு அடியென்னென்னில்: (பித்ரா) **"इन्द्रो महेन्द्रस्सुरनायको वा त्रातुं न शक्ता युधि रामवध्यम्"** (**இந்த்₃ரோ மஹேந்த்₃ரஸ் ஸுரநாயகோ வா த்ராதும் ந ஶக்தா யுதி₄ ராமவத்₄யம்**) என்று பெருமாள் முனிந்தவர்களை ரக்ஷிக்கைக்குத் தனக்கு ஶக்தியில்லாமை

---

ராமபிரான் கைவிட்டபடியாலே கர்மம் காரணமாக உறவினரான தாய்தந்தை முதலானரும் கைவிடும்படியிருப்பவன்.

கர்மம் காரணமாய் உண்டான உறவினர் கைவிட்டபடி எப்படியென்னில்: (தந்தை தாயாலும். மஹரிஷிகளோடு கூடிய தேவர்களாலும் நன்கு கைவிடப்பட்டவன்) ஸ்வாமியின் கோபத்தைக் கண்டவர்கள் அனைவரும் கோபித்துக் கைவிட்டனர்.

கைவிட்டவர்களில் நெருங்கிய உறவினர் தூரபந்துக்கள் என்னும் வித்தியாசம் உண்டோ? என்னில்: (தந்தையாலும் கைவிடப்பட்டான்) முதல் முதலில் நெருங்கிய உறவினர்களே கைவிட்டனர் என்கிறது. (தந்தையாலும் கைவிடப்பட்டான்) ப்ரஹ்மாஸ்திரம் துடர்ந்து துரத்தினபடியாலே பெற்ற தகப்பனை இந்திரன் ரக்ஷிப்பானோ என்று அவனிருக்குமிடம் சென்றான். அவனும பிள்ளையைக் காப்பாற்றாமல் கைவிட்டான். மூவுலகிற்கும் பதியாயிருக்கும் அவன் கைவிடக் காரணமென்ன? என்னில். (தந்தையால்) "பெருஞ் செல்வம் படைத்தவனாய், தேவர் தலைவனான மஹேந்திரனும் ராமனால் யுத்தத்தில் கொல்லப்படவேண்டியவனைக் காப்பாற்றமுடியாது" [ரா-ஸு 51-45] என்று ராமபிரானுடைய கோபத்திற்கு இலக்கானவர்களைக் காப்பதற்குத் தனக்கு சக்தியில்லாமையால்

*யாலே கைவிட்டான். அன்றிக்கே. (பித்ரா பரித்யக்த:) ஹிதபரனுனபடியாலே இவன் செய்த அவிநயத்துக்கு அத்தனையும் வேணும் என்று கைவிட்டான் என்றுமாம்.(பித்ரா) அன்றிக்கே. ப்₄ரஷ்டைச்வர்யனை தன்னை லப்₃தைச்₄வர்யனுக்கினுள் நாச்சியாராகையாலே, அந்த க்ருதஜ்ஞதையாலே அவ்விஷயத்திலே அபராத₄ம் பண்ணினபடியாலே கைவிட்டான் என்றுமாம். (பித்ரா) அன்றிக்கே.* **"सर्वेषामेव लोकानां पिता"** (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா) *என்றும்,* **"देवदेवो हरिः पिता"** (தே₃வதே₃வோ ஹரி: பிதா) *என்றும் ஸகலஜகத்பிதாவான பெருமாள் கைவிட்டபடியாலே. இவன் பிதாவும் கைவிட்டான் என்றுமாம். (பித்ரா) அன்றிக்கே.* **"विष्णो पुत्रत्वमागच्छ"** (விஷ்ணோ புத்ரத்வமாக₃ச்ச₂) *என்று அபேக்ஷித்தவன் அவதாரரஹஸ்யத்தை அறியுமவனுகையாலே. புத்ர*

---

கைவிட்டான். அன்றிக்கே, (தந்தையால் கைவிடப்பட்டான்)பிரியத்தையும் விட்டு நன்மைசெய்பவனுகையாலே 'இவன் செய்த துஷ்கருமத்துககு இப்படி அநுபவிப்பதுதான் நல்லது' என்று நினைத்துக் கைவிட்டான் என்றும் கொள்ளலாம். (தந்தையான இந்திரனுல்) துர்வாஸச்சாபத்தாலே செல்வமிழந்து நின்ற தன்னை, "த்வயா தே₃வி பரித்யக்தம் ஸகலம் பு₄வநத்ரயம், விநஷ்டப்ராயமபு₄வத் த்வயேதா₃நீம் ஸமேதி₄தம்" [வி-பு 1-9-123] [பிராட்டி! உன்னுல் கைவிடப்பட்ட மூவுலகு முழுவதும் நசித்துக் கிடந்ததுபோலே ஆயிற்று. இப்போது உன்னுலே செழிப்புற்று விளங்குகிறது.] என்கிறபடியே செல்வத்தோடு கூடியவனுக ஆக்கினவள் இப்பிராட்டியேயாகையாலே, அந்த நன்றியறிவாலே, அவளிடத்தில் அபராதம் செய்த பிள்ளையைக் கைவிட்டான் என்றும் கொள்ளலாம். (தந்தையால்) "எல்லாவுலகுக்கும் தந்தை மாதவன்" [பார-ஆர 189-52] என்றும், "தேவனை ஹரி அனைத்துலகுக்கும் தந்தையாவார்" [வி-பு 1-9-126] என்றும் அனைத்துலகுக்கும் தந்தையான ராமபிரான் கைவிட்டபடியாலே, இவனுடைய தந்தையும் கைவிட்டான் என்றும் கொள்ளலாம். (தந்தையால்) "விஷ்ணுவே! நீ தசரதனுக்குப் பிள்ளையாகப் பிறப்பாயாக" [ரா-பா 15-20] என்று தேவர்களோடு கூட பகவானைப் பிரார்த்தித்த இவ்விந்திரன், ராமபிரானுடைய அவதார ரஹஸ்யத்தை அறிந்தவனுகையாலே ராமபிரானே தன் தம்பியான உபேந்திரன் என்னும் அறிவை உடையவனன்ருே; அக்காரணத்தாலே

ஸ்நேஹத்திலும் ப்ராத்ருஸ்நேஹம் கனவியதாகையாலே கை விட்டான் என்றுமாம். (பித்ரா) அன்றிக்கே, பெருமாளாலே தன் குடியிருப்பும் பெற்றுப் பரிபவமும் தீரத்தேடுகிறவ னுகையாலே அவ்விஷயத்திலே அபராதம் பண்ணினபடி யாலே கைவிட்டான் என்றுமாம். (பித்ரா) அன்றிக்கே, **"மாமுபாஸ்வ"** (மாமுபாஸ்ஸ்வ) என்று தன்னை பகவத்பர்யந்த மாக அநுஸந்திக்கும் ஜ்ஞாநவானுகையாலே பகவத்த்ரோஹி என்று கைவிட்டானுகவுமாம்.

'கைவிட்டபடிதான் மேலெழவோ?' என்னில்: (பரித் யக்த:) லோகயாத்ரைக்காகவன்றிக்கே புத்திபூர்வகமாகக் கை விட்டான். (பரித்யக்த:) இவன்றன் அளவன்றிக்கே இவனைச் சூழ்ந்த பார்யாபுத்ராதிகளேயுமகப்படக் கைவிட்டான்.

---

"தே₃சே தே₃சே ச ப₃ாந்த₄வா:" [ரா-யு102-12] [ஒவ்வொரு தேசத் திலும் உறவினர் கிடைப்பார்] என்கிறபடியே கண்டவிடமெல்லாம ஸ்வீகாரத்தாலே கிடைக்கக்கூடிய புத்திரனிடம் அன்பைக்காட்டிலும், "தம் து தே₃சம் ந பச்யாமி யத்ர ப்₄ராதா ஸஹோதர" [ரா-யு 102-12] [கூடப்பிறந்த ஸஹோதரன் கிடைக்குமிடத்தை நான் காணவில்லை] என்கிறபடியே கிடைத்தற்கரிய ஸஹோதரனிடம் அன்பு பெரிதாகை யாலே தம்பிக்குத் தீங்குபுரிந்த தனயனைக் கைவிட்டான் என்றும் கொள்ளலாம. (தந்தையால) ராமனைகொண்டு, ராவணனிடம் தானிழந்த தன் இருப்பிடத்தையும் பெற்று, அவனிடம் தோற்றதால் வந்த அவமானமும் போகவேண்டுமென நினைக்கிறவனுகையாலே, அவன் விஷயத்தில் குற்றபுரிந்த காகாசுரனைக் கைவிட்டான் என றும கொள்ளலாம்.(தந்தையால)· 'என்னை-(எனக்குஅந்தாயாமியாய் நிற்கும் பரமாத்மாவை)- உபாசிப்பாயாக" [கௌஷீதகீ] என்று, "கடல்ஞாலம்செய்தேனும் யானேயென்னும" [திருவாய்5-6-1]என்ற ஆழ்வாரைப்போலே தன்னைக்குறிக்கும் சப்தங்கள பரமபுருஷனை யும் குறிக்கின்றன என்று அறிந்த அறிவாளியாகையாலே அப் படிப்பட்ட பகவானுக்குத் தீங்கு செய்தவன் என்று கைவிட்டதாக வும் கொள்லாம்.

வெளிவேஷத்திற்காகக் கைவிட்டு, ஒருவருமறியாமல் உதவி செய்தானே? என்னில்: (நன்ருகக் கைவிடப்பட்டவனும்) உலகோர் கண்துடைப்பதற்காகவல்லாமல், நெஞ்சாறக் கைவிட்டான் தகப்பன். (நன்ருகக் கைவிடப்பட்டான்) இவனைக் கைவிட்டதோடன்றியில்

*ஹிதபரனுகையாலே இவன் கைவிடுகிறுன்; ப்ரியபரை யான தாயார் செய்தபடியென்? என்னில்: சகாரத்தாலே அவ ளும் கைவிட்டாள் என்கிறது. சகாரம் அநுக்தஸமுச்சாயகம். இவள் கைவிடுகைக்கு அடியென்? என்னில்:* **"सीता नारीजनस्यास्य योगक्षेमं विधास्यति"** (ஸீதா நாரீஜநஸ்யாஸ்ய யோகக்ஷேமம் விதாஸ்யதி) *என்று பெண்பிறந்தார்க்கு ரக்ஷகையான பிராட்டி திறத்திலே அபராதம் பண்ணினபடியாலே கைவிட் டான். (ச) மாத்ராச பரித்யக்த:* **"त्वं माता सर्वलोकानां"** (த்வம் மாதா ஸர்வலோகாநம்) *என்று ஸர்வலோகமாதாவான பிராட்டிகைவிட்டபடியாலே இவன்மாதாவும் கைவிட்டாள்.*

*இவள் இப்படிக் கைவிட்டவளவில் புறம்பு புகலானுர் உண்டோ என்னில்: (ஸுரை:) ஸஜாதீயரான தேவர்கள் பக்கலிலே சென்றுன்; அவர்களும் தள்ளினுர்கள். இவர்கள் தள்ளுகைக்கு அடியென்? என்னில்:* **"कस्य बिभ्यति देवाश्च जात-**

---

*இவனேடு சேர்ந்த இவனுடைய பெண்டுபிள்ளை முதலானுரையும் கைவிட்டான்.*

*நன்மை விரும்பும் தந்தையான இவன் கைவிட்டதிருக்கட்டும்; இனியது செய்யும் தாய் என்செய்தாள்? என்னில்: 'பித்ராச' என்கிற விடத்தில் சகாரத்தாலே அவளும் கைவிட்டாள் என்கிறது. சகாரம் சொல்லாததைக் கூட்டும் பொருளிலே வந்திருக்கிறது. இவள் கைவிடக் காரணமென்னவெனில்: "இந்தப் பெண்பிள்ளைகளுக்கு சீதாபிராட்டியானவள் நன்மை செய்வாள்" [ரா-அ 48-19] என்று பெண்ணுய்ப் பிறந்தாரை ரக்ஷிப்பவளான பிராட்டியிடம் குற்றம் புரிந்தமையாலே கைவிட்டாள். (உம்) தாயாலும் கைவிடப்பட்டான் என்று கருத்து. "எல்லா உலகுக்கும் நீயேதாய்" [வி-பு 1-9-126] என்று எல்லாவுலகுக்கும் தாயான பிராட்டி கைவிட்டபடியாலே இவன் தாயும் கைவிட்டாள்.*

*இவள் இப்படிக் கைவிட்டவுடன் தூரபந்துக்களிலே இவனுக்கு அடைக்கலம் கொடுத்தார் எவரேனுமுண்டோ? எனில்: (தேவர் களாலே) தன் ஜாதியைச் சேர்ந்த தேவர்களிடம் சென்றுன். அவர் களும் தள்ளிவிட்டார்கள். இவர்கள் தள்ளக் காரணமென்ன?*

**रोषस्य संयुगे**" (கஸ்ய பி₃ப்₄யதி தே₃வாச்ச ஜாதரோஷஸ்ய **ஸம்யுகே₃**) என்று பெருமாள் கண் சிவந்தால் பயப்படு மவர்களாகையாலே கைவிட்டார்கள். (ஸுரை:) கல்விட்டுக் கொட்டினாலும் சாவாமைக்கு அம்ருதபாநம் பண்ணி னவர்கள்: ஆகையாலே, பெருமாள் திருச்சரத்தாலே முடிந்து போகிறோமோ என்று பயத்தாலே கைவிட்டார்களாகவுமாம். (ஸுரை:) தேவை: "**विष्णुभक्तिपरो देवः**" (விஷ்ணுப₄க்திபரோ **தே₃வ:**)என்று அநுகூலப்ரக்ருதிகளாகையாலே ப்ரதிகூலனை இவனைக் கைவிட்டார்களாகவுமாம்.

பூர்வாவஸ்தை₂க்கு ஸஜாதீயரான தேவர்கள் கைவிட் டார்கள்; இப்போதைக்கு ஸஜாதீயங்களான பக்ஷிகள் செய்த படியென்? என்ன, சகாரத்தாலே பக்ஷிகளும் கைவிட்டன என்கிறது. அவை கைவிடுகைக்கு அடியென்? என்னில்: "**पक्षिणोऽपि प्रयाचन्ते सर्वभूतानुकम्पिनम्**" (பக்ஷிணோऽபி ப்ரயாசந்தே **ஸர்வபூ₄தா நுகமபிநம்**) என்றும், "பறவையின் கணங்கள்

---

எனில். 'யுத்தத்தில் கோபங்கொண்ட எவனிடம் தேவர்களும் பயப்படுகிறார்களோ" [ரா-பா 1-4] என்று ராமபிரான் கடைக்கண் சிவந்தால் பயப்படக்கூடியவர்களாகையாலே கைவிட்டார்கள். (தேவர்களால்) கல்லாலே கொட்டினாலும் உயிர்போகாமலிருக்க அமுதமுண்ட தேவர்கள்; இப்படி உயிரை வெல்லமாகக் கருது மவர்களாகையாலே 'ராமபிரானுடைய அம்பாலே அழியப்போகி றோமோ?' என்று பயத்தாலே கைவிட்டார்களென்றும் கொள்ளலாம். (தேவர்களாலே) "விஷ்ணுபக்தியுடையவன் தேவன" [விஷ்ணுதர் 109-74] என்று பகவானிடம் அன்புடையாராகையாலே பகவத் விரோதியான இவனைக் கைவிட்டார்களென்றும் கொள்ளலாம்.

முந்தியதான தேவநிலையில் உறவினரான தேவர்கள் கை விட்டனர்; இப்போதுள்ள காகநிலையில் உறவினரான பக்ஷிகள் என செய்தன? என்னில்: (உம்) "ஸுரை: ச' என்கிறவிடத்தில் சகாரத்தாலே பக்ஷிகளும கைவிட்டன எனகிறது; [இங்கும் சகாரம அநுக்தஸமுச்சாயகம்] அவை கைவிடுகைக்குக் காரணமென்ன வெனில்: "எல்லாவுயிர்களுக்கும் இரக்கமுடைய ராமபிரானைப் பக்ஷிகள் கூட யாசிக்கின்றன" [ரா-அ 45-31] என்றும் "பறவையின

கூடு துறந்து'' என்றும் பக்ஷிகளும் பெருமாள் பக்கலிலே பக்ஷபாதிகளாகையாலே கைவிட்டன. அன்றியிலே, ''பறவை யரையா'' என்றும், ''புள்ளரையா(ன்?)'' என்றும் தங் களுக்கு நியாமகனை பெரியதிருவடிநாயனார்க்கு வெறுப்பாம் என்று கைவிட்டன என்றுமாம். அன்றிக்கே, ''அன்னமாயன றங்கு அருமறை பயந்தான்'' என்றும், ''அன்னமாய் நூல் பயந்தாற்கு'' என்றும் தங்களுக்கெல்லாம் கூடஸ்தமா யிருப்பதொரு பக்ஷிவிசேஷத்துக்குக் குற்றம் செய்தபடி யாலே ஸஜாதீயங்களெல்லாம் கைவிட்டன என்றுமாம். அன்றிக்கே, விஷ்ணுபதத்தைப் பற்றித் திரிகிறவையாகை யாலே பெருமாள் திருவடிகளிலே அபராதம் பண்ணினுன் என்று கைவிட்டனவாகவுமாம்.

இவை இப்படிச்செய்தால் ஆந்ருஶம்ஸ்யப்ரதானரான ரிஷிகள் செய்தபடியென்? என்ன,-(ஸமஹர்ஷிபி:) தேவர்கள்

---

கணங்கள் கூடுதுறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப'' [பெரியாழ் திரு 3-6-8] என்றும பக்ஷிகளும் ராமபிரானிடம் அன்புள்ளவை யாகையாலே கைவிட்டன. அன்றிக்கே, ''பறவையரையா'' [பெரி யாழ் திரு 5-2-9] என்றும, ''புள்ளரையன்'' [திருப்பாவை-6] என றும் தங்களுக்கு ஸ்வாமியான கருடாழ்வானுக்கு வெறுப்பாயிருக்கும், இவனை நாம் அங்கீகரித்தோமாகில் என்று கைவிட்டதாகவும கொள்ளலாம். அல்லது, ''அன்னமாய் அன்றங்கு அருமறை பயந தான்'' [பெரியதிரு5-7-3] என்றும், ''அன்னமாய் நூல் பயந்தாற்கு'' [பெரியதிரு 9-4-2] என்றும் தங்களுக்கெல்லாம் மூலபூதமான ஓர் அன்னபபறவைக்கு அபராதம் செய்தபடியாலே பறவைகளெல்லாம கைவிட்டன என்றும் கொள்ளலாம். அல்லது, விஷ்ணுபதத்தை- [1. விஷ்ணுவின் திருவடியை. 2. 'வியத் விஷ்ணுபதம் ப்ரோக்தம்' என்கிறபடியே ஆகாசத்தை]— பற்றித்திரிகின்றவையாகையாலே விஷ்ணுபதமான ராமபிரான் திருவடிகளில் குற்றம் புரிந்தான் என்று கைவிட்டதாகவும் கொள்ளலாம்.

இப்பக்ஷிகள் கைவிட்டால விடட்டும்; இரக்கம் மிகுந்த ரிஷிகள் என் செய்தார்கள்? என்னில்: (மஹர்ஷிகளோடு கூட) தேவர்கள்

கைவிடுகிற இடத்திலே ரிஷிகளோடொக்கக் கைவிட்டார் கள் என்னும்படி விட்டார்கள். தா₄ர்மிகரான இவர்கள் கைவிடுகைக்கு அடியென்? என்னில்: ரிஷிகளாகிறுர் காண வல்லவர்கள்; மஹர்ஷிகளாகிறுர் தூரக்காணவல்லவர்கள். அதாவது:-இத்தால் நாம் இவனைக் கைக்கொண்டால், இவன் தானும் இவனோடு ஸம்ஸர்க்கித்த நாமும் நசிப்போம் என்றும், நாம் கைவிட்டால் "இதொரு அநந்யகதியே!" என்று பெரு மாள் தானே இரங்குவர் என்றும், அவ்வளவுஞ்செல்லக் காண வல்லவர்களாகையாலே கைவிட்டார்கள். (ஸமஹர்ஷிபி:) **"यो विष्णुं सततं द्वेष्टि तं विद्यादन्त्यरेतसम्" (யோ விஷ்ணும ஸததம் த்₃வேஷ்டி தம் வித்₃யாத₃ந்த்யரேதஸம்)** என்று பகவத்த்ரோஹி கள் சண்டாளர் என்று அறியுமவர்களாகையாலே. **"चण्डालः पक्षिणां काकः" (சண்ட₃ாள: பக்ஷிணும் காக:)** என்கிற சண் டாளன் இங்குப் புகுரலாகாது என்று கைவிட்டார்களாகவு மாம். (ஸமஹர்ஷிபி:) ரிஷிகளாகிறுர்-கேவலம் பகவத்வைப வமறியுமவர்கள்; மஹர்ஷிகளாகிறுர்— "ஒண்டாமரையாள்

---

கைவிடும்போது மஹர்ஷிகளோடு கூடக் கைவிட்டார்கள் என்னும் படி சடக்கெனக் கைவிட்டார்கள். தர்மிஷ்டர்களான இவர்கள் கைவிடக்காரணமென்ன? என்னில்: ரிஷிகளாகிறவர்கள் காண வல்லவர்கள்; மஹரிஷிகளாகிறவர்கள் வெகுதூரம் காணவல்ல தூர தர்சிகள். தூரதர்சிகளாகையாலே கைவிட்டார்களென்று கருத்து; அதாவது:— இவன் நம்மையடைந்த இவ்வளவால் இவனை நாம் ரக்ஷித்தோமாகில் இவனும் இவனோடு சேர்ந்த நாமும் அழிவோ மென்றும், நாம் கைவிட்டோமாகில் 'கதியற்றவனுயிருக்கும் இவ னுடைய நிலை எவ்வளவு வருந்தத்தக்கதாயுள்ளது' என்று ராம பிரான் தானே இரங்குவான் என்றும் அவ்வளவுதூரம் அறியவல்ல வர்களாகையாலே கைவிட்டார்கள். (மஹர்ஷிகளோடு கூட) "எவன் விஷ்ணுவை எப்போதும் த்வேஷிக்கிறுனே அவனைச் சண்டாள னுக்குப் பிறந்தவனுக அறியலாம்" [விஹகேந்த்ரஸம் 24-11] என்று பகவத்விரோதிகள் சண்டாளர் என்று அறிபவர்களாகையாலே "பக்ஷிகளுக்குள் காகம் சண்டாளஜாதியைச் சேர்ந்தது" [ ] என்கிற சண்டாளன் இங்கு புகலாகாது என்று கைவிட்டதாகவும் கொள்ளலாம். (மஹர்ஷிகளோடு கூட) பகவானுடைய வைபவத்தை மாத்திரம் அறிபவர்கள் ரிஷிகள்; "ஒண்தாமரையாள் கேள்வன்

*கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" என்கிற இந்த வைபவம் உணர்ந்திருக்குமவர்கள். ஆகையாலே, புருஷகாரவிஷயத்திலே அபராதம் பண்ணிபடியாலே கைவிட்டார்களாகவுமாம்.*

*இவர்கள் இப்படி கைவிட்டது அவன் தங்கள் பக்கல் வாராமையோ? என்னில்: (த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய) இருந்தவிடந்தோறும் செல்லச் செல்லத் தள்ளினார்கள் என்கிறது. (த்ரீந் லோகாந்) "அனைத்துலகும் திரிந்தோடி" என்கிறபடியே கண்ணுக்கெட்டின இடமெல்லாம் போனான். (த்ரீந் லோகாந்) பூம்யந்தரிக்ஷ ஸ்வர்க்கங்களாகிற தேசமடையத் திரிந்தான். பூமியெங்கும் தட்டித்திரிந்தவளவில், (மஹர்ஷிபி: பரித்யக்த:) என்று மஹர்ஷிகள் கைவிட்டார்கள்; அந்தரிக்ஷமடையத் தட்டித் திரிந்தவளவில் ஆகாசசாரிகளான பக்ஷிகளும் கைவிட்டன; ஸ்வர்க்கலோகமடையத் தட்டித்திரிந்தவளவில், மாதாபிதாக்களும் தேவர்களும் கைவிட்டார்கள். (ஸம்பரிக்ரம்ய) ஒருகால் தட்டித்திரிந்தவிடத்*

---

ஒருவனையே நோக்கும் உணர்வு" [முதல் திருவ-67] என்கிற புருஷகாரப்பெருமை உணர்ந்திருப்பவர்கள் மஹர்ஷிகள். ஆகையாலே, புருஷகாரபூதையான பிராட்டி விஷயத்தில குற்றம் புரிந்தவனாகையாலே கைவிட்டதாகவும் கொள்ளலாம்.

இவர்கள் அனைவரும் இப்படிக் கைவிட்டது அவன் இவர்களிருப்பிடம் தேடி வாராமையாலேயோ? என்னில் (மூவுலகையும நன்றாகச் சுற்றித் திரிந்து) ஒவ்வொருவரும் இருந்தவிடம் தேடிப் போனபின்பே தள்ளினார்கள் என்கிறது. (மூவுலகங்களையும்) "அனைத்துலகும் திரிந்தோடி" [பெரியாழ்திரு 3-10-6] என்கிறபடியே கண்ணுககெட்டின இடமெல்லாம் சென்றான். (மூவுலகங்களும்) பூமி, அந்தரிக்ஷம், சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலும் திரிந்தான். பூமியெங்கும் தடைப்பட்டுத் திரிந்தபோது (மஹர்ஷிகளால் கைவிடப்பட்டான்) என்று மஹரிஷிகள் கைவிட்டார்கள்; அந்தரிக்ஷமெங்கும் தடைபட்டுத் திரிந்தபோது ஆகாசத்தில் திரியும் பக்ஷிகள் கைவிட்டன; சுவர்க்கலோகம் முழுவதும் தடைப்பட்டுத் திரிந்தபோது தாய்தந்தையரும் தேவர்களும் கைவிட்டார்கள். (நன்றாகச்சுற்றித்திரிந்து) ஒருதடவை தடைபட்டுப்போனவிடத்திலே

திலே ஒன்பதுகால் தட்டித்திரிந்தான். அகமுடையவர்கள் அறியாதபடி கைப்புடைகளில் ஒதுங்கிக்கிடப்பதும் செய்தான்.

இப்படித் திரிந்தவிடத்திலே மேல் செய்ததென்? என்னில்: (தமேவஶரணம்கத:) இவன் தஞ்சமென்று ப்₄ரமித்துப் போனவர்களிலுங்காட்டில் கொல்லநின்ற பெருமாள் முகந்தானே குளிர்ந்திருந்தது; அவர் தம்மையே பற்றினன். (தமேவ) "यदि वा रावणः स्वयम्" (யதி₃ வா ராவண: ஸ்வயம்) என்றுஶரணுகதனை *விபீஷணன் இருக்க, ப்ராதிகூல்யம் பண்ணினவனை §விரும்பக்கடவரான அவர் தம்மையே பற்றினன். (தமேவ) "शरणागतवत्सलः" (ஶரணுக₃தவத்ஸல:) என்று ஶரணுகதிக்கு எல்லையானவர்தம்மையே பற்றினன். அஶரண்யரானவர்களைப் பற்றித்திரிந்த நெஞ்சாறல் தீர ஸர்வலோகஶரண்யரானவர்தம்மையே பற்றினன். (தமேவ) "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரது

---

பலதடவை திரிந்தான், இனிமேலாவது இரங்குவார்களோ என்னும் எண்ணத்தாலே. வீட்டுக்காரர்கள் அறியாதபடி வீட்டின் சந்து பொந்துகளிலே ஒதுங்கியிருப்பதும் செய்தான்.

இப்படித் திரிந்தபின்பு அடுத்தபடி செய்ததென்ன? என்றால்: (அவரையே சரணமடைந்தான்) இவன் புகலிடமென்று நினைத்துப் போனவர்களுடைய முகங்களைக் காட்டிலும் இவனைகொல்லநின்ற ராமபிரான் முகமே குளிர்ந்திருந்தது; அவரையே பற்றினன்; (அவரையே) "ராவணன் தானேயாயிருந்தாலும் கூட்டிவா" [ரா-யு 18-33] என்று சரணமடைந்த விபீஷணன் இருக்க, விரோதம் செய்த ராவணனை விரும்பக் கூடியவரான அவர் தம்மையே பற்றினன். (அவரையே) "சரணமடைந்தவரிடம வாத்ஸல்யமுடையவர்" [ரா-ஸு 21-21] என்று சரணமடையத்தகுந்தவர்களின் மேலெல்லையிலேயிருக்கும அவரையே பற்றினன். சரணமடையத்தகாதவர்களைப் பற்றித்திரிந்த மனவருத்தம் தீர "ஸர்வலோகசரண்யாய ராக₄வாய" [ரா-யு 16-15] [எல்லாவுயிர்களுக்கும் சரணமடையத்தகுந்தவரான ராமபிரானுக்கு] என்று உயிர்களெல்லாம் சரணமடையத்தகுந்த அவரையே பற்றினன். (அவரையே) "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சித

---

* (பா) விபீஷணனுக்கு. § (பா) விரும்பக்கண்டவரானவர்.

செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்'' என்று பிராட்டியே குற்றம் சொல்லிலும் மன்றாடி ஏறிட்டுக்கொண்டு ரக்ஷிக்கும் அவர் தம்மையே பற்றினன். (தமேவ ஶரணம் கத:) ஶரணு கதனை கந்தர்வனையும், பாணனையும் காட்டிக்கொடுத்தவர் களைப்போலன்றிக்கே, **"दोषो यद्यपि-न त्यजेयं" (தோ$_3$ஷோ யத்$_3$யபி-ந தயஜேயம்)** என்று தோஷமே பற்றாசாகக் கைக்கொள்ளும் அவர்தம்மையே பற்றினன். (ஶரணம் கத:) உபாய பு$_3$த்$_3$த்$_4$யா பற்றினனல்லன்; கண்டவிடமெங்கும் தட்டித் திரிந்தவனுகையாலே, கால்முறிந்து ஒதுங்க நிழல் தேடி வந்தான்; அவ்விடம் நிவாஸவ்ருக்ஷமாயிருந்தது. அல்லது, **"भूमौ निपतितं" (பூ$_4$மௌ நிபதிதம்)** என்று தறையிலே தலையும் மடியிலே காலுமாய் விழுந்தவன் ஶரணுகதி பண்ணினனன்றிறே.

---

குரைக்குமேல் என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்'' [பெரியாழ்திரு 4-9-2] என்று புருஷ காரபூதையான பிராட்டியே குற்றம் சொன்னலும் கெஞ்சிப்பேசித் தன் காரியமாய் ஏறிட்டுக்கொண்டு ரக்ஷிக்கும் அவரையே பற்றினன். (அவரையே சரணமடைந்தான்) சரணமடைந்த கந்தர்வனையும் பாணுசுரனையும் கைவிட்டுக்காட்டிக் கொடுத்தவர்களைப் போலல்லாமல், ''தோஷமிருந்தாலும் இருக்கட்டுமே; அவனைக்கைவிட மாட்டேன்'' [ரா-யு 18-3] என்று தோஷமே அங்கீகரிப்பதற்கு ஹேதுவாகக் கைக்கொள்ளும் அந்த ராமபிரானையே பற்றினன் பாவியான காகாசுரன். (புகலிடத்தை அடைந்தான்) 'உபாயம்' என்னும் நினைவோடு ராமபிரானைப் பற்றவுமில்லை இவன்; புகலிடமான ராமபிரானை அடைந்த இத்தனை; ''உபாயே க்$_3$ருஹரக்ஷித்ரோ: சப்$_3$த$_3$: சரணமித்யயம் வர்த்ததே'' [உபாயம், கிருஹம், ரக்ஷகன் என்னும் பொருள்களில் சரணமென்னும் சப்தம் ஏற்பட்டிருக்கிறது.] என்கிற அஹிர்புத்ந்யஸம்ஹிதாவசநத்தின்படியே உபாயசப்தம தங்குமிடத்தையும் குறிக்குமன்றே. கண்ட இடமெல்லாம் தடைபட்டுத்திரிந்தவனுகையாலே கால்முறிந்துபோய் தங்க நிழல்தேடி வந்தான். வந்த இடம், ''நிவாஸவ்ருக்ஷ: ஸாதூ$_1$நாம்'' [ரா-கி15-19] [நல்லோர்களுக்கு நிழல்தருமரமாயிருப்பவன்] என்கிறபடியே நிழல் தருதருவாயிருந்தது. இப்படியொழிய, ''பூமியிலே விழுந்தவனை'' [ரா-ஸு 38-34] என்று சொன்னபடியே, உடம்பில் ப்ரதானமான அவயவமான தலை பூமியிலும்,ராமபிரான் மடியிலே காலுமாய் விழுந்த காகாசுரன் சரணுகதி பண்ணினுனென்று கொள்ளமுடியாதன்றே.

இத்தால் ஸர்வேச்வரன் ரக்ஷிக்கைக்கு முதல் அபராத பூ₄யிஷ்ட₂தையும் அநந்யக₃தித்வமும் என்று சொல் லிற்றாயிற்று.

**ஸு₂ந்தரகாண்டம் 51-வது ஸர்க்கம் 38-வது சுலோகம்**

**सत्यं राक्षसराजेन्द्र कुरुष्व वचनं मम।**
**रामदासस्य दूतस्य वानरस्य विशेषतः॥**

**ஸத்யம் ராக்ஷஸராஜேந்த்₃ர குருஷ்வ வசநம் மம।**
**ராமதா₃ஸஸ்ய தூ₃தஸ்ய வாநரஸ்ய விஶேஷத:॥**

**பதவுரை:—ராக்ஷஸராஜேந்த்₃ர** — *ராக்ஷஸராஜாக்களுக்கு ஸ்வாமியே!* **விஶேஷத:** — *விசேஷித்து,* **ராமதா₃ஸஸ்ய**— *ராமபிரானுக்கு அடியவனாய்,* **தூ₃தஸ்ய**—*தூதனாய்,* **வாநரஸ்ய**- *குரங்கான,* **மம**—*என்னுடைய,* **ஸத்யம்**—*உண்மையான,* **வசநம்**—*சொல்லை,* **குருஷ்வ**—*அநுஷ்டிப்பாயாக.*

**அவதாரிகை** — **"सुजातमस्येति हि साधुबुद्धेः"** (ஸு₂ஜாத மஸ்யேதி ஹி ஸாது₄பு₃த்₃தே₄:) *என்று நொந்தாரைக்கண்டால் 'ஐயோ!' என்னும் ஸத்ப்ரக்ருதியாகையாலும்,* **"यच्छीलः स्वामी तच्छीला प्रकृतिः"** (யச்சீ₂ல: ஸ்வாமீ தச்சீ₂லா ப்ரக்ருதி:) *என்று*

---

*இந்த ச்லோகத்தால், ஸர்வேச்வரன் ரக்ஷிப்பதற்குச் சேதன னிடம இருக்கவேண்டியது குற்றமிகுதியும் புகலில்லாமையுமே என்று சொன்னதாக ஆயிற்று. [பகவான் சேதனனை ரக்ஷிப்பதற்குக் குற்றமிகுதி எப்படிக் காரணமாகிறதெனனில்: இவனுடைய துர்க் கதியைக்காணும் பகவானுடைய இரக்கத்தைத் தூண்டிவிடுவதன் மூலம் காரணமாகிறது.]*

அவதாரிகை:—"பூ₄வ பு₃த்₃தி₁ஸ்து ஹரீச்வரஸ்ய யதீ₃த்₃ருசீ ராக₄வ த₄ர்மபத்நீ, இமா யதா₂ ராக்ஷஸராஜப₄ார்யா: ஸு₂ஜாதமஸ்யேதி ஹி ஸாது₄பு₃த்₃தே₄:" [ரா-ஸு₂9-73] ["ராவணனுடைய இப்பத்தினிகளைப் போலே ராமபிரான் பத்தினியும் (கணவனோடு சேர்ந்து) இப்படி யிருந்தாளாகில், இந்த ராவணனுக்கு நலமாயிருக்குமே" என்று நல்லறிவையுடைய அனுமனுக்கு எண்ணமுண்டாயிற்று] என்று துன்புற்றாரைக்கண்டால் 'ஐயோ' என்னும் நல்லோனாகையாலும், "அரசன் எப்படியோ குடிகள் அப்படி" என்று பெருங்கருணை

பரமகாருணிகரான பெருமாளடிமையாகையாலும், ராவண னுடைய அநர்த்தங்கண்டு அவனுக்கு ஹிதோபதேசம் பண்ணுகிருன்.

வ்யா:-(ஸத்யம்) ஶத்ருபக்ஷத்தில் நின்றும் வந்த இவன் சொல்லுகிற வார்த்தை விப்ரலம்ப₄கரம் என்று நினைத்தி ராதே, உண்மையென்று நினைத்திரு. (ஸத்யம்) ஸதை₃க ரூபம். சிறிதுநாள் ஒருபடியாய், பிறகு வேறொருபடியாகை யன்றிக்கே ஒருபடிப்பட நடக்குமென்று நினைத்திரு. (ஸத்யம்) வெறும் உனக்கேயன்றிக்கே எங்களுக்கும் கார்ய மாகையாலே பொய்யாயிராதுகாண்! (ஸத்யம்) ராமகோஷ்டி யில் வாஸனையாலே நான் சொல்லுகிறது ஸத்யமாயல்லது இராதுகாண்! வார்த்தையிலே பொய்யில்லையாகிலும் அநபி₄ மதமாயிருக்குமோ? என்னில்: (ஸத்யம்) **"सत्यं भूतहितं प्रोक्तं"** **(ஸத்யம் பூ₄தஹிதம் ப்ரோக்தம்)** என்கிறபடியே ஸர்வ ப்ராணிகளுக்கும் ஹிதமாய்க்காண் இருப்பது.

---

யுடைய ராமபிரானுடைய அடிமையாகையாலும், ராவணனுடைய துன்பங்கண்டு அவனுக்கு நன்மையை உபதேசம் செய்கிருன் அனுமன் இந்த சுலோகத்தில்.

வ்யா:-(உண்மையான) எதிரிகள் பக்கத்திலிருந்து வந்த இவன் சொல்லும் வார்த்தை வஞ்சிப்பதற்காக என்று எண்ணியிராமல் உண்மையானது என்று நினைத்திரு. (ஒருபடிப்பட்ட) ஸத்யமாவது- எப்போதும் ஒரே விதமாயிருப்பது. சிறிதுநாள் ஒருவிதமாய், பிறகு வேறுவிதமாகையன்றிக்கே, நான் சொல்லும் வார்த்தை எப்போதும் ஒரேவிதமாய் நடக்குமென்று நினைத்திரு. (உண்மையான) உனக்கு நன்மைபயப்பதுமாத்திரமன்றிக்கே, எங்களுக்கும் இவ்வார்த்தை சொல்வது கடமையாகையாலே இது பொய்யாயிராதுகாண்! (உண்மையான) உண்மையல்லதறியாத ராமகோஷ்டியில் பழக்கத் தாலே நான் சொல்லும் வார்த்தை உண்மையாயல்லது இராதுகாண்! வார்த்தையிலே பொய்யில்லையாகிலும் நன்மை பயக்காததாயிருக் குமோ? என்னில்: (நன்மை பயப்பதான) "எது பூதங்கட்கு நன்மை பயப்பதோ அதுவே ஸத்யமெனப்படுகிறது" [ ] என்கிற படியே எல்லா ஜீவராசிகளுக்கும் நன்மை தருவதாயன்ரே இருப் பது என் வார்த்தை.

*நாட்டார்க்கு ஹிதம்சொல்லப் போந்தோமோ? என்ன,- (ராக்ஷஸ ராஜேந்த்ர)இத்தனை பேருக்குக் கடவனான உனக்கு அவர்களுடைய ஹிதம் செய்யவேண்டாவோ? அன்றியிலே, (ராக்ஷஸராஜேந்த்ர) இப்படிக்கொத்த உண்மையான வார்த்தை கேட்டன்றோ இவ்வைச்வர்யம் உனக்கு உண்டா யிற்று. (ராக்ஷஸராஜேந்த்ர) அளவுபட்ட ஐச்வர்யமன்றோ உன் ஐச்வர்யம். நாட்டில் ராக்ஷஸராய்ப் பிறந்தார்க்கும் ராஜாக்களாய்ப் பிறந்தார் எல்லார்க்கும் மேலானவனன்றோ நீ. ( ராக்ஷஸராஜேந்த்ர ) ராக்ஷஸராஜாக்கள்தான் உன் காலிலேவிழும்படியாகவன்றோ உன்பெருமை என்றாகவுமாம். (ராக்ஷஸராஜேந்த்ர) ''இதி$_3$ பரமைச்வர்யே'' இறே. ராக்ஷஸ ராஜாக்கள் ஐச்வர்யயுக்தர்; நீ பரமைச்வர்யயுக்தன்.*

*நம்மை இப்படி இப்போது உபச்லோகிக்கிறதென்? என்ன,— (குருஷ்வ) நான் சொல்லுகிற வார்த்தையை அநுஷ்டிப்பாயாகவேணும். (குருஷ்வ) செய்வேனே தவிரு*

---

உலகோர்க்கு நன்மை சொல்லுவதோ நமக்குப் பணி? என்ன – (அரக்கரரசர் தலைவனே) இவ்வளவு பேருக்குத் தலைவனான உனக்கு அவர்களுக்கு நன்மை செய்யவேண்டியது கடமையல்லவோ? அன்றிக்கே, (அரக்கரரசர் தலைவனே) நான் சொல்லுவதுபோன்ற உண்மையான வார்த்தை கேட்டன்றோ இச்செல்வம் உனக்கு ஏற் பட்டது. (அரக்கரரசர் தலைவனே) பெரிய அளவுள்ள செலவ மன்றோ உன் செல்வம்; ஏனெனில: உலகத்தில அரக்கராய்ப் பிறந்த வர், அரசராய்ப் பிறந்தவர் ஆகிய அனைவர்க்கும் மேலானவனன்றோ நீ. (அரக்கவரசர் தலைவனே) அரக்கர்களின் அரசர்கள் உன காலில வந்து விழும்படியானதனறோ உன் பெருமை எனபதாகவும் கொள்ளலாம். (அரக்கவரசருள் இந்திரனே) ''இதி பரமைச்வர்யே'' என்று தாதுவாகையாலே அரக்கவரசருள் பெருஞ்செல்வம் படைத்தவனே என்கை. அரக்கவரசர்கள் செல்வம் படைத்தவர்கள்; நீ பெருஞ்செல்வம் படைத்தவன் என்றபடி.

நம்மை இப்படி இப்போது துதிப்பது எதற்காக? எனில்: (செய் வாயாக) நான் சொல்லுகிற வார்த்தையை நீ அநுஷ்டிப்பவனாக வேணும். (செய்வாயாக) செய்யலாமா வேண்டாமா என்று ஆராய

*வேனே என்று விசாரித்தல், தவிர்த்தல் செய்யவொண்ணுது; பத்தும் பத்தாய் அநுஷ்டிக்கவேணும். (ஸத்யம் குருஷ்வ) ப்ரஹஸ்தாதி$_3$ ஸ்வபக்ஷமல்லனிவன்; பரபக்ஷம்; வஸிஷ்டா$_2$தி$_3$ ஜ்ஞாதாவல்லன்; இவன் ஒரு குரங்காகையால் அநாப்தம் என்று நினைத்திராதே என்ருன். உண்மையாகச்சொல்லுகிற வார்த்தையை நீ இசையவேணும். (ராக்ஷஸராஜேந்த்ர குருஷ்வ) உன் கீழேயொதுங்கின ப்ராணிகளை ரக்ஷிக்கும் போது இத்தனையும் செய்யவேணுங்காண்.*

*இப்படி செய்யச்சொல்லுகிறதுதான் ஏதென்னில்: (வசநம்) நான் சொல்லுகிற வார்த்தையை. (வசநம்) ''அர்த்தம் வக்தீதி வசநம்'' என்று பாசுரப்பரப்பற்று அர்த்த கர்ப்பமான வார்த்தையை. 'வசநம் குருஷ்வ' என்ஞநின்ருய்; நீ சொல்லுகிற பாசுரத்தை நான் அநுபாஷிக்கவோ? என்ன,- (வசநம்) வாக்$_3$வ்யாபாரமான வ்ருத்தியல்ல; அந்த வாக்ப்ரதி பாத்$_3$யார்த்தத்தை.*

---

வுங்கூடாது; செய்யாமலிருக்கவும் கூடாது; பரிபூர்ணமாகச் செய்தே தீரவேணும். (உண்மையைச் செய்யவேண்டும்) நம் கட்சியைச் சேர்ந்த ப்ரஹஸ்தன் முதலானுரில் ஒருவனல்லனிவன்; எதிர்க்கட்சி யைச் சேர்ந்தவன்; அவர்களிலும் வஸிஷ்டர் முதலான அறிவாளி களில் ஒருவனல்லன்; இவனொரு குரங்கு; ஆகையால் வார்த்தை சொல்லத்தகாதவன் என்று நினைத்திருக்காதே என்கிருன். நான் எவ்வளவு தாழ்ந்தவனுயினும் உண்மையாகச் சொல்லும் சொல்லை நீ அங்கீகரிக்கவேணும். (அரக்கரரசர் தலைவனே செய்வாயாக) உனக்குக் கீழுள்ள அரக்கரரசர்களை ரக்ஷித்து அவர்களுக்குத் தலைவ னென்னும் பெயரைப் பெறவேண்டுமாகில் நான் சொல்லுவது முழு வதையும் செய்யவேணும்.

இப்படி நீ செய்யச்சொல்லுகிறதுதான் என்னவெனில்: (வார்த் தையை) நான் சொல்லுகிற வார்த்தையை. (வார்த்தையை) ''பொருளைச் சொல்லுகிறதாகையாலே வார்த்தையாகிறது'' என்கிற வ்யுத்பத்தியின்படியே சொற் செட்டுடையதாய் பொருளை உள்ள டக்கிக்கொண்டிருக்கும் வார்த்தையை. (வார்த்தையைச் செய்வா யாக) என்ஞநின்ருய்; நீ சொல்லுகிற வார்த்தையை நான் திருப்பிச்

யாருடைய வாக்ப்ரதிபாத்$_3$யமென்ன-(மம) தூ$_4$ம்ராக்ஷாதி$_3$ வார்த்தைபோலே து:க்ககரமாகையன்றியே பரது:க்காஸஹிஷ்ணுவான என்னுடைய வார்த்தை. (மம) முன்பு அஶோகவநிகையிலே வாளையுருவிப் பிராட்டியை நலியப்புக்கவற்றை அகப்படக்கண்டு கார்யப்பாட்டாலே அதைப் பொறுத்துப்போந்த என்னுடைய. (மம) **"अहो रूपमहो वीर्यम्"** (அஹோ ரூபமஹோ வீர்யம்) என்றும், **"यद्यधर्मो न बलवान् स्यात्"** (யத்$_3$யத$_4$ர்மோ ந ப$_3$லவாந் ஸ்யாத்) என்றும், **"पुनश्च सोऽचिन्तयदार्तरूपः"** (புநச்ச ஸோऽசிந்தயதா$_3$ர்த்தரூப:) என்றும் உன்னுடைய யோக்யதையைக் கண்டு ஆச்சர்யப்பட்டும் உன்னுடைய அநர்த்தத்தைக் கண்டு வெறுத்துமிருக்கிற என்னுடைய. (மம) ஸர்வாத்மாக்களுக்கும் ப்ராணபூதனான வாயுபுத்ரனாய் வைத்து, நீ அநுகூலிக்கும் பக்ஷத்தில் உன்னுடைய ப்ராணஹானியைச் சொல்லுவேனோ? (மம) ஐந்த்ர வ்யாகரணத்தை அதிகரித்து. ஆதித்யஶிஷ்யனாய் ஸாக்ஷி

---

சொல்லுவதோ? என்ன,–(வார்த்தையை) வாக்கின் செயலான வாக்கியமல்ல; அந்த வாக்கியத்தால் சொல்லப்படும் பொருளை.

யாருடைய வாக்கியத்தால் சொல்லப்படுவது என்ன,–(என்னுடைய) தூம்ராக்ஷன் முதலானோருடைய வார்த்தைபோலே துன்புறுத்துவதன்றியே, பிறர்துன்பம் பொறாத என்னுடைய வார்த்தை. (என்னுடைய) முன்பு அசோகவனத்திலே வாளையுருவிப் பிராட்டியைத் துன்புறுத்தின அரக்கிகளை முழுவதும் கண்டு, தூதகார்யம் நிறைவேறவேண்டியிருக்கையாலே அதைப் பொறுத்துப்போந்த என்னுடைய. (என்னுடைய) "ராவணனின் உருவமிருந்தபடியென்! வீரியமிருந்தபடியென்!" [ரா-ஸு 49-17] என்றும், "தருமவழி தவறி நடப்பவனாக இல்லாவிடில் பலவானான இவன் அரக்கர்வரசனாக இருக்கத் தகுந்தவனே" [ரா–ஸு 49-18] என்றும் "மிகுவருந்திய வனாய் அனுமன் மறுபடியும் சிந்தித்தான்" [ரா–ஸு 10-73] என்றும் உன்னுடைய தகுதியைக்கண்டு வியப்படைந்தும், உனக்கு வரப்போகும் தீங்கைக் கண்டு வருந்தியுமிருக்கிற என்னுடைய. (என்னுடைய) எல்லா ஆத்மாக்களுக்கும் உயிராயிருக்கும் வாயுவின் பிள்ளையாயிருக்கும் நான் நீ அநுகூலனாயிருந்தாயாகில் உனக்கு மரணமேற்படும்படி வார்த்தைசொல்லுவேனோ? (என்னுடைய) இந்திரனால்

க்ஷிதனுன என்னுடைய வார்த்தையும் பொய்யாமோ? (மம) "पिङ्गाधिपतेरमात्यं" (பிங்க₃ாதி₄பதேரமாத்யம்) என்று காட்டரச னை மஹாராஜரையுமகப்பட ஈடேற்றும்படி ஒரு ராஜாவுக்கு மந்தரியான என்னுடைய வார்த்தையும் பொய்யாமோ?

'உன்னைக்கண்டுவைத்தன்றோ நான் ஸந்தேஹிக்கிறது; ஆயிருக்க (மம வசநம்) என்று இதொரு ஹேதுவாகச் சொல்லுவரினென்?' என்னில்: வாநரமான ஆகாரம் உனக்கு ஸாமாந்யமாக இருந்ததாகில் என் வார்த்தை விச்வஸநீய மாகைக்கு ஹேதுக்களைச் சொல்லுகிறேன். (ராமதாஸஸ்ய தூதஸ்ய வாநரஸ்ய விஶேஷத:) இவற்றில் ஓரொன்றே போரும்; இவை மூன்று ஆகாரமுடைய என் வார்த்தை பொய்யாகாதுகாண்! (ராமதாஸஸ்ய தூதஸ்ய வாநரஸ்ய) என்னுடைய ஆப்தத்வம் முப்புரியூட்டினதாயன்றே இருக் கிறது. (விஶேஷதோ ராமதாஸஸ்ய) பொய்சொல்லாமைக்கு

செய்யப்பட்ட வ்யாகரணசாஸ்திரத்தைக் கற்று, சூரியனின் சிஷ்ய னுய் நன்கு பயிற்றப்பட்ட என வார்த்தையும் பொய்யாமோ? (என்னு டைய) "குரக்கரசனுடைய மந்திரியை" [ரா-ஸு 31-19] என்று காடாண்ட ஸுக்ரீவனையுங்கூட நாடாளச் செய்யும்படி ஓரரசனுக்கு மந்திரியானவனுடைய வார்த்தையும் பொய்யாகுமோ?

குரங்கான உன்னைக்கண்டன்றோ நான் ஸந்தேஹப்படுகிறேன்; அப்படியிருக்க, (என்னுடைய வார்த்தையைச் செய்) என்று சொற் படி கேட்க இதையொரு காரணமாகச் சொல்லலாமோ? எனில்: குரங்கான தன்மை உனக்குத் தாழ்வாகத் தோற்றிற்றுகில் என வார்த்தை நம்பத்தக்கதாவதற்குக் காரணங்களைச் சொல்லுகிறேன. (விசேஷித்து ராமபிரானுக்கு அடியேனுகவும் தூதனுகவும், குரங் காகவுமிருககிற என்னுடைய) இந்தப் பெருமைகளில் ஒன்றொன்றே போதும் என்னை நீ நம்புவதற்கு; இவை மூன்று பெருமைகளை யுமுடைய என் வார்த்தை பொய்யாகாதுகாண்! (ராமபிரானுக்கடி யேனுய், தூதனுய், குரங்காயிருக்கிற) 'உள்ளதை உள்ளபடி சொல்லுமவனுயிருப்பவன் ஆப்தன்' என்னும் ஆப்தலக்ஷணம் என னிடம் முப்புரியூட்டியதாய்—(மூன்று புரிகளால் நெய்யப்பெற்ற கயிறுபோலே மூன்று ஹேதுக்களால் வலிமை மிக்கதாய்)—உள்ள தன்றோ. (விசேஷித்து ராமபிரானுக்கு அடியானுய்) பொய் சொல்

*நானே போரும்; விசேஷித்துப் பெருமாளடியானும் பொய் சொல்லுமோ? (ராமதாஸஸ்ய)* **"रामो द्विर्नाभिभाषते" (ராமோ த்₃விர் நாபி₄பா₄ஷதே)** *என்றும்,* **"सत्यवादी च राघवः" (ஸத்ய வாதீ₃ ச ராக₄வ:)** *என்றும் ஸத்யவாதியான பெருமாளோடே வாஸனைபண்ணின என் வார்த்தையும் பொய்யாமோ? (ராமதாஸஸ்ய) "ரமயதீதி ராம:" என்று எல்லாரோடும் பொருந்துகிற பெருமாளடியானுயிருக்கிற நான் வெறும் வார்தைை சொல்லுவேனோ? (ராமதாஸஸ்ய)* **"यदि वा रावणः स्वयम्" (யதி₃ வா ராவண: ஸ்வயம்)** *என்னும்படியான பெருமாள் திருவுள்ளமறியும் என்னுடைய வார்த்தையன்றோ. (ராமதாஸஸ்ய) 'நான் இங்கே பொய்சொன்னேன்' என்று பெருமாள் கேட்டருளினுல் என்னைத் தலையைச்சிரைத்து விலங்கிடாரோ? (ராமதாஸஸ்ய) ஏதேனுமாகப் பரோப தேசம் பண்ணி ஆசார்யபதம் நிர்வஹிப்பார்க்குத் திருநாமம் போலே வேண்டியிருந்ததிறே.*

---

லாமலிருக்கைக்கு நானே போதும்; விசேஷித்து ராமபிரானுக்கு அடியேனுயிருக்கும்போது பொய் சொல்லுவேனோ? (ராமபிரானுக்கு அடியானுய்) "ராமன் இரண்டுவிதமாகப் பேசமாட்டான்" [ரா-அ 18-30] என்றும், "உண்மையே உரைப்பவன் ராமபிரான்" [ரா-அ 2-32] என்றும் உண்மையுரைப்பவரான ராமபிராஞேடு பழகின என் வார்த்தையும் பொய்யாமோ? (ராமபிரானுக்கு அடியேனுய்) "(எல்லாரோடும் ஒருநீராகக்கலந்து) ரமிக்கச்செய்பவன் ராமன்" என்கிற வ்யுத்பத்தியின்படியே, வேடனேடும் வேடுவிச்சியோடும் குரங்கோடும் பறவையோடும் பொருந்தி ஆநந்திப்பிக்கிற ராம பிரானுக்கு அடியேனுயிருக்கிற நான் ஆநந்தகரமல்லாத வார்த்தையைச் சொல்லுவேனோ? (ராமபிரானுக்கு அடியேனுய்) "ராவணன் தானேயாயிருந்தாலும் அழைத்துவா" [ரா-யு 18-33] என்னும்படியான ராமபிரான் திருவுள்ளமறியும் தாஸனை என்னுடைய வார்த்தையன்றோ. (ராமபிரானுக்கடியனுய்) நான் இங்கே பொய் சொன்னேனென்று ராமபிரான் கேட்டருளினுல் என்னைத் தலையைச் சிரைத்து விலங்கிட்டுவிடமாட்டாரோ? (ராமபிரானுக்கு அடியேனுய்) ஞானிகள் 'அடியேன் ராமாநுஜதாஸன்' என்னுமா போலே பிறர்க்கு உபதேசம்செய்து ஆசார்யபதவியிலே வீற்றிருக்கு மவர்களுக்கு தாஸ்யநாமம் வேண்டியிருக்கிறதன்றோ.

'இப்படி உரிய அடியனும் உன்நாயன் பக்கல் பரிவாலே புரட்டிச் சொல்லுகிற வார்த்தையை மெய்யென்றிருப்பேனோ?' என்ன,—(தூதஸ்ய) இப்படிக்குரிய அடியானேயாகிலும் ஏறிட்டுக்கொண்ட அதிகாரத்துக்கீடாக நடக்க வேண்டாவோ? (தூதஸ்ய) தூதனுவான், - அத்தலைக்குப் பொருந்த வார்த்தை சொல்லி ஸ்வாமி நினைவைத் தலைக்கட்டு மவனிறே; அப்படிக்கு உன்னோடே குளிர வார்த்தை சொல்லிப் பிராட்டியைக் கொண்டுபோக வந்த என்னுடைய வார்த்தை. (தூதஸ்ய) தூதனுவான் அங்குச் சொன்னவார்த்தையை இங்கே சொல்லி. இங்குச்சொன்ன வார்த்தையை அங்கே சொல்லி உக்தார்த்த (யதார்த்த) வாதியாமத்தனை போக்கி, இட்டுச் சொல்லுவானோ? (தூதஸ்ய) அங்கு கட்டின ஓலைத்தாலியை இங்கே பொகட்டு, இங்கே கட்டின ஓலைத்தாலியை அங்கே பொகட்டுதிரிகிற எனக்கும் ஒரு கௌடில்யம் உண்டோ?

---

'இப்படி வார்த்தைசொல்லும்படி ராமபிரானுக்கு அடியானுய், உன் ஸ்வாமியான அவனிடம் பக்ஷபாதத்தாலே நீ மாறுபடுத்திச் சொல்லுகிற வார்த்தையை நான் மெய்யென்றிருப்பேனோ?' என்ன,-(தூதனுய்) இப்படித் தகுந்த அடியனுயினும், நான் ஏறிட்டுக் கொண்ட தூதகாரியத்துக்குத் தக்கபடி நடக்கவேண்டாவோ? (தூதனுய்) தூதனுகிறவன் யாரிடம் தூதுசெல்லுகிருனே அவனுக்குத் தக்கபடி வார்த்தைசொல்லித் தன் நாயகனுடைய காரியததை முடிப்பவனன்றே. அவ்விதமாகவே உன்னோடு குளிர வார்த்தைசொல்லிப் பிராட்டியை அழைத்துப்போகவந்த என்னுடைய வார்த்தை. (தூதனுய்) தூதனுயிருப்பவன் அங்கு சொன்ன வார்த்தையை இங்கே சொல்லி, இங்கு சொன்ன வார்த்தையை அங்கே சொல்லி சொன்னதைச் சொல்லுமவனுவதன்றி, தானுக ஒன்றைச் சொல்லுவனோ? (தூதனுய்) அங்கே கட்டின ஓலைத்தாலியை இங்கே கொடுத்து, இங்கே கட்டின ஓலைத்தாலியை அங்கே கொடுத்துத்திரிகிற எனக்கும் ஒரு வஞ்சனையுண்டோ? [புருக்களின் கழுத்திலே செய்தியை எழுதியனுப்பப்படும் ஓலைக்கு ஓலைத்தாலி என்றுபெயர். தூது போவது புருக்களின் காரியமாகையாலே இந்த ஸ்ரீஸூக்தி. நாயின் கழுத்திலே ஓலைகட்டியனுப்புவதும் உண்டு.]

அதுவோ நீ ஓலை தூதனாய், அபிமதனாய், ஆஹூதனாய் வந்தது? தோப்பை முறித்து, ஸேநாபதிகளைக் கொல்லுவது, மந்த்ரி ஸுதரைக் கொல்லுவது, குமாரனைக் கொல்லுவதாய், நீ செய்யாத் தீம்புகளுண்டோ? உன் வார்த்தையை விச்வஸிக்கலாமோ? என்ன.—(வாநரஸ்ய) அதுவோ ஜாதி ப்ரயுக்தமான வார்த்தை. குரங்காட்டமந்தனை போக்கி. தௌத்யத்துக்குக் குறையன்றுகாண்! கையிலே பழத்தைக் கொடுக்கிலும் உறும்பிப்பறிக்கை குரங்குகளுக்கு ஸ்வபாவமன்றோ. (வாநரஸய) தோப்பை முறிப்பது சாகாம்ருகமாகையாலே; பணையோடு பணை தாவித்திரிந்தேன்: மரங்கள் துர்ப்பலங்களாகையாலும், 'மஹாகபே' என்னும்படி நான் பலவானாகையாலும் என்னைப் பொறுககமாட்டாமல் முறிந்ததித்தனை; ஸேநாதிபதிப்ரமுகரும் ப்ரதமாபகாரம் பண்ணி நலிந்தார்கள்; என்னை நோக்குகைக்காகச்சில வ்யாபரித்தேன்;

---

அடடா! நீ ஓலைகொண்டுவரும் தூதனாய், நன்மைசெய்பவனாய், எங்களால் ஆளவிட்டு அழைக்கப்பட்டவனாயோ வந்தாய்? அசோக வனத்தோப்பை முறிப்பது, ஸேனைத்தலைவர்களைக் கொல்லுவது, மந்திரிகுமாரரைக் கொல்லுவது, என் பிள்ளையான அக்ஷயகுமாரனைக் கொல்லுவது ஆகியவற்றைச் செய்ததாலே நீ செய்யாத தீமையுண்டோ? உன் வார்த்தையையோ நம்புவது,-என்ன, (குரங்காயிருப்பவனை) அக்காரியங்கள் நான் குரங்கினத்தைச் சேர்ந்தவனாயிருப்பதால் நடந்தவையன்றோ. அவை என்னுடைய குரங்காட்டமேயொழிய, நான் தூதனாய் வந்தமைக்குக் குறையில்லைகாண்! குரங்கின் கையில் நாமே வலியச்சென்று பழத்தைக் கொடுத்தாலும், 'உர்' என்று உறுமிப் பிடுங்குவதன்றோ குரங்குகளின இயற்கை. (குரங்கினுடைய) தோப்பை முறித்தது குரங்காகையாலே; 'சாகாம்ருகம்' [கிளைவிலங்கு] என்று பெயர்பெற்ற குரங்கு ஜாதியைச் சேர்ந்தவனாகையாலே கிளையோடு கிளை தாவித்திரிந்தேன்; அசோக வனத்து மரங்கள் வலிமையற்றவையாகையாலும், "பெருங்குரங்கே" [ ] எனனும்படி நான் மஹாபலசாலியாகையாலும், மரங்கள் என்னைப் பொறுக்கமுடியாமல் முறிந்துவிட்டனவேயொழிய நானாக வேண்டுமென்று அவற்றை முறிக்கவில்லை. ஸேநாபதி, மந்திரிகுமாரர்கள், அக்ஷயகுமாரன் முதலானோரும் என்னிடத்தில் வலியவந்து முதலில குற்றம்புரிந்து துன்புறுத்தினர்கள். என்னை

*பின்னையும் நாடோடியான குரங்கு போலன்றியே என்னுடைய அத்₃பு₄தாபதா₃னங்களைக்கண்டு அஞ்சினார்கள்; அஞ்சினாரை (இரங்கி) ஓரறை அடித்துப் பொகட்டேனத்தனை; என்மேல் குறையில்லை; (வாநரஸ்ய) விவேகிகளான மநுஷ்ய ஜாதியல்லேன்; ராக்ஷஸஜாதியல்லேன்; அறிவில்லாத திர்யக் ஜாதியான என்னுடைய வார்த்தையிலுண்டோ பொய்? (வாநரஸ்ய) * வ்யாக்₄ரவாநரஸம்வாதம் கேட்டறியாயோ? பா₃த₄கனான வேடனுக்ககப்பட ரக்ஷகமான ஜாதியிலே பிறந்த என்னுடைய வாக்யம் பா₃த₄கமாமோ?*

---

அவர்களிடமிருந்து ரக்ஷித்துக்கொள்வதற்காகச் சில (யுத்த) வியாபாரங்களைச் செய்தேன்; அதற்குமேலே, இடத்துக்கு இடம் தாவித் திரியும் குரங்குபோலல்லாமல் நான் செய்த அற்புதச்செயல்களைப் பார்த்துப் பயப்பட்டார்கள்; "அவட்கு மூத்தோனை வெந்நரகம் சேராவகையே சிலை குனித்தான்" [சிறியதிருமடல்] என்றாற்போலே இந்த பயத்திலும் கொடிய நரகாநுபவமில்லை என்னும்படி பயப்படுமவர்களிடம் இரக்கங்காட்டி, இந்நிலையிலும் இவர்கள் மூர்ச்சித்து விழுவதே மேல் என்று அவர்களை ஓா அறையறைந்து கீழே வீழ்த்தினேனேயொழிய, கொலலவேணுமென்று நினைத்தேனல்லேன்; ஆகையால் என்மேல் குற்றமில்லை. (குரங்கினுடைய) தனக்கு நன்மைதீமையை ஆராய்ந்தறிந்து தன் நன்மைக்காகப் பொய்சொல்ல அறிந்த மனிதகுலத்திலும் அரக்கர் குலத்திலும் பிறந்தவனல்லேன். ஆராய்ந்தறிய இயலாத விலங்கினத்தைச் சேர்ந்த என்னுடைய வார்த்தையில் பொய்யுண்டோ? (குரங்கினுடைய) * வ்யாக்ர வாநர ஸம்வாதம் கேட்டதில்லையோ நீ? தனககுத் தீங்குசெய்த வேடனையுங்கூட ரக்ஷித்த குரங்கின் ஜாதியிலே பிறந்த என்னுடைய வாக்கியம் தீமைபயப்பதாமோ?

---

* 'வ்யாக்ரவாநரஸம்வாதம்' என்னும் விருத்தாந்தம் பின்வருமாறு:— ஒருவேடனை ஒரு புலியானது காட்டிலே துரத்திவர, அவன் மரமொன்றிலே ஏற, அதில் குரங்கொன்றிருகக, புலியானது— 'நானும் மிருகம்; நீயும் மிருகம்; இவன் நமக்குத் தீங்கு செய்யும் மனிதன்; இவனைக் கீழே தள்ளிவிடு' என்ன, 'சரணமடைந்தவனை நான் கைவிடமாட்டேன்' என்று குரங்கு சொல்ல, சிறிது நேரத்தில் குரங்கு மரத்தில் தூங்கிவிட, 'வேடனே! இக்குரங்கைத் தள்ளிவிடு; நான் இதைத்தின்று பசியாறி உன்னை விட்டுச்செல்லுகிறேன்,

ஆக இத்தால், "மம வசநம் ஸத்யம்" என்று "வாதமா மகன்" என்கிறபடியே தேவயோநிஜனுன என் வார்த்தை பொய்யாகாதென்று ஸாமாந்யவசநம் சொல்லி. (விசேஷதோ ராமதாஸஸ்ய தூதஸ்ய வாநரஸ்ய வசநம் ஸத்யம்) என்று ருஜுக்களான பெருமாளடியானுவது, உக்தார்த்தவாதியான தூதனுவது, இட்டுச்சொல்லுகைக்கு அடியான விவேக மில்லாத திர்யக்காவதாயிருக்கிற என்னுடைய வார்த்தை யன்றே என்று விசேஷஹேதுக்களையும் சொல்லி. நீ தான் ஒரு பெரியோன் ஒருத்தனுமாய் உனக்கு ரக்ஷணீயமான குறைச்சரக்கும் உண்டாயிருந்தது; ஆன பின்பு. நான் சொன்னபடியே அநுஷ்டிக்கப்பாராய் என்கிறன்.

ஸுந்தரகாண்ட தனிச்லோகம் முற்றிற்று.
பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஆக, இந்த சுலோகத்தால், (என் வார்த்தை மெய்) என்று "வாதமா மகன்" [பெரியதிரு 5-8-2] என்கிறபடியே தேவனுன வாயுவுக்குப்பிறந்த என் வார்த்தை பொய்யாகாதென்று பொதுவான வார்த்தை சொல்லி, (விசேஷித்து ராமபிராற்கடியேனுய் தூதனுய், குரங்காயிருக்கிற என் வார்த்தை மெய்) என்று நேர்மை மிக்க ராம பிரானுக்கு அடியேனுய் சொன்னதைச்சொல்லும் தூதனுய், இல் லாததை உள்ளதுபோலே கற்பித்துச் சொல்லுவதற்கு வேண்டிய பகுத்தறிவில்லாத விலங்காயிருக்கிற என்னுடைய வார்த்தையன்றே என்று விசேஷகாரணங்களையும் சொல்லி, "அரக்கரரசர் தலைவனே! செய்வாயாக" என்று, "நீயும் ஒரு ஒப்பற்ற பெரியமனிதனுய் உன் னுல் ரக்ஷிக்கப்படவேண்டிய ரக்ஷ்யப்பொருளும் உண்டாயிருந்தது; ஆகையால் நான் சொன்னபடி செய்வாய்" என்கிறன் அனுமன்.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதாஸவிரசிதமான தனிச்லோக தர்ப்பணத்தில்
ஸுந்தரகாண்டம் முற்றிற்று.

---

என்று புலி கூற, அக்கொடிய வேடனும் குரங்கைத் தள்ளிவிட, சாகா மிருகமாகையாலே குரங்கு ஒரு கிளையைப் பிடித்துக்கொண்டு தப்பிவிட, 'இனியாவது இக்கொடிய வேடனைத் தள்ளிவிடு' என்று புலி கேட்க, 'சரணுகதனை ஒருபோதும் கைவிடமாட்டேன்' என்று கூறிக் கடைசிவரையில் குரங்கு வேடனை ரக்ஷித்த விருத்தாந்தம்.

ஸ்ரீ:

ஸ்ரீராமாயண தனிச்லோகத்தில்
பூர்வபாகத்தில் எடுக்கப்பட்ட ஸ்ரீராமாயண ச்லோகங்களின்

# பாதாநுக்ரமணிகை

[பருத்த எழுத்தில் இருப்பவை மூல ச்லோகங்கள்.
சாதாரண எழுத்திலிருப்பவை வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்டவை.]

ப$_2$



ப$_3$

ஹ

**ஸ்ரீராமாயண தனிச்லோகம் பூர்வபாகத்தில் எடுக்கப்பட்ட ஸ்ரீராமாயண ச்லோகங்களின் பாதாநுக்ரமணிகை முற்றிற்று.**

---

**பூர்வபாகத்திலெடுக்கப்பட்ட இதர ப்ரமாணங்களின்**

## அநுக்ரமணிகை

ஏ



க



க$_3$



ச



ச$_2$



ஜ



த



த$_3$



த$_4$

ம



ய



ர



ல



வ



ஶ

பூர்வபாகத்தில் இதரப்ரமாண அநுக்ரமணிகை முற்றிற்று.





ஆகரமோ, முழுவடிவமோ, அல்லது இரண்டுமோ
தெரியவேண்டிய ப்ரமாணங்களின் அட்டவணை.

*[இப்ரமாணங்கள் உள்ளவிடங்கள், அவற்றின் மேற பகுதி முதலானவற்றை ப்ரமாண அநுக்ரமணிகையிலிருந்து தெரிந்துகொள்வது.]*

ஸ்ரீராமாயண தனிச்லோகம—பூர்வபாகம்.

1 அக்நிஹோத்ராச்ச
2 அநுபஹதாம் வ்ருத்திம்
3 அபராத$_4$ாநபி$_4$ஜ்ஞ:
4 அஸத்ஸ மாவித$_4$வா
5 ஆத்மயாத$_2$ாத்ம்ய
6 ஆதமாநம் தத்வதோ
7 ஆத்மாவை புருஷஸ்ய
8 ஆபத்$_3$யபிஸ்வகார்
9 ஆவாப்$_4$யாம கர்மாணி
10 உபாயோகு$_3$ருரேவ
11 ||கந்யாகாமயதேரூபம்
12 குஹத$_3$ர்ப்ப$_4$த$_4$ரா:
13 கூடயுத்$_3$த$_4$ா ஹிராக்ஷஸா:
14 கௌசிகோயஹஸாம்
15 சகோரா இவ
16 சண்டாள: பக்ஷி
17 சுக்ருபூர்வந
18 ஜநகே$_4$ாஷோ மஹாநபூ$_4$த்
19 ஜாமாதாத$_3$ஹமே
20 ஜ்ஞாதேஹீச்ச$_2$ா
21 ஜ்ஞாநவிஜ்ஞாந
22 ஜ்யேஷ்டே$_2$ாப்$_4$ராதா
23 தபோத$_3$ாநம்தப:
24 தேநாநுக்$_3$ருஹீதோ
25 த்ருணமிவலகு$_4$
26 த்ருணம்ஹரஸ்ய
27 து$_3$ர்க்$_3$ரஹம்மநஸா
28 நபரமுக$_2$நிரீக்ஷணம்
29 நித்யம் நித்யா
30 நீதிமாந் பு$_3$த்$_3$தி$_4$
31 பதிரேகோக$_3$தி
32 பராதீ$_4$நா:ஸ்த்ரிய:
33 பரிபூ$_4$தாவிஷ்ணு
34 பரீதம்துதி$_3$நம்
35 /ப்ரத்யக்ஷேகு$_3$ரவ:
36 பரயத்ந: ஸ்வாத்ம
37 ப்ரீதிவிஷ்ப$_2$ாரிதே
38 ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து
39 ப$_3$ாலஆஷோட$_3$ஹாத்$_3$
40 ப்$_3$ரஹ்மருத்$_3$ரேந்த்$_3$ர
41 ப$_4$ர்த்தாரமவலம்
42 பூ$_4$மி:க்ஷேத்ரம்களத்ரஞ்ச
43 ப்$_4$ருங்க$_3$ரத$_4$ாரா
44 மநோஹிஹேது:
45 மாதாபுத்ரஸ்ய
46 மிதி$_2$லாயாம்
47 யதோநவேத$_3$
48 யத்ரநாஸ்தி

---

|| இதன் முழுவடிவம்:-

**கந்யா காமயதே ரூபம் மாதா வித்தம் பிதா ச்ருதம்।**
**ப$_3$ாந்த$_4$வா: குலமிச்ச$_2$ந்தி ம்ருஷ்டாந்நமிதரே ஜநா:॥**

/ இதன் முழுவடிவம்:-

**ப்ரத்யக்ஷே கு$_3$ரவ: ஸ்துத்யா: பரோக்ஷே மித்ரப$_3$ாந்த$_4$வா:।**
**கார்யாந்தே த$_3$ாஸப்$_4$ருத்யாச்ச புத்ரகா ந கத$_3$ாசந॥**

49 யத்$_3$தி$_4$மநஸா
50 யதூ$_3$ப்$_3$ராஹ்மணச்சா
51 ரக்தாயஸ்யநேத்ரபாணி:
52 ரமணீயோஹ்யயம்
53 ராஜீவம்ரக்தபத்$_3$மம்
54 ராஜ்யகாமவிஷயா
55 ரூபேணவஞ்சிதாஜநம்
56 வத$_4$ச்சத$_4$ர்ம
57 விச்வாதி$_4$கம்ருத்$_3$ரம்
58 சாதரோ:சேஷம்ந
59 சோகாக்$_3$நி:ப்ரத$_4$க்ஷ்யதி
60 ச்ருதமாஸீந்மரீசித:
61 § ச்ரேயாம்ஸிப$_3$ஹூ
62 ஸகூ$_2$ாசமே
63 ஸந்நயம்பூ$_4$தஹிதம்
64 ஸந்நத்$_3$தெ$_4$ள்விசரிஷ்யத:
65 ஸபிதாயஸ்து
66 ஸர்வேந்த்$_3$ரியைரபி
67 ஸிம்ஹாஸநேப்ரபு$_4$:
68 ஸ்தம்பே$_3$நஸவிலேந
69 ஸ்திமிதவிகஸிதாநாம்
70 ஹரிப$_3$ாஹ்யாஸ்து
71 ஹஸந்நிவந்ருபோ

---

பக்கம் 38ல் "கிஞ்சித்$_3$ ப்$_4$ருப$_4$ங்கக$_3$லீலா நியமிதஜலதி$_4$ம்" என்னும் ப்ரமாணத்தின் பூர்ணவடிவமும் பொருளும் கீழே தரப்படுகிறது.

**க்ஷுத்$_3$ராஸ்ஸந்த்ராஸமேதத்$_3$விஜஹித$_2$ஹரய: க்ஷுண்ணசக்ரேப$_4$கும்ப$_4$ா:
யுஷ்மத்$_3$தே$_3$ஹேஷுலஜ்ஜாம் த$_3$த$_4$தி பரமமீஸாயகா நிஷ்பதந்த:|
ஸௌமித்ரே திஷ்ட$_2$பாத்ரம் த்வமஸி நஹி ருஷாம் நந்வஹம் மேக$_4$நாத$_3$
கிஞ்சித்$_3$ ப்$_4$ருப$_4$ங்கக$_3$லீலா நியமிதஜலதி$_4$ம ராமமந்வேஷயாமி||**

இது வாநரர்களையும், லக்ஷ்மணனையும் பார்த்து இந்த்ரஜித் சொல்லும் வாக்கியம். (க்ஷுத்ரா: ஹரய: ஏதத் ஸந்த்ராஸம் விஜஹித)அற்பக் குரங்குகளே! இந்த பயத்தைவிடுங்கள். ஏனெனில்: (க்ஷுண்ணசக்ரேபகும்பா: அமீஸாயகா: யுஷ்மத்தேஹேஷு நிஷ்பதந்த: லஜ்ஜாம் தததி) இந்திரனுடைய ஐராவதத்தின் மத்தகத்தைப் பிளந்த இந்த அம்புகள் (அற்பரான) உங்கள் தேஹத்தில் விழுவதற்கு லஜ்ஜைப்படுகின்றன. ஆகையால் நீங்கள் பயப்பட வேண்டாமென்றபடி. (ஸௌமித்ரே திஷ்ட பாத்ரம் த்வமஸி நஹி ருஷாம்) லக்ஷ்மணா! நீ நில். நீ என் கோபத்திற்குத் தகுந்த பாத்திரமாகமாட்டாய். ஏனெனில்: (ஸௌமித்ரே) சுமத்திரையின் பிள்ளையன்றோ நீ. தாய்க்கூறுமிக்கிருப்பவனன்றோ. (நந்வஹம் மேகநாத:) நானோவென்னில: (பிறக்கும் போதே) மேகம்போலே கர்ஜித்ததால் மேகநாதனென்று பெயரிடப்பட்டவன். நீ இங்கு என் செய்யவந்தாயெனில: (கிஞ்சித் ப்ருபங்க லீலா நியமித ஜலதிம் ராம மந்வேஷயாமி) சிறிது புருவநெரிப்பினாலே விளையாட்டாக ஸமுத்திரத்தை அடக்கியவனான ராமனைத் தேடுகிறேன் நான். அவனே என் வீரத்திற்குத் தகுந்தவன். (லீலாநியமிதஜலதிம்ராமம்) பெயர்ப்பொருத்தமிருந்தபடியென்! 'ராமன்'[விளையாடுபவன்]என்னும் பெயருக்கேற்ப ஸமுத்திரத்தை விளையாட்டாக அடக்கியவனாயிற்றே!

---

§ இதன் முழுவடிவம்:-

**ச்ரேயாம்ஸி ப$_3$ஹுவிக்$_4$நாநி ப$_4$வந்தி மஹதாமபி|
அச்ரேயஸி ப்ரவ்ருத்தே து குத்ர யாந்தி விக$_4$ாதகா:||**

